"தெரிபுவேறு நிலையலுங் குறிப்பிற் றோன்றலு-மிருபாற் றென்ப பொருண்மை நிலையே." பொருண்மைதெரிதல்—சொன்மாத்திரத்தான் விளங்கி வேறுநிற்றலும், சொன்மாத்திரத்தாற்றோன்றாது சொல்லொடுகூடிய குறிப்பாற் றோன்றலுமென இரண்டுபகுதித்தாம். அவன், இவன், உவன், வந்தான், சென்றான், இவை பொருடெரிபு வேறுநின்றன. ஒருவர் வந்தார் என்றாற்போல்வனவும், ஆகுபெயராய் வருவனவும், இன்னோரன்னபிறவும், குறிப்பிற்றோன்றலாம்.

வினையியல்— வினைச்சொல்லிலக்கண முணர்த்துதலின், இவ்வோத்து வினையியலென்னும் பெயர்த்தாயிற்று. "வினையெனப் படுவது வேற்றுமை கொளாது - நினையுங் காலைக் காலமொடு தோன்றும்." வினையென்று சொல்லப்படுவது உருபேலாது காலத்தொடு புலப்படும். வேற்றுமைகொள்ளாது என்றது, காலமொடு தோன்றுமெனின், தொழினிலையொட்டின்கண்ணுந் தொழிற்பெயர்க்கண்ணு மதிவியாத்தியாய் இலக்கண வழுவாம். காலமொடு தோன்றும் என்றது, வேற்றுமை கொள்ளாதெனின்— இடைச்சொற்கண்ணு முரிச்சொற்கண்ணு மதிவியாத்தியாய் இலக்கணவழுவாம். தொழினிலையொட்டெனினுந் தொழிற்பெயரெனினு மொக்கும். வினைப்பெயரெனினும் வினையாலணையும் பெயரெனினு மொக்கும். "காலந் தானே மூன்றென மொழிப." இனித் தொழிலது கழிவுணர்த்து மிறப்புந் தொழிறொடங்கப்பட்டு முற்றுப்பெறாத நிலைமையுணர்த்து நிகழ்வுந் தொழில் பிறவாமை யுணர்த்து மெதிர்வுமெனக் காலமூன்றாம். "குறிப்பினும் வினையினு நெறிப்படத் தோன்றிக் - காலமொடு வரூஉம் வினைச்சொ லெல்லா - முயர்திணைக் குரிமையு மஃறிணைக் குரிமையு - மாயிரு திணைக்குமோ ரன்ன வுரிமையு - மம்மூ வுருபின தோன்ற லாறே." வினைச்சொற்கள் வெளிப்படையாற் காலங்காட்டுவனவும் குறிப்பாற் காலங்காட்டுவனவுமென இரண்டாய், உயர்திணைக் குரியனவும் அஃறிணைக்குரியனவும் இரண்டுதிணைக்கு மொப்ப வுரியனவுமென மூன்று கூற்றனவாம். உண்டான், உண்ணாநின்றான், உண்பான் என்பன முறையே இறந்தகால முதலிய மூன்றும் வெளிப்படநின்ற வினைச்சொற்கள். கரியன் செய்யன் என்பன காலங் குறிப்பிற்கொள்ளநின்ற வினைச்சொற்கள். வினையும், வினைமுதலும், செயப்படு பொருளும், நிலமும், காலமும், கருவியும், நிமித்தமும், பயனும் எனத் தொழிற் காரகங்களெட்டாம். காரகமெனினுங் காரணமெனினு மொக்கும். 'வனைந்தான்' என்றவழி வனைதற்றொழிலும், வனைந்தகருத்தாவும், வனையப்பட்ட குடமும், வனைதற்கிடமாகிய நிலமும், அத்தொழினிகழுங்காலமும், அதற்குக் கருவியாகிய திகிரி முதலாயினவும், வனையப்பட்ட குடத்தைக் கொள்வானும், வனைந்ததனுடைய பயனுமாகிய வெட்டும்பற்றி அத்தொழி னிகழ்ந்தவாறு கண்டுகொள்க. அஃதேல், தொழிலின் வேறாயது காரகமாகலின், வனைதற்றொழிலுக்கு அத்தொழிறான் காரகமாமா றென்னையெனின்,— வனைந்தான் என்பது வனைதலைச் செய்தானென்னும் பொருட்டாகலின், செய்தற்கு வனைதல் செயப்படுபொரு ணீர்மைத்தாய்க் காரகமாமென்பது.

இடையியல்—இடைச்சொல்லிலக்கண முணர்த்துதலின், இவ்வோத்து இடையியலென்னும் பெயர்த்தாயிற்று. "இடையெனப் படுப பெயரொடும் வினையொடு-நடைபெற் றியலுந் தமக்கியல் பிலவே." இடைச்சொற்க டமக்கென வேறோர் பொருளுணர்த்தும் இலக்கணமுடையனவல்ல; பெயரொடும் வினையொடும் வழக்குப்பெற் றியல்வனவாம். "அதுகொறோழி காமநோயே" என்புழிக், கொல்லென்னும் இடைச்சொற் பெய

ரொடு வழக்குப் பெற்றியன்றது. "வருகதில் லம்மவெஞ் சேரி சேர" என்புழித், தில் அம்மவென்னு மிடைச்சொற்கள் வினையொடு வழக்குப்பெற்றியன்றன.

உரியியல்— உரிச்சொல்லிலக்கண முணர்த்துதலின், இவ்வோத் துரியியலென்னும் பெயர்த்தாயிற்று. " உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை - யிசையினுங் குறிப்பினும் பண்பினுந் தோன்றிப் - பெயரினும் வினையினு மெய்தடு மாறி - யொருசொற் பலபொருட் குரிமை தோன்றினும் - பலசொல் லொருபொருட் குரிமை தோன்றினும் - பயிலா தவற்றைப் பயின்றவை சார்த்தித் - தத்த மரபிற் சென்றுநிலை மருங்கி - னெச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல்." தமக்கியல்பில்லாத விடைச்சொற்போலாது இசை குறிப்புப் பண்பென்னும்பொருட்குத் தாமே யுரியவாதலின், உரிச்சொல்லாயிற்று. பெரும்பான்மையுஞ் செய்யுட்குரியவாய்வருதலின், உரிச்சொல்லாயிற்றெனபாருமுளர். இசைகுறிப்புப் பண்பென்னும் பொருளவாய்ப் பெயர்வினைபோன்றும் அவற்றிற்கு முதனிலையாயுந் தடுமாறி, ஒருசொற் பலபொருட்கும் பலசொல் லொருபொருட்கும் உரியவாய்வருவன உரிச்சொல்லென்றும், அவை பெயரும் வினையும்போல ஈறுபற்றிப் பொருளுணர்த்தலாகாமையின், வெளிப்படாதவற்றை வெளிப்பட்டவற்றோடுசார்த்தித் தம்மையெடுத்தோதியே அப்பொருளுணர்த்துமென்றும், உணர்ந்துகொள்க. குறிப்பு - மனத்தாற் குறித்துணரப்படுவது. பண்பு - பொறியானறியப்படுங்குணம். கறுப்பு - பெயர்ப்போலி. தவ - வினைப்போலி. துவைத்தல் - பெயர்க்கு முதனிலை. தாவாத - வினைக்குறிப்பு முதனிலை. பலவுமோதினும், இசைகுறிப்புப் பண்பென்னு மூவகைப்பொருளும் பற்றிவருதலே உரிச்சொற்கிலக்கணமாம்.

எச்சவியல்— கிளவியாக்கமுதல் உரியியலீறாகக்கிடந்த ஓத்துக்களுள் உணர்த்துதற்கிடமின்மையான் உணர்த்தப்படாது எஞ்சிநின்ற சொல்லிலக்கணமெல்லாந் தொகுத்துணர்த்துதலின், இவ்வோத்து எச்சவியலென்னும் பெயர்த்தாயிற்று. செய்யுட்குரிய சொல்லும், அவற்றதிலக்கணமும், அவற்றுற் செய்யுள் செய்வுழிப்படும் விகாரமும், செய்யுட்பொருள்கோளும், அறுவகைத்தொகைச் சொல்லுமுதலாயின இவ்வியலாற் கூறப்படுவனவாம். வடநூலார் தொகைச்சொல்லைச் சமாசமென்பர்.

## பொருளதிகாரம்.

பொருளதிகாரமென்பது பொருளினததிகாரத்தை யுடையதென வின்மொழித தொகையாய்ப் படலத்திற்குக் காரணக்குறியாயிற்று. ஈண்டதிகார மென்றது பொருளை முதலிவரும் பலவோத்தினது தொகுதியை. இஃது நாண்மீனின்பெயர் நாளிற்குப் பெயராயினாற்போல்வதோ ராகுபெயர். இவ்வதிகாரத்து எழுத்துச்சொற் கருவியாகவுணரப்படும் பொருளிலக்கண முணர்த்தப்படும். பொருளாவன அறம் பொருளின்பம் வீடென நான்காம். அறம் பொரு ளின்பம் வீடென்பனவற்றை வடநூலார் முறையே தரும மருத்தங் காம மோக்கமென்பர். பொருளெனப் பொதுப்படக் கூறுதலின், காட்சியனுமான முறையென்னுமளவை மூன்றானு மளந்தறியப்படும் பொருளெல்லாம் இந்நான்குபொருளி னடக்கிக்கொள்ளப்படும். எழுத்துஞ்சொல்லு மாராய்வதெல்லாம் பொருட்பெற்றிதேறி யுறுதிப்பயன்றலைக்கூடுதற்காகலின், எழுத்துஞ்சொல்லுமாராய்ந்தார் அவ்வுணர்ச்சி கருவியாகக்கொண்டு பொருளிலக்கண மொருதலையான் ஆராய்ந்துறுதி தலைக்கூடக் கடவராவரென்க. " எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்

டுங் - கண்ணென்ப வாழு முயிர்க்கு" எனத் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனு ரோதியருளியதூஉம் இது நோக்கியென்று தெளிக. எண்டெண்—தருக்கம்; எழுத்து— இயற்றமிழ். எனவே, முகத்துக்கண்ணுடையராயினர் அது கருவியாக உருவப்பொரு ளுடிக் காண்டலைப் பயனாகக் கொள்ளுதல்போல எண்ணு மெழுத்துமென்னு மறிவுக் கண்ணுடையராயினர் அவ்வுணர்ச்சி கருவியாகப் பொருளிலக்கணமாராய்ந்து கண் டுறுதி தலைக்கூடுதலைப் பயனாகக் கொள்ளவேண்டு மென்பதாயிற்று. இனி அவ்வாறு முயலாது அக்கருவிநூலுணர்ச்சி மாத்திரையேயமையுமென்றிருப்பரேல், அக்கல்வி அவ ர்க்கு வீணுழப்பாவதல்லது பயப்பாடுடைத்தா மாறின்றென்பார், "சத்தமுஞ் சோதி டமு மென்றாங் கவைபிதற்றும் - பித்தரிற் பேதையா ரில்" என்றார் நீதிநூலோரென்க. எழுத்துஞ் சொல்லும் பொருளுமென்னு மியற்றமிழாராய்ந்தார் முதனூற்பொருளுணர் ந்து வீடுபேறு ஒருதலையாற் றலைக்கூடுவரென்பது, "எழுத்தறியத் தீரு மிழிதகைமை தீர்ந்தான் - மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகு - மொழித்திறத்தின் - முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து கட்டறுத்து வீடுபெறும்" என்பதனானுணர்க.

இனி எழுத்துஞ் சொல்லு மாராய்ந்து வல்லராக முயல்வார் இக்காலத்துப் பல ருளர். அவ்வாராய்ச்சி கருவியாகப் பொருளாராய்ந் துறுதி தலைக்கூட முயல்வார் அரி யர். இங்ஙனம் பொருளதிகார மாராய்ந்து வல்லராக முயல்வா ரரியராயிற்று இந் நிகழ்காலத்து மாத்திரமன்று; அச்செல்காலத்து முண்டென்பது, அது "அரசன் இனி நாடு நாடாயிற்று; நூல்வல்லாரைக் கொணர்கவென்று எல்லாப்பக்கமும் போக்க, எழுத்ததிகாரமுஞ் சொல்லதிகாரமும் யாப்பதிகாரமும் வல்லாரைத் தலைப்பட்டுக் கொண ர்ந்து, பொருளதிகாரம் வல்லாரைத் தலைப்பட்டிலேமென்று வந்தார்; வர, அரசனும் புடைபடக் கவன்று, என்னை? எழுத்துஞ் சொல்லும் யாப்பு மாராய்வது பொருளதிகார த்தின் பொருட்டன்றே! பொருளதிகாரம் பெறேமேயெனின்,— இவை பெற்றும் பெற் றிலேம் என்று சொல்லிக் கவன்றிட்டான்" என நக்கீரனார் இறையனார் களவிய லுரை முகத் துரைக்குமாற்றா னறிக.

எழுத்துஞ் சொல்லு மாராய்ந்தார் அவ்வுணர்ச்சி கருவியாகப் பொருளாராய்ந்து வீடுபேற் றுறுதிப்பயன் றலைக்கூடற்பாலரென்ப தொக்குமன்! அவ்விழுப்பமுடைய பொரு ளாரும், இறைவனருளிச்செய்த முதனூல்களும் அவைபோல்வனவா மெய்ந்நூல் களுமேயாம்; அவற்றின்கணன்றே தத்துவ மாராயுமாறும், பொய்ப்பொருள்களின் வேறாக மெய்ப்பொருள் காணுமாறும், வீடு தலைக்கூடுமாறும், வீடுபேற்றிலக்கணமும், கூறப்பட்டன; தொல்காப்பியப் பொருளதிகாரம் உலகியல் வழக்குரைப்ப தொன்றாக லின், அதனாராய்ச்சியானே வீடுபேற் றுறுதிப்பயன் றலைக்கூடுமா றியாங்ஙனமெனின்,— நன்று வினாயினாய்! வீடுபேறளிக்கும் விழுப்பொருணூல் இறைமுதற்கடவு ளருளிச் செய்த முதனூல்களும் அவ்வியல்புடைய மெய்ந்நூல்களுமென்பது நன்மக்க ளெல்லார் க்கு மொப்ப முடிந்ததேயாம். அற்றாயினும், அவ்விறைவன் அன்னதோர் முதனூ றமிழின் கட் செய்திலனாகலின், அவ்விறைவ னியல்புள்ளவா றுணர்ந்த வருந்தவக்கொள்கை யக த்தியனாரும் அவர் மாணாக்கரான தொல்காப்பியனார் முதலியோரும் அவ்விறைவ னரு ளாற் றமிழுலக முணர்ந் துறுதி தலைக்கூடற்பொருட்டுத் தாமியற்றியருளிய தமிழியல் வழக்கு நூல்களின்கண் அம்முதனூல்கள் கூறு நுண்பொரு ளியல்களைத் தூலவருந்ததி நியாய முறைபற்றி அகப்பொருள் புறப்பொருளென் றிருதிறத்தாற் பதினாற்றிணைப்

பகுதியவாய்ச் செய்யுளாற் புனைந்து பாடுதற்குரிய இன்பமுதலிய வுலகியல் வழக்கின் மேல்வைத்து இயற்றமி ழொழிபாகக்கொண்டு அங்ஙன மோதியருளினு ராகலின், அவரியற்றிய வகத்தியந் தொல்காப்பிய முதலியன தமிழியல் வழக்கு நூலாதலே யன்றி, அவ்விறைவ னருளிய முதனூ லுண்பொரு ளுணர்தற்சா மறிவின் மதுகையை யொருதலையாகப் பயக்கும் விழுப்பொரு ணூலுமாமென் றுணர்ந்துகொள்க. இம்முறை யிறையனார் களவியலுக்கு மொக்கும். இறைமுதற்கடவுள், உயிர்கள் சோபான முறையானே அங்ஙனம் பொருள்களின் மெய்ம்மை தேறி வீடுபேற் றுறுதிப்பயன் றலைக்கூடுதற்கன்றே வேதாகமமென முதனூல்கண் முறையே சூத்திரமும் பாடியமும்போலப் பொதுவுஞ் சிறப்புமாக அவ்வா றிருவேறு வகைப்பட அருளிச்செய்ததூஉமென வறிக. வாதவூரடிகள், திருக்கோவை திருவாசகமென உண்மைச் செந்தமிழ்த் திருமுறைகண் முறையே உலகியலும் வீட்டியலு முதலி அவ்வாறிருவகையாற் றிருவாய்மலர்ந்தருளியதூஉம், இக்கருத்து நோக்கியேயென்று துணிக. அற்றே லஃதங்ஙனமாக; தொல்காப்பியப் பொருளதிகாரம் அகத்திணை, புறத்திணை, களவு, கற்பென் றின்னோரன்ன வியல்களானே இல்லறமும் பொருளு மின்பமு முணர்த்துதலின், அம்முத்திறத் துறுதிப்பொரு ணூலாவதல்லது, நிலையாமை, துறவு, மெய்யுணர்வு, அவாவறுத்த லென்றற்றொடக்கத்து வீட்டியனெறிக்கு மோத்துக்களுடைத்தாகாமையின், வீடுபேற் றுறுதிப்பொருணூலுமா மென்றல் சாலாதெனின்,— அஃதுலகியல் வழக்குநூலாதலின், பெரும்பான்மையா னல்வகை வருணத்தார்க்கு முரிய இல்லறம் பொருளின்ப முணர்த்துவதாயிற்று. ஆயினும், அகத்திணையியலுட் பிரிதனிமித்தங் கூறுதலானும், புறத்திணையியலுள் வெட்சி முதலாக வாகையீறாக அறனும் பொருளும் பயக்கும் அரசியல்கூறி, அவற்றது நிலையாமை காஞ்சியுட் கூறுதலானும், "அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்" என்னும் புறத்திணையியற் சூத்திரத்துங் "காமஞ் சான்ற" என்னுங் கற்பியற் சூத்திரத்துந் துறவு மெய்யுணர்வு மவாவறுத்தலுங் கூறுதலானும், வீட்டியலுறுதிப் பெரும்பயனுங் கூறிற்றேயாம். ஆகலின், சாலாமை யாண்டையதென்க.

**அகத்திணையியல்**— ஒத்தவன்பான் ஒருவனு மொருத்தியுங் கூடுகின்ற காலத்திற் பிறந்த வின்பம் அக்கூட்டத்தின் பின்னர் ஒருவர்க்கொருவர் இவ்வாறிருந்ததெனப் புலப்படக் கூறப்படாததாய் யாண்டு முள்ளத்துணர்ச்சி நுகர்வுதாவதோர் பொருளாகலின், அது அகமெனப்படும். எனவே, அகத்தே நிகழ்கின்ற வின்பத்திற் ககமென்றது ஓராகுபெயராம். இஃதொழிந்தன ஒத்தவன்புடையர் தாமேயன்றி எல்லாரானுந் துய்த்துணரப்படுதலானும், இவை யிவ்வாறிருந்தவெனப் பிறர்க்குக் கூறப்படுதலானும், புறமெனப்படும். இன்பமேயன்றித் துன்பமு மகத்து நிகழுமாலெனின்,— அது புறத்தார்க்குப் புலனாதன் மறைக்கப்படாமையிற் புறத்திணைப்பாலதாம். மற்றுக் காமநிலையின்மையான் வருந் துன்பம் யாண்டடங்குமெனின்,— அதுவுந் தாபதநிலை தபுதாரநிலையென வேறாய்ப் புறத்திணைக்கட்டானே யடங்குமென்பது. திணை—ஒழுக்கம். இயல்—இலக்கணம். எனவே, அகத்திணையியலென்றது—இன்பமாகிய வொழுக்கத்தினது இலக்கண மென்றவாறாயிற்று. இனி ஒழுக்கநிகழுதற் கிடனாகலின், குறிஞ்சி முதலியவுந் திணையெனப்படும்.

"கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய் - முற்படக் கிளந்த வெழுதிணை யென்ப." எண்வகை மணனு மெதிர்சென்று கூறப்படுதலானும், காமஞ்சாலா விளமைப்

பருவ மதன்கண்ணதாகலானும், கைக்கிளையை முன்வைத்தார். காமஞ் சால்வுழி நிகழு மன்புடைக் காமவொழுக்கமாகலின், ஐந்திணையை அதன்பின் வைத்தார். பொருந்தாக் காமவொழுக்கமாகலின், பெருந்திணையை இறுதிக்கண் வைத்தார். இவ்வின்பவொழுக்கம், கைக்கிளைத்திணை, முல்லைத்திணை, குறிஞ்சித்திணை, மருதத்திணை, நெய்தற்றிணை, நடுவுநிலைத்திணை, பெருந்திணையென எழுபெற்றித்தாம். கற்பொடு பொருந்திக் கணவன் சொற்பிழையாது இல்லிருந் தறஞ்செய்தன் மகளிர்க்கு மரபாதலானும், அவ்வில்லறம் புணர்ச்சிப்பற்றியல்லது நிகழாமையானும், புணர்ச்சிப்பின் ஆராமைபற்றி யூடனிகழ்தலானும், ஊடற்கட் பிரிந்திரங்குத லுண்மையானும், அப்பிரிவு ஓதல் பகை தூதென் றிவை காரணமாகப் பலவாய் நீட்டித்து நிகழ்த லுண்மையானும், முல்லை குறிஞ்சி மருத நெய்தல் பாலையென்று அவ்வாறு கோத்திட்டாரென் றுணர்க.

கைக்கிளை - ஒரு மருங்கு பற்றிய கேண்மை; முல்லை - கற்பு; குறிஞ்சி - புணர்ச்சி; மருதம் - ஊடியுங் கூடியும் போகநுகர்தல்; நெய்தல் - இரங்குதல் என்றார் நச்சினார்க்கினியர். பிறர் முல்லை முதலிய பூக்களானே அவற்றிற்கிடனாகிய காடுறை யுலக முதலிய நான்கும் அவ்வாறு வழங்கப்பட்டன வென்பர். எல்லாவற்றினும் பெரிதாகிய திணையாதலின், பெருந்திணையாயிற்று. என்னை? கைக்கிளைமுத லாறுதிணையு நான்கு மணம்பெறத், தானொன்று நான்கு மணம்பெற்று நடத்தலினென்க.

நடுவுநிலைத்திணை, "நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு - முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே" என்றோதலின், அது நடுவுநிற்றல் காரணத்தாற் பெற்ற பெயர். ஏனை நாற்றிணையு முறையானே கூறி, இறுதிக்கண் ஓதுதலான், இஃதவற்றின் வேறென்பது விளங்குதலானும், எஞ்சி நின்றது பாலையேயாகலானும், புறப்பொருள் கூறுங்கால், "வாகை தானே பாலையது புறனே" என நடுவுநிலைத்திணை கூறுந் தானத்திற் பாலையெனக் குறியிட்டாளுதலானும், பாலைத்திணை நடுவுநிலைத்திணை யென்பன ஒருபொருட் கிளவி. அஃதெவற்றி னடுவுநிற்பதென் றவாவுங்கால், "நடுவ ணைந்திணை நடுவண தொழியப் - படுதிரை வையம் பாத்திய பண்பே" என நிலம்பகுத்தோதுங்கால், நடுவணதெனக் குறியிட்டாராகலின், அங்ஙனம் பகுக்கப்படு நிலங்களுளொன்றாகாது அவற்றின் வேறுமாகாது தனக்குரிய நில நடுநிகர்த்தாய் நிற்றல்பற்றி அவ்வாறு குறியிட்டாளப்பட்டது" என்றார் சூத்திரவிருத்திகாரர். அங்ஙனமாதல், "முல்லையுங் குறிஞ்சியு முறைமையிற் றிரிந்து - நல்லியல் பழிந்து நடுங்குதுய ருறுத்துப் - பாலை யென்பதோர் படிவங் கொள்ளும்" என்னுஞ் சிலப்பதிகாரத்தானு முணர்க. இவ்வுண்மை யுணராதார் பாலைசான்ற சுர நானிலத்துக் கடங்காதென வேறுவைத் தெண்ணி ஆசிரியர் தொல்காப்பியனாரோடு மாறுகொண்டு நிலமைந்தெனத் தமக்கு வேண்டியவாறு கூறுப.

இனி நடுவணைந்திணை முதல் கரு வுரியென மூன்றும். இவை யகத்திணைக் கன்றிப் புறத்திணைக்கு முரியவாம். இனி முதலிற் கருவும் கருவி லுரியுஞ் சிறந்து வரும். இம்மூன்றும் பாடலுட் பயின்று வரும். வழக்கினுள் வேறு வேறு வருவதன்றி ஒருங்கு நிகழா. இன்னும், இவை புலனெறிவழக்கிற் பயின்றவாற்றான் வரையறுத்துக் கூறப் படுவதன்றி வழக்கு நோக்கி இலக்கணங் கூறப்படா.

**முதற்பொருள்**— நிலமுங் காலமுமென முத லிருவகைப்படும். மேற்பகுத்த முல்லை முதலாய நான்கு நிலமுதற் பொருளாம். அந்நான்கு முறையானே காடுறையுல

கம், மைவரையுலகம், தீம்புனலுலகம், பெருமணலுலகமென் றவ்வாறு வழங்கப்படும். கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனிலென்னும் பெரும்பொழு தாறும், காலை, நண்பகல், மாலை, வைகறையாமம், விடியலென்னுஞ் சிறுபொழு தைந் தும், கால முதற்பொருளாம். விடியலெனினு மெற்பாடெனினு ஞாயிற்றி னுதய மெனினு மொக்கும். படுதல்—உண்டாதலென்னும் பொருட்டு. இப்பொருள் காணுதார் எற்பாடு பின்பகலென்றும், வைகுறுவிடியலென்னும் வினைத்தொகையை வைகுறுவும் விடியலுமென வும்மைத்தொகையாக்கி, வைகறையை வைகுறுவெனவு நாள்வெயிற்காலை யை விடியலெனவுங் கொண்டு, பெரும்பொழுது போலச் சிறுபொழுது மறுவகைப்படு மென்பர். அது பொருந்தாமை சூத்திரவிருத்தியுட் காண்க.

முல்லைக்குக் காடுங் காடுசார்ந்த விடமு நிலம்; பொழுது காரு மாலையும். குறி ஞ்சிக்கு மலையு மலைசார்ந்த விடமு நிலம்; பொழுது கூதிரும் யாமமு முன்பனியும். மருதத்திற்குப் பழனமும் பழனஞ்சார்ந்த விடமு நிலம்; பொழுது வைகறையாமம். நெய்தற்குக் கடலுங் கடல்சார்ந்த விடமு நிலம்; பொழுது எற்பாடு. பாலைக்கு நிலனி ன்று; பொழுது நண்பகலும் வேனிலும் பின்பனியும்.

**உரிப்பொருள்**— புணர்தலும் புணர்தனிமித்தமும், பிரிதலும் பிரிதனிமித்தமும், இருத்தலு மிருத்தனிமித்தமும், இரங்கலு மிரங்கனிமித்தமும், ஊடலு மூடனிமித்தமு மென்பன வுரிப்பொருளாம். இவை முறையானே குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருத மென்பனவற்றிற் குரியபொருளாம். அகப்பொருளாவது புணர்ச்சியாகலானும் அஃதிரு வர்க்கு மொப்ப நிகழ்தலானு முன்னர்ப் புணர்ச்சியும், புணர்ந்துழியல்லது பிரிவின்மை யானும் அது தலைவன்கண்ணதாகிய சிறப்பானும் அதன்பின்னர்ப் பிரிவும், பிரிந்துழிக் கற் பாற் றலைவி யாற்றியிருத்தன் முறையாகலின் அதன்பின்னர் இருத்தலும், அங்ஙன மாற் றியிராது பிரிவு நீட்டித்துழிக் காமங் கைமிக்கு அழுங்கல் இயல்பாகலின் அதன்பின்னர் இரங்கலும், பிரிவின் நிறனுகிய பரத்தையிற் பிரிந்துழித் தலைவன் றவறு நோக்கித் தலைவி கலாய்த்த லியல்பாகலானுங் காமத்திற்குச் சிறத்தலானும் அதன்பின்னர் ஊடலும், வைக் கப்பட்டனவென் றுணர்க.

**கருப்பொருள்**— தெய்வம், உணு, விலங்கு, மரம், புள், பறை, செய்தி, யாழென் பனவும் பிறவும் ஐந்திணைக் கருப்பொருள்களாம்.

முல்லைக்குத் தெய்வம் - மாயோன். உணு - வரகுஞ் சாமையும். மா - முயலுஞ் சிறுமானும். மரம் - கொன்றையுங் குருந்தும். புள் - கானங்கோழியு மயிலுஞ் சிவலும். பறை - ஏறுகோட்பறையு முரசும். செய்தி - வரகு களைகட்டலும் வையறுத்தலுங் கடா விடுதலு நிரைமேய்த்தலும். பண் - முல்லை. தலைமகன் - குறும்பொறைநாடன். தலைமகள் - கிழத்தி, மனைவி. பூ - முல்லையுந் தோன்றியும் பிடவுந் தளவும். நீர் - கான்யாறு. ஊர் - பாடியுஞ் சேரியும். மக்கள் - இடையர், இடைச்சியர், ஆயர், ஆச்சியர்.

குறிஞ்சிக்குத் தெய்வம் - முருகவேள். உணு - ஐவனநெல்லுந் தினையு மூங்கி லரிசியும். மா - புலியும் பன்றியும் யானையும். மரம் - அகிலு மாரமுந் திமிசுந் தேக்கும் வேங்கையும். புள் - கிளியு மயிலும். பறை - வெறியாட்டுப் பறையுந் தொண்டகப்பறை யுங் குரவைப்பறையும். செய்தி - தேனழித்தலுங் கிழங்ககழ்தலுந் தினைவிளைத்தலுந்

தினைக்கிளிகடிதலும். யாழ் - குறிஞ்சியாழ். தலைமகன் - சிலம்பன், வெற்பன், பொருப்பன். தலைமகள் - கொடிச்சி, குறத்தி. நீர் - அருவிநீருஞ் சுனைநீரும். ஊர் - சிறுகுடியுங் குறிச்சியும். பூ - குறிஞ்சியும் வேங்கையுஞ் சுனைக்குவளையுங் காந்தளும். மக்கள் - குறவர், இறவுளர், குன்றவர்.

மருதத்திற்குத் தெய்வம் - இந்திரன். உணா - செந்நெல்லும் வெண்ணெல்லும். மா - எருமையு நீர்நாயும். மரம் - வஞ்சியுங் காஞ்சியு மருதும். புள் - நீர்க்கோழியுந் தாராவும். பறை - மணமுழவு நெல்லரிகிணையும். செய்தி - நென்னடுதலுங் களைகட்டலும் அரிதலுங் கடாவிடுதலும். யாழ் - மருதயாழ். தலைமகன் - ஊரன், மகிணன். தலைமகள் - கிழத்தி, மனைவி. பூ - தாமரைப்பூவுஞ் செங்கழுநீர்ப்பூவும். நீர் - மனைக்கிணறும் பொய்கையும். மக்கள் - கடையர், கடைசியர், உழவர், உழத்தியர். ஊர் - பேரூர்.

நெய்தற்குத் தெய்வம் - வருணன். உணா - மீன்விலையு முப்புவிலையும். மா - சுறவு முதலையும். முதலையுஞ் சுறவு மீனாதலின் மாவென்றன் மரபன்றென்றும், உமண் பகடுபோல்வன ஆண்டு மாவெனப்படுமென்றுங் கூறினார் நச்சினார்க்கினியர். ஆசிரியர் தொல்காப்பியனார் விதந்து சுட்டாது, "மாவு மாக்களு மையறி வினவே" எனப் பொதுப்பட வோதுதலானும், 'இடங்கர்மா' வென்னுமிலக்கிய வழக்குண்மையானும், நக்கீரனார் நெய்தற் கருப்பொரு டெரிப்புழி, 'மா - சுறவு முதலையு' மென்றுராதலானும், பகடு ஏனைநிலக் கருப்பொருளாகலின், "எந்நில மருங்கிற் பூவும் புள்ளு - மந்நிலம் பொழுதொடு வாரா வாயினும் - வந்த நிலத்தின் பயத்த வாகும்" என்னு மகத்திணையியற் சூத்திரத்தொன்றென முடித்தலானே நெய்தற்கண்வந் தந்நிலக் கருப்பொருளெனப்பட் டவ்வாறு வழங்கப்பட்டதல்லது நெய்தற்குரிய கருப்பொருளாகாமையானும், அவ்வுரை கொள்ளற்க. மரம் - புன்னையு ஞாழலுங் கண்டலும். புள் - அன்னமு மன்றிலு மகன்றிலும். பறை - மீன்கோட்பறையு நாவாய்ப்பறையும். செய்தி - மீன்படுத்தலு முப்புவிளைத்தலு மவை விற்றலும். யாழ் - விளரியாழ். தலைமகன் - கொண்கன், சேர்ப்பன், துறைவன். தலைமகள் - நுளைச்சி, பரத்தி. நீர் - மணற்கிணறுமுவர்க்குழியும். பூ - வெள்ளிதழ்க்கைதையு நெய்தலும். ஊர் - பட்டினமும் பாக்கமும். மக்கள் - பரதர், பரத்தியர், நுளையர், நுளைச்சியர்.

தொல்காப்பியனார் பாலைக்கு நிலம் வேண்டிற்றிலர்; வேண்டாமையிற் றெய்வமும் வேண்டிற்றிலர்; பிறர் பகவதியையு மாதித்தனையுந் தெய்வமென்று வேண்டுவர். உணா - ஆறலைத்தனவு மூறெறிந்தனவும். மா - வலியழிந்த யானையும் புலியுஞ் செந்நாயும். மரம் - இருப்பையு மோமையும். புள் - கழுகும் பருந்தும் புறவும். பறை - பூசற்பறையு மூறெறிபறையு நிரைகோட்பறையும். செய்தி - சூறையாடலுஞ் சுரததெறிதலும். யாழ் - பாலையாழ். தலைமகன் - மீளி, காளை, விடலை. தலைமகள் - எயிற்றி, பேதை. பூ - மராவுங் குராவும் பாதிரியும். நீர் - அறுநீர்க்கூவலு மறுநீர்ச்சுனையும். மக்கள் - எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர். ஊர் - பறந்தலை, கொல்குறும்பு.

இக்கூறப்பட்டகரு மயங்கியும் வரப்பெறும்; என்னை? "எந்நில மருங்கிற் பூவும் புள்ளு - மந்நிலம் பொழுதொடு வாரா வாயினும் - வந்த நிலத்தின் பயத்த வாகும்" என்றாசிரிய ரோதுதலின்.

**புறத்திணையியல்—** அகத்திணைக்கண் மாலை, யாமம், வைகறை, காலை, நண்பக லென்னுங் கால முதற்பொருளோடும்பற்றி, முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை யென் றங்ஙன முறைதெரித் தோதிய வாசிரியர், தமக்கென நிலமுடைய குறிஞ்சி முல்லை மருத நெய்த லென்னு நான்கும்பெற்ற விலக்கணங்களோடு ஒருபுடை யொப்புமையாற் சார்புடைய வாதலும், நிலமில்லாத பாலை பெருந்திணை கைக்கிளை யென்பன பெற்ற விலக் கணங்களோடு ஒருபுடை யொப்புமையாற் சார்புடைய வாதலும் பற்றி, முறையே வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண்டிணை யென்பனவற்றை அவற் றிற்குப் புறனாகநிறுத்தி அவற்றதிலக்கணங் கூறுதலின், இது புறத்திணை யியலென்னும் பெயர்த்தாயிற்று, அகத்திணைப் பொருளான இல்லறத்திற்கு முல்லை சிறத்தலின் ஆண்டு அதனை முதலாகவைத் தெண்ணினர்; புறத்திணையான அரசியற்குப் பொருள் இன்றி யமையாமையின் அப்பொருண் முடித்தற்குக் களவொழுக்கமுங் கங்குற்காலமுங் காவலர் கடுகினுந் தான் கருதிய பொருளை இரவின்கண் முடித்து மீடலும்போலு மிலக் கணங்களுடைய குறிஞ்சி சிறத்தலின், ஈண்டு அதனை முதலாகவைத்து எண்ணினு ராசிரியரென்றுணர்க.

**வெட்சித்திணை—** "அகத்திணை மருங்கி னரிறப வுணர்ந்தோர் - புறத்திணை யில க்கணந் திறப்படக் கிளப்பின் - வெட்சி தானே குறிஞ்சியது புறனே - யுட்குவரத் தோ ன்று மீரேழ் துறைத்தே." களவொழுக்கமுங் கங்குற்காலமுங் காவலர் கடுகினுந் தான் கருதியபொருளை இரவின்கண் முடித்து மீடலும் போல்வன ஒத்தலின், வெட்சித் திணை குறிஞ்சிக்குப் புறனாயிற்று. வெட்சித்திணையாவது— களவின்கண் நிரைகொள்ளு மொழுக்கம். இதற்கு அப்பூச்சூடுதலு முரித்து. இஃதேனைத் திணைக்கண்ணும் பொரு ந்துவன கொள்க. "வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவி - னாதந் தோம்பன் மேவற் றாகும்." களவு நிகழ்கின்ற குறிஞ்சிப் பொருளாகிய கந்தருவமணம் வேதவிதி யானே இல்லறமாயினாற்போல இருபெருவேந்தர் பொருவது கருதியக்கால் ஒருவர் ஒரு வர் நாட்டுவாழும் அந்தணரும் ஆவுமுதலியன தீங்குசெய்யத் தகாத சாதிகளை ஆண்டு நின்று மகற்றல் வேண்டிப் 'போதருக' வெனப் புகறலும், அங்ஙனம் போதருதற்கு அறி வில்லாத ஆவினைக் களவினாற் றருமே கொண்டு வந்து பாதுகாத்தலும், தீதெனப்படாது அறமேயாயிற்று. ஆ கோடல் - அடித்துக்கோடலு மீட்டுக்கோடலுமென விரண்டாம். இவ்விரண்டும் வெட்சித்திணையெனவே கொண்டாராசிரியர். இவ்வெட்சித்திணை படை யியங்கரவமுதலிய பதினான்கு துறைகளையுடைத்து. இத்துறைகள் கொள்வோர்க்கு மீட்போர்க்கு முரியவாகலின், அவ்வாற்று னிருபத்தெட்டுத் துறைகளாம். வேத்தியலின் வழீஇத் தன்னுறுதொழிலாய்வரு மித்திணைவழு வெறியறிசிறப்பின் வெவ்வாய் வேலன், வெறியாட்டயர்ந்த காந்தண்முத லிருபத்தொன்றும்.

**வஞ்சித்திணை—** "வஞ்சி தானே முல்லையது புறனே." முதலெனப்பட்ட காடுறை யுலகமு மந்நிலத்திற்கேற்ற கருப்பொருளும் பாசறைக்கட் டலைவியைப் பிரிந்திருத்தலுந் தலைவி தலைவற் பிரிந்து மனைவயினிருத்தலுமாகிய வுரிப்பொருளு மொப்பச் சேறலின், வஞ்சி முல்லைக்குப் புறனாயிற்று. "எஞ்சா மண்ணசை வேந்தனை வேந்த - னஞ்சுதக த் தலைச்சென் றடல்குறித் தன்றே." வஞ்சித்திணையாவது— ஒருவேந்தன் மண்ணசை யானே மற்றொரு வேந்தனைக் கொற்றங்கோடல் குறித்து மேற்சேறலாம். ஒருவன் மண் ணசையான் மேற்சென்றால் அங்ஙன மேற்செல்லப்படுவோனும் அம்மண்ணழியாமற் காத்

தற்கு எதிரே வருதலின், மேற்சேறல் இருவர்க்கும் பொதுவாம். இனி ஒருவன் அங்ஙன மேற்சென்றுழி, ஏனையோன் எதிர்செல்லாது தன்மதிற்புறத்து வருந்துணையு மிருப்பின், அஃதுழிஞையி னடங்குமென்க. இவ்வாற்றானே இருவரும் வஞ்சிவேந்தராதலும், ஈண்டுக் கூறுந் துறையெல்லாம் இருவர்க்கும் பொதுவாதலுங் கொள்க. இவ்வஞ்சித்திணைத் துறை இயங்குபடையரவமுதற் பதின்மூன்றும்.

**உழிஞைத்திணை**— "உழிஞை தானே மருதத்துப் புறனே." இருபெருவேந்தர் தம்முண் மாறுகொண்டவழி எதிர்செலற் காற்றாது போய் மதிலகத்திருந்த வேந்தன் மதில் பெரும்பான்மையு மருதத்திடத்ததாகலானும், அம்மதிலை முற்றுவோனும், அந்நிலத்திருத்தலானும், ஒருவன் வாயில்வேண்டத் திறவாது அடைத்திருந்த வொப்புமையானும், உள்ளிருந்தோனும் புறப்பட விரும்புதலானும், மருதம்போல விதற்கும் பெரும்பொழுது வரைவின்மையானும், புலரிக்காலமே போர்செயத் தொடங்குங் காலமாகலானும், உழிஞைத்திணை மருதத்திற்குப் புறனாயிற்று. "முழுமுத லரண முற்றலுங் கோடலு-மனைநெறி மரபிற் றாகு மென்ப." உழிஞையாவது— போர்மேற்சென்ற வேந்தன் வேற்றுவேந்தன் அரணினை முற்றுதலும், இருந்தவேந்தன் கைக்கொண்டு காத்தலுமாகிய மரபிற்றாம். இது மதின்முற்றிய புறத்தோன்கூறு நான்கு மதில் காத்திருந்த வகத்தோன் கூறு நான்குமென வெட்டுவகையினை யுடைத்து. அவைதாம்: கொள்ளார் தேஎங் குறித்த கொற்றங்கூறன் முதலியவும், அகத்தோன் செல்வங் கூறுதன் முதலியவுமாம். இனி இவ்விருவர்க்கும் ஒன்றாய்ச் சேறற்குரியவாகுந் துறை நாட்கோடன் முதற் பன்னிரண்டாம்.

**தும்பைத்திணை**— "தும்பை தானே நெய்தலது புறனே." தும்பையென்பது சூடும்பூவினாற்பெற்ற பெயர். நெய்தற்குரிய பெருமணலுலகம் பொருகளமாகவேண்டுதலானும், பெரும்பொழுது வரைவின்மையானும், தலைவர்ப்பிரிந்தார் இரக்கமெழுநுந் துயிலவத்தையாற் கழிய உணர்வுகூடி எழுந்திரங்குங்கால முறையமாதலானும், பிற காரணங்களானும், தும்பைத்திணை நெய்தற்குப் புறனாயிற்று. "மைந்து பொருளாக வந்த வேந்தனைச் - சென்றுதலை யழிக்குஞ் சிறப்பிற் றென்ப." தும்பைத்திணையாவது— ஒருவேந்தன் றன்வலியினை யுலகமீக்கூறல் வேண்டி மேற்சென்றானை, அங்ஙன மேற்செல்லப்பட்ட வேந்தனும் அவன் கருதியமைந்தே தான்பெறும் பொருளாகவேண்டி எதிர்சென்று அவன் றலைமை தீர்க்குஞ் சிறப்பிற்று. நெய்தற்புறனான இத்தும்பைத் திணை வெட்சிப்புறத்துத் தும்பை, வஞ்சிப்புறத்துத் தும்பை, உழிஞைப்புறத்துத் தும்பைகளு மாம். இத்தும்பைத்திணைத் துறை, தானை, யானை, குதிரையென்ற, நோனாருட்கு மூவகை நிலைமுதற் பன்னிரண்டாம்.

**வாகைத்திணை**— "வாகை தானே பாலையது புறனே." பாலைக்குப் புணர்ச்சியினீங்கி இல்லற நிகழ்த்திப் புகழெய்துதற்குப் பிரியுமாறுபோலச் சுற்றத்தொடர்ச்சியினீங்கி அறப்போர்செய்து துறக்கம் பெறுங் கருத்தினாற் சேறலானும், பாலை தனக்கெனவோர் நிலனின்றி நால்வகை நிலனும்பற்றி நிகழுமாறுபோல முற்கூறிய புறத்திணை நான்கும்பற்றி நிகழ்தலானும், வாகைத்திணை பாலைக்குப் புறனாயிற்று. "தாவில் கொள்கைத் தத்தங் கூற்றைப்-பாற்பட மிகுதிப் படுத்த லென்ப." வாகைத்திணையாவது—இயல்பாகிய ஒழுக்கத்தானே நான்கு வருணத்தோரும் அறிவருந் தாபதர் முதலியோருந் தம்முடைய கூறுபாடுகளை இருவகைப்பட மிகுதிப்படுத் துரைத்தலாம். இருவகையாவன—

தானே தன்னை மிகுதிப்படுத்தலும், பிறர் மீக்கூறுபடுத்தலுமாம். இனி உலகமுழுது மறியு முயர்ச்சியுடைமையும் வாகைத்திணையாம். எனவே, வலியானும் வருத்தத்தானுங் கூறுவித்துக்கோடல் வாகையன்றாம். இவ்வாகைத்திணை அறுவகைப் பார்ப்பியன் முதலாக எழுவகையாற் றொகைநிலைபெற்ற துறைகளையுடைத்து. இன்னும், இத்துறைகண் மறத்திற்கு ஒன்பதும், அறத்திற்கு ஒன்பதுமெனப், பதினெட்டாம்.

**காஞ்சித்திணை**— "காஞ்சி தானே பெருந்திணைப் புறனே." எண்வகை மணத்தினு நான்குமணம் பெற்ற பெருந்திணைபோல அறமுதலாகிய மும்முதற்பொருளும் அவற்றது நிலையின்மையுமாகிய வாறனுள்ளும் நிலையின்மை மூன்றற்கு முரித்தாய் எல்லாத்திணைகளுக்கு மொத்த மரபிற்றாகலானும், "பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே" என்ற நான்குஞ் சான்றோ ரிகழ்ந்தாற்போல அறமுதலியவற்றது நிலையின்மை யுணர்ந்து அவற்றை யவரிகழ்தலானும், "ஏறிய மடற்றிற" முதலிய நான்கும், தீய காம மாயினவாறு போல நிலையாமையு மாகியநோக்கி நற்பொருளன்றாகலானும், உரிப்பொருளிட மயங்கி வருதலன்றித் தனக்கு நிலமில்லாத பெருந்திணைபோல அறம் பொரு ளின்பம் பற்றியன்றி வேறு வேறு நிலையாமை யென்பதோர் பொருளின்றாகலானும், காஞ்சி பெருந்திணைக்குப் புறனாயிற்று. பின்னர் நான்கென்றன பிரமம், பிராசாபத்தியம், ஆரிடந், தெய்வமென்பன. இஃதிடம்பற்றியபின். ஏறிய மடற்றிற முதலிய நான்காவன— "ஏறிய மடற்றிற மிளமை தீர்திறந் - தேறுத லொழிந்த காமத்து மிகுதிற - மிக்க காமத்து மிட" லென்பன. "பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற் றானு - நில்லா வுலகம் புல்லிய நெறித்தே." காஞ்சித்திணையாவது— வீடுபேற்றின்ப மேதுவாக யாக்கை இளமை செல்வமுதலிய உலகநிலையாமை கூறுவதாம். இது கூற்றம் வருமென்றன் முதலாகப் பலதுறைகளையுடைத்தாம். இத்துறைகள் ஆண்பாற்றுறையும் பெண்பாற்றுறையுமாய் இருவகைப்பட்டு நடக்கும்.

**பாடாண்டிணை**— "பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே - நாடுங் காலை நாலிரண் டுடைத்தே." ஒருதலைவன் பரவலும் புகழ்ச்சியும் வேண்டி ஒருபுலவன் வீடுபேறு முதலிய பரிசில் வேண்டலின், அவை தம்மின் வேறாகிய வொருதலைக் காமமாகிய கைக்கிளையோடொத்தலின், பாடாண்டிணை கைக்கிளைப் புறனாயிற்று. பாடாண் என்பது— பாடுதல் வினையையும் பாடுமாண்மகளையு நோக்காது, அவனது ஒழுகலாறாகிய திணையுணர்த்தினமையின் வினைத்தொகை நிலைகளத்துப் பிறந்த வன்மொழித்தொகை. இஃதன்றுறை நாலிரண்டாம். நாலிரண்டாவன— இப்பாடாண்டிணைக்குக் கூறுகின்ற பொருட்பகுதி பலவுங் கூட்டி ஒன்றும், இருவகை வெட்சியும், பொதுவியலும், வஞ்சியும், உழிஞையுந், தும்பையும், வாகையுங், காஞ்சியுமாகிய பொருள்களோடுமாம். இவ்வேழும் பாடாண்டிணைப் பொருளாங்கால், எல்லாமொத்தவேனும், அவை பெரும்பான்மை சிறுபான்மையாய் வருதலும், இரண்டும் பலவுமாய் ஒருங்கு வருதலும், பாடாண்டிணைக்குக் கூறும் பொருள்கள் விராய்வருதலு முளவென் றுணர்க. இப்பாடாண்டிணைக்கே யுரிய பகுதிகள், தேவர்பகுதியு மக்கட்பகுதியுமென விரண்டாம். தேவர்பகுதி— அறமுறை வாழ்த்தாகியும் அவர்பால் உயர்வில்லாத பொருள் வேண்டுங் குறிப்பாகியும் வரும். மற்றை மக்கட்பகுதி— ஒரு தலைவன் றன்னைப் பிறர் பரவலும் புகழ்தலுங் கருதிய பகுதி முதலியவாம். இவற்றுள், மக்கட்பகுதி கொடுப்போரேத்திக் கொடாஅர்ப்பழித்தன் முதலாகப் பத்தாயும், சூதரேத்திய துயிலெடை நிலைமுதற் பலவாயும் வரும்.

**களவியல்—** இன்பத்தின் பொதுவிலக்கணம் அகத்திணையியலிலும், அதற்குத் துணையான பொருளும் அரசநீதியும் புறத்திணையியலிலுங் கூறிய வாசிரியர் அவ்வின்பத் தினது சிறப்பிலக்கணம் ஈண்டுக் கூறுகின்றார். களவு கற்பென்னுங் கைகோளிரண்டனுட் களவுணர்த்துதலின், இவ்வோத்துக் களவியலென்னும் பெயர்த்தாயிற்று. "இன்பமும் பொருளு மறனு மென்றாங் - கன்பொடு புணர்ந்த வைந்திணை மருங்கிற் - காமக் கூட்டங் காணுங் காலை - மறையோர் தேஎத்து மன்ற லெட்டனுள் - துறையமை நல்லியாழ்த் துணைமையோ ரியல்பே." மன்றலெட்டாவன— பிரமம், பிராசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம், பைசாசமென்டன. பிரமமாவது— ஒத்தகோத்திரத்தானாய் நாற்பத்தெட்டியாண்டு பிரமசரியங் காத்தவனுக்குப் பன்னீராட்டைப் பருவத்தாளாய்ப் பூப்பெய்தியவளை அணிகலனணிந்து தானமாகக் கொடுப்பது. பிராசாபத்தியமாவது— மகட்கோடற்குரிய கோத்திரத்தான் கொடுத்த பரிசத்திரட்டி தம்மகட்கு ஈந்து கொடுப்பது. ஆரிடமாவது— தக்கானொருவனுக்கு ஆவும் ஆனேறும் பொற்கோட்டுப் பொற்குளம்பினவாகச் செய்து அவற்றிடை நிறீஇப் பொன்னணிந்து நீரும் இவைபோற் பொலிந்து வாழ்வீரென நீரிற்கொடுப்பது. தெய்வமாவது— பெருவேள்வி வேட்பிக்கின்றார் பலருள் ஒருவற்கு அவ்வேள்வித் தீ முன்னர் ஓர் மகளைப் பூணணிந்து கொடுப்பது. ஆசுரமாவது— கொல்லேறு கோடல், திரிபன்றியெய்தல், வில்லேற்றுதன் முதலியன செய்து மகட்கோடல். இராக்கதமாவது— தலைமகடன்னினுந் தமரினும் பெறாது வலிதிற்கொள்வது. பைசாசமாவது— மூத்தோர் களித்தோர் துயின்றோர் புணர்ச்சியும், இழிந்தோரை மணஞ்செய்தலும், பிறவுமாம்.

இவ்வியலிற் கூறப்படுங் காந்தருவமாவது— காந்தருவகுமாரருங் கன்னியருந் தம்முளெதிர்ப்பட்டுக் கண்டு இயைதல்போலத் தலைவனுந் தலைவியு மெதிர்ப்பட்டுப் புணர்வது. "முன்னைய மூன்றுங் கைக்கிளைக் குறிப்பே - பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே" என்றலின், இடைநின்ற காந்தருவத்தின்பாற்படு மிக்களவொழுக்கம், முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தலென்னு மைந்திணைப் பாலதா மன்புடைக் காமமென்பது தெளியப்படும். அது "முதலொடு புணர்ந்த யாழோர் மேன - தவலருஞ் சிறப்பி னைந்நிலம் பெறுமே" என்னு மிவ்வியற்சூத்திரத்தா னறிக. இஃதிப்பெற்றித்தாமென்பது விளக்கியவன்றே, "திருவளர் தாமரை சீர்வளர் காவிக ளீசர்தில்லைக் - குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள்கொண் டோங்குதெய்வ - மருவளர் மாலையொர் வல்லியி னொல்கி யனநடைவாய்ந் - துருவளர் காமன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே" என்றகத்தமிழ்த்திருக்கோவை அவ்வாறு அகனைந்திணையும்பற்றி வாதவூரடிகள் முதற்கண் எடுத்துக்கொண்டு அருளிச்செய்ததென் றுணர்க.

இக்களவு பொதுவாகலின் நான்குவருணத்தார்க்கு முரித்து. "ஒன்றே வேறே யென்றிரு பால்வயி - னொன்றி யுயர்ந்த பால தாணையி - னொத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப - மிக்கோ னாயினுங் கடிவரை யின்றே." ஒத்தகிழவனுங் கிழத்தியும் உம்மைக் காலத்துப் பிறப்பனைத்தினு மொருவரை யொருவ ரின்றியமையாராய்ச் செய்த நல்வினை காரணமாக அன்பான் ஒருபொழில்வயிற் றமியராய்க் கூடுங் கூட்டம், ஈண்டுக் களவெனப்படும். ஆகலின், இது பிறர்க்குரிய பொருளை மறைவிற் கொள்ளுங் களவன்றாய்ச் சிறப்புடை யறனாயிற்று. கிழவோற்கு மிகுதி குலங் கல்வி பிராயமுதலியவற்றாற் கொள்க. கொள்ளவே, அந்தணர் அரசர் முதலிய வருணத்துப் பெண்கோடற்க ணுயர்த

னும், அரசர் முதலியோரு மம்முறையே யுயர்தலுந் தழுவப்படும். படவே, அனுலோம ராறுவர்க்கும் இவ்வொழுக்கம் உரித்தென்றாராயிற்று. கிழவனுங் கிழத்தியுமென்றார், பலபிறப்பினும் ஒருவர்க்கொருவ ருரிமையெய்திச் செல்கின்றாரென்ப தறிவித்தற்கு. ஒத்தல்—பிறப்பு முதலிய பத்தானு மொப்புடையராதல். பிறப்பு முதலிய பத்தாவன: "பிறப்பே குடிமை யாண்மை யாண்டோ - டுருவு நிறுத்த காமவாயி - னிறையே யருளே யுணர்வொடு திருவென - முறையுறக் கிளந்த வொப்பினது வகையே" என்னு மெய்ப் பாட்டியற் சூத்திரத்தா னுணர்க. ஈண்டுப் பிறப்பு—உயர்குடித் தோற்றம். குடிமை—குடிப்பிறப்பிற்கேற்ற வொழுக்கம். குடிமையொடு பிறப்பிடைவேற்றுமை யென்னை யெனின்,— பிறப்பென்பது—குடிப்பிறத்தல்; அதற்குத் தக்கவொழுக்கங் குடிமை. குடிப்பிறந்தாரது தன்மை குடிமையெனப்படும். இதனை யூராண்மையெனவுஞ் சொல்லுப. இவை தம்முள் வேற்றுமையென்க. ஆண்மை—ஆளுந்தன்மை. அஃதிருபாற்கு மாம்; "ஆயிடை யிருபெய ராண்மை செய்த பூசல்" எ-ம், "ஊராண்மைக் கொத்தபடி றுடைத்து" எ-ம், "வேளாண்மை செய்து விருந்தோம்பி" எ-ம், இருபாற்கு மொப்பக் கூறுதலின். இனி ஆள்வினையெனப்படு மாண்மை புருடர்க்காம்; அஃதன்றிது. இனி ஆண்மை - சட்புலனாகு மாள்வினைத்தன்மை; பெண்மை - கட்புலனாகு மமைதித்தன்மை யென்பர் நச்சினார்க்கினியர். ஆண்டொப்பு - தலைவிக்குப் பன்னீராண்டுந் தலைவற்குப் பதினாறாண்டுமாம்; அப்பருவத்திற்றானே பெண்மையு மாண்மையும் பிறக்குமென்பது வேதமுடிபாகலின், அதுவு மொப்பெனவேபடும். உருவு - ஆண்மைக்கும் பெண்மைக் கும் வேறு வேறாக வோதிய விலக்கணமெல்லா நிரம்பிய வனப்பு மாட்சியான் மனத் தின்கட் பிறப்பதோர் தருக்கு. "பெருமையு முரனு மாடூஉ மேன" "அச்சமு நாணு மடனுமுந் துறுத்த - நிச்சமும் பெண்பாற் குரிய வென்ப" என வாசிரியர் கூறுதலான் அவைதாம் அவ்விருபாற்கு மிலக்கணமென் றுணர்க. பெருமையாவது - அறிவு மாற்றலும் புகழுங் கொடையு மாராய்ச்சியும் பண்பு நண்பும் பழிபாவ மஞ்சுதலு முதலியவாய் மேம்பட்டு நிகழுந் தலைமைக்குணம். உரன் - இப்பெருமை காரணமாகப் பிறக்கு மறி வுத் திட்பம். அது "உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்" என்பத னானு மறிக. அச்சம் - அன்புகாரணமாகத் தோன்று முட்கு. நாண் - காமக்குறிப்பு நிக ழ்வுழிப் படுவதோ ருள்ளவொடுக்கம். மடம் - செவிலியர் கொளுத்தக் கொண்டது விடாமை. "முந்துறுத்த" வென்றதனானே கண்டறியாத கண்டுழி மனங்கொள்ளாத பயிர்ப்புஞ் செயத்தகுவதறியாத பேதைமையுங் கொள்ளப்படும். காமவாயில் - புணர்ச் சிக்கு வாயிலாகிய இயற்கையன்பு. நிறை - மறை பிறரறியாம னெஞ்சினை நிறுத்தல். அருள் - தொடர்பு பற்றாது இயல்பாக எல்லா வுயிர்கண்மேலுஞ் செல்வதாகிய கருணை. அதுவுங் காமத்திற் கின்றியமையாததோர் குறிப்பாம். உணர்வு - அறிவுடைமை: அஃ தாவது - உலகியலாற் செயத்தக்க தறிதல். திருவென்பது - பொருளுந் துய்ப்புமன்றி எஞ்ஞான்றுஞ் செல்வத் தகவிற்றாயதோ ருள்ளநிறைவு.

இக்களவென்னுங் கைகோட் பாகுபாடு: "காமப் புணர்ச்சியு மிடந்தலைப் படலும் - பாங்கொடு தழாலுந் தோழியிற் புணர்வுமென் - றாங்கநால் வகையினு மடைந்த சார்பொடு-மறையென மொழிதன் மறையோ ராறே" என்னுஞ் செய்யுளியற் சூத்திரத்தா னுணர்க.

இங்ஙனங் கந்தருவப்பாற்பட்டு நால்வகைத்தாய களவொழுக்கினனாய தலை மகன், களவு வெளிப்படுவதன் முன்னுதல் களவு வெளிப்பட்ட பின்னுதல் வரைந்து

கற்புமேற்கொண்டு இல்லறஞ்செய் தின்பந் துய்ப்பானும். வரைவு இல்லா திருவகைத் தாமாறு— "வெளிப்பட வரைதல் படாமை வரைதலென் - றாயிரண் டென்ப வரைத லாறே" என்னு மிவ்வியற்சூத்திரத்தானும், "களவு வெளிப்படா முன்னுற வரைதல் - களவு வெளிப்பட்ட பின்றை வரைதலென்-றாயிரண் டென்ப வரைதலாறே" என்னு மிறை யனூர் களவியற் சூத்திரத்தானு மறிக. இங்ஙனங் களவாற் காமந்துய்த்தாரே கற்பொழு க்கத்திற்குக் குரியவராவரென்பது— "முற்ப டப்புண ராதசொல் லின்மையிற் - கற்பெனப் படுவது களவின் வழித்தே" என்னு மிறையனூர் களவியற் சூத்திரத்தி னுணர்க.

**கற்பியல்**— இவ்வோத்துக் கற்பென்னுங் கைகோ ளுணர்த்துதலின் அப்பெயர்த் தாயிற்று. "கற்பெனப் படுவது கரணமொடு புணரக் - கொளற்குரி மரபிற் கிழவன் கிழத் தியைக்-கொடைக்குரி மரபினர் கொடுப்பக் கொள்வதுவே." கற்பொழுக்கமாவது கொண் டானிற் சிறந்த தெய்வ மின்றெனவும் அவனை இன்னவாறே வழிபடுகவெனவும் இரு முதுகுரவரும், அந்தணர் திறத்துஞ் சான்றோர் தேஎத்து மையர் பாங்கினு மமரற் சுட் டியு மின்னவாறு ஒழுகுகவெனத் தலைமகனுங் கற்பித்தபடி, தலைமகள் இல்லறம் போற்று முறையாம். வதுவைச் சடங்கு நிகழ்வுழி இவளை இன்னவாறு பாதுகாக்கவெனத் தலை மகற்கும், இவற்கின்னவாறு குற்றேவல் செய்தொழுகுகவெனத் தலைமகட்கும், அங்கியங் கடவு ளறிகுறியாக மந்திரவகையாற் பெரியர் கற்பிக்கப்படுதலின், அது கற்பெனப்பட் டது. கற்புக் கல்வியென்பன வொருபொருட் கிளவி.

கற்பென்னுங் கைகோட்பாகுபாடு: "மறைவெளிப் படுதலுந் தமரிற் பெறு தலு - மிவைமுத லாகிய வியனெறி திரியாது - மலிவும் புலவியு மூடலு முணர்வும்- பிரிவொடு புணர்ந்தது கற்பெனப் படுமே" என்னுஞ் செய்யுளியற் சூத்திரத்தா னுணர்க. மலிதல் - இல்லொழுக்கமும் புணர்ச்சியு முதலாயவற்றான் மகிழ்தல். புலவியென்பது - புணர்ச்சியாற் பிறந்த மகிழ்ச்சி குறைபடாமற் காலங் கருதிக்கொண் டிப்பபடோ ருள்ள நிகழ்ச்சி. ஊடலென்பது - உள்ளத்து நிகழ்ந்ததனைக் குறிப்பா னன்றிக் கூற்றானுரைப் பது. உணர்வென்பது - அங்ஙன நிகழ்ந்த வூடறீர் திறனுடித் தெருட்டுதல். புலவிக் காயின் உணர்த்தல் வேண்டா; அது குளிர்ப்பக் கூடலுந் தளிர்ப்ப முயங்கலு முதலாய வற்றா னீங்குதலின்.

இவ்வாற்றாற் கற்பொழுக்க மேற்கொண்டு இல்லறவின்பந் துய்க்காநின்ற தலைவனுந் தலைவியும் பின்னர்த் துறவற நிகழ்த்தி வீடுபேறு கூடுபவராவரென்பது, "காமஞ் சான்ற கடைக்கோட் காலை - யேமஞ் சான்ற மக்களொடு துவன்றி - யறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ் - சிறந்தது பயிற்ற லிறந்ததன் பயனே" என்னு மிவ் வியற் சூத்திரத்தா னுணர்க. நுகர்ச்சியெல்லா முடிந்தமை தோன்றக் காமஞ்சான்ற வென்றார். அநாதியாய அவிச்சையானே யகங்காரமுளதாம்; அதனானே எனக்கிது வேண்டுமென்னு மவாவுளதாம்; அதனானே அப்பொருட்கட் செல்லும் விருப்புளதாம்; அவ்விருப்புக் கைகூடாதவழிக் கோபமுளதாம்; "காம வெகுளி மயக்க மிவை மூன்ற- னுமங் கெடக் கெடு நோய்" என்றிவ்வாறு அறிந்தார் கூறக்கேட்டதனையானே, தலையாயினார் அதன்கணின்று நீங்குவர். இடையாயினார் பெண்ணென்பது எற்புச்சட் டகம்; அருந்துயர்க் குரம்பை; பைம்மறியா நோக்கப் பருந்தார்க்குந் தகைமைத் தென்றித்திறத்தா னதன்றன்மை தெருட்டக் கேட்டு நீங்குவர். கடையாயினார் எத்திறத்

தாவது நீங்காராகலின், அவர் நிற்குநிலை யிதுவென் றுணர்த்துவார் காமஞ்சான்ற கடைக்கோட் காலையென்றார். ஏமஞ்சான்ற வென்றன வானப்பிரத்தமுஞ் சன்னியாசமும். இல்லறத்தின் பின்னர் இவற்றின்கணின்று வீடுபேறு கூடுமென்பார் ஏமஞ்சான்ற வென்றிவ்வாறு கூறினார். இல்லறத்திற்கு முக்கியப்பயன் வீடுபேறென்ப துணர்த்துவார் சிறந்தது பயிற்ற லிறந்ததன் பயனே என்றார். எல்லாப்பொருளினும் வீடுபேறு சிறந்த தென்பார் சிறந்தது பயிற்றலென்றார்.

பொருளியல்— இவ்வோத்துப் பொருளிலக்கண முணர்த்தினமையிற் பொருளியலென்னும் பெயர்த்தாயிற்று. "இசைதிரிந் திசைப்பினு மியையுமன் பொருளே யசைதிரிந் தியலா வென்மனார் புலவர்." ஏனையோத்துக்களும் பொருளின திலக்கண மன்றே யுணர்த்தியது ; இதற்கிது பெயராயவாறென்னையெனின்,— நன்று வினாயினாய்: சொல்லதிகாரத்திற் கூறிய இலக்கணமுடைய சொற்களை மரபியலில், " நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும் - கலந்த மயக்க முலக மாதலி - னிருதிணை யைம்பா லியனெறி வழாஅமைத் - திரிபில் சொல்லொடு தழாஅல் வேண்டும்" என்பராதலின், அவைதாம் ஈண்டுத் தம்பொருளை வேறுபட்டிசைப்பினும் பொருளாமெனவும், இப்பொருளதிகாரத்து முன்னர்க் கூறிய பொருள்களிற் பிறழ்ந்திசைப்பனவும் பொருளாமெனவும், அமைத்து, சொல்லுணர்த்தும் பொருளுந் தொடர்மொழி யுணர்த்தும் பொருளும் ஒருங்கு பொருட்படுத்துக் கூறுதலின், பொருளிய லெனப்பட்டதென் றுணர்க. எனவே, சொற்பொருளியல் ஒவ்வோர் காரணமேலிட்டுத் திறம்பி வரினும், பொருளுடையனவேயாமெனப் பொருள் வழுவமைத்தல் இவ்வியற் பயனுமென்பது. "நோயு மின்பமும்" என்பதனுள், "இருபெயர் மூன்று முரியவாக" என்பதனாற் றிணைமயங்கு மென்றும், "உண்டற் குரிய வல்லாப் பொருளை - யுண்டல் போலக் கூறலு மரபே" என்றும், சொல் வேறுபட்டுப் பொருளுணர்த்துதலும், இறைச்சிப் பொருண் முதலியன நாடகவழக்கின் வழீஇயவாறும், "தேரும் யானையும்" "அறக்கழி வுடையன" "தாயத்தி னடையா" என்னுஞ் சூத்திரமுதலியன உலகியல் வழக்கின் வழீஇயவாறுங் கூறி, சொற்பொருள் வழுவமைக்கின்றவாறு மேலே காண்க. இறைச்சியாவது - உள்ளபொருள் ஒன்றனுள்ளே கொள்ளக் கிடக்குங் கருப்பொரு ளோர்ச்சி. அது "இறைச்சி தானே பொருட்புறத் ததுவே" என்னு மிவ்வியற் சூத்திரத்தா னுணர்க. ஈண்டுக் கூறும் வழுவமைதியெல்லாம் அகப்பொருட்கே யுரியவென்ப துணர்க.

மெய்ப்பாட்டியல்— இவ்வோத்து மெய்ப்பாடென்பன சில பொருளுணர்த்தினமையின், அப்பெயர்த்தாயிற்று. மெய்ப்பாடென்பது - பொருட்பாடு. அஃதாவது உலகத்தார் உள்ளநிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதோராற்றான் வெளிப்படுதல். மேலையோத்துக்களுட் கூறப்படும் பொருள்கட்கும் பொருளோத்தினுள் "ஒப்பு முருவும் வெறுப்பு மென்றா - கற்பு மேரு மெழிலு மென்றா - சாயலு நாணு மடனு மென்றா - நோயும் வேட்கையு நுகர்வு மென்றாங் - காவயின் வரூஉங் கிளவியெல்லா - நாட்டிய மரபி னெஞ்சுகொளி னல்லது - காட்ட லாகாப் பொருள வென்ப" எனக் கூறியவற்றிற்கு மெல்லாம் பொதுவாகிய மனக்குறிப்பு இவையாகலான், இவை தம்மை வேறுகொண்டு ஓரினமாக்கி மெய்ப்பாட்டியலென வைத்தமையால், எல்லாவற்றினும் இவ்விய லியைபுடைத்தென்ப தறிக.

இம்மெய்ப்பாடு நாடகநூலாசிரியர்க்கு விரியான் முப்பானிரண்டாயும், வகை யாற் பதினாறாயும், தொகையா னெட்டாயும், நடக்கும். ஒன்பது சுவையுள் உருத்திர மொழிந்த வீரம், அச்சம், வியப்பு, இழிபு, காமம், அவலம், நகை, நடுவுநிலையென்னு மெட்டனையுஞ் சுவைக்கப்படும் பொருளும், அதனை நுகர்தற்கருவியாகிய பொறியுணர் வும், அது மனத்துட்பட்டவழி ஆண்டு நிகழுங் குறிப்பும், குறிப்புப் பிறத்தற்கிடனா வுள்ளத்தின் வேறுபாடாகிய கண்ணீரரும்புதல் மெய்ம்மயிர்சிலிர்த்தல் முதலாக வுடம்பின்கட் பிறஞ் சத்துவங்களுமென நான்காக்கி, அவ்வெட்டனோடு முறழ மெய்ப்பாடு முப்பத்திரண்டாம். சத்துவமெனினும் விறலெனினு மொக்கும். வேம்பு முதலிய சுவைக்கப்படும் பொருளு நாமுதலாயின பொறியும் வேறுவேறு நின்றவழிச் சுவை பிறவாமையானும், இவ்விரண்டுங் கூடியவழிச் சுவை பிறத்தலானும் அவை பதினாறும் அவ்வொருமைப்பாட்டானே யெட்டெனப்படும். இனிக் குறிப்புஞ் சத்துவமு முறையே யுள்ளநிகழ்ச்சியு முடம்பின் வேறுபாடுமெனப் படுமாகலானும், உள்ளநிகழ்ச்சி சத்துவத் தானன்றி வெளிப்படாமையானும், அவ்வொருமைப்பாட்டானே அவை பதினாறு மெட் டெனப்படும். ஆகலின், அவை ஈரெட்டுப் பதினாறு மென்பது. ஆசிரியர், இவை நாடக மகளி ராடலும் பாடலுங் கண்டுங் கேட்டுங் காமநுகரும் இன்பவிளையாட்டினுட் படு வனவாகலான், இவ்வழக்கு நூலில் ஆராயப்படாவெனப் பிறன்கோண் முற்கூறி, "நகையே யழுகை யிளிவரன் மருட்கை - யச்சம் பெருமிதம் வெகுளி யுவகையென் றப்பா லெட்டே மெய்ப்பா டென்ப" வெனத் தம்மதம் பிற்கூறினார். நகை - சிரிப்பு. அது முறுவலித்து நகுதலும், அளவாற் சிரித்தலும், பெருகச் சிரித்தலுமென மூன்றாம். அழுகை - அவலம். தானே யவலித்தலும் பிறரவலங்கண் டவலித்தலுமென அஃதிரண் டாம். இவற்றுள் ஒன்று கருணையெனவும், ஒன்று அவலமெனவும்படும், சுவை யொன்பதாகலு முடைய. இளிவரல் - இழிபு. மருட்கை - வியப்பு. அற்புதமெனினு மமையும். அச்சம் - பயம். பெருமிதம் - வீரம். வெகுளி - உருத்திரம். உவகை - மகிழ்ச்சி. இவை சுவையெனவும் வழங்கப்படும். இவ்வெட்டும் எள்ள லிளமை முதலிய முப்பா னிரண்டாயும், உடைமை யின்புறன்முதலாக வேறு முப்பத்திரண்டாயும் வரும். இவை யெல்லாம் அகத்திணைக்குப் பொதுவாகு மெய்ப்பாடுகளாம். இனிப் புருமுகம்புரிதல் பொறிநுதல் வியர்த்தல் முதலிய மெய்ப்பாடுகள் பலவுள; அவையெல்லாங் களவிற் குச் சிறப்பாய் நிகழ்வனவாம். இம்மெய்ப்பாட்டுப் பொருள்கோளாராய்ச்சி யுணர்வுடை யோர்க்கல்லது ஏனோர்க்குக் கூடாதென்பார், "கண்ணினுஞ் செவியினுந் திண்ணிதி னறியு - முணர்வுடை மாந்தர்க் கல்லது தெரியி - னன்னயப் பொருள்கோ ளெண்ணருங் குரைத்தே" என்றோதினார். மற்று மனத்து நிகழ்ந்த மெய்ப்பாட்டினைக் கண்ணானுஞ் செவியானு முணரவேண்டியதெற்றிற்கெனின்,— மனநிகழ்ச்சி பற்றி மெய்ப்பாடு பிற ந்தவழி, அதுபற்றி முகம் வேறுபடுதலு முரை வேறுபடுதலு முடைமையின், அவற்றி னைக் கண்ணானுஞ் செவியானு முணர்ந்துகோடலே அவ்வத் துறைபோயினார்க் காற்றலாக லின், அங்ஙனங் கூறின கருத்தென் றுணர்க.

**உவமவியல்**— உவமமுணர்த்துதலின், இவ்வோத் துவமவியலென்னும் பெயர்த் தாயிற்று. உவமமென்பது— ஒருபொருளோ டொருபொருளை யொப்பித்துரைத்தல். மற்று அகம் புறமென்பனவற்றுள் இஃது யாதாகுங்கொலெனின்,— அவ்விரண்டுமாம்; மெய்ப்பாடுபோல. என்னை? "உவமப் பொருளி னுற்ற துணருந் - தெளிமருங் குளவே திறத்திய லான" என்றாராகலின். இன் ஆனின்பொருளில் வந்தது. என்றது - உவ

மத்தினானே உவமிக்கப்படும் பொருட் குற்றதெல்லாம் அறிந்து தெளியும் பகுதியுள; அத்துணிபப்படும் பொருட்டிறம் பலவகை யிலக்கணமுடைய வாதலா னென்ற வாறு. அப்பகுதிகடாம் - உவமான வடைக்கு உவமேயவடை குறைந்து வருவன வும், யாது மடையின்றி வருவனவுமாம். அங்ஙனம் வருங்கால், அவற்றிற்கும் உவ மைப் பொருளே தெளிமருங்காமெனவும், வாழாதே யுவமஞ்செய் துற்றதுணர்த்தாத வழியும் அதுவே தெளிமருங்காமெனவும், இன்னோரன்ன கொள்க. உதாரணம்— “களவுடம் படுநரிற் கவிழ்ந்து நிலங் கிளையா” என்றவழிக் கண்டோர்க்கெல்லாம் பெரு நகையாகக் களவுசெய்தாரிற் கவிழ்ந்து நிலங் கிளையாவென உற்றதுணரக் கூறிற்றிலனா யினும், கையொடுபட்ட களவுடையார்போல நின்றாள் என்று முவமைப்பொருளானே எள்ளுதற் பொருடோன்றி நகை புலப்படுவதாயிற்று. ஈண்டகப்பொருள் உவமம்பற் றித் தெளிமருங் குளதாயிற்றென்பது. “சாறுதலைக் கொண்டெனப் - பெண்ணீற் றுற் றென” வென்னும் புறப்பாட்டினுள், உவமைப் பொருளாகிய போழ்தூண் டூசிக்குப் பல வடை கூறி அதனோ டுவமிக்கப்படும் போர்த்தொழிலினை யாதுமோ ரடையின்றி வாளா கூறினானாயினும், உவமைப்பொருளானே போர்த்தொழிற் குற்றதும் உணரக் கூறினா னாம். என்னை? உண்டாட்டுங் கொடையு முரனொடு நோக்கி மறுத்தலு முதலிய வுள் ளக் கருத்தினானே ஒருகணத்தினுள்ளே பலவேந்தரை யொருங்கு வேறற்கு விரைகின் றது போர்த்தொழிலென்பது தெளிமருங்குளதா மாதலினென்க. ஈண்டுப் புறப்பொ ருள் உவமம்பற்றித் தெளிமருங் குளதாயிற்றென்பது. இத்திற னோக்கியே நியாய நூலார், அளவை காண்டல் கருத லுரை அபாவம் பொருள் ஒப்பாறென் றங்ஙன முவ மையு மளவையு ளடக்கி ஓதுவாராயிற்றென் றுணர்க. பொருள் - அருத்தாபத்தி. உவ மம் உவமானம் உவமை ஒப்பென்பன வொருபொருட் கிளவி. இவ்வாறு புலனெறி வழக்குப்பற்றியன்றி மற்றிவ் விருதிணைப்பொருளும் உவமம்பற்றி வழக்கினுள் அறியப் படுதலானும் உவமம் பற்றியும் பொருள் கூறுகின்ற ராசிரியரெனக் கொள்க. இங்ங னம் உவமத்தானும் புலப்பாடே கூறுதலின், மேற் பொருள் புலப்பாடு கூறிய மெய்ப் பாட்டியலின் பின்னர் இது வைக்கப்பட்டது. உவமத்தாற் பொருள் புலப்பட அறித லாவது “ஆபோலும் ஆமா” என்றக்கால், ஆமா கண்டறியாதான் காட்டுட் போவுழி எதிர்ப்பட்டது கண்டுழி, “ஆபோலும் ஆமா” என்னு முவமைபற்றி இது ஆமாவென் றுணர்தலாம்.

“வினைபயன் மெய்யுரு வென்ற நான்கே - வகைபெற வந்த வுவமத் தோற் றம்.” இவ்வுவமம் வினையுவமம் பயனுவமம் மெய்யுவமம் உருவுவமமென நால்வகை ப்படும். மெய் - பிழம்பு. உரு - நிறம். புலியன்னமறவ னென்பது வினையுவமம், அது பாயுமாறே பாயுமென்னுந் தொழில்பற்றி யொப்பித்தமையின். மாரியன்ன வண்கை யென்பது பயனுவமம், மாரியான் விளைக்கும் பொருளும் வண்கையாற் பெறும் பொருளு மொத்தலின். துடியிடை யென்பது மெய்யுவமம், அல்குலு மாக மு மகன்றுகாட்ட வஃகித்தோன்று மருங்கு துடியோ டொத்தலின். பொன்மேனி யென்பதுருவுவமம், பொன்னின்கட் கிடந்த மஞ்சணிறத்தோடு மேனியின்கட் கிட ந்த நிறமொத்தலின். இவை நான்கும் இங்ஙன மொரோ வொன்றே யன்றி விரவி யும் வரும். இந்நான்குஞ் சிறப்பு நலன் காதல் வலியென்னு நான்கு நிலைக்களமாக வும், கிழக்கிடு பொருணிலைக் களமாகவும் பிறக்கும். கிழக்கிடு பொருளென்பது - கீழ்ப் படுக்கப்படும் பொருள். இங்ஙன முவமஞ்செய்யுங்கால், முதலொடு முதலுஞ் சினை

யொடு சினையு முதலொடு சினையுஞ் சினையொடு முதலு முவமஞ்செய்யப்படும். இவை விரியுவமமுந் தொகையுவமமுமாம். பவளம்போற் செந்துவர் வாய்: இது சுட்டிக்கூறலின் விரியுவமமாம். பவளவாய்: இது சுட்டிக் கூறாமையிற் றொகையுவமமாம். இன்னுமிதன்றிறன் பலவாம்.

உவமத்தினையும் உவமிக்கப்படும் பொருளையும் ஒப்பிக்குங்கால் இடைவரு முவமவுருபு பலவாம். "அவைதாம், அன்ன வேய்ப்ப வுறழ வொப்ப - வென்ன மானவென்றவை யெனாஅ - வொன்ற வொடுங்க வொட்ட வாங்க - வென்ற வியப்ப வென்றவை யெனாஅ - வெள்ள விழைய விறப்ப நிகர்ப்ப - கள்ளக் கடுப்ப வாங்கவை யெனாஅக் - காய்ப்ப மதிப்ப தகைய மருள - மாற்ற மறுப்ப வாங்கவை யெனாஅப் - புல்லப் பொருவ பொற்ப போல - வெல்ல வீழ வாங்கவை யெனாஅ - நாட நளிய நடுங்க நந்த - வோடப் புரைய வென்றவை யெனாஅ - வாறா றவையு மன்ன பிறவுங் - கூறுங் காலைப் பல்குறிப் பினவே" என்னு மிவ்வியற் சூத்திரத்தா னவையறிக. பிறவு மென்பதனானே, நேர, நோக்க, துணைப்ப, மலைய, ஆர, அமர, அனைய, ஏர, ஏற்ப, செத்து, அற்று, கெழுவ வென்றற்றொடக்கத்தன கொள்க. இன்னும், "தோளாற்றோர் தெய்வம்" என்றற்றொடக்கத்தான் ஆண்டாண்டு உவமவுருபின் பொருள்பட வருவனவெல்லாங் கொள்க.

இவ்வுவமம் உள்ளுறையுவமமும் ஏனையுவமமுமென விரண்டாம். அது "உள்ளுறை யுவம மேனை யுவம மெனத் - தள்ளா தாகுந் திணையுணர் வகையே" என்னு மகத்திணையியற் சூத்திரத்தா னுணர்க. உள்ளுறை யுவமமாவது - "உள்ளுறுத் திதனொடொத்துப்பொருண் முடிகென - வுள்ளுறுத் திறுப்ப துள்ளுறை யுவமம்" என்னு மகத்திணையியற் சூத்திரத்தா னுணர்க. இதனானே புலவன்றான் கருதியது வெளிப்படக் கூறாதவழியுங் கேட்டோர் இவன் கருதியபொரு ளீதென் றாராய்ந்து கோடற்குக் கருவியாகிய சில சொற்கிடப்பச் செய்யுள் செய்தல்வேண்டுமென்பது கருத்தாயிற்று. அது "வீங்குநீர் வீழ்நீலம் பகர்பவர் வயற்கொண்ட - ஞாங்கர் மலர்சூழ்தந் தூர்புகுந்த வரிவண் - டோங்குய ரெழில்யானைக் கனைகடாங் கமழ்நாற்ற - மாங்கவை விருந்தாற்றப் பகலல்கிக் கங்குலான் - வீங்கிறை வடுக்கொள வீழுநர்ப் புணர்பவர் - தேங்கமழ் கதுப்பினு ளரும்பவிழ் நறுமுல்லை - பாய்ந்தூதிப் படர்தீர்ந்து பண்டுதா மரீஇய - பூம்பொய்கை மறந்துள்ளாப் புனலணி நல்லூர" என்னு மருதக்கலியுள், வீங்குநீர் பரத்தையர் சேரியாகவும், அதன்கண் வீழ்ந்த நீலப்பூக் காமச்செவ்வி நிகழும் பரத்தையாகவும், பகர்பவர் பரத்தையரைத் தேரேற்றிக்கொண்டுவரும் பாணர் முதலிய வாயில்களாகவும், அம்மலரைச் சூழ்ந்த வண்டு தலைவனாகவும், யானைக்கடாத்தினை ஆண்டுறைந்த வண்டுகள் வந்தவண்டுக்கு விருந்தாற்றுதல் பகற்பொழுது புணர்கின்ற சேரிப்பரத்தையர் தந்நலத்தினைத் தலைவனை நுகர்வித்தலாகவும், கங்குலின் வண்டு முல்லையை யூதுதல் பரத்தையருட னிரவு துயிலுதலாகவும், பண்டு மருவிய பொய்கையை மறத்த றலைவியை மறத்தலாகவும், பொருடந்து இப்புலப்படக் கூறிய கருப்பொருள்கள் புலப்படக்கூறாத மருதத்திணைப் பொருட்கு உவமமாய்க் கேட்டோனுள்ளத்தே விளங்கி நின்றவாறு காண்க. இனிப் பவளவாய் முதலியவாக ஈண்டுக் கூறுவனவெல்லாம் ஏனை யுவமமாம். அகத்திணைப் பொருளுணர்ச்சிக் குபகார நோக்கி யகத்திணை யியலுள் இவை யிரண்டும் வாங்கிக் கூறப்பட்டன. ஆயினும், இவ்வியற்பொருளாகவே கொண்டுரைக்கப்படுமென் றுணர்க.

**செய்யுளியல்**— செய்யுளிலக்கண முணர்த்தினமையால், இது அப்பெயர்த்தாயிற்று. செய்யுள் - செய்கை. உள் - தொழிற்பெயர் விகுதி. கடவுள் விக்குளென் புழிப்போல. மற்றிது அவ்விலக்கணத்திற்குத் தொழிலாகுபெயராயிற்று. வழக்குஞ் செய்கை பெறுமெனினும் அசையுஞ் சீரும் அடியுமுதலிய செய்கை விகற்பத்தால் அணி பெறப் பொருட்கிடனாக இயற்றப்படுதற் சிறப்புநோக்கிச் செய்யுளெனப்பட்டது. எழுத்ததிகாரத்துஞ் சொல்லதிகாரத்தும் வழக்கிற்குஞ் செய்யுட்கும் வேண்டுவன விராய்க் கூறிப், பொருளதிகாரத்துள்ளும் இத்துணையும் பெரும்பான்மையும் வழக்கிற்குஞ் சிறுபான்மை செய்யுட்கும் வேண்டுவன கூறிவந்த வாசிரியர், அப்பகுதிச் செய்யுளிலக்கணமெல்லாம் இவ்வோத்தின்கட் டொகுத்துக் கூறுகின்றார். ஆகலின், மேற்கூறிப்போந்த வோத்துக்களோடு இதற்கியைபுளதாமாறு தெளிக.

"மாத்திரை யெழுத்திய லசைவகை யெனாஅ - யாத்த சீரே யடியாப் பெனாஅ - மரபே தூக்கே தொடைவகை யெனாஅ - நோக்கே பாவே யளவிய லெனாஅத் - திணையே கைகோள் கூற்றுவகை யெனாஅக் - கேட்போர் களனே காலவகை யெனாஅப் - பயனே மெய்ப்பா டெச்சவகை யெனாஅ - முன்னம் பொருளே துறைவகை யெனாஅ - மாட்டே வண்ணமோ டியாப்பியல் வகையி - னாறுதலை யிட்ட வந்நா லைந்து - மம்மை யழகு தொன்மை தோலே - விருந்தே யியைபே புலனே யிழைபெனாஅப் - பொருந்தக் கூறிய வெட்டொடுந் தொகைஇ - நல்லிசைப் புலவர் செய்யு ளுறுப்பென - வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே." செய்யுடான் - மாத்திரையும், எழுத்தியல்வகையும், அசைவகையும், யாத்தசீரும், அடியும், யாப்பும், மரபும், தூக்கும், தொடையும், நோக்கும், பாவும், அளவும், திணையும், கைகோளும், கூற்றுவகையும், கேட்போரும், களனும், காலவகையும், பயனும், மெய்ப்பாடும், எச்சவகையும், முன்னமும், பொருளும், துறைவகையும், மாட்டும், வண்ணமு மென்னு மிருபத்தா றுறுப்புக்களும், மற்று அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபென்னு மெண்வகை வனப்புறுப்பும், உடைத்தாய் நடப்பதாம்.

மாத்திரையென்பது— எழுத்திற்கோதிய மாத்திரைகளை விராய்ச் செய்யுள் செய்யுமளவு. அது "மாத்திரை யளவும்" என மேற்கிளந் தோதுமாறுபற்றி யுணரப்படும். எழுத்தியல்வகையென்பது— மேற்கூறிய வெழுத்துக்களைச் செய்யுட்கேற்ப வியற்றிக்கொள்ளுங் கூறுபாடு. அசைவகையென்பது— அவ்வெழுத்தியல்வகையா லியற்றப்படும் அசைக்கூறுபாடு. அவை இயலசையு முரியசையுமென விரண்டாம். இயற்கையா லியறலின் இயலசையெனவும், அவை செய்யுந் தொழில் செய்தற்குரியவாகலான் உரியசையெனவும், காரணப்பெயராயின. யாத்தசீரென்றது— பொருள் பலபடத் தொடர்ந்து நிற்குஞ் சீரென்றவாறு. எனவே, அசை பலதொடர்ந்து சீராங்கால் அவ்வசையுந் தத்தம் வகையாற் பொருள்பெற்று நிற்றலும் அவ்வாறன்றிச் சீர்முழுது மொருசொல்லாங்கா லசை பொருள்பெறாது நிற்றலு மடங்கின. தே மாவென்று அசை வேறுபொருள் பெற்றன. சாத்தனென்று பொருள் வேறுபடாது நின்ற வசையாற் சீர் யாத்து நின்றது. அடியென்பது— அச்சீரிரண்டும் பலவுந் தொடர்ந்தாவதோ ருறுப்பு. யாப்பென்பது— அவ்வடிதொறும் பொருள்பெறச் செய்வதோர் செய்கை. மரபென்பது— காலமு மிடனும்பற்றி வழக்குத் திரிந்தக்காலுந் திரிந்தவற்றிற் கேற்ப வழுப்படாமைச் செய்வதோர் முறைமை. மற்றுச் சொல்லோத்தினுட் கூறிய மரபிற்கு மரபியலு

ளுரைப்பனவற்றிற்கு மிதற்கும் வேற்றுமை யென்னையெனின்,— இது செய்யுட்கே யுரி தது; அவை வழக்கிற்குஞ் செய்யுட்கும் பொதுவென்பது. நூக்கென்பது— பாக்க ளைத் துணித்து நிறுத்தல். தொடைவகையென்பது— தொடைப்பகுதி பலவுமென்ற வாறு. அவை வரையறையுடையனவும் வரையறையில்லனவுமென விருவகைய. இப் பகுதியெல்லா மடியாற் கோடலின், அடிக்கு மிஃதொக்கும். நோக்கென்பது— மாத் திரை முதலாகிய வுறுப்புக்களைக் கேட்போர்க்கு நோக்குப்படச் செய்தல். பாவென் பது— சேட்புலத்திருந்தக்காலு மொருவ னெழுத்துஞ் சொல்லுந் தெரியாமற் பாட மோதுங்கால் அவன் சொல்கின்ற செய்யுளை விகற்பித் தின்னசெய்யுளென் றுணர்தற் கேதுவாகிப் பரந்துபட்டுச் செல்வதோ ரோசை. அளவியலென்பது— அப்பா வரை யறை. திணையென்பது— அகம்புறமென் றறியச்செய்தல். கைகோளென்பது— அவ் வத்திணையொழுக்க விகற்ப மறியச்செய்தல். அது களவுங் கற்புமென் றிரண்டாம். கூற்றுவகையென்பது— அச்செய்யுள் கேட்டாரை இது சொல்கின்று ரின்னுரென வுணர்வித்தல். கேட்போரென்றது— இன்னார்க்குச் சொல்கின்ற திதுவெனத் தெரித் தல். களனென்பது— முல்லை குறிஞ்சி முதலாயினவும் இரவுக்குறி பகற்குறி முதலா யினவு முணரச்செய்தல். மற்றுத் தன்மை முன்னிலை படர்க்கையுமாம். காலவகை யென்பது— பெரும்பொழுது சிறுபொழுதென்னுங் காலப்பகுதி முதலாயின. பயனெ ன்பது— சொல்லிய பொருளாற் பிறிதொன்று பயப்பச்செய்தல். மெய்ப்பாடென் பது— சொற் கேட்டோர்க்குப் பொருள் கண்கூடாதல். எச்சவகையென்பது— சொல் லப்படா மொழிகளைக் குறித்துக்கொள்ளச் செய்தல். அது கூற்றினுங் குறிப்பினும் வரு தலின், வகையென்றார். முன்னமென்பது— உயர்ந்தோரு மிழிந்தோரு மொத்தோருந் தத்தம் வகையா னுடைப்பச் சொல்லுதற்குக் கருத்துப்படச் செய்தல். பொருளென் பது— புலவன் றான் றோற்றிக்கொண்டு செய்வதோர் பொருண்மை. துறைவகையென் பது— முதலுங் கருவு முறைபிறழ வந்தாலு மிஃதிதன்பாற்படுமென்று ஒருதுறைப் படுத்தற் கேதுவாகியதோர் கருவி யச்செய்யுட் குளதாகச் செய்தல். அவையும் பலவா தலின் வகையென்றார். மாட்டென்பது— பல்வேறு பரப்பிற்றாயினு மன்றாயினு நின் றதனொடு வந்ததனை யொரு தொடர்கொளீஇ முடித்துக்கொளச் செய்தல். வண்ண மென்பது— ஒருபாவின்க ணிகழும் ஓசை விகற்பம். இவை யாப்பிற் கின்றியமையாத விலக்கணப் பகுதிகளாகலான் வேறு விதந்தோதினார்.

அம்மையென்பது - குணப்பெயர். அமைதிப்பட்டு நிற்றலி னம்மையென்றாயி ற்று. அழகு - இரிசொற் பயிலாது செய்யுளிற் பயின்றுவரு மொழிகளாற் சீரறுத்துப் பொலிவுபட யாக்கும் பொருள் வனப்பு. அவையாவன,— நெடுந்தொகை முதலா கிய தொகை யெட்டுமென்றவாறு. தொன்மை யிலக்கணந் தமிழின் றெய்வப்பழமை மரபியலு ளுரைத்தாம்; கடைப்பிடிக்க. தோல் - இழுமென்மொழியா னறம் பொரு ளின்பம் வீடென்னும் விழுமிய பொருள் பயப்பச் செய்யுஞ் செயயுளும் ஆசிரியப்பா ட்டா னொருகதைமேற் றொடுக்கப்படுஞ் செய்யுளுமாம். அவை செய்தகாலத்துள்ளன காணப்பட்டில. பிற்காலத் தவ்வாறு வந்தன சிந்தாமணி முதலியன. விருந்து - புதி தாகத் தொடுக்கப்படுந் தொடர்நிலைச் செய்யுள். இயைபு - ஞணநமனயரலவழள வென் னும் பதினொரு புள்ளியீற்றினு ளொன்றனை யிறுதியாகக்கொண்டு பொருட்டொடராக வுஞ் சொற்றொடராகவுஞ் செய்யுஞ் செய்யுள். அவை சீத்தலைச்சாத்தனாராற் செய்யப் பட்ட மணிமேகலையுங் கொங்கவேளாராற் செய்யப்பட்ட சிலப்பதிகாரமும் போல்வன.

அவை னகாரவீற்முன் இற்றன. புலன் - சேரிமொழியாற் செவ்விதாகக் கூறி யாராய்ந்து காணுமைப் பொருட்டொடராளே தொடுத்துச் செய்யுஞ் செய்யுள். அவை விளக்கத் தார் கூத்துமுதலாகிய நாடகச்செய்யுளாகிய வெண்டுறைச் செய்யுள் போல்வன. இழைபு - வல்லெழுத்துப் பயிலாது இருசீரடிமுதலாக வெழுசீரடியளவும் வந்த வடி யைந்தனேயு மொப்பித்து நெட்டெழுத்து மங்நெட்டெழுத்துப்போ லோசையெழு மெல் லெழுத்தும் லகார ளகாரங்களுமுடைய சொல்லானே சேரிமொழியாற் செவ்விதிற் கிள ந்து தேர்தல் வேண்டாது பொருள்பட்டுச் செல்லச் செய்யுஞ் செய்யுள். அவையா வன— கலியும் பரிபாடலும் போலும் இசைப்பாட்டாகிய செந்துறை மார்க்கத்தன வென்பது.

**மரபியல்—** "மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பிற் - பார்ப்பும் பறழுங் குட்டியுங் குருளையுங் - கன்றும் பிள்ளையு மகவு மறியுமென் - றொன்பதுங் குழவியோ டிளமைப் பெயரே." மரபென்ற பொருண்மை யென்னையெனின்,— கிளவியாக்கத்து மரபென்று வரையறுத் தோதப்பட்டனவுஞ் செய்யுளியலுண் மரபென்று வரையறுத் தோதப்பட்டனவு மன்றி, இருதிணைப் பொருட்குணனாகிய இளமையு மாண்மையும் பெ ண்மையும் பற்றிய வரலாற்று முறைமையும், உயர்திணை நான்குசாதியும் பற்றிய மரபும், அஃறிணைப் புல்லு மரனும் பற்றிய மரபும், அவை பற்றிவரும் உலகியன்மரபும், நூன் மரபுமென இவையெல்லா மரபெனப் படுமென்பது. மற்றுப் பொருள்களின் இளமை பற்றிவரு மரபுகூறினுர் மூப்புப்பற்றிவரு மரபு கூறுரோவெனின்,— அது வரையறை யின்மையிற் கூறுரென்பது. மற்று மேலையோத்தினோடு இவ்வோத்திடை இயைபென் னையெனின்,— முன்னர் வழக்கிலக்கணங் கூறி அதன்பின் செய்யுளிலக்கணஞ் செய்யுளி யலுட் கூறினுர். அவ்விரண்டற்கும் பொதுவாகிய மரபு ஈண்டுக் கூறினமையின் இது செய்யுளியலோடு இயைபுடைத்தாயிற்று. மற்று வழக்கிலக்கணஞ் செய்யுட்கும் பொது வாகலின், இங்ஙன மிரண்டற்கும் பொதுவாகிய மரபினையுஞ் செய்யுளியலின் முன்வை க்கவெனின்,— அவ்வாறு வழக்குஞ் செய்யுளுமென்னும் இரண்டுமல்லாத நூலிற்கும் ஈண்டு மரபு கூறினமையின், இது செய்யுளியலின்பின் வைக்கப்பட்டது. இவற்றை யெல்லா மேல் வரையறுத்து இன்னபொருட்கு இன்னபெயர் உரித்தென்பது சொல்லு வர். மாற்றருஞ் சிறப்பி னென்றதனுனே இவை ஒருதலையாகத் தத்தமரபிற் பிறழாமற் செய்யுள் செய்யப்படுமென்பதூஉம், ஈண்டுக் கூறுதனவாயினும் வழங்கொடுபட்ட மரபு பிறழினுஞ் செய்யு ளின்பம் படின் அவ்வாறு செய்கவென்பதூஉம், கூறியவாறுயிற்று.

## பன்னிருபடல முதலியன.

**பன்னிருபடலம்** அருந்தவக்கொள்கை அகத்தியமுனிவர் மாணுக்கரான தொல் காப்பியமுனிவர் முதலிய பன்னிருவரானு மியற்றப்பட்டதொரு புறப்பொரு ளிலக் கணநூல். இந்நூல் புறப்பொரு ளிலக்கணத்தினை வெட்சிப்படல முதலிய பன்னிருபட லங்களாகப் பகுத்தோதுதலின், அப்பெயர்த்தாயிற்று. இந்நூல் அகத்தியந் தொல்காப்பி யங்களில் அகம் புறமெனப் பகுத்த பொருளிலக்கணங்களைத் தம்முள் வேறுபாடு நோக்கி, அகம், அகப்புறம், புறம், புறப்புறமென நான்காகப் பகுத்துப் புறப்பொருளினை மிக விரித்தோதும். இயற்கைநிலமான குறிஞ்சி முல்லை மருத நெய்தலும், செயற்கைநில மான பாலையுமென்னு மைந்து மகமாம். கைக்கிளை பெருந்திணையென்னு மிரண்டு மவ ற்றின் புறமா யியைந்து நிகழ்தலி னகப்புறமாம். "மக்க ளுதலிய வகனைந் திணையுஞ்

சுட்டி யொருவர்ப் பெயர்கொளப் பெறாஅர்" என்றகத்திணையியலு ளோதுதலின், அவ்வாறு பாகுபாடு செய்தல் ஆசிரியர் தொல்காப்பியனார்க்கு முடம்பாடேயாயிற்று. என்னை? ஐந்திணையினையு மகனெனவே யொழிந்த கைக்கிளையும் பெருந்திணையு மவற்றின் புறமா யகப்புறமாமென்பது தானே போதருதலினென்க. இனி அகத்திணைக்கண் முதல் கரு வுரிப்பொருள் கூறிய குறிஞ்சி முல்லை மருத நெய்த லென்பனவற்றிற்கு வெட்சி வஞ்சி யுழிஞை தும்பையென்பன அவ்விலக்கணங்களோ டொருபுடை யொப்புமைபற்றிச் சார்புடையனவாய்ப் புறமாய் நிகழ்தலிற் புறமாம். இனித் தமக்கென நிலனுடையவாகிய குறிஞ்சி முல்லை மருத நெய்தல்களைச் சார்ந்து நிகழு நிலனில்லாப் பாலை பெருந்திணை கைக்கிளை யென்பனவற்றிற்கு வாகையுங் காஞ்சியும் பாடாண்டிணையும் பெற்ற விலக்கணத்தோ டொருபுடை யொப்புமைபற்றிச் சார்புடையவாய் நிகழ்தலின், புறப்புறமாம். ஆசிரியர் சிவஞானயோகிகள், சித்தாந்தசைவாசாரியர் "அகச்சமயம் புறச்சமய" மென விரண்டாகப் பகுத்தனவற்றைத் தம்முள் வேறுபாடு நோக்கி, "அகச்சமயம், அகப்புறச்சமயம், புறச்சமயம், புறப்புறச்சமய" மென நான்காகப் பகுத்து, அவ்வாறு பகுத்தன் மரபாதற்குப் பன்னிருபடலத்திற் பொருளியல்பினை, அகம், அகப்புறம், புறம், புறப்புறமென் றிங்ஙன நான்காகப் பகுத்தோதியவாற்றினையே தமக்கு அடிப்பாடாகக் காட்டியருளினார்.

இனி நச்சினார்க்கினியர் "கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய் - முற்படக் கிளந்த வெழுதிணை யென்ப" என்னு மகத்திணையியற் சூத்திரத்து 'முற்படக் கிளந்த' வென வெடுத்தலோசையாற் கூறவே பிற்படக் கிளந்த வெழுதிணை யுளவாயின: அவை வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண்டிணை யென வரும். ஒழிந்தோர் பன்னிரண் டென்றாராதலின் புறத்திணை யேழென்ற தென்னையெனின்,— அகங்கை யிரண்டுடையார்க்குப் புறங்கை நான்காகாது இரண்டாயவாறுபோல அகத்திணை யேழற்குப் புறத்திணை யேழென்றலே பொருத்த முடைத்தாயிற்று. எனவே, அகத்திணைக்குப் புறத்திணை அவ்வநிலத்து மக்கள் வகையாற் பிறந்த செய்கை வேற்றுமையாதலின், ஒன்று ஒன்றற்கு இன்றியமையாதவா றாயிற்று. கரந்தை அவ்வேழற்கும் பொதுவாகிய திணைவழுவாதலின் வேறு திணையாகாது" எ-ம், "வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவி - னாதந் தோம்பன் மேவற் றாகும்" என்னும் புறத்திணையியற் சூத்திரத்து "அடித்துக்கோடலும் மீட்டுக்கோடலும் வெட்சியாயின; மீட்டல் கரந்தையென்பராலெனின்,— அதனையும் இச்சூத்திரத்தானும் வருகின்ற சூத்திரத்தானும் வெட்சியென்றே ஆசிரியன் கொண்டான்; மீட்டலை வெட்சிக் கரந்தையென்பாரு முளர், மீட்டலைக் கரந்தையென்பார்க்கு அது திணையாயிற் குறிஞ்சிக்குப் புறனாகாமை யுணர்க" எ-ம், "காஞ்சி தானே பெருந்திணைப் புறனே" என்னும் புறத்திணையியற் சூத்திரத்துக் "கைக்கிளை முதற் பெருந்திணை யிறுவா யேழனையு மகமென்றலின், அவ்வகத்திற்கு இது புறனாவதன்றிப் புறப்புறமென்ற லாகாமை யுணர்க" எ-ம், கூறுமுகத்தானே, அங்ஙனம் பகுத்தோதுதன் மரபுநிலை திரியாமென்பர். ஆசிரியர் சிவஞானயோகிகள் "அகம் புறமெனப் பகுத்தனவற்றைத் தம்முள் வேறுபாடு நோக்கி அகம், அகப்புறம், புறம், புறப்புறமென நான்காகப் பகுத்தலும், வெட்சித்திணை உழிஞைத்திணைகளின் மறுதலை வினையை வேற்றுவினையாதலும் வேற்றுப்பூச் சூடுதலுமாகிய வேறுபாடுபற்றி வேறு திணையாக வைத்தெண்ணுதலும், இன்னோரன்ன பிறவும் பொருண்முடிபு வேறுபடாமையின் மரபுநிலை திரியாவாயின".

என்றும், இஃதறியார் "தொல்காப்பியமும் பன்னிருபடலமுந் தம்முண் முரணுவனவாகக் கருதி அவற்று ளொருநூலையேபற்றி மற்றொன்றனை யிகழ்வர்" என்றும், பாயிர விருத்தியினுஞ் சிவஞானமாபாடியத்தும் யாப்புறுத்தோதினார்.

இனிப் பல்காப்பியம் பல்காயம் காக்கைபாடினியமென்பன பல்காப்பியனார் முதலியோராற் செய்யப்பட்ட யாப்பிலக்கண நூல்கள். அற்றேல், தொல்காப்பியங் கிடப்பப் பல்காப்பியனார் முதலியோர் நூல் செய்த தெற்றுக்கெனின்,— அவரும் அவர் செய்த வெழுத்துஞ் சொல்லும் பொருளு மெல்லாஞ் செய்திலர்; செய்யுளிலக்கண மகத்தியத்துப் பரந்துகிடந்ததனைத் தொல்காப்பியனார் சுருங்கச் செய்தலின், அறிதற் கருமைநோக்கிப் பகுத்துக் கூறினாரென்க.

இனிப் பெருநாரை பெருங்குருகு இசைநுணுக்க முதலிய இசைத்தமிழிலக்கண நூல்களும், முறுவல் சயந்தங் குணநூல் செயிற்றிய முதலிய நாடகத்தமிழிலக்கண நூல்களும், மாபுராணம் பூதபுராண மென்பனவு மேலை இயற்றமிழ் நூல்க டோன்றிய காலத்துத் தோன்றியன. இவற்றுட் பல இக்காலத்து வழங்கக் காணாமையி னிறந்தன போலும். இனிப் பஞ்சபாரதீயம், இந்திரகாளீயம், பஞ்சமரபு முதலிய விசைத்தமிழ் நூல்களும், கூத்தநூல், பரதம், தாளவகையோத்து, பரதசேனாபதீயம், மதிவாணர் நாடகத்தமிழ்நூல் முதலிய நாடகத்தமிழ்நூல்களுங் கடைச்சங்கத்தின் பிற்றை ஞான்று தோன்றியன வென்றறிக.

பிரயோகவிவேகநூலார் 'ஐந்திரநிறைந்த தொல்காப்பியன்" எனத் தொல்காப்பியப் பாயிரத்தின்கண் வருதலின், தொல்காப்பியத்திற்கு ஐந்திர வியாகரண முதனூலாம்" என்றார். இன்னும், அவர் 'அகத்திய நிறைந்த தொல்காப்பியன்' என்னாமையானும், "கடிநிலையின்றே ஆசிரியற்க" எனப் பொதுப்பட வோதியதல்லது பெயரெடுத்தோதாமையானும், அதற்கு அதுவே பொருளென்க" என்றுங் கூறினார். ஆசிரியர் சிவஞானயோகிகள் பாயிரவிருத்தியுள் "நூலெனப் பொதுப்படக் கூறாது நிலத்தொடு முந்துநூலென விசேடித்தலின், செந்தமிழ் தோன்றுங்காலத் துடன்றோன்றியநூல் அகத்திய மொன்றேயாகலானும், ஏனை நூல்களெல்லாம் அகத்தியத்தின்வழித் தோன்றினவேயா மாகலானும், ஐந்திர நோக்கித் தொகுத்தாரெனின், தமிழ்மொழிப் புணர்ச்சிக் கட்படுஞ் செய்கைகளும், குறியீடுகளும், வினைக்குறிப்பு, வினைத்தொகை முதலிய சில சொல்லிலக்கணங்களும், உயர்திணை அஃறிணை முதலிய சொற்பாகுபாடுகளும், அகம் புறமென்னும் பொருட்பாகுபாடுகளும், குறிஞ்சி வெட்சி முதலிய திணைப்பாகுபாடுகளும், அவற்றின் பகுதிகளும், வெண்பாமுதலிய செய்யுளிலக்கணமும், இன்னோரன்ன பிறவும், வடமொழியிற் பெறப்படாமையானும், இவையெல்லாந் தாமே படைத்துக் கொண்டு செய்தாரெனின், முந்துநூல் கண்டென்பதனோடு முரணுதலானும், முற்காலத்து முதனூல் அகத்தியமென்பதூஉம் அதன்வழித்தாகிய தொல்காப்பியம் அதன் வழிநூலென்பதூஉந் துணியப்படும்" என்று நிறுத்தியும், "தொல்காப்பியனார் அகத்தியனாரோடு மாறுகோடலின் அகத்தியத்தொடு பிறழவும் பிற்காலத்து வீழ்ந்தன சில முந்துநூல்கண்டு அவற்றின்வழி நூல் செய்தாரெனக் கொள்ளாமோவெனின்" என்று ஆசங்கித்து, "அஃது ஆன்றோர் வழக்கொடு மாறுகொள்வார் இக்காலத்துச் சொல்லினும் அடிப்பட்ட சான்றோர் சொல்லாராகலிற் கொள்ளாம்" என்றும், "அல்லதூஉங்

கடைச்சங்கத்தாருட் களவியற் பொருள்கண்ட கணக்காயனார் மகனார் நக்கீரர் இடைச்சங்கத்தார்க்குங் கடைச்சங்கத்தார்க்கு நூலாயிற்றுத் தொல்காப்பியமென் றுரைசெய்தாராகலின் இடைச்சங்கநாண்முதல் இன்றுகாறும் வழங்கிவருதலானும், அருந்தவக் கொள்கை அகத்தியனாரோடு மாறுகொண்டு நூல்செய்தாராயின் இவ்வாறு நிலைபெற்று வழங்காதாகலானும், "கூறிய குன்றினு முதனூல் கூட்டித்-தோமின் றுணர்த றொல்காப்பியன்ற - னாணை யின்றமி ழறிந்தோர்க்குக் கடனே" எனவும், "வீங்குகட லுடுத்த வியன்கண் ஞாலத்துத் - தாங்கா நல்லிசைத் தமிழ்க்கு விளக்காகென - வானோ ரேத்தும் வாய்மொழிப் பல்புக - ழானாப் புலமை யகத்திய னென்னு - மருந்தவ முனிவ னாக்கிய முதனூல் - பொருந்தக் கற்றுப் புரைதப வுணர்ந்தோர் - நல்லிசை நிறுத்த தொல்காப்பியன்" எனவும், "மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத் - தென்மலை யிருந்த சீர்சான் முனிவரன் - றன்பாற் றென்றமிழ் தாவின் றுணர்ந்த - துன்னருஞ் சீர்த்தித் தொல்காப்பியன்முதற் - பன்னிரு புலவரும்" எனவும், எல்லாவாசிரியரும் அகத்தியனார்க்கு முதன் மாணாக்க ராயினாரென்பதுபற்றியே தொல்காப்பியனார்க்குப் பெருமைகூறி அகத்தியமே தொல்காப்பியத்திற்கு முதனூலெனக் கூறினாராகலானும், அகத்தியனாரோடு முரணிச் சபித்தராயின், அதுபற்றியே பெருமை கூறத்தகும் அவ்வா றோராசிரியருங் கூறாமையானும், அது வேதவழக்கொடு மான்றோர்வழக்கொடு மாறுகொள்வார் கூற்றேயாம்" என்றும், "அற்றேல் அகத்திய நிறைந்த தொல்காப்பியனென்னாது ஐந்திர நிறைந்த தொல்காப்பியனென்ற தென்னையெனின்" என்று ஆசங்கித்து, "அகத்திய நிறைந்தமை எல்லாராலுந் தெளியப்பட்டமையின் வடமொழியிலும் வல்லனாயினானென்பது விளக்கிய அங்ஙனங் கூறினார்" என்றும், "இவ்வாறன்றி ஐந்திரத்தின்வழித் தோன்றிய நூலென்பது விளக்கிய 'ஐந்திர நிறைந்த தொல்காப்பியன்' என்றாரென்பாரை ஐந்திர நிறைந்த தொல்காப்பியனெனவே ஐந்திர முதனூலென்ப தமைந்திருப்பவு முந்துநூல் கண்டெனக் கூறிய தெற்றுக்கு" என்றும், மறுத்துப் போந்தார். அதனால், பிரயோகவிவேகநூலார் அக்கொள்கை வெறும் போலியேயாமென்பது துணிக. நச்சினார்க்கினியர்க்கும் இதுவே துணிபாதன் மரபியலில் "வினையி னீங்கி விளங்கிய வறிவின் - முனைவன் கண்டது முதனூ லாகும்" என்னுஞ் சூத்திரத்திற்கு இங்ஙனங் கடாவிடைகளான் அவர் விளங்க விரித்துரைக்குமாறுபற்றி யுணர்க.

அற்றேல், நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் பாயிரவுரையில் தொல்காப்பியனார் தம்மாசிரியர் அகத்தியனாரோடு மாறுகொண்டு அவர்தம்மைச் சபித்தாரென்று கூறியதென்னையெனின், அவர், தொல்காப்பியனார், தம்மாசிரியராகிய அகத்தியனார்பான் முதலாய வன்புவழிபாட்டிற் றலைநின்று கலைகள் நிரம்பக் கற்றுப் பன்னிருவருட் டலைவராயினாரென்றும், தம்மாசிரியர் செய்த தமிழ் முதனூலாகிய அகத்தியத்தின்வழித்தாகத் தொல்காப்பியமென்னும் இலக்கணநூல் செய்தாரென்றும், பின்னர் மரபியலகத்து உரைவகுத்தாராகலின், பிறர்மதங்காட்டிக் களைதல் வேண்டி அங்ஙனங் கூறினாரென்று கொள்க.

இனி அது வேதவழக்கொடும் ஆன்றோர்வழக்கொடு மாறுகோளுறச் சிலர் அங்ஙனங் கட்டி நடத்திய போலியுரையென்று சிவஞானயோகிகள் நியாயவலியுரையாற் களைந்து ஒதுக்கினராகவும், பதிப்புரைகாரர் அப்பொய்யுரை தம்பதிப்புரைக்குப் பொருந்தும் புரையென்று போலும் அதனுளெடுத்துப் போற்றி அதுகொண்டு அகத்தியத்

திற்குச் சிறுமையுந் தொல்காப்பியத்திற்குப் பெருமையும் பேசிப் புரையாட்டயர்ந் தார். அவர் அப்பதிப்புரை, அகத்தியம் எல்லாநலமும் ஒருங்கெய்திச் சிறக்கும் இறை நூலொக்கு முத்தமிழ் முதனூலெனவும், தொல்காப்பியம் அதன் வழித்தாகத்தோன்றி நடைபெறும் வழிநூலெனவும், அது வேதவழக்கொடும் ஆன்றோர்வழக்கொடும் பொரு ந்தி இயலும் பட்டாங்கு வரலாறெனவும், மேலே நிறுத்திப்போந்த வலியுரைகளின் முன்னர் ஒருசிறுவரையேனு நிற்றலாற்றாது தூர ஒதுங்கி மாயுமென்பது கற்றாரெல் லாந் தெற்றென வுணர்வர். அதுகிடக்க. அவர் "தொல்காப்பியர் இட்டசாபத்தின் வலியினால் அகத்தியம் இறந்துபட்டது" என்று புதுவதாகவும் ஒன்று கற்பித்துப் புரை யாட்டயர்ந்தார். அது புதுவதாதல் எதனாலெனின், தொல்காப்பியனார் அகத்தியனா ரைச் "சுவர்க்கம் புகாப்பிர்" என எதிர் சபித்தனரென வேதவழக்கொடு மாறுகோளு றுவார் ஆண்டுக் கூறினாராக, அவர் அதனை ஒளித்துத் தொல்காப்பியர் அகத்தியம் இறந்துபடக் கோபமிக்குச் சாபமொன் றிட்டனரென்று ஒன்று கட்டியுரைத்தார்; அத னாலென்க. அவர் தாம் அங்ஙனம் புதுவதாகக் கட்டிக் கூறிய பதிப்புரைக்கட் குற்றம் வருதல்கண்டு அது பரிகரிக்கவெண்ணி, "ஆசாரியர் வழிபாட்டிற் குறைவில்லாத திரண தூமாக்கினி அவ்வாறு சபிக்கற்பாலரோ" என்று வினாநிகழ்த்தி, "அதுவன்றே அவர் ஆசிரியரைச் சபிக்காது அவர்செய்த நூலைச் சபித்ததென்க" என்றும், "சிஷ்யரது சாபத்தினை ஆசாரியர் தடுக்கும் வன்மையிலரோ" என்று தடை நிகழ்த்திக், "கடவுளர் இருடிகள் சாபத்தினைத் தடுக்கும் வன்மையிலரெனின்,—இது கடாவன்றென்று மறு க்க" என்றும், சில போலியாகவிடுத்துச் சாலவுந் தம் புல்லறிவு நிலையிட்டனர். ஆசி ரியர் வழிபாட்டிற் றலைநின்ற தொல்காப்பியனார் குரவர்ப்பேணாமை நன்றிகோறலென் னும் உய்தியில் குற்றங்க டமக்கெய்துமென்றஞ்சி அகத்தியனாரைச் சபித்தல் செய்யா ராயினாரென்று அறிவுதோன்றி அறங்கரைந்தார, பின்னாத் தூரபிமானமீதூர்ந்து அறி வுகொன்று "அதுவன்றே அவர் ஆசிரியரைச் சபிக்காது அவர்செய்த நூலைச் சபித் தனர்" என்று மறங்கரைந்தது, சிறுமகார்க்கு நகையினை நிறுத்துமென்க. இது தானெ டுத்துக்கொண்ட மேற்கோளைச் சாதிக்கமாட்டாமல் அதற்குக் கேடுவரப்பேசுதலெ ன்னு நிக்கிரகத்தானமென்க. இனி அகத்தியத்தினைச் சபித்தலும் அகத்தியனாரைச் சபித்தலொப்பத் தொல்காப்பியனார்க்குக் குரவர்ப்பேணாமையு நன்றிகோறலுமாம். என்னை? "ஈசுரவாக்கியமாகிய வேதசிவாகம நிந்தை ஈசுரநிந்தை யொப்பதோர் ரதி பாதகமாகும்" என்றும், "அரசனீதி நூனிந்தை அரசனிந்தை யொப்பதோர் குற்ற மாம்" என்றும், உண்மைநூல்க ளோதுதலினென்பது.

அவர் மாணாக்கராகிய தொல்காப்பியனார் இட்ட சாபத்தினை ஆசிரியராகிய அகத்தியனார் தடுக்கும் ஆற்றலாளராகாத தென்கொலோவென்று கடாநிகழ்த்தி, இருடிகள் சாபத்தினைக் கடவுளர் தடுக்கு மாற்றலுடையராகாமை கேட்டலின், அது கடாவன்றென்றார். அது மேற்கொண்டதனைச் சாதிக்கும் வியாத்தியுடைத்தாகாமையின் ஏதுப்போலியாம்; இருடிகள் சாபத்தினைக் கடவுளர் தடுக்கும் ஆற்றலுடைய ரல்லரா தல் யாண்டும் பிறழாது ஒருதலையாதல் செல்லாமையி னென்க. அவர் அறவரு மாணா க்கருமாகிய தொல்காப்பியனார் அறவர்க்கு இறைவரும் ஆசிரியருமாகிய வகத்தியனா ரைச் சபிக்கவஞ்சி அவர் நூலைச் சபித்தாரென்று மேற்கொண்டார்; அதனைச் சாதிக்க அவராசிரிய வழிபாடாகும் அறஞ்சிதைதற் கஞ்சுதலை ஏதுவாக்கினார்; ஆசிரியர் நூலை

ச்சபித்தலும் ஆசிரியர்ச் சபித்தலொப்ப அவருக்குக் கேடுபயப்பதோர் மரமேயாமென்று அவ்வேதுவுக்குக் குற்றம்வந்துழி, அதனைவிட்டு, ஆசிரியர் மாணாக்கர் சாபத்தினைக் கடக்கமாட்டாராயினமை பொருந்துமென்று முன்னதற்கு மாறுறப் பின்னொரு மேற்கோள் கூறினார். அதனைச் சாதிக்க விருடிகள் சாபத்தினைக் கடவுளர் கடக்கு மாற்றலுடையராகாமையென்னு மியைபில் பிறிதோ ரேதுக்கூறினார். அவை மேற்கோளுக்கு மறுதலைப்படப்பேசுதல், மேற்கோளை விட்டுவிடுதல், பிறிதொரு மேற்கோளைக் கூறுதல், தான் கூறிய வேதுவுக்குக் குற்றம்வந்துழி வேறோராற்றான் ஏதுக்கூறுதலென்னுந் தோல்வித்தானங்களாதலறிக. இனி அகத்தியனார் முனிவருந் தேவரும் வணங்கியேத்துந் தெய்வவாற்றல் பெரிதுடையராய் அவர்க்கெல்லாந் தலைவராய் விளங்கும் பெருமையுடையராகலின், அவர் அருளியும் வெகுண்டுங் கூறு மறைமொழிகள் இறைவன் அங்ஙனங் கூறும் அருட்சாப மறைமொழிக ளொப்பத் தேவர் அசுரர் முனிவர் முதலாயினோர்க்கெல்லாம் ஆக்கக்கேடுகளைத் தப்பாது பயக்கு மாற்றலுடையனவாம். தேவர் முனிவர் முதலியோர் அவர்தம்மை வெகுண்டு கூறுஞ் சாபவுரைகள் காமனைங்கணை கண்ணுதலிறைவனெதிர் வெந்து பொடியாய் அழிந்தமைபோல அவரெதிர் சத்திகெட்டழியும். அதுவேயுமன்றிக் காமன் அவ்வவிர்சடைக்கடவுள் அழல்விழிக்கிலக்காய் வெந்து பொடியாயினதுபோல அவரும் அகத்தியனார் சாபமறைமொழிக் கிலக்காய் ஆற்றல் சிதைந்து உய்திபெறாது கெடுவரென்றுந் துணிக. இவையெல்லாம் ஆய்ந்து துணிந்தன்றே சிவஞானயோகிகள் "அது வேதவழக்கோடும் ஆன்றோர்வழக்கோடும் மாறுகொள்வார் கூற்றேயாமென்று மறுக்க" என்று பாயிரவிருத்தியில் அங்ஙனம் ஆணைகூறுவராயினதூஉமென்று கடைப்பிடிக்க. மறைமுதற்பொருளான கறைமிடற்றிறைவன் திருந்திய வைதிகசைவ மெய்ந்நெறிவந்த தெய்வப்பெற்றியாளர் தாரதம்மிய வரலாறு நல்லாசிரியரை வழிபட்டு நன்றுணரப்பெறாமையால் அவர் இவ்வாறெல்லாம் படைத்துக்கொண்டு கூறிப் பழிமலைந்தாரென்றொழிக.

இனித் தொல்காப்பியனார் இயற்றமிழ் வழக்குநூல்போல அவரோடு ஒருசாலை மாணாக்கர்களாகிய மற்றைப் பதினொருவர் நூல்கள் இடைச்சங்கத்தார் தமிழாராய்ச்சிக்கு நூல்களாகாதவா றென்னையெனின்,—அவை இடைச்சங்கத்தார் தமிழாராய்ச்சிக்கு நூலாகாவாயினவல்ல; நூலாயினவே. அஃதேல், அவ்வரலாறு நக்கீரனார் களவியலுரையுட் சொல்லாததென்னையெனின்,— தொல்காப்பியஞ் சொல்லவே அவையுங் கொள்ளப்படுமென்பதுபற்றி அவர் ஆண்டு அவை கிளந்தோதாராயினாரென்க. மற்றவை தம்முளொன்றான இசைநுணுக்கம் ஆண்டுக் கிளந்தோதியதூஉங் காண்க. தொல்காப்பியம் இடைச்சங்கத்தாருக்கு நூலாயினமை சொல்லப்படுதலால், அதுவும் அதுபோல வழிநூலாயின பிறவும், அக்காலத்தாக அதற்குச் சிறிது முன்னாகத் தோன்றி நடைபெறுவவாயினவென்றே துணிக. மற்றுப் பதிப்புரைகாரர் தொல்காப்பியமுதலியன தலைச்சங்கத்தார் காலத்துக்கு முற்பட்டுத் தோன்றித் தலைச்சங்கவரங்கேறிப் பின்னர் இடைச்சங்கத்தாருக்கு நூலாயினவென்றும், தலைச்சங்கத்தில் தொல்காப்பியம் விளங்காமைக்குக் காரணம் அகத்தியனார் மாறுகோளென்றும், மொழிந்தார். தொல்காப்பிய முதலியன தலைச்சங்கமேறி நிலவினவேல், நக்கீரர் அவ்வரலாறு கிளந்து கூறுவராவர்; அவர் அவ்வாறு கூறாதொழிந்தமையானும், முக்குணங்கடந்து மிக்க தெய்வப் பெற்றியுடையராகிய வகத்தியனார் மாறுகொண்டாரென்று அவருக்கு விருப்பு வெறுப்புச் சீவகுணங் கூறுதல் குற்றமாய் முடிதலானும், அது பொருந்தாமை யுணர்க.

இன்னும், அவர் கூற்றுப் பொருளாயின், அகத்தியனார் மாறுகொண்டு தொல்காப்பியத்தினைத் தலைச்சங்கத்தில் விளங்கவொட்டாது விலக்குதற் குடம்பட்டிருந்தாரென்று அவிர் சடைக்கடவுண் முருகவேள் என்பார்க்குப் பெரியதோ ரிழுக்குமாமென்க. இன்னும், அவர் கூற்றுப் பொருளாங்கால், தொல்காப்பியம் இடைச்சங்கத்திலும் விளங்குமாறின்றி ஒதுங்கிற்றென்று மாம். என்னை? இடைச்சங்கத்திலும் அகத்தியனார் வீற்றிருந்தாராகலின், ஆண்டும் அது அவர் மாறுகோளுற்று விளக்கம் பெறுதாதல் வேண்டுதலினென்க. இவ்வாற்றால் அவர் கூற்று வேதவழக்கோடும் ஆன்றோர்வழக்கோடு மாறுபடும் பழியுரையேயாமன்றி நியாயவுரையாகாமை தெற்றெனவுணர்க.

அற்றேலஃதாக; செந்தமிழ்மொழி தோன்றுங்காலத் துடன்றோன்றிற்றாய் அதற்குப் பேராதாரமாய் முச்சங்கத்து நிலவிய முதனூலாகிய அகத்தியங் கடைச்சங்கமொடுங்கிய பிற்றைஞான்று வழங்கற்பாடின்றி மறைதற்குக் காரணந்தான் யாதெனின்,— கூறுதும். அகத்தியம் பல்வாழ்நாளுஞ் சில்பிணியும் பேரறிவு முடைய அக்காலத்தார் கற்றுப் பிறருடன் பயின்று அறிவு நிரப்புதற்பொருட்டுச் செய்யப்பட்டதொரு பெருநூலாதலின், சின்னாளும், அவற்றுள்ளும் பல்பிணியும், சிற்றறிவும் உடையராகிய இக்காலத்தார், தாம் அதனைக் கற்றலும் பலருடன் பயிறலுஞ்செய்து கல்வி நிரப்புதன் முடியாதென்று கைவிட்டு அதன்வழிச் சுருங்கித்தோன்றிய தொல்காப்பியமுதலிய விலக்கணநூல்களையே கைக்கொண்டு போற்றிப் பயில்வாராயினமையின், அது எடுத்தெழுதிப் படித்துப் பயில்வாரின்றி வைகரிவடிவிற்றீர்ந்து மத்திமைவடிவுநேர்ந்து பைசந்திவடிவிற்றுகிப் பரமயோகிகட்கே புலனாதற்குரிய சூக்குமநாதமாயொடுங்கிற்றென்க. அவ்வாறு பாதுகாத்துப் பயில்வார் கைவிட்டமையால், வடமொழியின் மாமறையாகமச் சுருதிகளுள்ளும் அவற்றின் வழிநூல்களுள்ளுங் காலந்தோறு மொடுங்கின பல. இன்னும், அவ்வாறு பாதுகாத்துப் பயில்வார் கைவிடுதலாற் றென்மொழியிற் றேவாரச்சுருதிகளுள்ளுந் தெய்வச் சங்கமரீஇய நூல்களுள்ளுங் காலந்தோறு மொடுங்கின பல. இவையெல்லாஞ் சாபத்தாலழிந்து மறைந்தனவல்ல. இச்செந்நெறி தேர்ந்துகொள்ளமாட்டாது அகத்தியந் தொல்காப்பியனார் சாபத்தினால் அழிவுபட்டதென்று படைத்து மொழிந்தாரை அவையெல்லா மழிவுபடுதற் கேதுவாய்நின்ற சாபந்தாம் யாவையென்று கடாயினார்க்கு, விடை யாதோவென்க. இன்னும், அவர் தம்பதிப்புரையில் அகத்தியந் தொல்காப்பியத்தின்முன் விளங்கமாட்டாது தாழ்வுற்றதென்று சழக்கொன்றுரைத்தார். அம்முதனூலும் வழிநூலு முறையே அரனும் அரன் மகனும்போல வரமுறுவனவேயாமன்றி மூரணுறுவனவல்ல. இனி முதனூலான வகத்தியம் வழிநூலாகிய தொல்காப்பியத்தின்முன்னர் விளங்கமாட்டாது தாழ்வுற்றதென்றல் அரன்மகன்முன் அரன் விளங்கமாட்டாது தாழ்வுற்றனனென்பதனோடொத்துச் சிறுமகார்க்கு நகையினை நிகழ்த்துவதோர் சழக்குரையேயாமன்றி வழக்குரையாகாதென்க.

## கடைச்சங்கம்.

இனிக் கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் சிறுமேதாவியாரும், சேந்தம்பூதனாரும், அறிவுடையானாரும், பெருங்குன்றூர்க்கிழாரும், இளந்திருமாறனும், மதுரையாசிரியர் நல்லந்துவனாரும், மருதனிளநாகனாரும், கணக்காயனார்மகனார் நக்கீரருமெனவித்தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மர். அவருள்ளிட்டு நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினார். அவர்களாற் பாடப்பட்டன நெடுந்தொகை நானூறும், குறுந்

தொகை நானூறும், நற்றிணை நானூறும், ஐங்குறுநூறும், பதிற்றுப்பத்தும், நூற்றைம்பதுகலியும், எழுபது பரிபாடலும், கூத்தும், வரியும், பேரிசையும், சிற்றிசையுமென்று இத்தொடக்கத்தன. அவர்க்குநூல் அகத்தியமும், தொல்காப்பியமும். அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது ஆயிரத் தெண்ணூற் றைம்பதிற்றியாண்டு. அவர்களைச் சங்கம் இரீஇயினார் கடல்கொள்ளப்பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன் முதலாக உக்கிரப் பெருவழுதி யீறாக நாற்பத்தொன்பதின்மர். அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தரமதுரை. அவருட் கவியரங்கேறினார் மூவர் பாண்டியர்.

அற்றே லஃதங்ஙனமாக; இடைச்சங்கத்தார் தமிழாராய்ச்சிக்கு நூல்களாகி நிலவிய தொல்காப்பிய மாபுராணம் பூதபுராணம் இசைநுணுக்க மென்பனவற்றுட் டொல்காப்பியம் இடைச்சங்கமுத லின்றுகாறு முளதாய் நிலைபெற, மாபுராணம் பூதபுராணம் இசைநுணுக்க மென்பன மறைதற்குக் காரணமென்னையெனின்,— அவையும் பரந்துபட்ட பொருண்மையவாய்ச் சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவின் மக்கட் குபகாரப்படாமையின் அவர் தம்மாற் கைவிடப்பட்டு மறைந்தன வென்க.

இனி "எண்ணென்ப வேனை யெழுத்தென்ப" எனவும், "சத்தமுஞ் சோதிடமும்" எனவும், இயற்றமிழோடு சிறந்தெடுத்தெண்ணப்படுஞ் சோதிடமுதலிய பிறகலைகளு முளவாக மும்மைச் சங்கத் தமிழாசிரியர்களும் பிறரும் இயலிசைநாடகமென்னு மிம்மூன்றனையுமே விதந்து ஆராய்ந்துகொண்ட தென்னையோவெனின்,— சோதிட முதலிய பிறகலைகளெல்லாம் ஆரியத்தினுந் தமிழினும் ஏனைமொழிகளினும் வேறுபாடின்றி ஒப்பநிகழ்தலின் அவற்றை வேறு விதிக்கவேண்டாமையானும், இயலிசைநாடக மென்னு மூன்றுந் தமிழ்நிலத்துச் சில வேறுபாடுடைமையின் அவற்றை வேறு விதிக்கவேண்டுதலானும், அது பற்றி அகத்தியனார்முதலிய முத்தமிழ்ச்சங்கவாசிரியர்களும் பிறரும் இம்மூன்றுமே விதந்தெடுத் தாராய்வாராயினர். அதனால் அஃது ஒக்கு முறைமைத்தென்றுணர்க.

அற்றேலஃதாக ; தலைச்சங்க மிடைச்சங்கங் கடைச்சங்கமென்னு முச்சங்கத்தாரு முறையே நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டும், மூவாயிரத் தெழுநூற்றியாண்டும், ஆயிரத் தெண்ணூற்றியாண்டுஞ் சங்கமிருந்து தமிழாராய்ந்தார் என்றும், அகத்தியம் அம்முச்சங்கத்தார்க்கு நூலாயிற்றென்றும், தமிழாசிரியர் கூறுமுரைகள் மலைவுடைய பொலாம். என்னை? பாணினீய மாபாரதத்துட்போந்த உதிட்டிரன் பீமன் அருச்சுனன் வாசுதேவன் முதலிய பெயர்கட்கு இயன்முடிபு கூறி அம்மாபாரதத்தின் பின்னதாத லறியப்படுதலின், " வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணையாத் - தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்துங் - குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாக" ரெனக் காஞ்சிப்புராணத்துட் கூறுமுறையானே அகத்தியம் அப்பாணினீயத்தின்பிற் றோன்றிய தென்பது இனிது பெறப்படுதலின், எனின்,— சிவபிரான் ஆதிக்கட் டம்பாற் றோற்றமுற்று நடைபெறுந் தெய்வத் தொன்மொழியான தமிழிலக்கணம் ஆசிரியர் அகத்தியனார்க்குச் செவியறிவுறுத்தருளிய வரலாறு காந்தபுராணத் துபதேசகாண்டத்தினும், காந்தபுராணத்துக் காளிகாகண்டத்துக் காஞ்சிமான்மியத்தினும், காந்தபுராணத் தகத்தியகாண்டமென்னும் ஆலவாய்மான்மியத்தினும், வேறு வேறு ஓதப்படுதலானும், சிவபிரானேயன்றி அறுமுகக்கடவுளும் அகத்தியனார்க்குத் தமிழிலக்கணஞ் செவியறிவுறுத்தருளினாரென்று ஆண்டாண்டுக் கேட்

கப்படும். அவைகள் ஓர் காலத்தன வாதலன்றிப் பலகாலத்தனவாத றெள்ளிதிற் றுணி
யப்படும். படவே, அகத்தியத்தோற்றம் பாணினீயத்தின் முற்பட்டதுமாம்; மற்றதன்
பிற்பட்டதுமாம். இஃதென்சொல்லியவாறோ வெனின்,— பலவாறாகப் போதரு மக
த்தியத் தோற்றவரலாற்றுள், "வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளி யதற்கிணை
யாத் - தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்துங் - குடமுனிக்கு
வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகர்" என்று காஞ்சிமான்மியத் தோதப்பட்ட அகத்திய
வரலாறு இறுதிக்கண்ணதாகலின், அதுபற்றி அகத்தியமுதனூல் அக்காலத்திற்றானே
யுதித்ததென்று கொண்டு அவ்வகத்திய முத்தமிழ் முதனூலின் றொன்மை வரலாறு பிர
மாணமாதல் யாங்ஙனமென்றெடுத் தாசங்கித்தல் பொருந்தாதென்றவாறா மென்க.

அற்றேலஃதங்ஙனமாக; சிவபிரான் அறுமுகக்கடவுண் முற்றறிவுடைய வொரு
தனி முதல்வர். அகத்தியனாரோ தவத்தான் மனந் தூயராய் முக்குணங்களையுங் கட
ந்தவ் விறைவரருள் பெற்றுடைய மாமுனிவர். அப்பெற்றியுடைய விறைவர் இப்பெ
ற்றியுடைய அகத்தியனார்க்குத் தமிழிலக்கணம் ஓர்காலத் தொருமுறையானன்றிப் பல
காலத்தும் பன்முறையாற் செவியறிவுறுத்த அமர்ந்தவா றென்னையெனின்,— தமிழ்
வழக்குக் காலந்தோறும் வேறுபடுதலின், முற்காலத்து வழங்கி வீழ்ந்த தமிழ் வழக்கைக்
களைந்து, பிற்காலத்து வேறுபடப் பிறந்த தமிழ்வழக்கைத் தழுவி வழக்கு நெறிப்படுத்தல்
வேண்டி, அவ்விறைவர் அகத்தியனார்க்குத் தமிழியல் அங்ஙனங் கால வேறுபாட்டாற்
பலமுறை செவியறிவுறுத்தியருள வமர்ந்தா ராகலின், அது குற்றமாகா தென்க. ஆசி
ரியரெல்லாம் "இறந்தது விலக்க லெதிரது போற்ற" லென்னும் உத்தியும், "பழையன
கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையி னானே" என்னு நூற்புறனடை
யும், நூன்மரபாகக் கொண்டு ஓதுமாறும் இதற் குறு சான்றாத லறிக. இனி நந்திபெரு
மான் முதலிய கணர்களும், அயன் முதலிய தேவர்களும், சனற்குமாரன் முதலிய
முனிவர்களும், சிவபிரான்பாற் றத்துவபோதம் ஒருமுறையா னன்றிப் பன்முறை
யானுஞ் செவியறிவுறுத்தப்பட்டு ஐயநீங்கி மெய்யுணர்ந்தாரென்று புராணங்களில்
ஆண்டாண்டுக் கேட்கப்படுதலின், கால வேறுபாடுபற்றி வீழ்ந்தும் பிறந்தும் வருந் தமிழ்
வழக்குக்களை, ஆய்ந்து களைந்து தழுவி வழக்குவழிப்படுத்தல் வேண்டி, அவ்விறைவர்
பால் அகத்தியனார் தமிழிலக்கண மவ்வாறு பன்முறைகொண்டிடு றக்கவாறேயாமென்
பது.

இதனை மற்றோராற்றானு நெறிப்படுத் துரைத்தும். பல்வாழ்நாளும் பிணிதபு
நோன்பும் அறிவுவலியுமுடைய முற்காலத்தார் நீடிருந்து ஆராய்ந்து தமிழ் வழக்குத்
தேறி யுறுதிகூடுதற்பொருட்டு, அகத்தியனார் அருந்தவமிருந்து, இறைவனாரருளிய ஆறு
கடைப்பிடித்துத் தம்பெயரான் முத்தமிழிலக்கண முதனூல் முதற்கண் விரித்தியற்றி
யுபகரித்தருளினார். இது முதற்சங்கத்தின் முற்பட்டுப் போந்த வகத்தியவரலாறு. இடை
க்காலத்தார் அம் முற்காலத்தாரிற் குறைந்த வாழ்நாளும், குறைந்தநோன்பும், சிற்றறிவு
முடையராயினமையின், அவர்பொருட்டு, அகத்தியனார் மறித்தும் அருந்தவமிருந்து,
இறையனாரருளிய ஆறு கடைப்பிடித்துத், தம்பெயரான் இயற்றி வழங்குவித்த அம்
முத்தமிழிலக்கண முதனூலைப் பின்னர்ச் சுருங்க யாத்து இயற்றி யுபகரித்தருளினார்.
இஃதிடைச்சங்க ஞான்று போந்த வகத்திய வரலாறு. பிற்காலத்தினர் அவ்விடைக்காலத்
தாரிற் குறைந்த வாழ்நாளு நோன்பும் அறிவு முடையராயினமையின், அவர்பொருட்டு

அகத்தியனார் மறித்து மருந்தவ மிருந்து இறையனா ரருளிய ஆறு கடைப்பிடித்துத், தம் பெயரான் வழங்குவித்த அம்முத்தமிழிலக்கண முதனூலைப் பின்னுஞ் சுருக்க யாத்திய ற்றி யுபகரித்தருளினார். இஃது கடைச்சஙகானின்று போந்த வகத்தியவரலாறு. இவற்றுள், இறுதிக்கண்ணது பாணினீயத்தின் பிறப்பட அங்ஙன நிகழ்ந்த வரலாறும். "ஏழியன் முறைய தெதிர்முக வேற்றுமை - வேறெண விளம்பான் பெயரது விகாரமென் - றோதிய புலவனு முளனொரு வகையா-னிந்திர னெட்டாம் வேற்றுமை யென்றனன்" என மொழி தரும் அகத்திய முதனூ லிவ்விறுதியதாம். வடநூலாரும், "முற்காலத்திற் றைவ வியாகரணங்களு மாரிடவியாகரணங்களும் பல வழங்கின. கலிகாலத்தின் மக்கட்கு ஆயுளு மறிவுங் குன்றுதலின், அவற்றினையெல்லாங் கற்று அறிவு நிரப்பமாட்டாது வட மொழியை வழுமலைந்த வழங்குவாராயினர். அது கண்ட பாணினிமுனிவ ரருந்தவமிரு ந்து சிவபிரான் திருவருள் பெற்று அத்தைவ வாரிடவியாகரணங்களைச் சுருக்கி 'அட்டா த்தியாயி' என ஓரிலக்கணநூல் செய்தருளினார்" என்றுரைப்பாராதலின், யாங் கால பேதத்தொடு பட்டுத்தோது மிவ்வரலாறு மற்றவரானு மொப்பப்பாலதேயா மென்பது. வடமொழி வியாகரணம் பலராற் காலத்திற் கேற்ப விரிந்துஞ் சுருங்கியு நடந்தது. தென்மொழி யிலக்கணம் உலகமெலாந் தொழுதேத்துங் குடமுனிவரான அகத்திய னொருவ ராணைவழியிற்றானே காலங்கட்கேற்ப விரிந்துஞ் சுருங்கியு நடந்தது. இது தம்முள் வேறுபாடு. அகத்திய மிங்ஙனங் காலத்திற்கேற்ப விரிந்துஞ் சுருங்கியு மாறி நடந்தமையாற் போலு மற்றது "பேரகத்தியம்" "சிற்றகத்தியம்" என அங் ஙனம் வழங்கப்படுவதாய தென்பது. அகத்தியங் காலபேதம்பற்றி யிவ்வாறு விரிந் துஞ் சுருங்கியு மாறி நடந்த முறையானே அவ்வாறு வழங்கப்பட்டமை தேறமாட்டா தார், பேரகத்தியஞ் சிற்றகத்தியம் வெவ்வே றொருகாலத் தொருங்கு நிலவினவென்று தமக்கு வேண்டியவா றோதி, வரலாற்றுமுறை திறம்பினவர். இன்னும் விரிப்பிற் பெருகு மென்க.

## களவியல்.

கடைச்சங்கத்தார் காலத்துப் பாண்டியனாடு பன்னிருயாண்டு வற்கடஞ்சென்றது. செல்லவே, பசிகடுகுதலும் பாண்டியன் சங்கப்புலவரெல்லாரையுங்கூவி, "வம்மின்! யான் உங்களைப் புறந்தரற்பாலனல்லேன்; என்றேயம் பெரிதும் வருந்துகின்றது; நீயிர் நுமக்கறிந்தவாறு புக்கு நாடு நாடாயினஞான்று என்னையுள்ளி வம்மின்" என்றான். என, அரசனை விடுத்து அவரெல்லாரும் போயினர். போயபின்னர்க் கணக்கின்றிப் பன் னீரியாண்டுகழிந்தது. கழிந்தபின்னர் நாடு மலிய மழைபெய்தது. பெய்தபின், பாண் டியன் இனி நாடு நாடாயிற்றாகலின் நூல்வல்லாரைக் கொணர்கவென்று கிங்கரரை எல்லாப்பக்கமும் போக்கினான். போயகிங்கரர் எழுத்ததிகாரமுஞ் சொல்லதிகாரமும் யாப்பதிகாரமும் வல்லாரைத் தலைப்பட்டுக் கொணர்ந்தனர். பொருளதிகாரம் வல் லாரை எங்குந் தலைப்பட்டிலேமென்று வந்தார். வர, அரசனும் புடைபடக் கவன்று என்னை! எழுத்துஞ் சொல்லும் யாப்பு மாராய்வது பொருளதிகாரத்தின் பொருட்ட ன்றே! பொருளதிகாரம் பெறேமேயெனின், இவைபெற்றும் பெற்றிலேமெனச் சொல் லாநிற்ப, மதுரை யாலவாயில் அழனிறக்கடவுள் சிந்திப்பான்: என்னை பாவம்! அர சற்குக் கவற்சி பெரிதாயிற்று; அதுதானு ஞானத்திடையதாகலான் யாமதனைத் தீர் க்கற்பாலம்" என்று, இவ்வறுபது சூத்திரத்தையுஞ்செய்து மூன்று செப்பிதழகத்தெ ழுதிப் பீடத்தின் கீழிட்டான். இட்ட பிற்றைஞான்று, தேவர்குலம் வழிபடுவான்

தேவர்கோட்டத்தை எங்குந்துடைத்து, நீர் தெளித்துப், பூவிட்டுப், பீடத்தின்கீழ் என்று மலகிடான் அன்று தெய்வக்குறிப்பினன் அலகிடுவனென்று உள்ளங்குளிர அலகிட்டான். இட்டாற்கு அலகினோடும் இதழ்போந்தன. போதரக்கொண்டுபோந்து நோக்கினாற்கு, வாய்ப்புடைத்தாயிற்றோர் பொருளதிகாரமாய்க் காட்டிற்று. காட்டப், பிராமணன் சிந்திப்பான்: "அரசன் பொருளதிகார மின்மையிற் கவல்கின்றானென்பது கேட்டுச் செல்லாநின்ற துணர்ந்து நம்பெருமா னருளிச்செய்தா னாகும்" என்று. அவன் றன்னகம்புகுதாதே கோயிற்றலைக்கடைச்சென்று நின்று கடைகாப்பார்க்கு உணர்த்தினன்; கடைகாப்பார் பாண்டியற்குணர்த்தினர்; பாண்டியன் புகுதுகவென்று பிராமணனைக் கூவினன். கூவப், பிராமணன் சென்று புக்குக் காட்டினன். பாண்டியன் ஏற்றுக்கொண்டு நோக்கிப் "பொருளதிகாரம் இது, நம்பெருமான் நம திடுக்கண் கண்டு அருளிச்செய்தா னாகற்பாலது" என்று, அத்திசை நோக்கித் தொழுது கொண்டு நின்று, சங்கத்தாரைக் கூவுவித்து, "நம்பெருமானமதிடுக்கண் கண்டு அருளிச்செய்த பொருளதிகார மிதனைக் கொண்டுபோய்ப் பொருள் காண்மின்" என, அவர்கள் அதனைக்கொண்டுபோந்து கன்மாப்பலகை யேறியிருந்து ஆராய்வுழி, எல்லாரு தாந்தா முரைத்த உரையே நல்லதென்று சிலநாளெல்லாஞ் சென்றன. செல்ல, நாம் இங்ஙனம் எத்துணை யுரைப்பினும் ஒருதலைப் படாது. நாம் அரசனுழைச் சென்று நமக்கோர் காரணிகனைத் தரல்வேண்டுமென்று கொண்டுபோந்து அவனாற் பொருளெனப்பட்டது பொருளாய் அன்றெனப்பட்டது அன்றாய் ஒழியக் காண்டுமென, எல்லாருமொருப்பட்டுப் பாண்டியனுழைச் சென்றார். பாண்டிய னெதிர்சென்று "என்னை! நூலுக்குப் பொருள் கண்டீரோ?" என்றான். அவர் "அது காணுமாறு எமக்கோர் காரணிகனைத் தரல்வேண்டும்" எனப், "போமின்! நுமக்கோர் காரணிகனை எங்ஙன நாடுவேன்! நீயிர் நாற்பத்தொன்பதின்மராயிற்று. உமக்கு நிகராவார் ஒருவர் இம்மையின்றே" என்று பாண்டியன் சொல்லினன். சங்கப்புலவர் போந்து கன்மாப்பலகையில் ஏறியிருந்து, "அரசன் இது சொல்லினன்; காரணிகனைப் பெறுமாறு என்னைகொல்?" என்று சிந்திப்புழிச், "சூத்திரஞ்செய்தான் ஆலவாயில் அவிர்சடைக்கடவுளன்றே; அவனையே காரணிகனைத் தரல்வேண்டுமென்று சென்று வரங்கிடத்தும்" என்று வரங்கிடந்தார். இடையாமத்து "இவ்வூர் உப்பூரிகுடிகிழார் மகனாவான் உருத்திரசன்மனென்பான், பைங்கண்ணன், புன்மயிரன், ஐயாட்டைப் பிராயத்தான், ஒரு மூங்கைப் பிள்ளை யுளன்; அவனை அன்னனென் றிகழாது கொண்டுபோந்து ஆசனமேலிரீஇக் கீழிருந்து சூத்திரப்பொரு ளுரைத்தாற், கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்க்கும், மெய்யாயினவுரை கேட்டவிடத்து. மெய்யல்லாதவுரை கேட்டவிடத்து வாளாவிருக்கும். அவன் குமாரதெய்வம்; அங்கோர் சாபத்தினாற் றோன்றினன்" என முக்காலிசைத்த குரல் எல்லார்க்கு முடன்பாடாயிற்றாக, எழுந்திருந்து தேவர்குலத்தை வலங்கொண்டு போந்து, உப்பூரிகுடிகிழாருழைச் சங்கமெல்லாஞ் சென்று, இவ்வார்த்தை யெல்லாஞ் சொல்லி, "ஐயனாவான், உருத்திரசன்மனைத் தரல்வேண்டும்" என்று வேண்டிக், கொடுபோந்து, வெளியது உடீஇ, வெண்பூச்சூட்டி, வெண்சாந்தணிந்து, கன்மாப்பலகை யேற்றிக் கீழிருந்து சூத்திரப்பொரு ளுரைத்தார். உருத்திரசன்மனாவான் எல்லாரு முறையே உரைக்கக் கேட்டு வாளாவிருந்து, மதுரை மருதனிளநாகனார் உரைத்தவிடத்துக் கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் நிறுத்தினன்; பின்னர்க் கணக்காயனார் மகனார் நக்கீரர் உரைத்தவிடத்துப் பதந்தோறுங் கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்ப்ப விருந்தான். இருப்

பச், சங்கப்புலவ ரார்ப்பெடுத்து "மெய்யுரை பெற்று மிந்நூற்கு" என்றார். அதனால், உப்பூரிகுடிகிழார் மகனுவான் உருத்திரசன்மனுவான் செய்தது இந்நூற்கு உரையென் பாரு முளர். அவர் செய்திலர், மெய்யுரை கேட்டாரென்க. மதுரை ஆலவாயிற் பெருமானடிகளாற் செய்யப்பட்ட நூற்கு, நக்கீரனாரால் உரை கண்டு, குமாரசுவாமியாற் கேட்கப்பட்டதென்க. களவியல் வந்தவாறும் அதற்கு மெய்யுரை கண்டவாறு மிவை யாம். இனி உரை நடந்தவாறு சொல்லுதும். மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் தம்மகனார் கீரவிசொற்றனார்க்கு அதனை யுரைத்தார்; அவர் தேனூர்கிழார்க் குரைத்தார்; அவர் படியங்கொற்றனார்க் குரைத்தார்; அவர் செல்வத்தாசிரியர் பெருஞ் சுவனார்க் குரைத்தார்; அவர் மணலூராசிரியர் புளியங்காய்ப் பெருஞ்சேந்தனார்க் குரைத்தார்; அவர் சொல்லூராசிரியர் ஆண்டைப் பெருங்குமாரனார்க் குரைத்தார்; அவர் திருக்குன்றத்தாசிரியர்க் குரைத்தார்; அவர் மாதளவனார் இளநாகனார்க் குரைத்தார்; அவர் முசிறியாசிரியர்க் குரைத்தார். இங்ஙனம் வருகின்றது உரை. இந்நூலுட் கூறிய முச்சங்க வரலாறு களவியன்முதனூன் முகத்து நக்கீரனார் உரைத்து நிறுத்தியதென் றறிக.

அற்றே லஃதங்ஙனமாக; ஆசிரியர் அகத்தியனார் முதற்கண் முத்தமிழ்நூல் முதன்மைபெறச் செய்தனர். அதனால் அகத்தியமே தமிழ் முதனூலாய்ச் சிறந்தது. மற்று அகத்தியத்தின் பின்னர் ஆலவாயில் அவிர்சடைக்கடவுள் செய்தருளிய களவிய றமிழ் முதனூலாகுமா றென்னையோவெனின்,— முற்காலத்தாகப் பிற்காலத்தாக வினையினீங்கி விளங்கிய வறிவின் முனைவன் செய்தனவே முதனூலாம். அங்ஙனமாயினும், அம்முதல்வன் றன்னருளால் வினையினீங்கி விளங்கிய வறிவின் முனைவரை அதிட்டித்துச் செயப்படுவனவு முதனூல்களாம். அதனால், சிவபிரா னுபதேசவழி வினையினீங்கி விளங்கிய வறிவின் முனைவராகிய அகத்தியனாராற் செய்யப்பட்டதூஉ முதனூலாயது. இதனால், பிற்காலத்துப் பாண்டியன் பொருட்டுப் பெருமானடிகள் செய்த களவியல் வேதாகமம் போல்வதோர் முதனூலேயாமென் றுணர்க. மற்றின்னு மிதனானே, முதல்வன் உபதேசவருளால் வினையினீங்கி மெய்யுணராதார் முதன்மையாக நூல்கள் செய்யினும் அவை முதனூலாகாவென்பது தெளிக. மற்றிவையெல்லாம் பெறுவித்தற்பொருட்டன்றே ஆசிரியர் தொல்காப்பியனார் "வினையி னீங்கி விளங்கிய வறிவின்-முனைவன் கண்டது முதனூ லாகும்" என நோக்குப் பெரிது புணர்த்து அங்ஙனஞ் சூத்திரம் யாக்கலுறுவா ராயினதென்க.

இக்களவியலென்னு முதனூல் "அன்பி னைந்திணைக் களவெனப் படுவ - தந்தணரறுமறை மன்ற லெட்டினுட் - கந்தருவ வழக்க மென்மனார் புலவ" ரென்பது முதலாகக் "களவு கற்பெனக் கண்ணிய வீண்டையோ - ருளநிக ழன்பி னுயர்ச்சி மேன" வென்பது ஈறாக அறுபது சூத்திரமுடையது. இதன் சூத்திரங்கள் அறுபதூஉந் திட்பமு நுட்பமு மொட்பமுஞ் சிறந்து, அகப்பொருட் டிறனெல்லா மிகத் தெளித்துரைத்தலிற் றமே தமக்கு நிகராய், ஏனோர் கூறிய அகப்பொருள்கட்கெல்லாங் கடவுட் பிரமாண வரம்பாய் நிலைபெறுவன. இஃது உள்ளுதொ றுள்ளுதொ றுள்ள முருக்குவதாம்! நவிறொறு நவிறொறு நாச்சுவை பெருக்குவதாம்! பயிறொறும் பயிறொறும் பேரின்பம் பயப்பதாம்! எல்லாமியல்பி னுணரவல்ல விறைவ னருளிச்செய்த இதன்பெருமைகளைச் சொல்லாலுரைத்து அவதி நேர்தல் யார்க்கு மொல்வ தன்று. மற்றிதன் பெருமை நிற்க; கணக்காயனார் மகனார் நக்கீரனார் கண்டு கசடற வகுத்த இதனுரையுந் திட்பமு நுட்பமு

மொட்பமுஞ் சிறந்து ஏனை நூரைகட்கெல்லாம் ஓர் வரம்பாய் நிலைபெறுவது. இந்நூல் "இறையனார்களவிய" லென்றும் "இறையனாரகப்பொரு" ளென்றும் வழங்கப்படும். இது நன்மக்க ளெய்துதற்குரிய அறம் பொரு ளின்பம் வீடுபேறென்னு நான்கனுள்வைத்து ஐம்பொறிகளானு மொருங்கு நுகர்தற்பாலதாம் அன்புடைக் காமவின்ப முதலி இயற்றப்பட்டது. இவ்வின்பம் அகத்துறுபொருளாய் நிகழ்தலின் அகப்பொருளெனப்படும். இவ்வன்புடைக் காமக்கைகோள் களவென்றுங் கற்பென்று மிரண்டாய் நடக்கும். இவற்று ளிந்நூ லுதலுங் கைகோள் களவாம். களவாவது தலைமகனுந் தலைமகளும் உழுவலன்பினானே கொடுப்பாரு மடுப்பாரு மின்றிப் பால்வகையிற் றமியராய் ஓர் பொழில்வயிற் றலைப்பட்டுக் கரந்த வுள்ளத்தினராய் நுகர்ந்து செல்லுங் காமவொழுக்கமாம். இது கற்பொழுக்கமு மோதினு மிகுதிபற்றிக் களவியலெனப் பட்டதென்றுணர்க.

இக்களவென்னுங் கைகோள் காமப்புணர்ச்சியும், அது நிகழ்ந்தபின்ன ரிடந் தலைப்பாடும், அதன்பின்னர்ப் பாங்கற்குச் சொல்லி அவனாற் கூடுதலும், அதன் பின்னர்த் தோழிவழிநின்று குறைமுடித்துக் கோடலுமென நான்கா யடங்கும். அது "காமப் புணர்ச்சியு மிடந்தலைப் படலும் - பாங்கொடு தழாஅலுந் தோழியிற் புணர்வுமென் - றாங்கநால் வகையினு மடைந்த சார்பொடு - மறையென மொழிதன் மறையோ ராறே" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தா னறிக.

இது தலைமகன் றலைமகளென்னு மிருவோரும் அஃகாவன்பிற் றலைநின்று பால்வகையாற் றமக்குரித்தாய் நிற்கு மின்பங் கரந்து நுகர்ந்து வருவதோ ரொழுக்கமாய் நிற்றலானும், தலையாயவறனும் நிலையாய ஞானமும் பயவாது அவை வாயிலாகச் சுவர்க்கம் வீடுபேறுதவுதலானும், பிறர்க்குரியபொருளை மறையிற் கொள்ளுங் களவன்மையிற்று. இதுதன்னைக் களவென்றல் வேதத்தினை மறையென்றல் போலுமென் றறிக. இது மன்றலெட்டனுட் கந்தருவத்தின் பாற்படும். கந்தருவ மன்றலாவது— இருவரொத்தார் தாமே கூடுங் கூட்டம். இனி இந்நூல் கூறுங் களவொழுக்கம் இல்லது இனியது நல்லது என்று புலவரா னாட்டப்படுவ தொன்றாதலின், உலகவழக்கத்தினோடு இயையாதென் றறிக.

அற்றே லஃதாக; தெய்வத் தமிழ்மொழியினானே ஓர் நூல் செய்தற்கமர்ந்த தனிமுதற்கடவுளாகிய இறைய னார்க்கு நன்மக்கட் குறுதிபெரிது பயத்தற் சிறப்புடைய அறம் வீடுபேறென்னும் உறுதிப்பொருள்கள் பற்றி முதனூல் செய்தலே மாண்பாம். பொருள் அவ்விரண்டுஞ் சாதித்தற்குத் துணையாய் நிற்பதொன்றாதலால் அதுபற்றியு நூல் செய்த லப்பரனார்க்கு மாண்பாம். இச்சிறப்புடைய அம்மூன்றனையு மொழித்து இம்மையே உறுதி சிறிது பயக்கு நீரதாகுங் காமப்பொருள் பற்றித் தமிழ் நூல் செய்தருள வமைந்தது அப்பரனார்க்கு மாண்பாமா றென்னையெனின்,— கூறுதும். நிலவுலகத்துத் தலைமகன் றலைமகளென்று சிறப்பித் தோதப்படுவார் உம்மைக் காலத்துப் பிறப்புக்க ளெல்லாவற்றினும் அன்பான் உயிரொன்றுபட்டு ஒருவரையொருவ ரின்றியமையாராய் அந்நல்வினையா னிம்மைக்கண்ணும் அந்நீரராகி யொழுகுபவராவர். இவர் குலங் கல்வி முதலிய பத்துவகை யிலக்கணங்களுந் தம்முள் ஒத்தபாலினராவர். இத்தலைமகற்கு இழிந்தாரல்லது, ஒத்தாரும், மிக்காரும், உலகத்தில்லை. தலைமகளு மந்நீர்மையினளாம். இப்பெற்றியார் ஒழுக்கங் கேட்டன் மாத்திரையானே

விழைவு விடுத்த விழுமியோருள்ளமும் விழைவின்கட் டாழ்வுறும். இத்தரையி லிவர் துய்க்கு மிவ்வின்பம் அத்துறக்கத்தாரும் விழைவதொன்றாம். இத்தகை விழுப்பமுடைய அன்புடைக் காமவின்பம் இம்பரிற் றுய்த்துச் செல்லு மிவர் அறப்பாலெல்லாந் திறப் பட வுடையாரென்பது ஒருதலையாம்; இப்பேறுடையார் பொருட்பாலெல்லாந் திறப் பட வுடையரென்பது சொல்லாமே யெய்தும். இங்ஙனம் அறம் பொரு ளென்னு மிவை சிறப்புறப் பெற்று முனிவருந் தேவரும் விழைதரு மின்ப நுகர்ந்து செல்லு மிவர், எதிர்காலத்து நிலையாமை யுணர்ந்து பற்றறத் துறந்து மெய்யுணர்ந்து வீடுபே றெருதலையாற்றலைக்கூடுபவராவர். இங்ஙனமாதலின், இப்பெற்றியார் அன்புடைக் காம வொழுக்கமாகுங் களவியல் காமவியலாதலன்றி அறவியல் பொருளியல் வீடுபேற்றிய லுமா மாதலால், அதுபற்றித் தமிழ்நூ லருளிச்செய்தது இறையனார்க்கு மாண்பே யாமென்று கடைப்பிடிக்க.

அற்றே லஃதங்ஙனமாக; பொருளதிகாரம் வல்லாரைப் பெற்றிலேமென்று புண்படக் கவன்ற பாண்டியற்கு ஆலவாயி லழனிறக்கடவுளாகிய இறையனார் பொரு ளதிகாரம் வல்லார் தம்மைக் கூட்டிக் கவற்சி நீக்குதலே முறையாமன்றிப் பொருளதி காரத் துள்ளுறையாகக் களவியல் இயற்றி அருளுதன் முறையாங்கொல்லோ வெனின்,— ஆலவாயி லழனிறக்கடவுளாகிய விறையனார் பொருளதிகாரத் துள்ளுறுதெளிவாகக் கள விய லியற்றியருளி அதன் மெய்யுரை நிறுத்தவல்ல உருத்திரசன்மனாரைச் சங்கத் தார்க்குக் கூட்டு முகத்தானே பாண்டியன் கவற்சி நீக்கியருளினாராதலால், அது கடா வன்றென்று விடுக்க. இனி நக்கீரனார் முதலிய கடைச்சங்கப் புலவரெல்லாம் பொரு ளதிகார மிக வல்லரேயாயினும், அவர் தாந்தாம் வல்லவாறு பலபட வெடுத்துரைக் கும் அப்பொருளதிகாரப் பொருணுட்பங்களுள் இவை வாய்ப்புடையன, இவை வாய்ப் புடையன வல்லவென்று, ஒருதலைப்படுத் துரைக்கவல்ல தெய்வப்பெற்றியுடைய கார ணிகர்ப் பெறுகை காரணமாகவே பாண்டியன் கவன்றான்; இறையனார் அக்காரணி கராதற்குரிய தெய்வப்பெற்றியுடைய உருத்திரசன்மனாரை அவற்கு உதவியருள, அவன் அக்கவற்சி யகன்று மகிழ்ச்சி யெய்தினானென்பது. அற்றேல், உருத்திரசன்ம னாரை உதவியருளுதலே அது தீர்த்தலா யமையும், களவிய லியற்றி அதன் மெய் யுரை வரையறுப்பிக்கு முகத்தால் உருத்திரசன்மனாரைப் பாண்டியற்கு இறையனார் கூட்டியருள வேண்டிய தென்றுக்கெனின்,— அகத்தியத்தினுந் தொல்காப்பியத் தினு மோதிய அகப்பொரு ளிலக்கணங்கண் மிகப் பரந்து கிடந்தன வாதலால், அவை யெல்லாஞ் சுருங்கி ஒவ்வோர் துறைப்பட்டுத் தெளிவுற்று நிலைபெறச்செய்தல் வேண்டி இறையனார் களவிய லியற்றி அதன் மெய்யுரை வரையறுப்பிக்கு முகத்தானே அவரை உதவிட அமர்ந்தருளினா ரென்க. "உலகிய னிறுத்தும் பொருண்மர பொடுங்க, மாற னும் புலவரு மயங்குறு காலை, முந்துறும் பெருமறை முளைத்தருள் வாக்கா, லன்பினைந் திணையென் றறுபது சூத்திரங், கடலமு தெடுத்துக் கரையில்வைத் ததுபோற், பரப் பின் றமிழ்ச்சுவை திரட்டிமற் றவர்க்குத், தெளிதரக் கொடுத்த தென்றமிழ்க் கடவுள்" என்னுங் கல்லாடத்தானு மிதுவே கருத்தாத றெளிக. ஆண்டு உலகியனிறுத்தும் பொருண் மர பொடுங்க வென்று பொதுப்பட வெடுத்தோதியது, உறுதிப்பொருணான்கினையுந் தழுவ வேண்டியென் றுணர்க. அறம் வீடு பயவா அகப்புறப்பொருள்கள் உலகிய னிறு த்தா வாதலால், உலகிய னிறுத்தும் பொருளெனவே அவையு முடன் போதருமென்க. இவ்வுலகியற் பொருளொழுக்கம் இறைவ னருளிய வேதாகம முதலோத்துப் பற்றி

ஆதிகாலந்தொடங்கி இம்மேதினிக்கண் ஆன்றோர் வழிவழிக் கொண்டுபோதரும் வழக்கா றென்பது குறிப்பிப்பார், பொருளென் றொழியாது, பொருண்மரபென்றார். பரப்பின் றமிழ்ச்சுவை திரட்டி மற்றவர்க்குத் தெளிதரக் கொடுத்தவென்றார், அகத்தியத்தின்கண் ணும் தொல்காப்பியத்தின்கண்ணு மகப்பொரு ளிலக்கணங்களாய்ப் பரந்துகிடப்பனவும் பிறவுங் களவியலின்கட் டிரண்டு துறைப்பட வமைந்தவாறு அறிவித்தற்கு. இன்னு மிதனோக்குக்கள் விரிப்பிற் பெருகுமென்பது.

## தொல்காப்பியவுரைகள்.

கடைச்சங்கத்தின் பிற்றைஞான்று தொல்காப்பியத்திற்கு இளம்பூரணர், கல்லா டர், பேராசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியரென்பார், தனித்தனி உரையியற்றி னார். இவருள் இளம்பூரணர் இதற்கு முதற்கணுரை யியற்றினமையின் உரையாசிரிய ரென்றவ்வாறு வழங்கப்படுகின்றார். இனி இதற்கிளம்பூரணர் செய்தவுரை எழுத்ததிகா ரஞ் சொல்லதிகாரமாத்திரையி னிக்காலத்து நிலைபெறுகின்றது. பேராசிரியருரையும், கல்லாடருரையும், ஒவ்வோர் கூற்றினன்றி, முழுது நிலைபெறக்காணாமையி னிறந்தனபோ லும். சேனாவரையர் சொல்லதிகாரமாத்திரைக்கே யுரையியற்றினர். நச்சினார்க்கினியர் மூன்றதிகாரங்கட்கும் உரையியற்றினர். இவை நிலைபெறுகின்றன. இளம்பூரணரிய ற்றிய எழுத்ததிகாரவுரையும், நச்சினார்க்கினியரியற்றிய எழுத்ததிகாரவுரையும், ஓர் பெற்றியவாயேவிளங்கும். ஆயினும், நச்சினார்க்கினியரியற்றிய எழுத்ததிகாரவுரை, இளம்பூரண ரெழுத்ததிகாரவுரை நுட்பங்கள் ஆண்டாண்டு விளக்கி அதற்கு விருத்தி போன்று நிற்கும். இனி இம்மூவருஞ் சொல்லதிகாரத்திற்குத் தனித்தனி யுரை யியற்றி னும், சேனாவரைய ரியற்றியவுரையே சொல்லதிகாரத்திற்கு மிக வாய்ப்புடைத்தாய் விளங்குகின்றது. சேனாவரையர் இளம்பூரணரியற்றிய சொல்லதிகாரவுரைத்திறங்களை ஆண்டாண்டுத் தழுவியு மறுத்துந் தந்தணிபு நிலையிட்டுரைப்பர். நச்சினார்க்கினியர் சொல்லதிகாரச் சூத்திரங்கட்கு யாண்டுஞ் சேனாவரையர் உரைத்தவாறே யுரைத் தார். ஆயினும், சேனாவரைய ருரைநுட்பங்களை ஓரோரிடங்களில் விளக்கி யுதாரண மேலுஞ் சில சில காட்டினர். இனிச் சேனாவரைய ருரைக்கருத்துக்களைச் சிற்சில சூத் திரவுரைகளில் நச்சினார்க்கினியர் மறுத்துத் தங்கருத்து வேறாக நிறுத்துவர். அவற் றுள் ஒரு சில பொருந்துவனவு முள. நச்சினார்க்கினிய ரியற்றிய பொருளதிகாரவுரை அவ்வதிகாரத்திற்குச் சிறந்ததோ ருரையாம். நச்சினார்க்கினிய ரிதன்கட் பூர்வாசிரியர் சிலர்கருத்துக்களை உடம்பட்டும், மறுத்தும், ஆண்டாண்டுத் தந்துணிபு நிலையிட்டுரை ப்பர்.

## தொல்காப்பியப் பாயிரவிருத்தி, முதற்சூத்திரவிருத்தி.

வடநூற்கடலுந் தென்றமிழ்க்கடலு நிலைகண்டுணர்ந்த வாசிரியர் சிவஞான யோகிகள், தொல்காப்பியப் பாயிரச் சூத்திரத்திற்கும், அதன் எழுத்ததிகார முதற்சூத்தி ரத்திற்கு மாபாடியரூபமான விருத்திக டனித்தனி இயற்றினர். இவ்விருத்திகள், திட்ப நுட்பம்வாய்ப்பப்பொருந்தி மற்றவ்விரண்டன் சொற்பொருண்முடிபெல்லாம் இனிது நனி விளக்கி யியற்றமிழ்க்கோ ராணைவரம்பாய் நிலைபெறுகின்றன. சூத்திரவிருத்தி இளா ம்பூரணர் நச்சினார்க்கினியர் எழுத்ததிகார உரைக்கருத்துக்களைப் பெரும்பான்மை யாக ஆண்டாண்டுப் பூர்வபக்கஞ்செய்து தொல்லாசிரியர் இயற்றமிழ் வரம்புநிறுத்தி விளக்காநின்றது. இன்னும், ஆசிரியர் சிவஞானயோகிகள் சூத்திரவிருத்தியில் இளம்

பூரணர் சேனாவரையர் நச்சினார்க்கினியரியற்றிய சொல்லதிகார வுரைகளைச் சிற்சில சூத்திரங்களின் முழுது மறுத்து ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்துத் தடைவிடைகளா னினிதுவிளக்கித் துணிவுதோன்ற வேறுரை யுரைத்தார். பொருளதிகாரத்து நச்சினார்க்கினியருரையையுஞ் சூத்திரவிருத்தியில் ஓரோரிடங்களின் மறுத்து அவ்வாறு வேறுரை யுரைத்தார். இங்ஙன மூவருரைகளையு மவ்வாறு மறுத்து வேறுரையுரைத்து உண்மை நிறுத்தினாரேனும், "வடநூற்கடலை நிலைகண்டறிந்த சேனாவரையர் எழுத்ததிகாரத்திற் குரைசெய்தாராயின், இன்னோரன்ன பொருளெனைத்துந் தோன்ற ஆசிரியர் கருத்துணர்ந் துரைப்பர். அவர் சொல்லதிகாரம்போலப் பெரும்பயன் படாமை கருதி எழுத்திற் குரைசெய்யா தொழிந்தமையின், தமிழ்நூல் ஒன்றே வல்ல உரையாசிரியருள்ளிட்டோ ருரையை ஆசிரியர் கருத்தாகக்கொண்டு பின்னுள்ளோரு மயங்குவாராயினா" ரென்றும், "இனிச் சேனாவரையர் ஆகுபெயரு மன்மொழித்தொகையு மொன்றே யெனவும், இயற்பெயர் ஆகுபெயரெனப் பெயரிரண்டாயடங்கும்வழிப் பொற்றொடி யென்ப தொரு பெயர்ப்பட்டது. அதுவே யன்மொழித் தொகையாதலு முடைமையான் எச்சவியலுள்ளுங் கூறப்பட்டதெனவும், கூறினார். அது வடநூல் விதியோடு முரணுதலானும், வடநூலோடு மாறுகொள்ளாமற் கூறலே ஆசிரியர் மேற்கோளென "அதனினியறல்" என்னுஞ் சூத்திரத்துத் தாமுங் கூறினாராகலானும், அவர்க்கது கருத்தன்றென்க. இன்னும் அவர், சாத்தனதனை சாத்தனதனோடு என்புழிச் சாத்தனென்பது துவ்விகுதியும் அகரச்சாரியையும் பெற்று உருபேற்றுநின்ற பெயராகலின் ஈண்டு அதுவென வேறுக வைத்து ஆறனுருபென்றல் பொருந்தாதென்பது நோக்காது, உருபேற்றல் பெயர்க்கேயுரிய விலக்கணமென்பது நோக்காது, எச்சவியலுட் கூறுந் தொகைச்சொற்க ளுருபுதொகுதல் ஈண்டுக் கூறுதற்கோரியைபின்றென்பது நோக்காது, இனமல்லவற்றை யுடனெண்ணுதன் மரபன்றென்பது நோக்காது, "பிறிது பிறிதேற்றலும்" என்பதற்கு ஆறனுருபு பிறிதோருருபையேற்றலும் ஆறுருபுந் தொக்குநிற்றலும் வழுவாகாவென உரையாசிரியருரைத்தவாறே யுரைத்தார். இச் சூத்திரப்பொருண் முன்னர்க் கூறுதும்: ஆண்டுக்காண்க. இன்னுமொரோவிடங்களி லிவ்வாறே மயங்கிக்கூறுவர். அங்ஙனமொரோவழி மயங்குதல்பற்றி அவரை யிகழற்க; நச்சினார்க்கினியர் முதலியோர்போல யாம் பிடித்ததே சாதிப்பேமென்னுஞ் செருக்கால் யாண்டு மயங்காமையின். முக்குணங்களு மாறி மாறி வருதலின், அது பற்றி யெனைத்துணை நுண்ணறிவாளரு மொரோவழி மயங்குதலியல்பென்க. இக்கருத்துப் பற்றியன்றே, "அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கா - லின்மை யரிதே வெளிறு", "குணநாடிக் குற்றமு நாடி யவற்றுண் - மிகைநாடி மிக்க கொளல்" என்றார் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனாரு மென்பது. இங்ஙனமாகலின், வடமொழியினும் ஆசிரியர் பாணினியார் தொல்லாசிரியர் சூத்திரங்களுட் சிலவற்றைத் தம்முடைய சூத்திரங்களா லெடுத்தோதி மறுத்து வேறுவிதி கூறுவர். அவர் சூத்திரங்களுட் சிலவற்றை ஆசிரியர் வரருசியா ரெடுத்தோதி மறுத்து வேறு விதி கூறுவர். அவ்விருவரையு மொரோரிடங்களி னாசிரியர் பதஞ்சலியா ரெடுத் தோதி மறுத்து வேறு விதி கூறுவர். அது பற்றி யவ ரிகழப்படா ரென்க. அஃதேல், ஆசிரிய ரகத்தியனார் தொல்காப்பியனார் பதஞ்சலியார் முதலாயினாரு மொரோவழி யவ்வாறு மயங்கிக் கூறுபவாலோ வெனின்,— அவர் தவத்தான் மனந்தூயராய் முக்குணங்களையுங் கடந்து இறைவ னருள்பெற்றுடையராதலின், அன்ன ரல்லரென

வணர்க” என்றும், தொல்காப்பியச் சூத்திரவிருத்தியிற் சேனாவரையர் பெருமை நிலையிட்டார். இனி “அவ்வாறு வந்தன வடமொழி வியாகரண சூத்திர வார்த்திக மாபாடியங்களுள் யாண்டுங் கேட்கப்படாமையின் அது வடமொழி வழக்கறியாருரையாம்” என்று புறங்கூறுவாரு முளர். ஆசிரியர் பாணினியார் பாணினியத்துள் ஆண்டாண்டு இலக்கியங்கள் நிறுத்துகின்றுழி, த்ருதீயாதிஷு பாஷிதபும்ஸ்கம் பும்வத்காலவஸ்ய। ஓதோ கார்க்யஸ்ய। ருதோ பாரத்வாஜஸ்ய। த்ரிப்ரப்ருதிஷு ஶாகடாயனஸ்ய। த்ருஷிம்ருஷிக்ருஶேஃ காஶ்யபஸ்ய। என்றற்றொடக்கத்துச் சூத்திரங்களால் தொல்லாசிரியர் சிலர் கொள்கைக்கு தங்கொள்கை வேறுதல் விளக்கியிட்டார். அஃதொன்றோ, ததஶிஷ்யம் ஸம்ஜ்ஞாப்ரமாணத்வாத்। லுப்யோகாப்ரக்யாநாத்। யோகப்ரமாணே ச ததபாவேऽதர்ஶனம் ஸ்யாத்। ப்ரதானப்ரத்யயார்த்தவசனமர்த்தஸ்யான்யப்ரமாணத்வாத்। காலோபஸர்ஜனே ச துல்யம்। என்னுஞ் சூத்திரங்களானே தொல்லாசிரியர் சூத்திரங்களிற் சிலவற்றை மறுத்து வேறுவிதி கூறினார். இனி ஆசிரியர் வரருசியார் விபாஷாப்ரகரணே தீயஸ்ய ஙித்ஸூபஸங்க்யானம்। வ்ருத்திர்யஸ்ய ... வக்தவ்யஃ। ... யவலபரே ... வக்தவ்யம்। ராயோ ஹிம்ஸாயாம் ஸங்க்யாயாஃ। என்றற்றொடக்கத்துச் சூத்திரங்களானே ஆசிரியர் பாணினியார் குன்றக்கூறினமை எடுத்துக்காட்டினர். அஃதொன்றோ, அப்பாணினியார் சொல்லிய காஸ்த்யாதாவதாதோ... । ... விபாஷா ப்ராணிஷு। என்றற்றொடக்கத்துச் சூத்திரங்களை, கார்யோ நேகாஜ் க்ரஹணம் கர்த்தவ்யம்। நௌகாகாக... ப்ரதிஷேதோ வாச்யம்। என்றற்றொடக்கத்துச் சூத்திரங்களான் மறுத்து வேறுவிதி கூறினார். இனி ஆசிரியர் பதஞ்சலியார் வரருசியார் மறுத்திட்ட கஸ்தாதிவத்।என்றற்றொடக்கத்துப் பாணினி சூத்திரங்களை நிறுத்தியும், அவ்வரருசியா ருடம்பட்ட நபஹுவ்ரீஹௌ। என்றற்றொடக்கத்துப் பாணினி சூத்திரங்களை (கஸ்த்வித்ரகஃ என்பது கஸ்கஸ்வித்ரகஃ என்று படிக்கற்பாற்றென் றிங்ஙனம்) மறுத்து வேறுவிதி கூறினர். அஃதொன்றோ, விண்ணப்போர்... ம்। என்றற்றொடக்கத்துப் பாணினி சூத்திரங்களில் வரருசியார் மறுத்திடாத ப[illegible]த் தாமறுத்து வேறுவிதி கூறினர். இன்னும் ஆசிரியர் பதஞ்சலியார் மாபாடியத்துள் ஒரோவிடங்களில் ஸித்தே ப்ரஹணம் ப்ராதிகஸ்தாசார்யஸ்ய। என்றற்றொடக்கத் துரைகளால் ஆசிரியர் பாணினியார் மிகைபடக் கூறினரென்று வெளிப்படையாக வுரைத்திட்டார். இன்னு மவர் ப்ரியதத்திதா தாக்ஷிணாத்யாஃ। ... ஸூத்ரகாரேண க்ருஷ்யதே। என்றற்றொடக்கத் துரைகளால் வரருசியாரை இசழ்ந்துரையாடினர். இங்ஙனஞ் சூத்திர வார்த்திக மாபாடியங்களிற் கேட்கப்படுதலின், அது வரம்பிகந்த பிதற்றுரையாதல் தெற்றென வுணர்ந்துகொள்க. மற்றுப் பட்டோஜிதீக்ஷிதர் இவ்வாறெல்லாம் ஆய்ந்துணர்ந்தன்றோ யதோத்தரம் முனீனாம் ப்ராமாண்யம்। என்று அம்முத்திறத்தாசிரியர்கள் பிராமாணிய தாரதம்மியஞ் சித்தாந்தகௌமுதியுள் அங்ஙன நிலையிட்டுரைத் தாரென்க. இனிச் சூத்திர வார்த்திக மாபாடியங்கண் முறையே தம்முள் ஒன்றினொன்று

விரித்து பொருளினிது விளக்குதல் பற்றி அங்ஙனங் கூறினாரெனின்,— இலக்கியம் வரையறுக்கின்றாறு அவ்வாறுரைத்தலானும், பிராமாணியச்சொற்கு அது பொருளன்மை யானும், அது போலியுரையென மறுக்க.

அஃதேல், ஆசிரியர் பதஞ்சலியார் "ஆசிரியர் பாணினியார் சூத்திரங்கள் ஓரெழுத்து மாத்திரையும் பயனில் ஒத்தலாகாது" என்றும், "பாணினியார் சூத்திரங்களால் இலக்கியஞ் சித்திப்ப தறியமாட்டாதார் வேறு சூத்திரம் வேண்டி யிடர்ப்படுவர், பாணினியார் சூத்திரங்கட்கு விரோதமாக எழுதுவது பிரமாண மாகாது" என்றும், மாபாடியத்து ளெடுத்தோதிய தென்னையோவெனின்,— பாணினியார் மகேசுரனான இறைவன் ஆணைவழி வடமொழி யிலக்கண நூலியற்றினமையின், அவர் சூத்திரவோத்துக் கடைப்பிடித்து வடமொழி யிலக்கியமாய்தலே முறையா மென்று அறிந்தடங்காது, சிற்றுணர்வுடையார், தாந்தா மறிந்தவாறெல்லாம் அவர் சூத்திரங்களுள் ஒருசில மிகைபடக் கூறலாம், ஒருசில குன்றக்கூறலாம், ஒருசில நின்று வற்றலாம் என்று, திருத்தஞ் சாணலுறின், அது பெரியதோ ரிடர்ப்பாடா மென்று அவ்வாறு ஆணைதருவாராயினா ரென்பது. தாம் அருந்தவத்தான் மனந்தூயராய் முக்குணங்களையுங் கடந்து இறைவனருள் முற்றப் பெற்றுக் கடவுட்டன்மை யுடையராயினமையின், அவ்வாசிரியர் முக்குண வசத்தான் அட்டாத்தியாயியில் ஓரோரிடங்களின் முறை மறந்து வைத்தனவற்றை முறைமைப்படுத்து வழக்கு வழிப்படுத்துவாராயினர். வரருசியார் வார்த்திகத்தின் முறை பிறழ்ந்தனவற்றை முறைப்படுத்தியதற்கும் இஃதொக்கும். "ஆசிரியர் பதஞ்சலியார் பாணினியார் சூத்திரமெல்லாம் பயனுடையனவேயாம்" என்று மாபாடியத்துக் கூறி, அவ்வாசிரியர் சூத்திரங்களுள் ஓரோவொன்றை ஆண்டாண்டு மறுத்து வேறு விதி கூறுதன் மலைவாகு" மென்று பின்னுள்ளோர் ஆசங்கித்து, "ஆண்டுப் பயனுடையன வென்றது பொருளின்மொழி யன்றென்றவாறும்" என்றும், "அவை இம்மைக்கண் இலக்கியம் பயக்காவிடினும், அத்தியயனவோத்தாய் மறுமைபயத்தல் ஒருதலையாகலின், குற்றமாகா" வென்றும், சமாதானங் கூறுதலானும், இதனுண்மை கடைப்பிடித் துணரப்படு மென்க.

அற்றேல் அஃதங்ஙனமாக; "ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை - நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே - கேட்போர் பயனோ டாயெண் பொருளும் - வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே" என்னுந் தொல்லாசிரியர் சூத்திரத்துள் யாப்புக் கேட்போ ரென்பனவற்றிற்கு உரையாசிரியர் நச்சினார்க்கினியர் உரைத்தவுரை போலியென மறுத்துச் சிவஞானமுனிவர் வேறுரை யுரைத்தனர். ஆண்டு அவ்வாசிரியர்கண் முக்குணமயக்கத்தான் முறைமறந் துரைத்தாரென்றல் பொருந்தாது; அவ்வுரை இறையனார் களவியன் முகத்துக் கணக்காயனார் மகனார் நக்கீரருரைத்த பொருளாகலி னெனின்,— அவ்வுரை இறையனார் களவியன்முகத்து நக்கீரனார் கண்ட பொருளென்பது சிவஞானயோகிகள் அறியாதா ரல்லர். பொருந்துமாற்றிற் கேலாமையானும், வடநூன் மாறுகலானும், அவை முக்குண மயக்கான் முறைமறந் துரைத்த பொருளென்று மறுத்து, ஆசிரியர் கருத்தறிந் தண்மைப்பொருள் கூறினாராகலின், அது பொருத்த முடைத்தாகாமை யாண்டைய தென்க. அவ்வுரை மாட்சி தொல்காப்பியப் பாயிரவிருத்தியுட் காண்க; ஈண்டுக் காட்டலுறின் விரியுமென்பது.

அற்றேல், தெய்வச் சங்கப்பலகை மேலிரீஇக் கடைச்சங்கத் தலைமைபூண்ட நக்கீரனார் முக்குண மயக்கான் அங்ஙன முறைமறந் துரைத்தாரென்றல் வேதவழ

க்கொடு மான்றோர் வழக்கொடு மாறுறுமாலெனின்,— அது வேதவழக்கொடு மான்றோர் வழக்கொடு மாறுறுவாறு காட்டுதும். தெய்வச் சங்கப்பலகை மேலிருந்து தமிழாராய்ந்தார் கடைச்சங்கப்புலவர் நக்கீரனார்முத னாற்பத்தொன்பதின்ம ருளர். அவரெல்லா முக்குணமயக்க முற்றக் கடந்து மெய்யுணர்வா லுயர்ந்தாரென்ற னிரம்பாது. என்னை? அவர் "பாண்டியன் வேண்டுகோளாற் களவியற்பொரு டனித்தனி கண்டு, தாந்தாங் கண்டதே மெய்யுரையென்று சிலரொளெல்லா மாறுடினா" ரென்றும், பின்னர் "ஆலவாயி லெழுநிறக்கடவுள்பால் வரங்கிடந்து உப்பூரிகுடிகிழார் மகனாவா னுருத்திரசன்மனைப் பெற்று, அவன்றன்னான் மெய்யுரை கண்டு தேறினா" ரென்றும், ஆலவாய்மான்மியத்துங் களவியலுரை முகத்துங் கூறுதலானென்க. அற்றாயினும், 'உருத்திரசன்மனார் நக்கீரனார் களவியற்பொருள் கேட்புழிப் பதந்தொறுங் கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்ப்ப விருந்தார், சங்கப்புலவ ரார்ப்பெடுத்து "மெய்யுரை பெற்றாம் இந்நூற்கு என்றார்" என் றுண்டாண்டுக் கூறுதலின், நக்கீரனார் முக்குணமயக்க முற்றக் கடந்து களவியற்பொருள் கண்டாரெனக் கொள்ளாமோவெனின்,—கொள்ளாம். என்னை? உருத்திரசன்மனார் நக்கீரனாருரை அவ்வாறு கேட்டாரென்றதனான், ஏனைப்புலவரெல்லாங் கண்ட களவியற்பொருள்களை நோக்க நக்கீரனார் கண்ட களவியற்பொருள் சிறந்ததென்னும் பொருள் போதருதலன்றி, அவர் முழுதுணர்ந்து அது செய்தாரென்பது அதனாற் பெறப்படாமையி னென்பது.

இன்னும், நக்கீரனார் மெய்யுணர்வின் முற்றுப்பேறுடையராய்க் களவியற்பொருள் கண்டாரென்பாரை, அவ்வாறு மெய்யுணர்வுடையராயினார் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் உத்தரவேதம் வித்தகமுறச் செய்துகொண்டு சங்கமேவிய ஞான்று, அவரோடு சங்கப்பலகை யொக்க வீற்றிருக்கப்பெறாது, ஏனைப்புலவரோ டிழிந்ததென்னையோவென்று கடாவி மறுக்க. "திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ - டுருத்தகு நற்பலகை யொக்க - விருக்க, வுருத்திர சன்ம ரெனவுரைத்து வானி - லொருக்கவோ வென்றதோர் சொல்" "மெய்த்ததிரு வள்ளுவனார் வென்றுயர்ந்தார் கல்விநலந் - துய்த்தசங்கத் தார்தாழ்ந்தார் சோமேசா - வித்திறனால், மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங் - கற்றா ரனைத்திலர் பாடு" எனனும் பாக்களானு நக்கீரருள்ளிட்ட சங்கப்புலவர் திருவள்ளுவநாயனாரோடு சங்கப்பலகை வீற்றிருப்புப் பெறாது தாழ்ந்தமை தெளிக.

அற்றேலஃதாக; முக்குணங்களையுங் கடந்து மெய்யுணர்வின் முற்றுப்பேறுடையரல்லரான நக்கீரனார் முதலியோ ரியற்றிய திருமுருகாற்றுப்படை முதலிய பிரபந்தங்களை முக்குணங்களையுங் கடந்து இறைவரருள் பெற்றுடைய நாயன்மார் திருவாக்குக்களோடொப்பப் பதினொராந் திருமுறையில் ஆன்றோர் கோத்துப் போற்றுமா றென்னைகொலெனின்,— அஃதொக்கும்: திருமுருகாற்றுப்படை முதலிய பிரபந்தங்கள் நக்கீரனார் முதலியோர் தவத்தான் மனந்தூயராய் முக்குணங்களையுங் கடந் திறைவனருள் பெற்றுடையராயபின், அவர்தம்மா னருளிச்செய்யப்பட்டன; ஆகலின், ஆன்றோர் அவைதம்மையு நாயன்மார் திருவாக்குகளோ டொப்பப் பதினொராந் திருமுறையிற் கோத்து அவ்வாறு போற்றுவா ராயினாரென்க. அற்றாதலி னன்றே, நம்பியாரூரர் பெருமானார் "பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்" எனத் திருத்தொண்டத்தொகைச் சுருதியுள் அவர்தம்மையுந் தொகுத்து, அங்ஙனஞ் சேவைசெய்வா ராயினதூஉமென வறிக. இவற்றானே, யாப்புக் கேட்போர் என்பவற்றிற்கு நக்கீரனாருரைத்த பொருள் பொருந்தாவென மறுத்துச் சிவஞானயோகிகள் வேறுரை வகுத்தது பொருந்த

முடைத்தென்பது உம், அது வேதவழக்கொடு மான்றோர் வழக்கொடுமிக வியைவதன்றி மாறுறுமா றில்லையென்பதூஉம், தெற்றென வுணர்க.

### வெண்பாமாலை.

இது ஐயனாரிதனாரென்பவ ரியற்றிய ஓர் புறப்பொருணூல். இந்நூல், நச்சினார்க்கினியர் காலத்திற்கு முற்பட்டுத் தோன்றியதென்பது, "மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத் - தென்மலை யிருந்த சீர்சான் முனிவரன் - றன்பாற் றண்டமிழ் தாவின் றுணர்ந்த - துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதற் - பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த" வென்னு மிந்நூற் பாயிரச்செய்யுளை மரபியலுரையகத்து எடுத்து அவர் காட்டுதலானறிக. இந்நூல், தொல்காப்பியனார் முதலிய பன்னிருவராலுஞ் செய்யப்பட்ட பன்னிருபடலத்தினைத் தனக்கு முதனூலாகக் கொண்டதென்பது, "துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதற் - பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த - பன்னிரு படலம் பழிப்பின் றுணர்ந்தோன்" என்னு மிந்நூற் சிறப்புப்பாயிரத்தானும் "பன்னிருபடலமுதலாக வழிநூல்செய்த வெண்பாமாலை ஐயனாரிதனாரு மிது கூறினார்" ரென்று நச்சினார்க்கினியர் மரபியலு ளுரை வகுத்தலானு மறிக. இஃது புறப்பொருளினை வெட்சித்திணை, கரந்தைத்திணை, வஞ்சித்திணை, காஞ்சித்திணை, நொச்சித்திணை, உழிஞைத்திணை, தும்பைத்திணை, வாகைத்திணை, பாடாண்டிணை, பொதுவியல், கைக்கிளைத்திணை, பெருந்திணையெனப் பன்னிரண்டாக வகுத்துக் கூறும். இவற்றுள், கரந்தைத்திணை—வெட்சித்திணைக்கு மறுதலைத்திணை. நொச்சித்திணை—உழிஞைத்திணைக்கு மறுதலைத்திணை. பொதுவியல்—மேற்கூறிய புறத்திணைகட்கெல்லாம் பொதுவாயுள்ளனவும், பிறவுங் கூறுதலின், அப்பெயர்த்தாயிற்று. கைக்கிளைத்திணை—ஒருதலைக்காம முள்ளிட்ட பல துறைகளையுடையது. அது ஆண்பாற் கூற்றும் பெண்பாற் கூற்றுமென விரண்டாம். பெருந்திணை—பொருந்தாக் காமமுள்ளிட்ட பலதுறைகளையுடையது. ஏனைத் திணையிலக்கணமெல்லா முற்கூறியவாறுபற்றி யுணர்ந்து கொள்க. இதனுள் நொச்சித்திணையை உழிஞைத்திணையின் பின் வையாதது ஓர் முறை பிறழ்வாமென்பாரு முளராலோவெனின்,— அது முறைபிறழ்வாகாது. என்னை? மதிற்காப்பு அதனை முற்றுதற்கு முன்னரும் ஒருதலையாகச் செயற்பாலதாகலி னென்க. "வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர் - வைத்தூறு போலக் கெடும்" என்பதனானும் அது கடைப்பிடித் துணர்க.

### அகப்பொருள்விளக்கம்.

இந்நூலாசிரியன நாற்கவிராயநம்பி. இஃது அகப்பொருளிலக்கணங்களைச் சுருக்கிக் கூறு நூல். அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், வரைவியல், ஒழிபியலென ஐந்தியல்களுடைத்து.

### யாப்பருங்கலம்.

இஃது யாப்பிலக்கணத்தைச் சூத்திரயாப்பினாற் றெளிவாக வுணர்த்து நூல். இதற்குச் சிறந்ததோர் விருத்தியுரையுள்ளது.

### யாப்பருங்கலக்காரிகை.

இந்நூல் செய்யுளிலக்கண முரைப்பது; இஃது உறுப்பியல், செய்யுளியல், ஒழிபியலென மூன்றியல்களுடைத்து.

### வெண்பாப்பாட்டியல்.

இந்நூலாசிரியன் வச்சணந்தி. இது முதன்மொழியியல், செய்யுளியல், பொதுவியலென மூன்றியல்களுடைத்து. இதன்கண் மங்கலப்பொருத்தம், சொற்பொருத்தம்,

எழுத்தப்பொருத்தம், தானப்பொருத்தம், பாற்பொருத்தம், உணாப்பொருத்தம், வருணப் பொருத்தம், நாட்பொருத்தம், கதிப்பொருத்தம், கணப்பொருத்தமென்னுந் தசப்பொருத்தங்களி னிலக்கணமும், பிரபந்தங்களி னிலக்கணமும், பிறவுங் கூறப்படும்.

## தண்டியலங்காரம்.

இஃது அணியிலக்கணங் கூறு நூல்; பொதுவணியியல், பொருளணியியல், சொல்லணியியலென மூன்றியல்க ளுடைத்து.

## நேமிநாதம்.

இஃது எழுத்துஞ் சொல்லு முணர்த்துவது.

## வீரசோழியம்.

இந்நூலாசிரியன், அருகந்தருட்பட்ட புத்தமித்திரன். இஃது எழுத்துச் சொற் பொருள் யாப்பணி யென்னு மைந்திலக்கணமு முணர்த்து மொரு சிறுநூல். "ஏதமறு சகாப்த மெழுநூற்றிற் கச்சியப்பசிவாசாரியர் தாம் பாடிய கந்தபுராண மரங்கேற்றுழித் "திகடசக்கர"மென்னும் புணர்ச்சி முடிபிற்கு விதி இந்நூல் கொண்டு காட்டினு"ரென்று பதிப்புரைகார ருரைத்தார். வீரசோழியம் அகத்தியத்தின்வழித் தோன்றிய தொல்காப்பியத்தினையும் வேறு சில நூல்களையு முதலாகக்கொண்டு செய்ததோ ரியற்றமிழ்நூல். ஆசிரியர் தொல்காப்பியனுர் "யரழ வென்னும் புள்ளி முன்னர் - முதலாகெழுத்து ஙகரமொடு தோன்றும்" என நூன்மரபுள்ளும், "யரழ வென்னு மூன்று முன் னொற்றக் - கசதப ஙஞநம வீரொற் றாகும்" என மொழிமரபுள்ளும், யரழக்கள் கசதபக்களோடு தனியொற்றாயு மீரொற்றாயு மயங்குமென் றோதுதலானும், "யகார விறுதி வேற்றுமைப் பொருள்வயின் - வல்லெழுத் தியையி னவ்வெழுத்து மிகுமே", "அல்வழி யெல்லா மியல்பென மொழிப" என்று புள்ளிமயங்கியலுட் கூறிவைத்து அவ்விதியை "ரகார விறுதி யகார வியற்றே" "ழகார விறுதி ரகார வியற்றே" என ரகர ழகரங்களும் பெறுமென மாட்டெறிந் தோதுதலானும், ழகரத்தின்முன் வந்து புணருங் கசதபக்கள் இருவழியினு மியல்பாயும் வல்லெழுத்து இரட்டியும் புணர்ச்சியுறுதலன்றித் திரியாவெனபது தெள்ளிதிற் பெறப்படுதலின், "பத்தனொடு தொடெண்ணி ரண்டாய்த் - தோன்றுடற் பின்னர்த் தகாரம் வரினிரண் டுந்தொடர்பா - னுன்றலைந் தாமுட லாமுன்பி லொற்றுக் கழிவுமுண்டே" எனப் புத்தமித்திரன் வீரசோழியத்து ழகரத்தின் முன்வரும் தகரம் டகரமாய்த் திரியு மென் றுரைத்தது, அங்ஙனம் போந்த தொல்காப்பிய விதிக்கு மாறுகோ ளென்று மறுக்கப்படு மென்க. அது தொல்காப்பிய விதிக்கு மாறுகோ ளாயினும் பிற்காலத் திலக்கியங்களி லங்ஙனம் போந்த பிரயோகங் கண்டு அவ்வாறு கூறப்பெற்று னெனின்,— சங்கத்துச் சான்றோ ரிலக்கியங்களுள்ளும், பிற வான்றோ ரிலக்கியங்க ளுள்ளும் அவ்வாறு போந்த பிரயோகம் யாண்டுங் காணப்படாமையானும், இனி அவ்வாறு போந்த விலக்கியங் காணப்படினும், தொல்காப்பிய மாறுகோளாகலின் வழூவென்று களையப்படுவ தல்லது இலக்கணமென்று தழுவப்படா தாகலானும், அது பொருந்தாதென் றொழிக. இனிக் கந்தபுராணத்துத் "திகட சக்கரம்" எனவும், "கீட்டிசை வாயில்" எனவும் போந்த விலக்கியப் பிரயோகங் கண்டு புத்தமித்திர னவ்வாறு இலக்கணங் கூறப் பெற்று னெனின்,— அது கந்தபுராண விலக்கியப் பிரயோகம்பற்றி வீரசோழியத் தில் அங்ஙனம் இலக்கணங் கூறப்பட்டது, வீரசோழிய விலக்கணவிதிபற்றிக் கந்த புராணத்தில் இங்ஙன மிலக்கியஞ் செய்யப்பட்டதென, ஒன்றனை யொன்று பற்

றுதலென்னுங் குற்றத்திற் கிடனுமெனக். வடநூலார் ஒன்றனையொன்று பற்றுத லென்னுங் குற்றத்தினை இதரேதராச்சிரயதோடமென்றும், தன்னைப்பற்றுதலென்னுங் குற்றத்தினை ஆன்மாச்சிரயதோடமென்றுங் கூறுப. இனி வீரசோழிய முதலிய ஆதுனிக விலக்கணநூல்கள், சிற்றறிவுப் புலவர் நூல்களாகலின், அவைதம்முட் கூறப்படு மிலக்கணங்க டவத்தான் மனந்தூயராய் முச்சுண்டங்களையுங் கடந் திறைவனருள் பெற்றுடைய தொல்லாசிரிய ரிலக்கணங்களோடு மாறுகோ ளுறாதவழியே பிரமாணமாமென்று கடைப்பிடித் துணர்ந்து கொள்க. அற்றேல், கந்தபுராணத்துத் "திக்கட சக்கரம்" "கீட்டிசை வாயில்" என்றற்றொடக்கம் போந்த பிரயோகம் தொல்காப்பிய முதலிய இலக்கண வழூவாம்போலு மெனின்,— அது இலக்கண வழூவாகாமை இலக்கியமரபியலுட் கந்தபுராண வரலாறுரைப்புழிக் கூறுதும்.

## நன்னூல்.

இந்நூலாசிரியர் பவணந்திமுனிவர். இஃதெழுத்துஞ் சொல்லு மூணார்த்தும் பின்னூல்களுள் வைத்து மிகச்சிறந்ததோ ரியற்றமிழ்நூல். ஆசிரியர் தொல்காப்பியனார் கூறிய எழுத்துச்சொல் லிலக்கணப்பரப்பினைச் சுருக்கி இனிது நனி விளங்க உரைத்தலிற் பிற்காலத்தார் எழுத்தாராய்ச்சிக்குஞ் சொல்லாராய்ச்சிக்கு மற்றிதனை விரும்பிக் கற்பாராயினர். இஃது பெரும்பான்மையுந் தொல்காப்பிய மரபு நிலை திரியாமல் எழுத்துஞ் சொல்லு முணர்த்தி, அதற்கோர் வழிநூல் போன்று விளங்கும். ஆயினும், ஓரோரிடங்களிற் றொல்காப்பிய விலக்கணமரபு நிலை திரிதரக்கொண்டு கூறிய இலக்கணங்களுஞ் சில இதனகத்துள்ளன. அவை "சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே" எனவும், "சார்ந்துவரி னல்லது தமக்கியல் பிலவெனத்—தேர்ந்து வெளிப்படுத்த வேனை மூன்றும்," எனவும், வரையறுத் தோதியவாறே, சார்பெழுத்து மூன்றென்னாது, சில வுயிரெழுத்துக்களையு மெய்யெழுத்துக்களையு முடன் சேர்த்தெண்ணுதலுந் தன்மைச்சொல்லை யுயர்திணையென்னாது விரவுத்திணையெனச் சாதித்தலும் போல்வன. சூத்திரவிருத்திகாரர் அவையெலாந் தொல்காப்பிய மரபுநிலை திரிபாமென்றெடுத்து மறுத்திட்டார். இந்நூற்கு வாய்ப்புடைத்தாயதோர் விருத்தியுரை சங்கரநமசிவாயப்புலவராற் செய்யப்பட்டது. ஆசிரியர் சிவஞானயோகிகள் இவ்விருத்தியை ஆண்டாண்டுத் திருத்திச் சிறப்பித்தனர். சங்கரநமசிவாயப்புலவர் கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்துச் சுவாமிநாததேசிகர் மாணாக்கர். அது "மலர்தலை யுலகிற் பலநூ லாய்ந்து - செயவதுந் தவிர்வதும் பெறுவது முறுவதும் - உய்வது மறியே னொருபொரு ளாக - நண்ணெறி பிறழா நற்றவத் தோர்பெறுந் - தன்னடித் தாமரை தந்தெனை யாண்ட - திருவா வடுதுறைத் தேசிக னாகிய - கருணையங் கடலையென் கண்ணைவிட் டகலாச் - சுவாமி நாத குரவனை யனுதின-மனமொழி மெய்களிற் றொழுதவனருளாற் - பொன்மலை யெனவிப் புவிபுகழ் பெருமை-மன்னிய வூற்று மலைமருதப்பன் - முத்தமிழ்ப் புலமையு முறையர சுரிமையு - மித்தலத் தெய்திய விறைமக னுதலின் - நன்னூற் குரைநீ நவையறச் செய்து-பன்னூற் புலவர்முன் பகர்தியென் றியம்பலி-னன்னூ லுலர்முக நகைநா ணமே - யென்னு லியன்றவை யியற்றுமிந் நூலுள்" என நன்னூல் உரைமுகத் தவர் கூறுமாற்றானுணர்க.

## பிரயோகவிவேகம்.

இந்நூலும் உரையுஞ் செய்த வாசிரியர் சுப்பிரமணியதீக்ஷிதர். இந்நூல் வடமொழிச் சத்தசாத்திரத்தைக் காரகபடலம், சமாசபடலம், தத்திதபடலம், திங்ப்

படலம் என நான்கு படலங்களாக வகுத்து அவை தம்மைத் தென்மொழியிலக்க ணத்தோ டொப்பித்துக் கூறுமுகத்தானே வடமொழிக்குந் தென்மொழிக்கு மிலக்கண மொன்றென்று நிலையிட்டுரைக்கும். இவ்வாற்றால், வடமொழிவல்லார் தென்மொழி யிலக்கண மறிதற்கும், தென்மொழிவல்லார் வடமொழியிலக்கணமறிதற்குங் கருவியா ய்ச் சிறப்ப திந்நூலென்றுணர்க.

## இலக்கணவிளக்கம்.

இந்நூலும் உரையும் இயற்றிய வாசிரியர் வைத்தியநாததேசிகர். இஃது எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரமென, மூன்றதிகாரங்களுடைத்து. இதில் எழுத்துச் சொற்பொருள் யாப்பணியென்னு மைந்திலக்கணங்களுங் கூறப்படும். வைத்தியநாததேசிகர் இந்நூலைப் பெரும்பான்மையாற் றொல்காப்பிய நன்னூற்சூத்திரங்கள் கொண்டும், சிறுபான்மையாற் றண்டியலங்காரம் யாப்பருங்கலம் பாட்டியன் முதலிய வற்றின் சூத்திரங்கள் கொண்டும், தாமியற்றிய சூத்திரஞ்சில தலைப்பெய்தும், செய்தனர். இதனானே இஃதோர் புதுநூலாயினும் பழைய விலக்கண நூற்றிரட்டென்றே கோடற்பா ற்று. இந்நூற் சூத்திரவுரைகள் ஆண்டாண்டுத் தொல்லாசிரியர் மேற்கோண் மலைவு முதலிய குற்றங்கள் பலவுடையனவாயிருத்தல் கண்டு ஆசிரியர் சிவஞானயோகிகள் இதற்கு இலக்கணவிளக்கச்சூறாவளியென ஓர் மறுப்பியற்றினர்.

## இலக்கணக்கொத்து.

இந்நூல் கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறைச் சுவாமிநாததேசிகராலியற் றப்பட்டது. இது தொல்காப்பிய விலக்கண நூலினுந் தொல்காப்பியங்களிலும் அரு கிக்கிடந்தவிதிகளைப் பெருகத்திரட்டி வடமொழியிலக்கணவழக்குஞ் சிலவிராய்க் கூறு நூலாம். இது வேற்றுமையியல், வினையியல், ஒழிபிய லென்று மூன்றியல்களாற், சொல் லிலக்கணநுட்பந் தெள்ளிதிற் றுறைப்படுத் துணர்த்துமோர் சிறப்புடைநூலாம்.

## இலக்கணவிளக்கச்சூறாவளி.

இஃதியற்றினார் ஆசிரியர் சிவஞானயோகிகளென்பது மேலுரைத்தாம். இஃது இலக்கணவிளக்கநூலுரை வழுக்களை இனிது விளங்கவாசங்கித்து எடுத்துக்காட்டு முகத் தானே தொல்லாசிரியர் எழுத்திலக்கண நுட்பமுஞ் சொல்லிலக்கண நுட்பமுந் துணிவு தோன்ற வுணர்த்தும். "சிவஞானமுனிவர் சூறாவளியுள் இலக்கணவிளக்க நூலார் "மலை மக ளொருபான் மணந்துல களித்த-தலைவனை வணங்கிச் சாற்றுவ னெழுத்தே" என்புழி "மலைமக" ளென்பது மலையு மகளெனவு மமங்கலப்பொருடந்து தொகையார் பொருள் பல வாய்த் தோன்றலின், வழுவாமென்று மறுத்துரைத்துத், தருக்கசங்கிரக தீபிகை முகத்து "மலைமகண் மணந்த வுலகினுக் கிறைவன்" என்த் தாமுமவ்வாறு மங் கலங்கூறியது அவர்க்குப் பெரியதோரிழுக்கா" மென்பர் சிலர். அது நுணுகியாராமை யாற் கூறுங் கையறியா வுரையாம். யாதினுலெனின்,—ஒருதம். நூலாசிரியர் தாமே தமது நூற்குரையியற்றுவராயின், நூலினிது முடிதற்பொருட்டுக் கூறு மங்கலவாழ்த்தே உரை யினிது முடிதற்பொருட்டு மமையுமாகலின், உரைக்கு வேறு மங்கலவாழ்த்துக் கூறல் வேண்டாவென்பது, ஒருசா ராசிரியர் கோட்பாடு. நூல் இனிது முடிதற்பொருட்டுக் கூறு மங்கலவாழ்த்து, அஃது இனிது முடிதற் பொருட்டாயே யமைக, உரைக்கு வேறாக மங்கலவாழ்த்துக் கூறற்பாற்றென்பது, மற் றொருசாராசிரியர் கோட்பாடு. பிரயோகவிவேக நூலுடையார், இலக்கணக்கொத்து

நூலுடையார், இலக்கணவிளக்க நூலுடையார் முதலாயினார் நூன்மங்கல மொன்றுமே கூறி அஃதுரைக்குமாமென் றொழிந்தாராகலின், அவை முன்னதற்கும், அன்னம்பட்டர் முதலாயினார் நூன் மங்கலமும், அதனுரை மங்கலமும், வேறு வேறு கூறினாராகலின், அது பின்னதற்கும், எடுத்துக்காட்டுக்களாத லறிக.

நூலுரைகளை யொற்றுமை நயத்தானொன்றெனவும் வேற்றுமைநயத்தான் வேறெனவுங்கொண் டவ்வாறு செய்தலின், அவ்விருகொள்கைகளும் வழக்கென வான்றோர் போற்றிக் கோடற் கேற்பனவாத லுணர்க.

இனித் தருக்கசங்கிரகமும் அதனுரையும் தென்மொழியாற் கூறப்புகுந்த வாசிரியர் சிவஞானயோகிகள், இங்ஙன மாசிரியன்மா ரொன்றற்கொன்று மாறுபாடாகக் கொண்ட இரண்டு கொள்கைகளுள், ஒருதலைதுணிதலானே முன்னையதனையே தம் மதமாகத் தழீஇ, "மன்றவாணனை மனத்திடை நிறுவிவண் டுறைசை - வென்றசீர்நமச் சிவாயமெய்க் குரவனை வணங்கி - யென்றனைப்பொருஉ மினையவர்க் கினிதுணர் வுதிப்பத் - தென்றமிழ்ச்சொலாற் செயப்படுந் தருக்கசங் கிரகம்" என்னுஞ் செய்யுளான் மங்கல வாழ்த்துச் செய்தருளினா ரென்பது.

அற்றேல், அக்கொள்கை தழீஇ யங்ஙனஞ் செய்வாராயினார்க்கு, "மலைமகண் மணந்த" என்னும் பிற்செய்யுள் ஆண்டுச் செயற்பாலதொழிதல் வேண்டுமாலெனின்,— அறியாது கடாயினாய். அவ்வாசிரியர், "மொழிபெயர்த்ததர்ப்பட யாத்த" லென்னும் யாப்பினானே அன்னம்பட்டர் வடமொழிக்க ணியற்றிய தருக்கசங்கிரக நூலினையும், அதனுரையினையுந் தென்மொழியான் மொழிபெயர்த்ததர்ப்பட யாத் தங்ஙனந் தருக்கநூல் செய்தருளுவாராயினமையின், அவ்வடநூலாசிரியர் கொள்கை யதுவென்று காட்டிய அப்பிற்செய்யுட் செய்தருளினர். ஆகலின், அது குற்றமாகா தென்க.

அற்றேல், அவ்வாறு காட்டல்வேண்டி அப் பிற்செய்யுண் மொழிபெயர்த்துச் செய்தார்க் கதனை மங்கலமொழி முதலாகச்செய்தலே முறையாமன்றி "மலைமகள்" என அமங்கலம்பட முதற்சீர்தலைப்பெய்து அவ்வாறு செய்தன் முறைமையாகாதாம் பிறவெனின்,—அற்றன்று; முன்னைக் கொள்கையேதழுவி "மன்றவாணனை" என நூல் உரை இரண்டும் இனிது முடிபுபோக மங்கலச்செய்யுண் முதற்கட்செய்தருளினாராகலின், பின்னைச் செய்யுளுமங்கலமாகச் செய்திடின், தாந்தழீஇய வக்கொள்கைக்கு மாறாமென்று கண்டு, அங்ஙன மங்கலம்படச் செய்யாராய் "மலைமகள்" எனத் தொகையார் பொருள் பலவாய் அமங்கலம்பட, அவ்வாறு செய்தருளுவா ராயினமையி னென்க.

அஃதேல், அவ்வாசிரியர்க்கதுவே கருத்தாமாறு எற்றாற் பெற்றீரென்பாரைப் பிரயோகவிவேகநூலார் முதலாயினார்க் கது கருத்தாமா றெற்றாற் பெற்றீரென்று கடாவி மறுக்க. பிரயோகவிவேகநூலார் முதலாயினார் நூன்முக மங்கலச்செய்யுளே யியற்றி யுரைமுக மங்கலச்செய்யுள் வேறு செய்யாமையின், அவ்வருத்தாபத்தியான் அவர்க் கது கருத்தாதல் பெற்றாமெனின், ஆசிரியர் சிவஞானயோகிகள் நூன்மங்கல "மன்றவாணனை" யெனமங்கலம்படச்செய்து உரைமங்கல "மலைமக" ளெனத்தொகையார் பொருள்பலவாய், அமங்கலம்படச்செய்தலின், அவ்வருத்தாபத்தியானே யாமும் அவ்வாசிரியர்க் கது கருத்தாதல் பெற்றாமென்க.

இன்னும், "மன்றவாணனை மனத்திடைநிறுவி" எனவும், "வண்டுறைசை யெ ன்றசீர் நமச்சிவாயமெய்க் குரவனை வணங்கி" எனவும், முறையானே தமது சந்தான குரவர் ●ரமெனக்கண்டு பாசிக்கு நடராசமூர்த்தியையும், தமது குருமுதல்வரையும், மொழிபெயர்ப்பினுட் டலைப்பெய்து கிளர்த்தினிதோதிப், பிற்செய்யுள் வடமொழியுட் கிடந்தவாறே மொழிபெயர்த்துக் கூறுமதனானும், அவ்வாசிரியர்க்கதுவே கருத்தாதல் இனிதறியப்படு மென்க.

அல்லதூஉம், ஒருநூற்கு மங்கலவாழ்த் தொன்றேயன்றிப் பல கூறினாரு மங்கலமுதற்சீர் முதற்செய்யுளின்கணன்றி, மற்றைச் செய்யுட்கடோறும் யாப்புறுத் துரையாமை வழக்கின்கட் காண்டலின், வடமொழித் தருக்கசங்கிரக நூலு முறையுந் தென்மொழியானொருங்கு பெயர்த்துச் செய்யலுற்ற வாசிரியர்க்கு, முன்னைச் செய் யுளிற்போலப் பின்னைச் செய்யுளினு மங்கலமெய்த முதற்சீர் தலைப்பெய் துரைத்தல், வேண்டற்பாற்றன்றாகலின், "அம் மலைமேலேறிய குற்றம் இம் மலை மேலேறுதோ" வென்றல் கடாவாகாமை யோர்ந்துணர்க.

அற்றேலஃதாக; மொழிபெயர்த்தல் யாப்புள் ஆண்டில்லாத பொருள்க டலைப் பெய்து அங்ஙனங் கூறுத லமையாதாம்பிறவெனின், மொழிபெயர்த்தல் யாப்புள் அப் பொருள்களோடு மாறுபடுவன ஆண்டுத் தலைப்பெய்து உரைத்தல் அமையாதென்ப தாகும்; அன்றி ஆண்டைக் குபகாரமாய் வேண்டப்படும் பொருள்க டலைப்பெய்து கூறுதல் நூற்குச் சிறப்பேயாகலின், அஃதமையாதென்றல், கையறியாருரையேயா மென் றொழிக. இன்னோரன்ன வெல்லாம் அமைவுடையனவாமென் றறிவுறுத்தற் கன்றே, ஆசிரியர் தொல்காப்பியனார் "தொகுத்தல் வகுத்த றொகைவிரி மொழிபெயர்த்" தென் றொழியாது, "மொழிபெயர்த் ததர்ப்பட யாத்தலொ டனைமர பினவே" என் றங்ஙனஞ் சூத்திரஞ் செய்வாராயினதூஉமென்று கடைப்பிடிக்க. அக்கருத்தறியாத நன்னூலார் "தொகுத்தல் வகுத்த றொகைவிரி மொழிபெயர்ப் - பெனத்தகு நூல்யாப் பீரிரண் டென்ப" எனச் சூத்திரஞ் சிதைத்து வேறுபடுத்து, மொழிபெயர்ப்பியாப் பிலக்கணங் குன்றக் கூறிப் புரைபோயினா ரென்பது.

இம்முறை யெல்லா நுனுகி நோக்காது, "இலக்கணவிளக்கநூலார் "மலைமக" ளென்றெடுத்தது குற்றமா" மெனச் சொற்ற வாசிரியர் தாமே "மலைமக ளொருபா னமர்ந்தென்று" அவ்வாறெடுத்து இழுக்குற்றா ரென்பது தாற்றுங் [illegible]றியாமாந்தர் என கடவரென் றொழிக. அது நிற்க.

இக் "குடாகாயம் வடநூன் முடிபு" என்றும், அதனைக் "குடவாகாயம்- குடாகாயமென மரீஇயிற்றுக், குள ஆம்பல் - குளாம்பலென மரீஇயினாற்போல" எனச் சிவஞானபோதச் சிற்றுரையிற் சிவஞானமுனிவர் உரைத்த தேலாது" என்றும், கூறி னாரு முளராலோவெனின்,— 'குடம்' என்பது தமிழியற்சொல்லாகலின், அதனொடு புணருமாகாயந் தீர்க்கசந்தி பெறுதல் சாலாதென்பார், சிவஞானயோகிகள் "குடவா காயம் - குடாகாயமென மரீஇயிற்று" என்றுரைத்தாராகலின், அஃது சாலாமை யாண் டையதென மறுக்க. குடந் தமிழியற்சொல்லாதல், "குடந்தம்பட்டு," "குடக்கூத்து" "குடமுழா" என்றற்றொடக்கத்தாற் பயின்று வருந் தமிழ் வழக்குரைகளா னறிக. இன்னும், குடம், தமிழியற்சொல்லென்பது, "குடந்தம்பட்டு" எனவருந் திருமுரு

கீற்றுப்படைத்தொடர்க்கு— "வழிபட்டு" என்றும், "வணக்கம்பட் டென்றும் உரைப்பர்" என்றும், "குடவென்பது தடவென்பதுபோல வளைவுணர்த்துவதோ ருரிச்சொல்லாகலின் அதனடியிற் பிறந்த பெயருமாம்" என்றும், நச்சினார்க்கினிய ருரை கூறுதலானு மறிக.

வடமொழி அமரநிகண்டிலுள் அந்நூலார் 'குடம்' வடசொல்லாகக்கொண் டோதுதலின், அது வடவிபறசொல்லுமாம். ஆயினும், அஃதாண்டுத் தமிழ்ப்போலப் பெருவரவிற்றாகாது சிறுகி வழங்குதலானும், வடநூலார் 'கடாகாசம்' 'மடாகாசம்' என வழங்குவதன்றிக் 'குடாகாயம்' என யாண்டும் வழங்காமையானும், அதனை வடசொல்லென வைத்து முடிபு கூறாது, தமிழ்ச்சொல்லென வைத்து அவ்வாறு மரூஉ முடிபு கூறினார் ஆசிரியர் சிவஞானயோகிகளென் றுணர்க. குடம் பொதுவெழுத்தானாய சொல்லாதலின், இருமொழிக்கண்ணும் அங்ஙனம் வெவ்வேறு பொருள்குறித்து மொழியாதற் கேற்குமாறு அறிக.

அற்றேல் அஃதங்ஙனமாக; ஆசிரியர் சிவஞானயோகிகள் "குடாகாயம்" வடநூன் முடிபுமாம் என்று கூறுதற்கென்னையோவெனின் — "குடாகாயம் வடநூன்முடி பெனக் கோடலு மொன்று" எனச் சிவஞானமாபாடியத் துரைத்தாராகலின், அது கடாவன்றென் றொழிக.

இலக்கணமரபியல் முற்றிற்று.

## இலக்கியமரபியல்.

தமிழிலக்கியம் - திருமுறையிலக்கியம், சங்கவிலக்கியம், காவியவிலக்கியம், புராணவிலக்கியம், இதிகாசவிலக்கியம், பலவகைப்பிரபந்தவிலக்கியமெனப் பலதிறப்படும்.

வேசதுணையோர்பரிபாடல், முதுநாரை, முதுகுருகு, களரியாவிரையென்றித்தொடக்கத்துத் தலைச்சங்கவிலக்கியங்களும், கலி, குருகு, வெண்டாளி, வியாழமாலையகவலென்றித் தொடக்கத்து இடைச்சங்கவிலக்கியங்களும் இறந்தனவாதலான், அவற்றின் வரலாறிங்குக் கூறுமாறில்லை. கடைச்சங்கவிலக்கியங்கள் - நெடுந்தொகை நானூறு, குறுந்தொகை நானூறு, நற்றிணை நானூறு, ஐங்குறு நூறு, பதிற்றுப்பத்து, நூற்றைம்பதுகலி, எழுபதுபரிபாடல், கூத்து, வரி, பேரிசை, சிற்றிசையென்றித்தொடக்கத்தன. இவற்றுட்சில இறந்தன, பல நிலவுகின்றன. இவையும் இன்னோரன்னவுமான கடைச்சங்கவிலக்கிய வரலாறு திருமுறையிலக்கியங்களின் பின்னர்த் தந்து கூறுதும்.

## திருமுறையிலக்கியம்.

### திருமுறையோத்தின் முறைவைப்பு.

திருமுறையிலக்கியங்கள் சங்கஞான்று அவதரித்தல்பற்றியும், அவையெல்லாந் திருவருளோத்துக்களாதற் சிறப்புப்பற்றியும், அவற்றின் வரலாறு முதற்கட்டந்து சொல்லுதும். திருமுறையிலக்கியங்கள் பன்னிரண்டு திருமுறைகளாக வகுக்கப்பட்டன. ஆளுடைய பிள்ளையார் அருளிச்செய்த தேவாரவோத்து முதன்மூன்று திருமுறைகளாம். திருநாவுக்கரசர் அருளிச்செய்த தேவாரவோத்துப் பின்மூன்று திருமுறைகளாம். நம்பியாரூரர் அருளிச்செய்த தேவாரவோத்து அதன்பினோர் திருமுறையாம். இவ்வாற்றானே தேவாரவோத்துக்கள் ஏழு திருமுறைகளாயின வென்பது. வாதவூரடிகள் அருளிச்செ

ய்த திருவாசகமுந் திருக்கோவையும், எட்டாந்திருமுறையாம். திருமாளிகைத் தேவர் முதலிய வொன்பதின்மரும் அருளிச்செய்த திருவிசைப்பாவும், சேந்தனார் அருளிச்செய்த திருப்பல்லாண்டும், ஒன்பதாந்திருமுறையாம். திருமூலநாயனார் அருளிச்செய்த திருமந்திரம் பத்தாந்திருமுறையாம். திருவாலவாயுடைய சிவபிரான் முதலாயினார் அருளிச்செய்த திருமுகப்பாசுரமுதற் திருநாவுக்கரசு தேவர் திருவேகாதசமாலை யீறான நாற்பது பிரபந்தங்களும் பதினோராந்திருமுறையாம். அருண்மொழித்தேவர் அருளிச்செய்த திருத்தொண்டர் பெரியபுராணம் பன்னிரண்டாந் திருமுறையாம்.

தேவாரந் திருவாசகந் திருக்கோவை திருவிசைப்பாத் திருப்பல்லாண்டு திருமந்திரந் திருமுகப்பாசுரமுதலிய நாற்பான் பிரபந்தங்களென்னு மிவைதம்மை அபயகுலசேகரசோழமகாராசர்பெருமான் வேண்டிடத் திருநாரையூர் நம்பியாண்டார்நம்பி பதினொரு திருமுறைகளாக அங்ஙனம் வகுத்தருளினார். இனித் தேவாரத் திருமுறைகளேழுக்கும் பண்ணடைவு, திருநீலகண்டயாழ்ப்பாணர் மரபிற் பெண்மகளொருத்தியால் அபயகுலசேகர சோழமகாராசன் காலத்திற்றானே வகுக்கப்பட்டது. இவ்வரலாறெல்லாந் திருமுறைகண்ட புராணத்துட் காண்க. அருண்மொழித் தேவரருளிச்செய்த திருத்தொண்டர் புராணத்தினைப் பன்னிரண்டாந்திருமுறையாக அநபாயசோழமகாராசபெருமானுடைய யாணையால் ஆன்றோர் அவன்காலத்து வகுத்தருளினார். இவ்வரலாறு திருத்தொண்டர் புராண வரலாற்றுட் காண்க.

ஆளுடைய பிள்ளையார் வாகீசர் தேவாரப்பாசுரங்கள் முடத்திருமாறனது காலத்தும், நம்பியாரூரர் தேவாரமோத்து அவன்வழித்தோன்றலான மற்றொரு மாறனது காலத்தும், அவதரித்தன. மாணிக்கவாசகர் திருவாசகந் திருக்கோவையென்னு மோத்துக்கள் அரிமர்த்தனபாண்டியன் காலத்து அவதரித்தன. அரிமர்த்தன பாண்டியன், முடத்திருமாறனை முற்றோன்றலாயுள்ளான். அது ஆலவாய்ப் புராணத்துட் காண்க. "நரியைக் குதிரை செய்வானும்" என்னும் வாகீசர் திருவாக்கு மிதற்குச் சான்றாத லறிக.

தேவாரமோத்துக்களுந் திருவாசகமோத்துக்களுஞ் சிராமசந்திரன் சரித்திரப் பிரயோகமும் அவற்கு முன்னான சில புராண சரித்திரப்பிரயோகமும் அவனதுபின்னோனான பாரதகாலத்து மன்னர் முதலியோர் சரித்திரப்பிரயோகமும், கண்டுதலானும், அவற்றுள் இக்கலிகால சரித்திரப் பிரயோகம் யாதுமின்மைகாணுதலானும், அவைதாம் கலியுகத்தின் முற்பொழுதே அவதரித்தன வென்பது தெள்ளிதிற்றுணியப்படும். இனி அநாரிய பாடை நூல் வழிப்பட்ட சிலர், தென்றமிழ்ச்சான்றோரைத் தமிழாசிரியர் நூலுரை பற்றி முறையாற்சொல்லாது, பிறழக்கொண்டு, ஆளுடைய பிள்ளையார் முதலிய வண்மை நாயன்மார், Christ பிறந்தபின் னவதரித்தனரென்று துணிதல் வேண்டியவாறு கூறுவர். Christ இக்கலியுகத்தின் மூவாயிரத்தொருநூற்றிரண்டின்பிற் றோன்றினோனென்ப தநாரிய பாடை நூல்களானினிதறியப்படுதலானும், "கடைச்சங்க மிரீஇய பாண்டியர் முடத்திருமாறன் முதலாக உக்கிரப்பெருவழுதி யீறாக நாற்பத்தொன்பதின்மர்" என்றும், "கடைச்சங்கம் ஆயிரத்தெண்ணூற்றைம்பதிற்றியாண்டு நிலவிற்று" என்றும், தோலா நாவின் மேலோரான கடைச்சங்கத் தலைமைப் புலவராம் நக்கீரனார் களவியலுரை முகத்துக் கூறுதலானும், கடைச்சங்க [illegible]

ஞான்று தொடங்கி இற்றை ஞான்றுவரை யுள்ள காலம் இரண்டாயிரத்தின் மிக்க தென்பது தமிழ் நூலுரைகளால் இனி தறியப்படுதலானும், ஆளுடைய பிள்ளையார் முடத்திருமாறனைத் திருப்பதிகத்தினாற் சுரப்பிணி தீர்த்தாண்டருளிய சமயாசாரிய ரென்பது திருத்தொண்டர் பெரிய புராண முதலியவற்றாற் பெறப்படுதலானும், அவர் கூற்று வேதவழக்கொடு மான்றோர் வழக்கொடு மாறுபாடுறு மயக்க வுரையே யென் றொழிக.

அற்றேலஃதாக; திருவாதவூரடிகள் அரிமர்த்தன வழுதிக் கமைச்சராய் அவனைத் தெய்வவாற்றலால் ஆட்கொண்டருளிய சமயாசாரிய ரென்பதூஉம். ஆளுடையபிள்ளையார் முடத்திருமாறனைக் கூனிமிர்த்துச் சமண்மயறீர்த்தாட்கொண்டருளிய சமயாசாரியரென்பதூஉம், புராணநூல்களா னறியப்படுதலின், திருவாசகத்தினையுந் திருக்கோவையினையுந் தேவார வோத்துக்களுக்கு முன்வைத் தோதுதலே முறையாமெனின்,— அதுவே காலம்பற்றிய முறையாயினும், திருஞானசம்பந்தர் உண்மைநாயன்மார்களுட் டவமுதல்வராய் முதல்வன் பிரளயாகலர்க்குப்போல நாற்றோளு முக்கண்ணுங் கறைமிடறு முதலிய வுருப்பிற்றாய் முத்தொழினடாத்தி நின்ற தன்னியற்கை வடிவே சுருவடிவாகக் காட்டி முன்னின்று தலையளித்துத் தன்னருட் சத்தியாகிய உமைப்பெரும் பிராட்டியைக்கொண்டு திருமுலைப்பாலருளமுதம் பொன் வள்ளத்தூட்டுவிக்க வுண்டு ஞானசம்பந்தராய் ஆளுடைய பிள்ளையாரென விளங்கி வைதிகசைவத் திருநெறிப் பெருந்தலைமை யெய்திய சமயாசாரியராகலான், நம்பியாண்டார் நம்பி அவரருளிச்செய்த தேவாரத்திருவோத்துக்களை மற்றைத் திருமுறை யோத்துக்களுக்கெல்லா முதலாக வைத்து அங்ஙனந் திருமுறை வகுப்புச் செய்தருளுவாராயிற் றென்றுணர்க.

இனி வாகீசர் வன்றொண்டர் திருவோத்துக்கள், ஆளுடைய பிள்ளையார் திருவோத்துப் போலுமியலு மிசையு முடையவாய்த் தேவார மெனப்பட் டினமாதலின், அவை தம்மை மற்றவர் திருமுறைகளுக்குப் பின் திருமுறைகளாகக் கொண் டவ்வாறு வகுத்தருளினர். சமயாசாரியர் திருவாக்காகித் தமிழ் வேத மாத லொப்புமையாற் திருவாசகந் திருக்கோவைகளை அவற்றின் பின்முறையாகக்கொண்டு அவ்வாறு வகுத்தருளினர். திருவிசைப்பாத் திருப்பல்லாண்டென்னு மோத்துக்கள் வேதப்பொருண் மலிந்து ஓதற்குரிய விசைவண்மையுமுடையவாய் அருளோத் தொப்புமையுறுதல் பற்றி, அவை தம்மை அவற்றின் பின் னொன்பதாந் திருமுறையாகக் கொண்டவ்வாறு வகுத்தருளினர். திருமந்திரம் வேதப்பொருள் விராய் வேத வேதாந்தத் தெளிவான சிவாகம நாற்பாதப் பொருண் மலிந்து நிற்பதொன்றாதலின், அதனை அவற்றின் பின்னாகக்கொண்டு பத்தாந் திருமுறையென் றவ்வாறு வகுத்தருளினர். திருமுகப்பாசுர முதலிய நாற்பது பிரபந்தங்களும், தெய்வத் திருவருள் கைவந்து கிடைத்த உண்மை நாயன்மார் திருவாக்குக்களாய் அருட்பாவோத் திலக்கண முறுதலின், அவை தம்மை அதன் பின்னாகக்கொண்டு பதினொராந் திருமுறை யென் றவ்வாறு வகுத்தருளினர். மற்றுத் திருமுகப்பாசுரம் ஆலவாயிலவிர்சடைக் கடவுளானவிறையனார் திருவாக்காதலின், அதனைத் திருமுறைகட்கெல்லா முதலாகக் கொண்டு வகுத்தலே முறையாம்பிறவெனின்,—அஃதப்பெற்றித தாயினும், பாணபத்திர ரென்னு மன்பர்க் கெளிவந்து அவர் வேண்டிற்று அருளுதற்பொருட்டுக் கட்டளை செய்ததோர் திருமுகப்பாசுரமாய் முழு நூற்றன்மை யெய்தாமையின், அதனை அவ்வியல்புடைய பிரபந்தங்களோ டொன்றெனக் கொண்டவற்றின் முதற்கட்டடந் தவ்வாறு வகுத்தருளின

றெனவறிக. பெரிய புராணந் திருவருட்பாவாய்த் திருமுறைகள் ஆக்கியருளிய நாயன்மாருட் பெரும்பான்மையோர் சரித்திரங் கூறி, அந்நாயன்மார் அருளொழுக்கத்திறலோரிலக்கியமாய் நிற்றற் சிறப்புடைமை பற்றி, அதனை இறுதிக்கட்டந்து பன்னிரண்டாந் திருமுறை யென் றவ்வாறு வகுத் தருளினார்.

இனித் திருத்தொண்டத் தொகையுட் போந்த தனியடியாருட் கண்ணப்பநாயனாரும், சண்டேசுரநாயனாரும், கோச்செங்கட்சோழநாயனாரும், சாக்கியநாயனாரும், புகழ்த்துணைநாயனாரும், காரைக்காலம்மையாரும், வாதவூரடிகள்போல ஆளுடையபிள்ளையாருக்குந் திருநாவுக்கரசருக்கு முற்பட்ட நாயன்மார்க ளென் றுணர்க. அது "வேயனைய தோளுமையோர் பாகமது வாகவிடை யேறிசடை மேற் - றூயமதி சூடிசுடு காட்டிடை நடம்பயி றலைவனது - வாய்கலச மாகவழி பாடுசெயும் வேடன்மலராகுநயனங் - காய்கணையி னாலிடந் தீசனடி கூடுகா ளத்திமலையே" எ-ம் "பீரடைந்த பாலதாட்டப் பேணு தவன்றாதை - யேரடைந்த பாய்ந்ததாளை யேர்தடிந் தானிறைக்குத் - தாரடைந்த மாலைசூட்டித் தலைமை வகுத்ததென்னே - சீரடைந்த கோயின்மல்கு சேய்ஞலூர் மேயவனே" "எரிதரவனலங்கையி லேந்தியெல்லியி - னரிதிரிகானிடை நட்டமாடுவ - ரரிசிலம்பொருபுனலம்பலாநகர்க் - குரிசில்செங்கணவன் கோயில் சேர்வரே" எ-ம் வருமாளுடையபிள்ளையார் தேவாரவோத்துக்களாலும், "நலந்தசால் பூவுநீருங் கொண்டடி போற்றமாட்டா - வலஞ்செய்து வாயினூலால் வட்டணைப் பந்தர்செய்த - சிலந்தியை யரசனாக்கிச் சீர்மைக ளருளவல்லார் - கலந்திகழ் சோலைசூழ்ந்த நனிபள்ளியடிகளாரே" எனவும் "புத்தன் மறவா தோடி - யெறிசல்லி புதுமலர்க ளாக்கினான்காண்" எனவும் "அகத்தடி மைசெய்யு மந்தணன்றா னரிசிற்புனல் கொண்டுவந் தாட்டுகின்றான் மிகத்தளர் வெய்திக் குடத்தையுநம்முடி மேல்விழுத் திட்டு நடுங்குதலும் - வகுத்தவ னுக்குநித் தற்படியும் வருமென் றொருகாசினை நின்றநன்றிப் - புகழ்த்துணை கைப்புகச் செய்துகந்தீர் பொழிலார் திருப்புத்தூர்ப் புனிதரே" எனவும் வருந்திருநாவுக்கரசர் தேவாரவோத்துக்களானும், "இம்மையிலே புவியுள்ளோர் யாருங் காண வேழுலகும் போற்றிசைப்ப வெம்மை யாளு - மம்மைதிருத் தலையாலே நடந்து போற்று மம்மையப்பர் திருவாலங் காடா மென்று - தம்மையுடை யவர்மூதூர் மிதிக்க வஞ்சிச் சண்பையர்கு சிகாமணியார் சாரச் சென்று - செம்மைநெறி வழுவாத பதியின் மாடோர் செழும்பதியி னன்றிரவு பள்ளி சேர்ந்தார்" என்னு மருண்மொழித்தேவர் பெரியபுராணத் திருவாக்கானும், பிறவாற்றானு மறிக. இவர் தமக்கு முற்பட்ட நாயன்மார் பிறருளராதல் உரையளவையாற் பெறப்படிற் கொள்க. மற்றிவர் தம்முட் கண்ணப்பநாயனாருஞ் சண்டேசுரநாயனாரும் வாதவூரடிகளுக்குமுன் விளங்கியருளினோர். அது "கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை கண்டபி - னென்னப்ப னென்னொப்பி லென்னையுமாட் கொண்டருளி - வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச் - சுண்ணப்பொன் னீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ" எ-ம் "தீதில்லை மாணி சிவகருமஞ் சிதைத்தானைச் - சாதியும் வேதியன் றாதைதனைத் தாளிரண்டுஞ் - சேதிப்ப வீசன் றிருவருளாற் றேவர்தொழப் - பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம்" எ-ம் வரும் அவர் திருவாசகச்சுருதிகளானறிக. "கண்ணப்ப னொப்பதோரன்பின்மை" என்புழி, ஒப்பு மறுதலைப் பண்பின்கண் வந்த வுவமம். பற்றிநு "வினைபயன் மெய்யுரு" வென்ற நான்கனுள் யாதன்பாற்படுமெனின்,—அன்பு மற்றன்பின்மையும் பொருட்பண்பாகலின், மெய்யின் பாலதா யடங்குமென்க.

"ஆளுடைய பிள்ளையாரும் வாகீசரும் தம்முளருட்புலமை நட்புடையராய் வைதிக சைவத் திருநெறி வளர்த் தருளினு ரென்று அருண்மொழித்தேவர் முதலியோர் திருத்தொண்டர் புராண முதலியவற்றில் அவர் சரித்திரம் பரவியருளுதலின், அச் சமயாசாரிய ரிருவரும் ஓர் காலத்து விளங்கியருளினோ ரென்பது ஒராமே விளங்கும். இனி நம்பியாரூரர் "பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்" என்று திருத் தொண்டத் தொகையுட் செவித்தலின், அவர்தாம் "தரணியிற் பொய்ம்மை யிலாத்தமி ழ்ச் சங்க மதிற்கபிலர் - பரணர்நக் கீரர் முதனாற்பத் தொன்பது பல்புலவோர் - அரு ணமக் கீயுந் திருவால வாயரன் சேவடிக்கே - பொருளமைத் தின்பக் கவிபல பா டும் புலவர்களே" என்று நம்பியாண்டார் நம்பி திருவந்தாதியினுரைத்த மதுரைக் கடைச்சங்கப்புலவ ரென்பது வெளிப்படுதலின், அந்நம்பியாரூரனார் கடைச்சங்க மொடுங்கிய பிற்றைஞான்று அவதரித்து வைதிகசைவம் வளர்த் தருளிய சமயாசாரிய ரென்பதூஉம், "தம்பிரானருளினாலே தவத்தினின் மிக்கார்பெ ற்ற - நம்பியாரூரரென்றே நாமமுஞ் சாற்றி மிக்க - மைம்மலர்க் குழலார் சாத்திய அணிமணி ச்சுட்டி சாத்திச் - செம்பொருளரையின் மின்னத் தெருவிற்றேருருட்டுநாளில்" "நரசிங் கமுனையரென்னு நாடுவாழரசர் கண்டு - பரவருந் காதல் கூரப் பயந்தவர் தம்பாற்சென்று - விரவியநண்பினாலே வேண்டினர் பெற்றுத் தங்க - ளரசிளங் குமரற்கேற்ப வன்பினான் மகன் மைகொண்டார்" என்று திருத்தொண்டர் புராணத்துள் அருண்மொழித்தேவர் கூறியரு ளுதலின், அவர் காலம் நந்நாட்டரசு புரந்தருளிய நரசிங்கமுனையர் காலமென்ப தூஉம், தெள்ளிதிற் பெறப்படு மென்பது.

மற்றுக் கடைச்சங்கப் புலவர் தமிழ்நாட்டு மூவேந்தர் முதலியோரையும் பாடி னாராக, அவர் தம்மை நம்பியாரூரனார் "பொய்யடிமை யில்லாத புலவர்" என்றும், நம்பியாண்டார்நம்பி "அருணமக் கீயுந் திருவால வாயரன் சேவடிக்கே - பொருளமைத் தின்பக் கவிபல பாடும் புலவர்கள்" என்றும், அருண்மொழித்தேவர் "செய்யுணிகழ் சொற்றெளிவுஞ் செவ்வியநூல் பலநோக்கு - மெய்யுணர்வின் பயனிதுவே யெனத் துணிந்து விளங்கியொளிர் - மையணியுங் கண்டத்தார் மலரடிக்கே யாளானார் - பொய் யடிமை யில்லாத புலவரெனப் புகழ்மிக்கார்" "சொற்பதமாம் வரவாரும் புரிசடையார் தமையல்லாற் - சொற்பதங்கள் வாய்திறவாத் தொண்டுநெறி தலைநின்ற - பெற்றியி னின் மெய்யடிமை யுடையராம் பெரும்புலவர்" என்றும், போற்றுதல், பொருந்தா தாலெனின், அம்மூவேந்தர் முதலாயினார் மையணியுங் கண்டத் திறையனார் மலரடிப் பத்தி வழிபாடு தலைநின்று செங்கோன்மையும் வரையாவீகையும் விண்ணும் மண்ணும் போற்ற நண்ணிய பெரிபராதல் பற்றிக் கடைச்சங்கப்புலவர் அவரையும் பாடினார். அப்பாட்டெல்லாம் அறம் பொருளின்பம் வீடென்னு முறுதிப் பொருணான்கன் திறனும் விளக்கித் தமிழுலகிற் குறுதியே பயவா நிற்கும். ஆகலின், அவர் தம்மை நம்பியாரூரர் முதலியோர் அவ்வாறு போற்றியது பொருத்த முடைத்தேயா மென்க.

## சமயாசாரியர்சொரூபநிரூபணம்.

ஆளுடைய பிள்ளையார் முதல்வ னங்ஙன நிராதாரத்தாற் சிவஞானமருளப் பெற்றாரென்பது, "அந்நிலையிற் றிருத்தோணி வீற்றிருந்தா ரருளினுக்கான் - முன்னிலை மைத் திருத்தொண்டு முன்னியவர்க் கருள்புரிவான் - பொன்மலைவல் லியுந்தாமும்

பொருவிடையே லெழுந்தருளிச் - சென்னியிளம் பிறைதிகழச் செழும்பொய்கை மருங்கணைந்தார்" "திருமறைநூல் வேதியர்க்குந் தேவியார் தமக்குந் தாங்கொடுத்த - பெருகுவார நிலைக்கேதான் நம்பெருமைக் கழல்பேணு - மொருநெறியில் வருஞானங் கொடுப்பதனுக் குடனிருந்த - வருமறையா ளுடையவளை யளித்தருள வருள்செய்வார்" "அழுகின்ற பிள்ளையார் தமைநோக்கி யருட்கருணை - யெழுகின்ற திருவுள்ளத் திறையவர்தா மெவ்வுலகுந் - தொழுகின்ற மலைக்கொடியைப் பார்த்தருளித் துணைமுலைகள் - பொழிகின்ற பாலடிசில் பொன்வள்ளத் தூட்டென்ன" "ஆரணமு முலகேழு மீன்றருளி யனைத்தினுக்குங் - காரணமாய் வளம்பெருகு கருணைதிரு வடிவான - சீரணங்கு சிவபெருமா னருளுதலுஞ் சென்றணைந்து - வாரிணங்குந் திருமுலைப்பொன் வள்ளந்தாக் கறந்தருளி" "எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி - யுண்ணடிசி லெனவூட்ட வுமையம்மை யெதிர்நோக்குங் - கண்மலர்நீர் துடைத்தருளிக் கையிற்பொற் கிண்ணமளித் - தண்ணலைஅங் கழுகைதீர்த் தங்கணரா ரருள்புரிந்தார்" "யாவர்க்குந் தந்தைதா யெனுமவரிப் படியளிப்ப - ஆவதனு லாளுடைய பிள்ளையா ராயகில - தேவர்க்கு முனிவர்க்குந் தெரிவரிய பொருளாகுந் - தாவில்தனி திருஞான சம்பந்த ராயினார்" "சிவனடியே யடைவிக்குந் திருப்பெருகு சிவஞானம் - பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞான முவமையிலாக் கலைஞான முணர்வரிய மெய்ஞ்ஞானந் - தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தா ரந்நிலையில்" என வருந் திருத்தொண்டர் புராணத் திருப்பாட்டுக்களா னறிக.

"முன்னிலைமைத் திருத்தொண்டு முன்னியவர்க் கருள்புரிவான்" என்றருளிச் செய்தலின், பிள்ளையாருமையிற் சிவஞானம் பெற்றதற்கேதுவாகும் அருந்தவ முயன்றுவைத்தமை குறிக்கப்படும். படவே, "தவமுதல்வர் சம்பந்த" ரென்றுடம்பொடு புணர்த்தருளிச் செய்ததும் அதற்கு ஞாபகமாயிற்று.

"திருமறைநூல் வேதியர்க்குந் தேவியார்க்குந் தாங்கொடுத்த - பெருகுவார நிலைக்கேதா" என்றதனால், "மலையறந்தி லின்பமுறு மகப்பெறுவான்" விரும்பிப் "பரசமய நிராகரித்து நீறாக்கி" வைதிக சைவம் வளர்த்தற்குரிய "புனைமணிப்பூண் காதலனைப்" பெறுதற்பொருட்டு அவரு முன்மையிற் றவமுழந்தா ரென்பதூஉம், வேண்டியார் வேண்டிற்றே யருளும் பரங்கருணைத்தடங்கடலான சிவபிரான் ஆண்டு அவர்க்கவ்வரநேர்ந்தருளினு ரென்பதூஉம் பெறப்பட்டன. இனி அவர் அந்நிலைவே தலைக்கொடாக இம்மையி லின்னிலை நின்று "பெருந்தெழுவன் பாற் பெரிய நாச்சி [illegible]ன்புகலித் - திருத்தோணி வீற்றிருந்தார் சேவடிக்கீழ் வழிபட்டுக் - கருத்தமுடிந்திடப் பராயினு" ரென்றும், அங்ஙனம் பராய்ச் செல்கின்றுழிக் "காதலியார் மணிவயிற்றி - லுருத்தெரிய வரும்பெரும்பே றுலகுய்ய வுளதாயிற்" றென்றும், "ஆளுடையா ளுடன் றோணி யமர்ந்தபிரா னருள்போற்றி - மூளுமகிழ்ச் சியிற்றங்கண் முதன்மறைநூன் முறைச்சடங்கு - நாளுடைய வீரைந்து நிகழ்வினு நலஞ்சிறப்பக் - கேளிருடன் செயல்புரிந்து பேரின்பங் கிளர்வுற்று" ரென்றும், அங்ஙனங் கிளர்வுறு நாளில், "அருக்கன்முதற் கோளனைத்து மழகியவுச் சங்களிலே - பெருக்கவலி யுடனிற்பப் பெருகிய நல்லோரையெழத் - திருக்கிளரு மாதிரைநாட் டிசைவிளங்கப் பரசமயத் - தருக்கொழியச் சைவமுதல் வைதிகமுந் தழைத்தோங்க" ... ... ... ... "அவம்பெருக்கும் புல்லறிவி னமண்முதலாம் பரசமயப் - பவம்பெருக்கும் புரைநெறிகள் பாழ்படநல் லூழிதொறுந் - தவம்பெருக்குஞ் சண்பையிலே தாவில்சரா சரங்களெலாஞ் - சிவம்

பெருக்கும் பிள்ளையார் திருவவதாரஞ்செய்தா" ரென்றும், உணர்க. ஓ—தெரிநிலை, "திருத்தோணிமுன்னியோ" "பெருகு வாழ்வினைந்தோ" யாதுநோக்கி யெனத் தெரிதற் கண் வருதலின்.

உமையம்மை எண்ணரிய சிவஞானத் தின்னமுதங் குழைத்தருளி எதிர் நோக்குங் கண்மலர் நீர் துடைத்தருளிக் கையிற்பொற் கிண்ண மளித்து அடிசில் உண்ணென ஊட்ட அங்கணனார் அங்கு அண்ணலை யழுகை தீர்த் தருள்புரிந்தா ரெனப் பொருளினைய பிற் கேற்பக் கொண்டு கூட்டி வினை முடிவு செய்க.

"யாவர்க்குந் தந்தைதா யெனுமவ ரிப்படி யளித்தா" ரென்றது—சகல ராகிய சிவபாத விருதயர் பகவதியார் மாதவத்தானே அவர் புதல்வ ராய்த் திருவவதாரஞ் செய்த பிள்ளையாருக்குச் சகலர்க்குரிய படாக்கையானன் றிப் பிரளயாகலர்க்குரிய முன்னிலையால் அங்ஙனஞ் சிவஞான மளித்தருளுதல் சால்பாமோ வென் றாசங்கித்துப், பிள்ளையார் தவமுதன்மை நோக்கி அவ்வாறு அளித்தருளலின், அது சால்பேயாமென்று விடுத்தவாறாயிற்று. அஃறிணை யுயிர்களு மடங்க யாவைக்கு மென்றோதா ராயினார், தத்துவ ஞானமெய்தற்காம் பரிபக் குவம் உயர்திணைக் கண்ணதாத லேக்கி யென்க. இப்படி யளித்தா ரென்பதற்கு - அப்ப டியில் அளித்ததற்குரிய பேற்றினை இப்படியில் அளித்தருளினா ரென்று பொருள் கூறுதலு மொன்று. ஆவதனா லாளுடைய பிள்ளையாராய்த் திருஞான சம்பந்தராயினா ரென்றது - அங்ஙனந் திருமுலைப்பாலுண்டமையின் ஆளுடைய பிள்ளையாராய்த் திருஞான சம்பந்த ராயினா ரென்ப தறிவித்தவாறும். "செயற்கைப் பொருளை யாக்கமொடு கூறல்" "ஆக் கந் தானே காரண முதற்றே" என்பவாதலின், ஆதலினா லாளுடைய பிள்ளையாராய்த் திருஞானசம்பந்த ராயினா ரென் றங்ஙனங் காரணமுதற் கிளந்து ஆக்கந்தலைப்பெய் தோதினாரென்க. பரஞான சத்தி பிள்ளையார் அறிவின்க ணியற்கையா யுள்ளதாயினும், அந்நிலையில் அபிவியஞ்சக முறுதலின், ஆக்கப்பொருளாக உபசரித்தோதப்பட்டது. ஆளுடையபிள்ளையா ரென்பது — ஆளப்படுதலுடைய பிள்ளையாரென்று விரிக்கப் படும். ஆளப்படுதல்—பண்டைப்பேதநிலை விண்டொழியுமாறு பரஞானத்தான் ஒற் றுமை செய்யப்படுதல். இவ்வத்துவித ஞான ஒற்றுமையானே பிள்ளையார் பரமசிவனுக் குரிய முற்றறிவுத் தொழி லோடு சிவானந்தந் தமதெனக் கொண்டு அநுபவிக் குஞ் சுதந்திர மகன்மை ஆண்டுற்றா ரென்பது. "ஆண்டவரசு" முதலியவாகப் போதருஞ் சொற்றொடர்க்கெல்லாம் இதுவே பொருளாகக் கொள்க. பரமசிவனே கந்தசுவாமி யாய் விளங்குதலின், அக்குமாரசுவாமியோடு இப்பிள்ளையார்க்கு வேறுபாடு தெரிப் பார் "ஆளுடைய பிள்ளையார்" என்று அங்ஙனம் பிறிதினியைபு நீக்கும் விசேடண மடு த்தோதியருளினா ரென்பது. கந்தசுவாமி பரமசிவனே யென்பது, "ஈசனே யவ னுடலான் மதலையா யினன்கா - ணாசிலாவவ னறுமுகத் தன்மையா லறிநீ - பேசிலாங்க வன் பரனொடு பேதக னல்லன் - றேசுலாவகன் மணியிடைக் கதிர்வரு திறம்போல்" எனவும், "அருவமா யுருவ மாகி யநாதியாய்ப் பலவா யொன்றாய்ப்-பிரமமாய் நின்ற சோ திப் பிழம்பதோர் மேனி யாகிக் - கருணைகூர் முகங்க ளாறுங் கரங்கள்பன் னிரண்டுங் கொண்டே - யொருதிரு முருகன்வந்தாங் குதித்தன னுலக முய்ய" எனவும், "காலமாய்க் கால மன்றிக் கருமமாய்க் கரும மன்றிக் - கோலமாய்க் கோல மன்றிக் குணங்களாய்க் குணங்க ளன்றி - ஞாலமாய் ஞால மன்றி - யநாதியாய் யாங்கட் கெல்லா - மூலகா ரண மாய் நின்றோன் மூவிரு முகங்கொண் டுற்றான்" எனவும், "மானிடத்தரில் விலங்கினிற்

பட்சனின் மற்று—மூவெனுமித்துழல் யாக்கையிற் பிறந்தனோ ரொப்ப—நீநினைக்கலை பரஞ்
சுடர் நெற்றியங் கலச்சற் - றுனுதி தனன் மறைகளுங் கடந்தவோர் தலைமகன்.''|| "தன்னு
ருவாகு - மொருமகனை" என்றற்றொடக்கத்தான் வருங் கந்தபுராண வசனங்களா னறிக.
சோமஸ்கந்தமூர்த்தியிற் குமாரசுவாமி யொன்றாய் நிலவுதலின், தன்னுருவாகு மொரு
மக னென்றார். சோமஸ்கந்தமூர்த்தி அயன் மா லுருத்திரக் கடவு ளென்னு மூவரை
யுந் தோற்றுவித்து முத்தொழிலினு நிறுத்துந் துரிய முதற் கடவுளான பரமசிவனென்
பது, வேதாகமங்க ளிரண்டிற்கு மொப்ப முடிந்த துணிபாதலின், அம் முதல்வனோடொன்
றான கந்தசுவாமி அப் பரமசிவனின் வேறாகாத பரம்பொரு ளென்பதூஉம், அவ்விரு
முதனூற்கு மொப்ப முடிந்த துணிபாத றுணிபே போதருமென்க.

பெரிய புராணம் இங்ஙனம் பிள்ளையார் கவுணியர் மாதவத்தானே தவமுதல்வராய்
அவதரித்துச் சிவஞான மெய்தி வைதிக சைவம் வளர்த்துத் திருமணத்திற் சிவபரஞ்சோதி
யிற் போதநிலை முடிந்தவழிப் புக்கொன்றிப் பரமசிவசாயுச்சியந் தலைக்கூடினாரென்று,
அர்த்தவாதமுங் குணவாதம் துதிவாதமென்பவற்றிற் கவகாசமில்லா வுரையாற் கூறுதலின்,
இந்நிரவகாச வுரையோடு மாறு கொள்ளாமே திருத்தொண்டர் புராணத்தும், பிறாண்
டும் பிள்ளையாரைச் சிவ குமார ரெனக் கூறிய வசனங்கட்குப் பொருள் கோட
லுரை முறையாமென்க. இங்ஙனமாகலின், "ஒருபிறப்பு மெய்தாமை யுடையார் தம்மை"
"எதிலாத் திருஞானசம்பந்தர்" "பாசமற்றிலராயினும்பார்மிசை - யாசைசங்கரற்காயி
னதன்மையால் - நேசமிக்கதிருவுருவானவர்" என்பனவற்றிற்கு - இனிப்பிறப்பொன்று
மெய்தாமை யுடையார் தம்மை யென்றும், திருப்பெருமணச் சிவபரஞ்சோதியிற் போத
நிலை முடிந்தவழிப் புக்கொன்றி யுடனுறைதற்காந் திருவுடையராகலின் ஏனோர்போல
இறுதலில்லாத ஞானசம்பந்த ரென்றும், பாசமற்றிலராயினும், பாசமயக் குறு
ம்பு கடிந்து சங்கரன்றிருவருணெறியை நிறுத்தி வளர்த்தற்கட் பற்றுடையராய கார
ணத்தானே இப்புண்ணிய பூமியிற் றேசுமிக்க திருவுருவா னவதரித்த பிள்ளையா
ரென்றும், இவ்வாறு அவிரோதப் பொருள் கொள்க. ஆசைசங்கரற்காயினதன்மையா
னென பின்வருதலின், பாசமற்றில ரென் றருளிச் செய்தார். ஆண்டு மற்று, "மற்
றுப்பற்றெனக்கின்றி" "மற்று நான் பற்றிலேன் கண்டாய்" என்புழிப்போலப் பிறிதென்
னும் பொருட்டாய் நின்றது. சங்கரற்காசையென்புழி, நான்காவது ஏழாவதன் பொருள்
பட வந்தது. இது சதிசத்தமிபாலு முய்த்துணர்க. "இனிப் பிறவாமை செய்தான்"
"நறகுமாசொலப்படாய்த்தருத்தியாய்த்திருந்தடி - மறக்குமாறிலாதவென்னை மையல்செய்
திம்மண்ணின்மேற் - பிறக்குமாறுகாட்டினாய்ப்பிணிப்படுமுடம்புவிட் - டிறக்குமாறுகாட்
டினாய்க்கிழுக்குகின்றதென்னையே" என வரும் ஆளுடையபிள்ளையார் திருவாக்குக்களா
னுமிவற்றிற்கிவையே செம்பொருளாதல் தெளிக. "பதியானஞான முனிவன்" என்றது-
தலைவனான ஞானசம்பந்த முனிவ னென்றவாறே யாதலின், இஃதுதனோடு முரணாமை
யறிக. தலைமை - சிவஞானப்பாலடிசில் உமைபொன் வள்ளத்தூட்ட வுண்டருளிய தவ
மேம்பாடு. மற்று வாகீசர் வன்றொண்டர் வாதவூரடிகளு மிந்நீரரான சமயாசாரிய
ரென்பது, அவர் சரித்திரங் கூறும் புராணங்களானும், "தொண்டனேன்பிறந்துவாளா
தொல்வினைக்குழியில்வீழாது - பிண்டமேசுமந்துநைந்துபோவதோர்வழியுங்காணேன்"
"பெற்றலும்பிறந்தேனினிப்பிறவாததன்மைவந்தெய்தினேன்" "மரணம்பிறப்பென்றிவை
யிரண்டின்மயக்கறுத்த - கருணைக்கடல்" என்றற்றொடக்கத்தான் வரு மவர் திருவாக்குக்
களானு மறிக.

''புரமெரித்தார் திருமகனார்'' ''செய்யமேனியர் திருமகனார்'' ''இறைவர் திரு மைந்தர்'' ''சேவிற்றிகழ்ந்தவர் மைந்தரான திருஞானசம்பந்தர்'' ''ஈசாமிழலை யிறை யவர்பா லிமையப்பாவை திருமுலைப்பா - லேசறுமுய்ய வுண்டவந்தாந் திருமாமகனா ராதலி னாற் - காசுவாசி யுடன்பெற்றார் கைத்தொண்டாகு மடிமையினால் - வாசியில்லாக் காசு படி பெற்றுவந்தார் வாகீசர்'' என்றற்றொடக்கத்தான் ஆண்டாண்டுப் பெரிய புராணத் தருண்மொழித்தேவர் பிள்ளையாரைச் சிவகுமாரரெனக் கூறிய வெல்லாந் திருத்தோணி வீற்றிருந்த சிவபிரான் றிருவருளாற் பெரிய நாயகியார் திருமுலைப்பால் ஞானவடிசில் லூட்டியருள வுண்டு ஆளுடையபிள்ளையா ராயினமை பற்றியே யாகலின், அவை மேல தனோடு மாறுபடா வென்பது தெற்றென வுணர்ந்துகொள்க. திருச்சேய்ஞலூ ரெச்ச தத்த குமாரர் தாதை சிவாபராதங்கண்டு அவனைத் தாளறவீசியகாரணத்தானே சிவ பிரான் அவரை அந்நிலையில் ஆண்டு பிள்ளையாராக்கியது போலக் கவுணியர் தலைவராய் உதித்தருளிய பிள்ளையார் முன்னிலைமைத் திருத்தொண்டு முதன்மை பற்றி அவருக்குச் சிவஞானப்பாலடிசில் லூட்டுவித்துத் திருஞான சம்பந்தமியற்றி, ஆளுடைய பிள்ளையா ராக்கியருளினாரென்க. அருண்மொழித்தேவர்க்கு இதுவேகருத்தாமாறு ''மாமறையாளர் வண்புகலிப்பிள்ளையார் - தாமெழுந்தருளிடத்தங்கள்பிள்ளையார் - காமரும்பதியினிலை வக்கண்டனா - ராமகிழ்வுடன்பணிந்தாடியார்த்தனர்'' என்றிங்ஙனஞ் சேய்ஞலூர்ப் பிள் ளையாரோடு புகலிப்பிள்ளையாரை ஒப்பித்துரைத்தவாறுபற்றி யுணர்ந்துகொள்க. ஆசிரி யர் சிவஞானயோகிகளுக்கும் இதுவே கருத்தாமாறு ''ஆளுடைய பிள்ளையார் முதலிய வுண்மைநாயன்மார்க்குத் தவமின்றியு ஞானநிகழ்ந்தவாறென்னையென்னுஞ் சடாவை விடுத் தற்கு 'மேற்செய்தழி' என ஈண்டும் வலியுறுத்தார்'' என்று சிவஞானமாபாடியத்துள் அவர் ஓதியவாற்றானுணர்க. இவற்றானே ஆளுடைய பிள்ளையார், உக்கிரபாண்டியனார் உருத்திரசன்மனார் போல்வாரோர் அபர சுப்பிரமணிய ரென்பது போந்தவா றுணர்க. ஆளுடையபிள்ளையார் இவ்வாறு அபர சுப்பிரமணியரா மொற்றுமை பற்றியே ஆன்றோரும் புராண நூலுடையாரு மாண்டாண்டு அப்பிள்ளையாரைச் சுப் பிரமணியக் கடவுட் குரிய குறி குணங்களால் விசேடித்து அவ்வாறோதுவா ராயினார். ஆகலின், அவை குணவாதந் துதிவாதங்களே யாமென்க. அருணகிரியார் முதலியோர் திருப்புகழ் முதலியவற்றில ஆளுடைய பிள்ளையார் அற்புதச் செயல்களை அறுமுகக்கடவுள் செயலாக ஓதியதூஉம், பிள்ளையார் உமை முலைப்பாலுண்டு அறுமுகக்க டவு டிருவருளமிச முறுதல் பற்றி யாதலின், அஃது வைரவக்கடவுள் வீரபத்திரக்கட வுண் முதலியோர் இயற்றியருளிய அயன்றலை கோட றக்கன்வேள்வி தகர்த்தன் முதலிய செயல்களை அவர் சிவபிரான் அருளமிசமுறுதல் பற்றி அம்முதல்வன் செயலாக ஓதுவது போல்வதோர் உபசார வழக்கென்று துணிக. விசாலாக்கன்றானு சங்காரவுருத்திரரெ ன்னுமமிசவுருத்திரர் குணிருத்திரக்கடவுட்குரிய குறி குணங்களான் அங்ஙனம் விசேடி க்கப்படினும் அக்கடவுளாகாதவாறு போலவும், குணிருத்திரக்கடவு டுரியமுதற்கடவு ளான பரமசிவனுக்குரிய குறி குணங்களான் அங்ஙனம் விசேடிக்கப்படினும் அம்முதல் வனாகாதவாறு போலவும், ஆளுடையபிள்ளையார் உருத்திரசன்மனார் உக்கிரபாண்டிய னாரென்னு மமிச சுப்பிரமணியர் பரசுப்பிரமணியக்கடவுட் குரிய குறி குணங்களால் அங்ஙனம் விசேடிக்கப்படினும் அச் சிவசுப்பிரமணியக்கடவு ளாகா ரென்பது தெற் றென வுணர்ந்துகொள்க.

இன்னும், சிவபாதவிருதயர் மாதவத்தால் அவர் கடவுட் கற்பிற்சிறந்த தேவியாரான பகவதியார் மணிவயிற்றி லுருத் தெரியவந்துலகுய்யத் திருவவதார முறுதல், திருமுலைப்பாலருளமுதுண்டு திருஞான சம்பந்தராதல், அத்தவஞானப்பேற்றினாற்றிருத்தொண்டர் தொகையுட் சேர்தல், போதநிலை முடிந்தவழி ஏனைச்சமயாசாரியர் போலச் சிவபரிபூரணம் புகலொன்றி யுடனுறைதல் போல்வன, அபர சுப்பிரமணியர்க்கன்றிப் பரமசிவனுருவான பரசுப்பிரமணியக் கடவுட் கேலா வென்க. இன்னும், திருக்காளத்தியிற் கண்ணப்பநாயனார் திருவுருக்கண்டு வணங்குதலும், காரைக்காலம்மையார் திருத்தலையா னடந்த திருப்பதியாமென்று திருவாலங்காட்டினை மிதிப்ப வஞ்சி ஒதுங்குதலும், யாவரோ வணங்க அவரெதிர் வணங்குதலு மென்றின்னோ ரன்ன அடிமைப்பாதிமைத் தொண்டிற்பட்-ஆளுடையபிள்ளையார்பேணியதூஉம், அவர் அபர சுப்பிரமணிய ரென்பதைத் தெள்ளிதிற் புலப்படுத்து மென்க. இன்னும், ஆளுடையபிள்ளையார் "மாயச் சூரன் றறுத்த மைந்தன் றாதை" "சேயடைந்த சேய்ஞலூரிற் செல்வன்" "பெற்று முருகனைத் தந்தனையே" என்றித் தொடக்கத்தான் அறுமுகக்கடவுளை வேறுவைத்தோதியருளியதூஉம், அவரமிச சுப்பிரமணியராதலை வலியுறுத்து மென்க. இன்னும், பாலை நெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதுங் - காலனையன் றேவிக் காரங்கொண்ட - பாலன் - மரணந் தவிர்த்ததுவு மற்றவர்க்கு நங்கள் - சரணம்போ லெல்லாமே தான்" எனச் சைவசித்தாந்த நூலுடையார் கூறிய திருவாக்கும் பிள்ளையாரை ஏனைச் சமயாசாரியரோ டொத்த சிவஞானச் செயலுடைய வாசாரிய ரென்பதை நன்று நிறுத்து மென்க. அங்ஙனமாயினும், உமைப்பெரும்பிராட்டியார் திருமுலைப்பா லுண்டு ஆளுடைய பிள்ளையா ராயினமையின், சமயாசாரியருந் தேவரு முனிவரு மேன்மக்கள் யாவரும் வணங்கி யேத்தும் ஆசாரிய முதன்மை யுடையராயினாரென வவர் பிரபாவங் கடைப்பிடித் துணர்ந்து கொள்க. இனித் திருநாவுக்கரசர் வன்றொண்டர் வாதவூரடிகளென்னு மற்றைச் சமயாசாரியரும் ஆளுடைய பிள்ளையார் போல வுடம்மையிற் சிவஞானநாதராய் வைகிச் சங்கரனருணெறி வளர்த்தற்கட் பற்றுடையராய காரணத்தானே இப்புண்ணியபூமியிற் றிருவவதாரஞ் செய்தருளினாரென்பது, அவர் பிரபாவங் கூறும் புராணங்களானே நன்கறிய நிற்றலின், அவருந் தேவரு முனிவரு மேன்மக்கள் யாவரும் வணங்கி வழிபடற்குரிய சமயாசாரியசுவாமிகளென்பது தெரிந் துணர்ந்து கொள்க. இனிச் சமயாசாரியர் நால்வருள் வைத்து ஆளுடைய பிள்ளையார் அமிசசுப்பிரமணியராதலின், விசேட சகற்குருசுவாமிகளு மாயினாரென்பது "ஸ்வாமிதுல்யஸ்ஸுப்ரஹ்மண்யஜாதோ ஜகத்குருஃ" என்றற் றொடக்கத்தான் வரும் ஆலவாய் மான்மிய வசனங்களானு மறிக. இன்னும், ஆளுடைய பிள்ளையார் நம்பியாண்டார்நம்பி முதலிய சைவச்சிறந்தருஞ் சங்கராசாரியர் முதலிய வைதிகச்சிறந்தருந் தத்தம் பிரபந்தங்களி லெடுத்தேத்தப்படு மகிமை யுடைய ஆசாரியசுவாமிகளாகலின், மற்றவர் விசேடவைதிகசைவ சகற்குருமுதல்வரென்பது நிர்வாதவழக்காமென்க.

இனிச் சிவஞானச் செய லுடைய நாயன்மார் தாமுற்ற சாதி முதல நிலைகளான் வேறுபாடுறினும், எய்திய சிவஞானத்தானே யொற்றுமை யுடையரே யாவர். அது "ஸமாநகவர்ணாநாம் ஸ்ரீவத்ஸ்யவைஸ்யவர்ணாநா-ஸ்ரீவத்ஸரூபஜாதீநாம் விமுக்திநிமித்தம் ஸமாநம்" என்னுஞ் சருவ ஞானோத்தராகம வசனத்தா னறிக.

மற்று ஆளுடையபிள்ளையார் முதலிய சமயாசாரியர் நால்வரு நிலவுலகத்திற் றிருவவதார முறினும், பரமசிவன் அவர் முற்றவ முறைன்னோக்கி ஆசான்மூர்த்தியை

யதிட்டிக்காது, முறையே திருத்தோணி யம்மையப்பராயும், திருவதிகை வீரட்டான மூர்த்தியாயும், திருவருட்டுறை யந்தணனாயும், திருப்பெருந்துறையிற் குருந்தின்கீழ்ப் பரமாசாரியனாயும், தானே முன்னின்று, ஞானதீக்கையினை மற்றவர்க்குச் செய்துய்யக்கொண்டருளினா ரென்பது. இது நிராதார தீக்கையெனப்படும். நிராதார தீக்கையாவது - விஞ்ஞானகலர் பிரளயாகலர்க்குத் தீவிரந் தீவிரதர மென்னு மிருவகைச் சத்திநிபாதத்தாற் பரமசிவன் ஆசான் மூர்த்தியை அதிட்டித்து நின்று செய்வ தன்றித் தானே முன்னின்று செய்வது. இந் நிராதார தீக்கை தீவிர சத்திநிபாதத்தான் அனந்த தேவர் முதலியோர் பதங்களை யுதவுவதூஉந் தீவிரதர சத்திநிபாதத்தான் வீடுபேறுதவுவதூஉ மென விருவகைப்படும். அவற்றுட் சமயாசாரியர் நால்வருக்குஞ் செய்தருளியது பின்னையதென் றுணர்க. தீக்கையென்னுஞ் சொற்குப் பொருள்—மலத்தைக் கெடுத்து ஞானத்தைக்கொடுப்ப தென்பதாம்.

தவமுதல்வர் சம்பந்தர் தாம், சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞான முவமையிலாக் கலைஞானம், பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங்கியஞான முணர்வரிய மெய்ஞ்ஞானம், அந்நிலையில் உணர்ந்தா ரென நிரனிறையாற் கொண்டு கூட்டுக. தவமுதல்வர் சம்பந்தர் உவமையிலாக்கலைஞானமாகிய அபரஞானமும் உணர்வரிய மெய்ஞ்ஞானமாகிய பரஞானமுமென்னும் இரண்டனையும், அந்நிலையில் உணர்ந்தா ரென வினைமுடிவு செய்க. கேட்டல் சிந்தித்த லென்னு மிரண்டு நூல் பற்றியும், தெளிதனிட்டை யென்னு மிரண்டு நூல் பற்றாது நிகழுமொப்புமையான், அவை தம்மை அங்ஙன மிரண் டிரண் டோரினமாக்கி ஓதியருளினார்.

இனிக் கேட்டல் வடிவான கலையும், சிந்தனைவடிவான கலையும், அபரஞான மெனவொன்றாயினும், சிந்தனைக்கலை தன் செவிக்கே புலப்படுஞ் சூக்குமவைகரியாயுண் ணிலவும் விருத்திக்குறைவுங் கேட்டற்கலை தன் செவிக்கும் பிறர் செவிக்கும் புலப்படுந் தூலவைகரியாய்ப் புறத்து நிலவும் விருத்தி மேம்பாடு முடையன வாதலின், அக் குறைவாற்கு வடிவான சிந்தனைக்கலையை விசேடணமாக்கியும், அந்நிறைவாற்கு வடிவான கேட்டற்கலையை விசேடியமாக்கியும், அவ்வாறோதியருளினார். தெளிதலறிவு நிட்டையறிவும் பரஞானமென வொன்றாயினும், தெளிதலிற் றிருவருண்ஞானசத்தி குறைவாயு நிட்டையினிறைவாயும் விளங்குதலின், அக்குறைவு நிறைவுபற்றித் தெளிதலறிவை விசேடணமாக்கியும், நிட்டையறிவை விசேடியமாக்கியும், அவ்வாறோதியருளினார். ஆசிரியர் சகலாகமபண்டிதர் “கேட்டலுடன் சிந்தித்த றெளித னிட்டை கிளத்தலென வீரிரண்டாங் கிளக்கின் ஞானம்” எனக் கேட்டல் சிந்தித்தலிரண்டனை யொன்றாகவும் ஏனைத்தெளிதனிட்டைகளை மற்றொன்றாகவுங் கொண்டோதியருளுதலின், அந்நான்கும் இங்ஙனமிரண்டிரண்டோரினமாமெனபது அவர் தமக்கு முடம்பாடாதல்பெற்றாம். “கேட்டலுடன் சிந்தித்த றெளித னிட்டை கிளத்தலென வீரிரண்டாம்” என்புழி ‘உடன்’ என்னுஞ் சகார்த்தத் திருதியை தெளிதனிட்டையெனபதனும் பிரிந்து கூட்டியுரைக்கற்பாலதென்பது, ‘ஈரிரண்டா’ மென்றங்ஙனம் வகுத்தோதியவாறுபற்றி யுணரப்படும். இத்திருப்பாட்டிற்கு இங்ஙனம் நோக்குறுப்புப் பெரிது புணர்ந்து நிரனிறைப் பொருள் கோளுக்கிடனுக் காசிரியரோதிய கருத்துணரமாட்டாதார் இடர்ப்பட்டுத் தமக்கு வேண்டியவாறு உரையளவை மாறாதப் போலியுரை பல வாறுரைத்தார். ஈண்டு யாமுரைத்ததே ஆசிரியர் கருத்தாமாறும், அவருரைத்தனவெல்லாம் போலியுரைகளாமாறும், ஞானசூடாமணி யென்னுங்கிரந்தத்தில் விரித்துக் கூறினேம். ஆண்டுக் காண்க.

## திருமுறைகள்சத்துர்வேதமோத்தந்தமிழ்வேதமாதறேரித்தல்.

இறைவன் திருவாய்மொழியான விருக்கு முதலிய நான்கு முதற்றொட்டு வேதமென வழங்கப்படும். ஆளுடையபிள்ளையார் முதலிய வுண்மை நாயன்மாரருளிச் செய்த திராவிட வோத்துக்க டிருமுறைகளென்று வழங்கப்படும். மற்றவைதம்மை வேதமென்று வழங்குதன் மரபாமோ வெனின்,— "எழுது மாமறை யாம்பதி கத்திசை - முழுதும் பாடி முதல்வரைப் போற்றி" "மிக்கசொற் றமிழினால் வேதமும் பாடினார்" "விருப்புடன் பாட லிசைத்தார் வேதந் தமிழான் விரித்தார்" "திருத் தோணிமிசை மேவினார்க - டங்க டிருமுன்பு தாழ்ந்தெழுந்து தமிழ்வேதம் பாடினார் தாளம்பெற்றார்" என்றித் தொடக்கத்தாற் பன்னிரண்டாந் திருமுறையுள் அருண்மொழித்தேவ ரோதி யருளுதலின், அவைதம்மைத் தமிழ்வேதமென்றவ்வாறு வழங்குதன் மரபேயாமென்று விடுக்க.

இனிப் பரமான்மாவாகிய பரமசிவத்தினுடைய பராசத்தி குடிலையை நோக்கிய வழிக் குடிலையினின்று நாதவடிவாயும், அதன்பின் விந்து வடிவாயும், அதன்பின் னக்கரவடிவாயும், வேதாகமங்க டோன்றியவாறுபோலப், பாசமனைத்தினு நீங்கி விளங்கிய ஆளுடையபிள்ளையார் முதலிய சமயாசாரியர் தூயவறிவின் மேம்பட்டு விளங்கிய சிவசத்தி அத்துவித வியைபான் மற்றதனைப் பிரேரிக்கலுற்றுழி, ஆண்டு நின்று நாதவடிவாயும், விந்துவடிவாயும் அதன்பின் னக்கர வடிவாயுந் தோன்றின கடவுண்மொழி யாகலின், தேவாரந் திருவாசகந் திருக்கோவை யென்னும் அருளோத்துக்களைத் 'தமிழ்வேத' மென்றுந் 'திருமுறைக' ளென்றுந் 'திருவருட்பாக்க' ளென்றும் அவ்வாறு, ஆன்றோர் வேறுகொண்டு போற்றி வழங்குவாராயிற்றென் றுணர்ந்துகொள்க. அவ்வாறு, "எனதுரை தனதுரையாக நீறணிந் தேறுகந்தேறிய நிமலன்" என்னு மாளுடையபிள்ளையார் திருவாக்கானும், "பன்னியநூற் றமிழ்மாலை பாடுவித்தென் - "சிந்தைமயக் கறுத்ததிரு வருளினானை" என்னும் வாகீசர் திருவாக்கானும், "எல்லையிலா மறைமுதன்மெய் யுடனெடுத்த வெழுதமறை -மல்லலெனுந் தமிழாலிம் மாநிலத்தோர்க் குரைசிறப்ப" எனவுந் "திரைக்கெடில வீரட்டானத்திருந்த செங்கனக - வரைச்சிலையார் பெருங்கோயி றொழுதுவலங் கொண்டிறைஞ்சித் -தரைத்தலத்தின் மிசைவீழ்ந்து தம்பிரான் றிருவருளா - லுரைத்தமிழ்மாலைகள்சாத்து முணர்வுபெற வுணர்ந்துரைப்பார்" எனவுந் "தம்பெருமான் கொடுத்தமொழி முதலாகத் தமிழ்மாலைச் - செம்பொருளாற் றிருத்தொண்டத் தொகையான திருப்பதிக - மும்பர்பிரா னருளுணரு முணர்வுபெற வுலகேத்த-வெம்பெருமான் வன்றொண்டர் பாடியவ ரெதிர்பணிந்தார்" எனவும்வரும் அருண்மொழித் தேவர் திருவாக்குகளானும், "சிவனவனென்சிந்தையுணின்றவதனா - லவனருளாலேயவன்றாள்வணங்கிச் - சிந்தைமகிழச்சிவபுராணந்தன்னை - முந்தைவினைமுழுதுமோயவுரைப்பனியான்" என்னும் வாதவூரடிக டிருவாக்கானும், "வண்டுபோற்புண்டரிகமலரின்விளைசிவானந்தமதுவைவாரி - யுண்டுவாசகம்பாடி" என்னு மாலவாய்ப்புராணவசனத்தானும், "ஐயாறதன்மிசையெட்டுத்தலையிட்ட - மையில்வான்கலைமெய்யுடன் பொருந்தித் - தில்லைமூதூர்ப்பொதுவினிற்றோன்றி -யெல்லையிலானந்தநடம்புரிகின்ற - பரமகாரணன்றிருவருளதனாற் - றிருவாதவூர்மகிழ்செழுமறைமுனிவர் - ஐம்பொறியைகந் தறிவாயறியாச் -செம்புலச்செல்வராயினராதலி -னறிவனூற்பொருளுமுலகநூல்வழக்குமென - விருபொருளுநுதலியெடுத்துக்கொண்டனர்" எனவும், "மாணிக்கவாசகரறிவாற் சிவனே யென்பது திண்ணம். அன்றியும், அழகிய திருச்சிற்றம்பலமுடையார் அவர்

வாக்கிற்கலந்து (திருவாசகந் திருக்கோவைகளை) இரந்து அருமைத் திருக்கையா லெழு தினார்" எனவும் வருமான்றோருரைகளானும், தெளிக. ஆண்டு 'மறைமுதன்மை' யென்றது - பிரணவத்தினை. முதன்மை யுடையதனை முதன்மையென் றுபசரித்தார். புண்டரிகமல ரென்றது - தத்துவகமலத்தினை. தத்துவபங்கயத்தின் மேற்பகுதி சுத்த மாயை யாகலின், அதன் கண்ணதான வருட்சத்தி சிவானந்த மதுவென அவ்வா றுருவகஞ் செய்யப்பட்ட தென்பது. இஃது பலக்கணமாதலின், ஏனைத் திருமுறை களும் இவ்வா றருளோத்தாதல் கொள்க. இஃதொன்றெனமுடித்த லென்னு முத்தி.

இனிச், சமயாசாரியர் நால்வர் திருவோத்துக்கள் வேத வியாசிசைப்பொரு ளும் புராண விதிகாசமுதலிய வைதிகநூற் பொருளும் பெருகியுஞ் சிவாகமப்பொரு ளருகியும் விளங்க வருளிச்செய்யப்பட்ட திருமுறைகளாதலின், அப்பெருமைபற்றித் தமிழ்வேத மென் றவ்வாறு வழங்கப்படுவன வாயினவென் றறிக. உத்தரவேதமான திருக்குறளுந் திருமுறைகள் போல்வதோ ரருளோத்தாம். அதன் வரலாறு முன்னர்க் கூறுதும்.

## வேதாகமப்பிராமாணியம்.

வைதிகரி லொருசாரார் "வேதம் பிரமாணநூல்" என்றும், "சிவாகமம் பிரமாணநூலன்" றென்றுங் கூறுவர். சைவரிலொருசாரார் "சிவாகமும் பிரமாணநூ" லென்றும், "வேதமதுபோல்வதோர் பிரமாணநூலன்" றென்றும், கூறுவர். நீலகண்ட வாசிரியர் அப்பயதீக்ஷிதர் முதலிய சிவாத்துவித சைவாசிரியர்கள், நீலகண்டபாடியம், சிவாதித்தமணிதீபிகை, சிவதத்துவவிவேக முதலியவற்றில், அவ் வைதிகரை மறுத்துச் சிவாகமப்பிராமாணியம் வலியுறுத் துரைத்தார். அரதத்தசிவாசாரியர் உமாபதிசிவா சாரியர் முதலிய வைதிகசித்தாந்த சைவாசாரியர் சதுர்வேததாற்பரியசங்கிரகம், பவு ட்கரவிருத்தி முதலியவற்றில், வேதாகமப்பிராமாணியம் வலியுறுத் துரைத்தார். அவ்வாறெல்லாம் ஆசிரியர் சிவஞானயோகிகள் சிவஞானமாபாடியத் துப்போற்காதத்து ளெடுத்துக்காட்டித் தந் துணிபு நிலையிட் டுரைத்தார். அம் மாபாடியவுரையை யவ் வாறே ஈண்டெடுத்துக் காட்டு முகத்தால், வேதாகமங்க ளொற்றுமையுடைய முத னூல்களாதல் விளக்கித், திருமுறைகள் அவ்விரண்டின் சாரமான வருளோத்துக்களாத னிறுத்துதும்.

"வேதங்க ளொருவராற் செய்யப்படாது நிலைபேறுடைமையானும், ஆன்றோராற் றழுவப்படுதலானும், குற்றமின்றிப் பிரமாணமாமென்பது துணியப்படும். ஆகமங்களவ் வாறு நித்தமன்றி யொருவராற் செய்யப்பட்டமையானும், பிரமப்பொருள் வேதமொன் றானே யுணரப்படுமென்ப தெல்லார்க்கு மொப்பமுடிந்தமையானும், அங்ஙனமாயினு மிருதி நூன்முதலியனபோல வேதமுதனூலாகக்கொண் டாகமங்கள் செய்யப்பட்டன வெனின், அது நம்மனோர்க்குக் கொள்கையன்மையானும், அங்ஙனங் கொள்ளின், வேதப் பொருளுணர்ந்து நூல் செய்த மனுமுதலியோர்போல வாகமஞ்செய்த விறைவனுக்கு முற்றுணர்வின்மை பெறப்படுதலானும், அவ்வாறன்றி முற்றுணர்வியல்பாகவுடைய விறைவனாற் செய்யப்பட்டமையின் ஆகமங்கள் பிரமாணமெனக்கூறின், முற்றுணர்வு டைய விறைவனுண்மை துணிந்தபின்னர் அவனாற் செய்யப்பட்டமையி னாகமம் பிரமா ணமெனத்துணியப்படும், ஆகமம் பிரமாணமெனத் துணிந்தபின்னர் அதனாலிறைவனு ண்மை துணியப்படுமென, ஒன்றனையொன்றுபற்றுத லென்னுங் குற்றமாமாகலானும்,

ஆகமம் பிரமாணமென்பது தெளியப்படாதாம். அல்லதூஉம், வாசிட்டலயிங்கத்திற் "பாஞ்சராத்திரம் புகழ்ந்தெடுத் தொருசிலர் பகர்வார்" என்பது முதலாகத் தந்திரவழி யொழுகுவோரை நிந்தித்துக்கூறி "அவர்மாமூட" ரெனவும், பாற்மபுராணத்தில் வசிட்டனுக்குத் திலீபனுக்குங் கூற்று நிகழ்வுழித் "திராவிடதேசந்தன்னிற் சித்திரசேனனென்பா" னென்றெடுத்துக்கொண்டு, "சித்திரசேனனென்னு மரசன் பாசண்டர் கூற்றே பற்றி வைதிக வொழுக்கத்தைக் கைவிட்டுப் பாசுபதவழியொழுகி நரகத்தில் வீழ்ந்தா" னெனவும், வாசிட்டலயிங்கத்திற் "சாண்டில்லிய னென்பானொருவன் றறுகண்ணனாய்ப் பிரம்மனை நயந்து வாசுதேவனைத் தீங்குநெறியானே வழிபட்டு நிரையத்தில் வீழ்ந்தா" னெனவுஞ், சூதசங்கிதையின் "மொழிபாஞ்ச ராத்திரங் காபாலங் காளாமுகஞ் சாத்தம் பவுத்த மாருகதந் தன்னிற் - கழிபாசு பதநூல் சாம்பவத்திற் றீக்கை காதலிப்பீர் வேதியரிற் கடையர் காணீர்" என்றற்றொடக்கத்தாற் "றந்திரவழியொழுகுதல் பொய்த்தொழிலுணர்ந்து வெகுண்ட கவுதமன் சாபப்பய" னெனவுங், கூர்மபுராணத்தில் "அனை வருமரன்றனையரியை யண்மி" யென்றெடுத்துக்கொண்டு "அறுமுனிவரிட்ட சாபவயத்தானே வேட்பித்தன் முதலியவற்றி னதிகாரமின்மையான் விருத்தியின்றி வருந்துவோர்க்கு விருத்தியின்பொருட்டுத் தந்திரஞ் செய்யப்பட்ட" தெனவும், அதனுண் "மோக நூலிருவோமுஞ் செய்வோம் விடைக்கொடியா" யென்பதனு லாகமங்கண் மோகிப்பிக்கு நூலெனவுங் கூறுதலால், ஆகமம் பிரமாணமல்லவென்பதே தெற்றென விளங்குமாகலின், அவைவீடுபேறு முதலிய மறுமைப்பயன் பயப்பிக்குமாறென்னையெனின்,—கூறுதும். வேத நித்தமென்பதற்குப பிரமாண மின்மையானும், தோற்றக்கேடுகள்காணப்படுதலா னனித்தமென்பதே துணியப்படுதலானும், "அந்தக்கரமேயிது" வென்னுமறித்துணர்வு அந்தச்சுடரேயிதுவென்பதுபோலச் சாதியொருமைபற்றி நிகழ்வதேயாமாகலானும், அவ்வாறன்றி யெழுத்துக்கணித்தமெனக் கொள்ளினும் அவையொன்றோடொன்று தொடர்ப்பாடுற்றுவருஞ்சொற்க ளனித்தமேயாகலானும், உலகத்திற்குத்தோற்ற வொடுக்கங்க ளுண்மையிற் பிரவாக நித்தமென்பதும் பொருந்தாமையானும், எல்லாவுயிர்கண்மாட்டும் பேரருளுடைய பரம[illegible]ஞற்செய்யப்பட்டமை பற்றியே வேதங்கட்குப் பிரமாண வுண்மை சொள்ளப்படும். அம்முறையானே சிவாகமங்களும் பிரமாணமாதல் றுணியப்படும். அது "வேதமுதலுலகாயதநூலிறுதியாகிய வெல்லா நெறியும் பரமசிவனுற் செய்யப்பட்டமையானும், இறுதிக்காலத்துப் பரமசிவனிடத்தொடுங்கிய வேதம் படைப்புக்காலத்து முன்போலவே தோன்றுதலானும், 'நித்த' மென்றுபசரித்துக் கூறப்படும். ஆகலின், சிவாகமங்களை நித்தமென்பது மிக்கருத்தே பற்றி யென்க. அங்ஙன மல்லாக்கால், "வேதம் பரமசிவனுற்செய்யப்பட்ட" தென்னுஞ் சுருதிகளோடும், "அட்டாதச வித்தைக்கு முதற்கருத்தாவாகிய சூலபாணி" யென்றற்றொடக்கத்துப் புராணவசனங்களோடும், ஈண்டுக்கூறும் அனுமானவளவையோடும், முரணுமா றறிக.

ஒருவனின்னேன் வந்தேனென்புழி அவனு மவன் வாய்மொழியும்போல, முதல்வனு முதல்வனுற் செய்யப்படும் வேதாகமங்களுந் தம்முட் காரகவேதுவு ஞாபகவேதுவுமாகிய வேறுபாடுடைமையின், இன்னோரன்னவை யொன்றனை யொன்று பற்றுதலென்னுங் குற்றமாகா வென்க. இனி யான்றோராற்றழுவப்பட்டமைபற்றி வேதஞ் சிவாகமமிரண்டும் பிரமாணமெனத்துணிந்தபின்னர் அவற்றானே யவை பரமசிவனுற் செய்யப்பட்டனவென்பது துணியப்படுமாகலானு மொன்றனையொன்றுபற்றுத லாகாமையு முணர்க. ஆன்றோராற்றழுவப்படுத லாகமப்பகுதியினின்றோவெனின்,—அற்றன்று ; "நூல

க்கம் வேண்டியோன் சோதிட்டோமத்தான் வேட்க" வென்றற் றொடக்கத்துச் சுரு திகட்கு அவை வேட்குமாறு வகுத்துக் கூறுஞ் சுருதிகளு மத்தன்மையவாகிய கற்ப சூத்திரங்களு மின்றியமையாது வேண்டப்படுமாறுபோல வேதத்துள் விதிக்கப்படுஞ் சிவபூசை முதலிய விதிகட்கும் அவற்றைவகுத்துக் கூறுங் காமிக முதலிய சிவாகமங்க ளின்றியமையாது வேண்டப்பட்டு நிற்றலின், அவை யான்றோராற்றழுவப்படுத லொரு தலையாகலானென்க. இது சதுர்வேததாற்பரியசங்கிரகத்தின் அரதத்தாசாரியர் கூறிய வாற்றானறிக. அங்ஙனமாயினுந் தீக்ஷைப்பே றன்றோராற் றழுவப்படாமையின், அப்பகுதியிற் பிரமாணமாமாறென்னையெனின்,—அற்றன்று; சுவேதன் உபமன்னியன் அகத்தியன்முதலியோர்க்குத் தீக்ஷைப்பேறு காண்டலாலென்க. உபமன்னியன் அகத் தியன் முதலியோர்பாற் கண்ணன் இராமன் முதலியோர்க்குத் தீக்ஷைப்பேறு அரி வஞ்சம் பாரதம் பாற்மபுராண முதலியவற்றின் விரித்துக்கூறியவாறுங் காண்க. அஃ தெல்லாரும் பெறுமை, எல்லாருக்கு மலபரிபாக மின்மையாற், பரமகஞ்ச சந்நி யாசம்போல, அதற்குரியவதிகாரிகள் சிலரேயாகலானென்பது. அற்றேல், வாமநூல் முதலாயினவும் பரமசிவனாற் செய்யப்பட்டமையின், காமிகமுதலியவற்றொடொப்பப் பிரமாணமாதல் வேண்டப்படும்பிறவெனின்,—படாது; அவற்றுட் கூறுஞ் சுரைக் குடந்தாபித்தன் முதலியவாசாரங்கள் வேதத்து ளொடுத்தோதி விலக்கப்பட்டமையிற், சவுத்திராமணியாகத்திற் சுரையேற்றல் வேதத்துள் விதிக்கப்பட்டதாயினு மேனையோர் க்கேயாயவாறுபோல, அவையும் ஏனையோர்க்கே யுரியவென்பதூஉம் பெறுதுமாகலின், அவையு மவற்றிற்குரிய வதிகாரிகள் வேறுபாட்டாற் பிரமாணமாமெனக் கொள்ளப் படு மெங்க. அங்ஙனமாயின், அது வேத விதியோடு முரணுமாலோவெனின்,—அவ ற்றுட் கூறுங் கிரியைகட்கு வேதநெறியிற்றப்பிய மாந்தரதிகாரிகளெனப் பிரித்து வைத்தலான் முரணாதென்க. இது காந்தத்துட் கூறப்பட்டது. இனிப்பொருள்கண் முரணியவழி வலியவற்றான் மெலியவை கண்டிக்கப்படு மெனக்கொள்க. எல்லாநெறியு மிறைவனாற் செய்யப்பட்டமையான் விசேடமின்மையின் அவற்று ளொன்றற்கொன்று வன்மை மென்மை கூறின், இதுவே மாறுகொளக் கூறலாமா[illegible]ன்,—அற்றன்று; அவ ற்றைப் பின் வழிப்படுத்து நூல்செய்தோர் தாரதம்மியத்தானே யவற்றிற்கு வன்மை மென்மை கூறுதலமையுமாகலின், பின்னூல் செய்தார் அவ்வநெறியிற் கூறும் பொருள் களை யம்மொழியின் றாற்பரிய மறியாது மயங்கி அவற்றோடு மாறுகொளத் தொகு த்தும் விரித்துஞ் செய்தாராகலின், அவை மென்மை யெனப்பட்டன. மாறுகோளில் கூற்றினெல்லாம் பிரமாணமேயாமென்க. இனி வேதத்தினுஞ் சிவாகமத்தினு மிந்திரன் முதலியோர் அவ்வாறு வழிப்படுத்து வேறு நூல் செய்யாது, வேதத்திற்கு வியாசர் முதலியோரும் ஆகமத்துக்குப் பிரணவர் முதலியோரும்போலச் சம்பிரதாயமாத்தி ரமே விளக்கினாராகலின், அவ்விரண்டினுள் வன்மை மென்மைகள் கூறுதல் பொருந் தாமையின், அவற்றுளொரோவழி மாறுகோள்போலத் தோன்றியவழி, வேதவாக்கி யங்கட்குமுண் மாறுபட்டவழிக் கருத்து வேறுபாடு பற்றிக் கூறியதெனத் தெரிந் துரைத்துக்கொள்வதுபோல், அவை முரணாதவாறு தெரிந்துரைத்துக்கொள்வதன்றி, அவை யொன்றொன்று மறுக்கப்படாவென்க. இவ்வாறன்றி, இன்னுமொருவாற் றான் விடுக்குமாறு: சாருவாக முதலிய வெல்லாச்சமயமும் பரமசிவனாற் செய்யப் பட்டமையிற் பிரமாணமேயா மாயினும், அவற்றுண் முதற்கண் மிகவுமர்தவுணர் வினராயுலகவின்பமேபெரும்பய னெனவுந் தமக்குப்புறம்பாகிய மக்கண் முதலியோரே யான்மாவெனவு மபிமானஞ் செய்துழலுமதிகாரிகளுக்குப், பரமசிவனிரங்கித், தன்ப

முதலியவற்றோடு விரவுதலா லுலகவின்பம் பேருறுதிப்பயனன்றெனவு மக்கண் முதலியோரான்மாவல்லரெனவு முணர்த்தி, அவர்களுணர்வு அவ்வளவி னில்லைபெறுதற் பொருட்டு நுட்பப்பொரு ளுணர்த்தப் புகிற் கொள்ள மாட்டாமையாற் றூலவுடம்பே யான்மாவெனவும் அவ்வுடம்பு நசித்தலே பேருறுதிப் பயனெனவு மறிவுறுத்தருளினான். பின்பங்ஙன மறிவுறுத்த நெறியே யொழுகிப் பரமசிவன் றிருவருட்குரியராய் மலசத்தியிற்சிறிது நீங்கி, உடம்பே யான்மா உடம்பு நசித்தலே பெரும்பய னென்பவற்றினையப்பாடுதோன்றிய வதிகாரிகளுக்கு, உடம்பு முதலியன வான்மாவல்லவென்று மறுத்தற்பொருட்டுப் புத்தநூ லறிவுறுத்தருளினான். இவ்வாறே மேலுஞ் சோபானமுறையானுபதேசித்தருளியதென மறுபாடின்மை யுணர்ந்துகொள்ளப்படும். இங்ஙனஞ் சாருவாக முதலிய நூல்களைச் சோபானமுறையாற் சொல்லவே, அதிகாரி தாரதம்மியத்தான் மேலுள்ள நூல்கள் கீழுள்ள நூல்களை மறுக்குமுகத்தாற் றோன்றினவாகலின், மாறுகோளில்லையென்பதூஉம், அவையு மொருவாற்றாற் பிரமாணமேயாமென்பதூஉம், போந்தமையுணர்க. இது தயித்திரியத்தி லதிகாரிபேதம்பற்றி "அன்னமயகோசம் பிரம" மென்றும், அதனை மறுத்து மேலதனிற் சூக்குமமாகிய "பிராணமயகோசம் பிரம" மென்றும், அதற்குமேல் "மனோமயகோசம் பிரம" மென்றும், அதற்குமேல் "விஞ்ஞானமயகோசம் பிரம" மென்றும், அதற்குமேல் "ஆனந்தமயகோசம் பிரம" மென்றும், ஒன்றற்கொன்று சூக்குமமா யுணர்த்துதல் போலவும், கவுசிதகவுபநிடதத்தி லதிகாரிபேதத்தால் இந்திரன் றயித்தியனுக்குத் தன்னையே பிரமமாகக் கூறியதுபோலவுங் கொள்க. அங்ஙனம் புல்லையெதிரேகாட்டி யாக்களைப் பிடிக்குமாறுபோலச் சோபானமுறைமை பற்றிக் கூறியதென்பதும், அவையெல்லா மொருவாற்றாற் பிரமாணமென்பதும், சூதசங்கிதையிற் காண்க. இங்ஙனங் கூறியவாற்றானே, வேதமுஞ் சித்தாந்த சைவாகமமுமென்னு மிரண்டுமே யுத்தமநூலெனவும், ஏனைச் சாருவாகமுதற் பாஞ்சராத்திர மிறுதியாகிய நூல்களெல்லா மிவ்விரண்டினொடு மாறுபட்டவழி மறுக்கப்படுமெனவும், அவற்றுள்ளும் வழிநூல் செய்தார் தாரதம்மியத்தாற் கீழ்க்கீழ் நூல்கண் மேன்மேனூல்களான் மறுக்கப்படுமெனவும், உணர்ந்து கொள்க. இனித் "தந்திரவழி யொழுகினோர் மூட" ரெனவும், "நிரயத்தில் வீழ்ந்தா" ரெனவும், "அவை சாபப்பய" னெனவும், "விருத்திப் பொருட்" டெனவும், "மோகநூ" லெனவும் புராணங்களிற் கூறியது, வேதப்பொருளொடு மாறுகொளக் கூறும் பாசுபதம் பாஞ்சராத்திர முதலிய புறச்சமயங்களேயாம்; வேதப்பொருளையே விரித்துக் கூறப்புகுந்த வேதசாரமாகிய சித்தாந்த சைவாகமங்களையன்றெனவுணர்க. இதுவும் வாயவ்வியசங்கிதை சனற்குமாரசங்கிதை கூர்மபுராணம் மகுடாகம முதலியவற்றுட் கூறியவாறு. இனிப் புறச்சமயவழி யொழுகினோரை யங்ஙனமிழித்துக் கூறியதூஉம், அந்நெறி யொழுகுதல் பற்றியன்று; மற்றென்னெனின், அவற்றையே பொருளாகக் கொண்டு வேதநெறியை நிந்தித்தமை பற்றி யென்க. அதுவும் ஆண்டே கூறப்பட்டது. புறச்சமய நூல்கள் விருத்திப் பொருட்டுச் செய்யப்பட்டன வென்பதூஉம், உடலோம்புதற் பொருட்டென்றதன்று; விருத்தி யொழுக்கமுமாமாகலிற் சாபத்தால் வேதநெறியி னீங்கினோ ராசரித்தற்பொருட் டென்றவாறும். மோகநூலென்றதூஉம், மணிமந்திர மருந்து முதலியவற்றான் விம்மிதம்பயக்கு நூலென்றவாறேயாம். இனி வேதமுஞ் சிவாகமமு மொன்றேயாயினு மிருபகுதிப்பட்டது, வேத மூன்றுவருணத்தார்க்குஞ் சிவாகம நான்குவருணத்தார்க்கும் பொதுவாதல்பற்றி யாதலாற் சிவாகமங்கள் பிரமாணமென்பது தேற்றெனவுணர்க. இங்ஙனஞ் சைவாகமங்களுக்குப்பிராமாணியம் பவுட்கரவுரையி னுமாபதிசிவாசாரியர் காட்டியவாறே காண்க. நீல

கண்டபாடியத்திற் பதியதிகரணத்திற் காட்டிமாறு: "சிவாகமங்களி னொருசாரன பரப்பிரமங் கேவல நிமித்தகாரணமெனக்கூறும்; அதனை மறுத்தற்கெழுந்த திவ்வதிகரண மென்றுரைப்பாருமுளர்; அது பொருந்தாது; யாம் வேதத்திற்குஞ் சிவாகமத்திற்கும் வேற்றுமைகண்டிலம்; சிவனாற் செய்யப்படுதலின் வேதமுஞ் சிவாகமமென வழங்கப்படு மாதலாற் சிவாகம மூன்றுவருணத்துக்கே யுரித்தாயது நான்குவருணத்துக்கே யுரித்தாயதுமென விருவகைப்படும்; அவற்றுள் முன்னையது வேதமெனவும் பின்னையது சிவாகமமெனவும் வழங்கப்பட்டன; இவ்விரண்டுஞ்செய்த கருத்தன் சிவனொருவனேயாம்; இவ்வாறு சுருதியினும் புராணங்களினுஞ் சிவாகமங்களினுங் கூறப்பட்டது; பஞ்சப்பிரமம் பிரணவம் பஞ்சாக்கரம் பிராசாதமுதலிய மந்திரங்களும், பதி பசு பாச முதலிய பொருள் வழக்கமும், திருநீற்றி னுத்தூளனந் திரிபுண்டர முருத்திராக்கந் தரித்தல் சிவலிங்கபூசை முதலிய தருமங்களும், பிறவும், வேதஞ் சிவாகமமிரண்டினு மொப்பக்காணடலான், அவ்விரண்டும் பிரமாணமேயாகலானும், கருத்தா வொருவனேயாகலா னவ்விரண்டிற்கும் பொருளொன்றேயாகலின் அவற்றுள்ளு மாறுபாடின்மையானும்,இவ்வதிகரணங் கேவல நிமித்தமாத்திரமே யிறைவனெனக்கூறு மிரணியகருப்பநூலாகிய யோகசாத்திரத்தை மறுத்தற் கெழுந்ததெனவே யாங் கூறுதும்" என்றிவ்வாறு நீலகண்டவாசாரியராற் காட்டப்பட்டது. இதனை விரித்துச் சிவாதித்தமணிதீபிகை சிவதத்துவவிவேகமுதலிய நூலுடையார் சிவாகமங்கட்குப் பிராமாணியங் காட்டியவாறும் அந்நூல்களுட் காண்க. வேதஞ் சிவாகமமென விருபகுதிப்பட்டது, மூன்றுவருணத்திற்கு முரிமையாதலு நான்குவருணத்திற்கு முரிமையாதலும் பற்றியென நீலகண்டபாடியத்திற் கூறப்பட்டது. "வேதநூல் சைவநூலென் றிரண்டேநூல்கள் வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்க-ளாதிநூ லநாதியம லன்றருநூ லிரண்டு மாரணநூல் பொதுச்சைவ மருஞ் சிறப்பு நூலா-நீதியினு லுலகர்க்குஞ் சத்திநிபா தர்க்கு நிகழ்த்தியது நீண்மறையி னொழிபொருள் வேதாந்தத்-தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம் பிறநூ றிகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்த மாகும்" எ-ம், "உலகியல் வேதநூ லொழுக்க மென்பது - நிலவு மெய்ந் நெறிசிவ நெறிய தென்பதும்" எ-ம், கூறுபவாகலின், அங்ஙனந் நூலாருந்தகுதி முறைமைபற்றிக் கூறுதலின் இருபகுதிப்பட்டதெனவே யாங் கோடும்.

இனிச் சைவரிலொருசாரார் சைவாகமங்களில், "உலகநூல், வைதிகம், அத்தியாத்மிகம், அதிமார்க்கம், மாந்திர" மென நூல்களையைவகைப்படுத்து, "மாந்திரமொழிந்த நான்குமுபநூ" லென வைதிகத்தினையும் அவற்றுடன் விலக்குதலானும், "வேதாந்தத் திலேகனேயான்மா" வென வேதாந்தத்தைப் புறச்சமயங்களோ டெடுத்தோதி மறுத்தலானும், வேதம் பிரமாணமன்றென்பர். அது பகுத்துணர்வில்லாதார் கூற்றேயா மென்று மறுக்க. என்னை? "ஆண்டு 'வைதிக' மென்றது மீமாஞ்சைநூலும், வைசேடிகநூலும், நையாயிகநூலுமென்னு மூன்றுமேயா" மெனவும், "புறச்சமயங்களோடு வைத்தெண்ணிய 'வேதாந்த' மாவது ஏகான்மவாதங்கூறும் வியாசநூ" லெனவும், சித்தாந்தப்பிரகாசிகையிற் சர்வான்மசம்புசிவாசாரியர் கூறுதலான், அது வேறென்பது தெற்றென விளங்குமாகலின், ஆண்டு 'வேத' மென்றதூஉம் மீமாஞ்சைநூலேயெனக்கொள்க; வேதத்துள் விதித்த கருமகாண்டத்தை யாராய்ச்சிசெய்தலின் அதற்கு மப்பெயராயிற்று. அங்ஙனங் கொள்ளாக்கால், வேதசாரஞ் சிவாகம மாதலாற் "சைவாசாரத்திற்குரியோன் வைதிக" னெனவும், "வேதாந்தப்பொருளைத் தெளிந்துக் கூறுவது சித்தாந்த" மெனவும், "பிறநூல் பிற பொருள்களைக்கூறு" மெனவும், வேதத்தோ டொற்றுமை யுடைமை

பற்றியே சிவாகமங்கட்குப் பிரமாணமாதல் கூறும் வசனங்களோடு மூரணுமாறறிக. 'பாசுபத' மென்பது யோகப் பெயராற் சைவாகமங்கட்கும் உருடப்பெயராற் பாசுபதாகமங்கட்கு மாமாறுபோல, 'வேதாந்த' மென்பது யோகப்பெயரான் வேதத்தின் முடிபாகிய வுபநிடதங்களைக் கூறும்; உருடப்பெயரால் அவற்றை யெடுத்துச்செய்த வேதாந்தநூலைக் கூறும். ஆகலின், அவ்விருவேறுவகையுந் தெரிந்துணர்ந்து கொள்க.

வேதமோதுதற்கண்ணும் வைதிகாசாரத்தின்கண்ணும் உபநயனப் பேறுடையார்க்கன்றி யதிகாரமின்மைபோலச் சைவாகம மோதுதற்கண்ணுஞ் சைவாசாரத்தின்கண்ணுஞ் சிவதீக்கைப் பேறுடையார்க்கன்றி யதிகார மில்லையெனக்கொள்க."

இவ்வாறு சிவஞானமாபாடியத் துரைக்கப்பட்டது.

## தமிழ்வேதமுதலியதிருமுறைகள்வைதிகசைவவோத்தாமாறு விளக்கல்.

இனித் தமிழ்வேதங்கள் வேதாகம முதனூலிரண்டினையு மூலமாகக்கொண் டவற்றின் சாரமாக அவதரித்தனவென்பது, "ஆகமத்தொடு மந்திரங்களமைந்த சங்கத பங்கமாய்" எ-ம், "மந்திரமாவதுநீறு வானவர்மேலதுநீறு - சுந்தரமாவதுநீறு துதிக்கப்படுவதுநீறு - தந்திரமாவதுநீறு" எ-ம் "மந்திரநான்மறையாகியானவர் - சிந்தையுணின்றவர்தம்மையாள்வன", எ-ம் தோகையம்பீலிகொள்வார்துவர்க்கூறைகள்போர்த்துழல்வார்-ராகமச்செல்வனுரையலர்தூற்றுதல்காரணமா" எ-ம் வரு மாளுடையபிள்ளையார் திருவாக்குக்களாலும், 'சூலப்படையுடையார்தாமேபோலுஞ்சுடர்த்திங்கட்கண்ணியுடையார்போலும் - மாலை மகிழ்ந்தொருபால்வைத்தார்போலுமந்திரமுந்தந்திரமுமானார்போலும்" எனவரும் வாகீசர் திருவாக்கானும், "தொண்டர்தமக்கெளியசோதியைவேதியனைத் தூயமறைப்பொருளாநீதியைவார்கடனஞ் - சுண்டதனுக்கிறவாதென் றுமிருந்தவனையூழிபடைத்தவனோடொள்ளரியும்முணரா-வண்டனையண்டர்தமக்காகமநூன்மொழியுமாதியை" எனவரு நம்பியாரூரர் திருவாக்கானும், "ஆகமமாகிநின் றண்ணிப்பான்றாள்வாழ்க" எ-ம் "கேவேடராகிக்கெளிறதுபடுத்து - மாவேட்டாகியவாகமம்வாங்கியு - மற்றவைதம்மை மகேந்திரத்திருந் - துற்றவைம்முகங்களாற்பணித்தருளியும்" எ-ம் "மறையுமாய்மறையின் பொருளுமாய்வந்தென்மனத்திடைமன்னியமன்னே" எ-ம் வரும் வாதவூரடிகடிருவாக்குக்களானும், "வேதநெறிதழைத்தோங்கமிகுசைவத்துறைவிளங்க", எ-ம் "தவம்பெருக்குஞ்சண்பையிலேதாவில்சராசரங்களெலாஞ் --- சிவம்பெருக்கும்பிள்ளையார் திருவவதாரஞ்செய்தார்" எ-ம் "வேதமொடுசைவநெறிவிளங்கவந்தகௌணியனார்" எ-ம் "மன்னுபுகழ்த்திருத்தொண்டர்குழாத்திடனேமறைவாழவந்தவர்தாம்" எ-ம் "மறைவாழவந்தனார்தம்வாய்மையொழுக்கம்பெருகுந்- துறைவாழச்சுற்றத்தார்தமக்கருளி" எ-ம் "தென்னற்குயிர்நாடுநீறளித்துச்செங்கமலத் --- தன்னமனையார்க்குமமைச்சர்க்குமன்பருளித் - துன்னுநெறிவைதிகத்தின் றூநெறியேயாக்குதலான்" எ-ம் புந்தியினுலவருரைத்தபொருள்பொருளன்றாம்படியன்பர்பொருந்தக்கூற - மந்தவுணர்வுடையவரைநோக்கிச்சைவமல்லாதுமற்றொன்றுமில்லையென்றே — யந்தமில்சீர்மறைகளாகமங்களெனையகலைகளைப்பொருளுணர்ந்தாரருளிச்செய்ய" எ-ம் "தூக்கின்றமிழ்விரகர்சொல்லிறந்தஞானமறை-தேக்குந்திருவாயாற்செப்பியருள்செய்தார்" எ-ம் "வந்தணைந்தமாதவத்தோர்வணங்கித்தாழ்ந்தமறைவாழ்வேசைவசிகாமணியே" எ-ம் "இன்னதன்மையிலிவர்சிவநெறியினையெய்து" எ-ம் "மறைகளாயநான்குமெனமலர்ந்தசெஞ்சொற்றிருப்பதிக - நிறையுஞ்சாதனுட

னெடுத்து" எ-ம் "தாண்டவம்புரியுந்தம்பிரானுரைத்தலைப்படக்கிடைத்தபின்சைவ- வாண்
டகையாருக்கடுத்தவர்நிலைமை" எ-ம் வரும் அருண்மொழித்தேவர் திருவாக்குக்களானு
மறிக. ஏனைத் திருமுறைகளு நிகமாகம சாரமாத லாய்ந் துணர்க.

மந்திரம் - வேதம். தந்திரம் - ஆகமம். "தாவில்சராசரங்களெலாஞ்-சிவம்பெருக்
கும்பிள்ளையா" ரென்றார், தம்மை வழிபட்ட திருக்கூட்டத்தடியார் முதலியோருக்குந்
திருவோத்தூராண்பனைகளுக்குஞ் சிவப்பேறருளுந் திறமறிவித்தற்கு. ஆளுடையபிள்
ளையார் வளர்த்தருளிய வைதிகநெறி, பூர்வமீமாஞ்சை, சாங்கியம், நியாயம், வைசே
டிகம், பாதஞ்சலம், உத்தரமீமாஞ்சையென் றித்திறத்து வைதிகசமயங்கட்குமேலாய்
அவைதமக் கணுகொணாத நுண்பொருளுடைத்தாய்த் தூய்மையுற்று "வைதிகசைவ"மென
நிற்குமாட்சி யுணர்த்துவார், "துன்னுநெறிவைதிகத்தின் றூநெறியேயாக்குதலான்" என்
றவ்வாறெடுத்தோதினரென்பது. அறிவினுன்மிக்க வறுவகைச்சமயத்தோர்க்கும் வைதிகத்
தின் றூநெறி கடைப்பிடித்துச் சிவபரத்துவந் தேறினோர்க்கும் வேறு திருவருளினால்
வீடுபெறமுயன்றோர்க்குந் திருவைந்தெழுத் துபதேசப் பிரமஞானம் பிரசாதித்தருளி
வைதிகசைவவாசிரியத்தலைவராய் நின்றாரென்பது விளக்குவார், ஆளுடையபிள்ளையாரை
"மறைவாழ்வே சைவசிகாமணியே" யென்றிங்ஙனம் போற்றிசைத்தார். பிரமஞானமெனி
னுஞ் சிவஞானமெனினு மொக்கும். "ஞானமெய்ந்நெறிதான்யார்க்குநமச்சிவாயச்சொலா
மென்-றானசீர்நமச்சிவாயத் திருப்பதிகத்தையங்கண் - வானமுநிலனுங்கேட்கவருள்செய்தி
ம்மணத்தின்வந்தோ - ரீனமாம்பிறவிதீரயாவரும்புகுகவென்ன" "ஆறுவகைச்சமயத்தி
லருந்தவருமடியவரும்-கூறுமறைமுனிவர்களுங்கும்பிடவந்தணைந்தாரும் - வேறுதிருவரு
ளினால்வீடுபெறவந்தாரு-மீறில்பெருஞ்சோதியினுளெல்லாரும்புக்கதற்பின்" "காதலியைக்
கைப்பற்றிக்கொண்டுவலங்கொண்டருளித் - தீதகற்றவந்தருளுந்திருஞானசம்பந்தர் - நாத
னெழில்வளர்சோதிநண்ணியதனுட்புகுவார் - போதநிலைமுடிந்தவழிப்புக்கொன்றியுடனா
னார்" என்னும் அருண்மொழித்தேவர் திருவாக்குக்களால் ஆளுடையபிள்ளையார்க்குத்
திருவஞ்செழுத்தின் வாச்சியமான பிரமஞானவுபதேச வாசிரியத்தலைமை யத்திறத்தார்
கண்ணெல்லா முண்மை கடைப்பிடித் துணர்ந்துகொள்க. ஆளுடையபிள்ளையார்
பரஞானப்பாலமுதுண்டு பரமஞானாசாரியராயினார்; "ஆறுவகைச்சமயத்திலருந்தவரு
மடியவரும் - கூறுமறைமுனிவர்" முதலாயினோரு மலபரிபாக வேறுபாட்டிற்கேற்பச்
சிவ சரியை கிரியாயோக ஞானநெறிநின்று வீடுபேறு காதலித் தவர் தொண்டு பேணினா
ராதலின் [illegible]அருளிய திருவஞ்செழுத்தருமறைத் திருப்பதிகஞானவுபதேசமாண்டுநினு
மற்றவரொப்பப் பரமுத்தியான சிவசாயுச்சியம் ஈறில் பெருஞ்சோதியுட் புக்கெய்தினா
ரென்ப தியாங்ஙனமியையுமெனின்,—என்று வினையினாய். அத்திருக்கூட்டத்தாரெல்லா
மீறில் பெருஞ்சோதியுட்புக்கு வீடுபேறுகூடினாரேனும் ஆளுடையபிள்ளையாரொப்பப்
போதநிலைமுடிந்தவழிப்புக்கொன்றியுடனாதலாம் பரசிவசாயுச்சியந் தலைக்கூடினா ரல்ல
ரென்பதே சேக்கிழார்முனிவர்க்குக் கருத்தாம். அத்திருக்கூட்டத்தடியரெய்திய வீடு
பேற்றினைச் "சீர்பெருகுநீலநக்கர்திருமுருகர்முதற்றொண்டர்-ஏர்கெழுவுசிவபாதவிரதயர்
நம்பாண்டார்சீர்-ஆர்திருமெய்ப்பெரும்பாணர்மற்றெனையோரணைந்துளோர்-பார்நிலவுகிளை
சூழப்பன்னிகளோடுடன்புக்கார்" "அணிமுத்தின்சிவிகைமுதலணிதாங்கிச்சென்றோர்
கண் - மணிமுத்தமாலையுனைமடவார்மங்கலம்பெருகும் - பணிமுற்றுமெடுத்தார்கள்பரிச
னங்கள்வினைப்பாசங் - துணிவித்தவுணர்வினராய்த்தொழுதுடன்புக்கொடுங்கினார்" 'ஆறு
வகைச்சமயத்திலருந்தவருமடியவருங் - கூறுமறைமுனிவர்களுங்கும்பிடவந்தணைந்தா

ரும் - வேறுதிருவருளினால்வீடுபெறவந்தாரு - மீறில்பெருஞ்சோதியினுளெல்லாரும்புக்க தற்பின்" என்றவ்வனம் பொதுவாகவும், ஆளுடையபிள்ளையார் தலைக்கூடிய வீடுபேற்றினைத் "தீதகற்றவர்தருளுந்திருஞானசம்பந்தர் - நாதனெழில்வளர்சோதிநண்ணியதனுட்புகுவார்-போதநிலைமுடிந்தவழிப்புக்கொன்றியுடனானார்" என்றிங்ஙனஞ் சிறப்பாகவு மெடுத்துத் திருப்பாட்டருளிச்செய்தவாற்றா னுணர்க. சேரர்பெருமான் முதலியோர் நம்பியாரூரரோடு திருக்கயிலை தலைக்கூடினு மற்றவர் பதப்பேறுறுது தத்தம் பரிபாகவறிவுச்செய்திக்கேற்ற பதப்பேறாக வாண் டுற்றதுபற்றியு மற்றிது தெளிந்துகொள்க. வாகீசர் நம்பியாரூரர் வாதவூரடிகளும் ஆளுடையபிள்ளையா ரொப்பப் போதநிலை முடிந்தவழிப் புக்கொன்றியுடனாதலாகும் பரமுத்தியெனப்படுஞ் சிவசாயுச்சிய வீடுபேறு தலைக்கூடினாரென்பது, அவர் பரஞானவொழுக்கங் கூறும் புராணவரலாறுகள் பற்றி யுணர்ந்து கொள்க. இப்பரமசிவசாயுச்சிய வீடுபேறு தலைக்கூடியநாயன்மார் பிறருமுளர்.

அற்றேலஃதங்ஙனமாக; நம்பியாரூரர் சிவபிரானால் விடுத்தருளப்பட்ட வெள்ளையானையூர்ந்து அரியயன் இந்திரன்முதலிய தேவருங் கணங்களு மெதிர்கொண்டு புடைசூழ்ந் தேத்தெடுப்பத் திருமேனியோடே திருக்கயிலைசென்றெய்தி அணுக்கத்தொண்டராய்ப் பண்டுபோல் அமர்ந்தருளினா ரென்று பெரியபுராணமுதலியன வோதுதலின், அவர் ஏனைச்சமயாசாரியர் மூவரோடொப்பப் பரசிவசாயுச்சிய வீடுபேறு தலைக்கூடினாரென்றல் பொருந்தாதாம் பிறவெனின்;—அறியாது கூறினாய். நம்பியாரூரர் இறைவர் பணி தலைமேற்கொண்டு திருக்கயிலையினீங்கித் தென்னாட்டிற் றிருவவதாரஞ் செய்து திருத்தொண்டத்தொகை தந்து வைதிகசைவம் வளர்த்தின்புற்று வைகி அவ்விறைவர் அருளுப்பாட்டானை கேட்டதனையானே திருக்கயிலையைத் தலைக்கூடிப் பண்டுபோல அணுக்கத்தொண்டராய் ஆண்டு மேவினார். ஆயினும், ஆண்டிறைவர் திருவருளாற் போதநிலை முடிந்தவழி அவர் சிவபரிபூரணம் புக்கொன்றியுடனாத லொருதலையாகலின், அவரும் பரசிவசாயுச்சிய வீடுபேறு தலைக்கூடினாரென்று துணிந்துரைத்தாம். ஆகலின், அது பொருத்தமேயாமென்க. இனி நம்பியாரூரர் திருமேனி வேறுசெய்தே திருக்கயிலைதலைக்கூடினார். அது "தானெனைமுன்படைத்தானதறிந்துதன்பொன்னடிக்கே - நானெனபாடலந்தோநாயினேனைப்பொருட்படுத்து-வானெனைவந்தெதிர்கொள்ளமத்தயானையருள்புரிந்து - ஊனுயிர்வேறுசெய்தானொடித்தான்மலையுத்தமனே" எனவரு மவர் தேவாரவோத்தானறிக. நொடித்தல் - அழித்தல். அது "நோக்காதுநோக்கிநொடித்து" என்பதனானறிக.

## முந்துணவசத்தரானதமிழ்ப்புலவர்பாக்க டிருவருட்பாவுந்திருமுறையுமாகாமைநிரூபித்தல்.

இனிச் சமயாசாரியர் முதலியோ ரருளிச்செய்த திருவருட்பாக்களு மற்றைத் தலைப்புலவர் பாட்டுக்களுஞ் சொல்வடிவு பாவடிவுகளாற் றம்மு ளொருபுடை யொப்பன போன்று காணப்படினும், அத் திருவாக்குக்க டிரோதானநீங்கிய வருணாத வொலியும் இவை மாயாநாதவொலியுமாமாகலின், சிறிதுந் தம்முளொப்புப்பெறா வென் றுணர்க. இது மெய்யுணர்ந்த ஞானிகளுங் கையறியாமாக்களுந் தம்முள் வடிவா னொரோவழி யொப்பினு முறையே யுண்ணின்றவருளறிவும் பிராகிருதவுணர்வும் பற்றித் தம்முட் சிறிது மொவ்வாமை போலவும், இயற்கைமாணிக்கமுஞ் செயற்கைச் செங்கல்லும் வடிவுநிற மொருபுடை யொப்பினும் எரிசுடர்க்குண முடைமையும் அக் குணமின்மையும் பற்றித் தம்முட் சிறிது மொவ்வாமை போலவுங் காண்க.

இனிப் புல்லறிவாளர் சிலர் முக்குண வசத்தரான இக்காலத் தமிழ்ப்புலவரை
“அருட்பிரகாச வள்ளலார்” என்றும், “அஞ்சாஞ்சமயகுரவர்” என்றும், அவர் பா
ட்டுக்களைத் “திருவருட்பாக்கள்” என்றும், அப்பாட்டுக்க டொகுத்த புத்தகத்தினைத்
“திருமுறை” யென்றும், தமக்கு வேண்டியவாறெல்லாம் பிரசுரித்துத் திருமுறை வரம்பழி
த்துக் கொள்வாப் பிரயத்தனிக்கின்றனரவர். “செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர் - செய
ற்கரிய செய்கலா தார்” “பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங் - கருமமே
கட்டளைக் கல்” எனத் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் கட்டளை தருதலின்,
“காழிநகர்ச்சிவபாதவிதயர்தந்தகவுணியர்கோனமுதமையான்றருதிறூட்டி - மேழிசையின
முதண்டுதாளம்வாங்கிவிலங்கியநித்திலச்சிவிகையிசையவேறி - வாழுமுயலகனகற்றிப்ப
ந்தரேய்ந்தவளர்கிழிபெற்றரவின்விடமருகற்றீர்த்து - வீழிநகர்க்காசெய்திமறைக்கதவம்பி
ணித்தமீனவன்மேனியின்வெப்பவிடுவித்தாரே” “ஆறெரியிட்டெடுத்தவேடவைமுன்னே
ற்றியாற்றிலிடுமேடெதிர்போயணைபவேற்றி - யோரமணரொழியாமேகழுவிலேற்றியோ
துதிருப்பதிகத்தாலோடமேற்றிக் - காருலவும்பிடிபுத்தன்றலையிலேற்றிக்காயாதபனையின்மு
தசனிகளேற்றி-யீரமிலாவங்கமுயிரெய்தவேற்றியிலங்குபெருமணத்தரனையெய்தினாரே”
“போற்றுதிருவாமூரில்வேளாண்டொன்மைப்பொருவில்கொறுக்கையரதிபர்புகழனார்பான்
- மாற்றருமன்பினிற்றிலகவதியாமாதுவந்துதிக்கபின்புமருணீக்கியாருந் - தோற்றியமண்
சமயமுறுதுயரநீக்கத்தணைவாருடரவந்தசூலைநோயாற் - பாற்றருநீளிடரெய்திப்பாடலி
புத்திரத்திற்பாழியொழித்தரனதிகைப்பதியில்வந்தார்” “வந்துதிமக்கையருளானீறு
சாத்திவண்டமிழாலேனோய்தீர்ந்துவாக்கின்மன்னுப் - வெந்தபொடிவிடம்வேழம்வேலைநீந்தி
வியன்சூலங்கொடியிடபம்விளங்கச்சாத்தி-யந்தமிலப்பூதிமகனரவுமாற்றியருட்காசுபெற்
றுமறையடைப்புநீக்கிப் - புந்திமகிழ்ந்தையாற்றிற்கயிலைகண்டுபூம்புகலூரரன்பாதம்பொரு
ந்தினாரே” “தண்கயிலையதனிங்கிநாவலூரர்வாழ்சைவனார்சடையனார்தனயனாராய்-மண்
புகழவருட்டுறையாளோலைகாட்டிமணம்விலக்கவன்றொண்டாயதிகைசேர்ந்து - நண்பினுட
னருள்புரியாரூர்மேவிநலங்கிளரும்பரவைகோணயந்துவைகித் - திண்குலவும்விறன்மிண்
டர்திறல்கண்டேத்துந்திருத்தொண்டத்தொகையருளாற்செப்பினாரே” “செப்பலருங்கு
ண்டையூர்நெல்லழைத்துத்திருப்புகலூர்ச்செங்கல்செழும்பொன்னாச்செய்து - டப்பின்மு
துகுன்றர்தரும்பொருளாற்றிட்டுத்தடக்கெடுத்துச்சங்கிலிதோள்சார்ந்துநாத - னொப்பிற
னித்தூதுவந்தாறுங்கிறியுறுமுதலைசிறுமதலைபுமிழநல்கி- மெய்ப்பெரியகளிறேறியருளாற்
சேரவேந்தருடன்வெள்ளிக்கயிலைமேவினாரே” “வைகைகரைசடக்கமாவெறிச்சோதிவரத் - தை
யலொருத்[illegible]தான்பேசக் - கையர்தாம்-ஏதவுரைதுறக்கவீசர்தந்நூலெழுத-வாதபுரீசர்
செய்தார்மாண்பு” என்றினைய செயற்கருந் தெய்வச் செயல்களாற் சிவபரத்துவ நிலை
யிட்ட உண்மைநாயன்மார் திருவாக்குக்களை திருவருட்பாக்களாமெனக. இவ்வருளறி
வாற்றல் சிறிது மெய்தப்பெறுது அவை யெய்தப் பெற்றுடையவர்போல் வபிநயித்துக்
கைதவப்பழிபாவச் செய்திக ளஞ்சாது புரிந்து சிறுமைக்கிலக்கான சயமைப் புலவர்
பாட்டுக்கள் அருட்பாப் போலியே யாமெனக. இவர் கைதவப்பழிபாவ வரலாறு
போலியருட்பாமறுப்பானும், “வெள்ளைமாநதியின்மாடேவிளங்கவோரூர்கண்டோ-னுள்
ளுயிர்துறந்தோர்யாக்கையூங்குறப்புதைப்பித்திட்டுக் - கொள்ளையாமாந்தர்க்கூட்டியுயிர்ப்
பிப்பலெனப்பொய்கூறி - வெள்ளிடியொடுநோயுண்டு வீந்” தொழிந்த பரிபவக்காட்சியா
னும், நன் றுணரப்படுமெனக. இவர் அருட்பெற்றியேயன்றிக் கலைப்புலமை தானு
நிரம்பினா ரல்ல ரென்பதற்கு, இவரியற்றிய பாட்டுரைகளி லுள்ள சொல்வழுவும்
பொருள்வழுவுமே யுறுகரியா மெனக. அவ் வழுக்கள் பலவாம. அவற்றுண் முன்

முறை வழுக்களிற் சில தாஸிபுலாக நியாயத்தாற் போலியருட்டா மரப்பிற் காட்டப்பட்டன. பின்முறை வழுக்களுள் ஒரு சிலவற்றை அந் நியாயமே பற்றிப் "போலியருட்டா வழுத்திரட்" டெனப் பெயர்தந்து, வேறெடுத்துக் காட்டுதும். இன்னும், தமிழ்வேதங்கள் வேதாகம புராண விதிகாச முதலிய வடகலைகள் பற்றியும், அகத்தியர் தொல்காப்பியங் களவியன் முதலிய தென்கலைகள் பற்றியும், திருவருட்கண்ணாலாய்ந்தறியற்பாலன. தமிழ்ச்சங்கச் செய்யுட்களெல்லாம் அகத்தியந் தொல்காப்பிய முதலியன பற்றிப் பெரும்பான்மையா னாராய்ந் தறியற்பாலன. ஆகலின், சங்கச்செய்யுட்கள் சொன்மாட்சியிற் றமிழ்வேதங்களோ டொரோவழி யொப்புறினும், பொருண்மாட்சியி னொப்புப்பெறா வென்ப துணர்ந்துகொள்க. இனித் தெய்வச்சங்கப் புலவர் செய்யுட்களே தமிழ்வேத வொப்புமை பெறாவெனின், முன்னவைசப்பட் டெழுன்ற விக்காலைச் சிற்றறிவுத் தமிழ்ப்புலவர் பாட்டுக்களைப் பற்றித் தமிழ்வேத முதலியவற்றோ டொக்குந் திருவருட்பாக்களா மெனவுப மதமானை மேற்கொண்டு கலாய்த்தல், புல்லறிவுப்பெற்றியே யாமென் றொருதலையா னறிந்துகொள்க. ஈண்டுச் சங்கச்செய்யுட்களென்றவற்றுட் டிருமுறைச்சேற்ற பிரபந்தங்களொழித் தொழிந்தனவே கொள்க. அதற்குக் காரண மிலக்கண மரபியலுட் கூறுதும்; அண்டைப்பிடிக்க.

## ஆரியவேதமுந் தமிழ்வேதமுந்
## தம்முளொத்தகருத்துடையனவென்பதுணர்த்துதல்.

ஆரியநான்மறை யுபநிடதங்களுந் தமிழ்வேத முதலிய திருமுறைகளு மொழியான் வேறுபடுகினும், பொருளா னொற்றுமையுடைய சுருதிகளாம். அது "தேவர் குறளுந்திருநான்மறைமுடிவு - மூவர்தமிழுமுனிமொழியுங் - கோவை - திருவாசகமுந்திருமூலர்சொல்லு - மொருவாசகமென் றுணர்" என்னும் ஔவை திருவாக்கா னுணர்க. தேவர்குறள்—திருவள்ளுவநாயனா ரருளிச்செய்த உத்தர வேதம். திருநான்மறைமுடிவு - உபநிடதம். திருநான்மறையு முடிவுமென வும்மைத்தொகையாகக் கொண் டுரைத்தலு மொன்று. மூவர்தமிழ் - ஆளுடையபிள்ளையார் முதலிய சமயாசாரியர் மூவருமருளிச் செய்த தேவாரவோத்துக்கள். முனிமொழியுங் கோவை திருவாசகம் - வாதவூர்முனிவராகிய சமயாசாரிய ரருளிச்செய்த திருக்கோவை திருவாசகவோத்துக்கள். திருமூலர்சொல் - திருமூலநாயனா ரருளிச்செய்த திருமந்திரவோத்து. வாதவூரடிகண் முற்றத்துறந்து முழுதுணர்ந்த வந்தணர் சிகாமணியாதலின், முனியென் றெடுத் தோதப்பட்டார். பேராசிரியருந் "திருவாதவூர்மகிழ் செழுமறைமுனிவர்" என் றிங்ஙனம் வழங்கியது காண்க. ஆளுடையபிள்ளையார் வாகீசர் முதலியோரும் "பிரமபுரத்துமறைஞானஞான முனிவன்" "திருநாவுக்கரசுவளர்திருத்தொண்டினெறிவாழ - வருஞானத்தவமுனிவர்" என் றிங்ஙனம் வழங்கப்படுமா றுணர்க. மொழியுமென்பது முன்னும் பின்னுங்கூட்டி யுரைக்க நின்றமையின் நடுநிலை விளக்கு. இச் செம்பொருள்காண மாட்டாதார், முனிமொழி - வியாசசூத்திர மென்று, ஓர்முறையுமின்றி யுரைத்தார். முனிமொழி வியாசசூத்திரமென் றிங்ஙன முரைத்தாரை, அப்பொருள் செம்பொருள் இலக்கணைப்பொருள் குறிப்புப்பொருளென்னு மூன்றனுள் யாதெனக் கடாயினார்க்கு, அது செம்பொருளென்றல் பொருந்தாது. என்னை? வழக்கின்கண்ணாதல் செய்யுட்கண்ணாதனிகண்டுநூல்களினாதன் முனி - வியாசமுனிவரை யுணர்த்துதற்கும், மொழி - அவர் சூத்திரத்தை யுணர்த்துதற்கும், பிரயோக மின்மையா னென்க. இனி இலக்கணைப் பொருளென்றாலும் பொருந்தாது. என்னை? கங்கையின்கண்வேடச்சேரி யென்புழிக்

கங்கையென்னுஞ் சொற்குப் பொருளாகிய வெள்ளநீர் வேடச்சேரிக் கிடனாதல் செல்லாமையின், ஆண்டுக் கரையென் றிலக்கணைப்பொருள் கோடல் வேண்டிற்று. முனிமொழியென்பன, பகையின்றி யொன்றனையொன் றவாவியுந் தகுதியுற்று மண்மைகொண்டு நிற்றலின், அவற்று ளொன்றனை யியற்பெயராக வைத்து மற்றொன்றனை யிலக்கணைப்பொருள் செய்தல் வேண்டற்பாற்றன் றாசலானெனச. இனிச் சொன்மாத்திரையா னன்றிச் சொல்லுவான் குறிப்பொடு படுத்துணரப்படுவ தாகிய குறிப்புப்பொரு ளென்றலும் பொருந்தாது. என்னை? ஆண்டு ஓளவைகருத்து வேறுதல் காட்டினுமாகலானும், வியாசமுனிவரையு மவர் சூத்திரத்தினையுங் குறிப்பான் விளக்குதற்குரிய சொற்றொட ரான் டின்மையானு மென்க. "வியாசநூல் ஏகான்மவாத நூசலுவ" தென்று சித்தாந்தப்பிரகாசிகையினுஞ் சிவஞானமாபாடியத்து முறையே சர்வான்மசம்புசிவாசாரியரும் ஆசிரியர் சிவஞானயோகிகளுங் கூறுதலின், அதனை அவற்றொ டொன்றெண்ணி ஒரு வாசக மென்றல் பொருந்தாமையு முணர்க.

## தமிழ்வேதமுதலியதிருமுறைகளுதலியபரம்பொருள் பரமசிவன்.

தமிழ்வேதமுதலிய திருமுறைகளுதலிய பரம்பொருள், அயனரியரனென்னு மூவரையுந் தோற்றுவித்து நடத்துந் துரிய முழுமுதற் கடவுளாகிய பரமசிவனும். அது, "தேவராயுஞ்சுரராயுஞ்சித்தர்செழுமறைதேர் - நாவராயுநண்ணுபாரும்விண்ணெரிசானீரு - மேவராய்விரைமலரோன்செங்கண்மாலீசனென்னு - மூவராய்முழுமுதலொருவன்மேயதுமுதுகுன்றே" "வரிவாயமலரானுமவையந்தன்னை - யுரியதாயவளந்தானு முள்ளுதற்கு - கரியானுமறியாதகள்ளின்மேயான் - பெரியானென்றறிவார்கள்பேசுவாரே" "மாவையுரித்ததள்கொண்டங்கமணிந்தவனைவஞ்சர்மனத்திறையுநெஞ்சணுகாதவனை - மூவருருத்தனதாமூலமுதற்குருவை" "படைத்தளித்தழிப்பமும்மூர்த்திகளாயினை" "தேவர்கோவறியாததேவதேவன்செழும்பொழில்கள்பயந்துகாத்தழிக்குமற்றை - மூவர்கோனாய்நின்றமுதல்வன்" "முந்தாநடுவுமுடிவுமாகியமூவரறியாச் - சிந்துரச்சேவடியானை" "முந்தியமுதனடுவிறுதியுமானாய் மூவருமறிகிலர்யாவர்மற்றறிவார்" என்றற் றொடக்கத்தான் வருந் தேவார திருவாசகச் சுருதிகளா னறிக. இவ் வேறுபா டுணராது மகாருத்திரனாகிய பரமசிவனைக் குணிருத்திரனாக வைத்தெண்ணுவோரை நோக்கி, "நம்மவரவரே - மூவரென்றேயெம்பிரானொடுமெண்ணிவிண்ணுண்டுமண்மிசைமற் - றேவரென்றேயிறுமாந்தென்னபாவர்திரிதவரே" என வாதவூரடிகள் இரங்கிக் கூறியது முணர்க. "தேவரிலொருவனென்பர்திருவுருச்சிவனைத்தேவர் - மூவராய்நின்றதோரார்" என்னுஞ் சிவஞானசித்தியு மது. இதுவே சுருதி மிருதி புராண விதிகாசங்கட் கெல்லாங் கருத் தென்பது, சிவதத்துவவிவேகநூலுடையார் "குணாதீதன்" என்னுஞ் சுலோகத்திற் றடைவிடைகளான் விளங்க விரித்துக் காட்டியவாற்றா னறிக.

## தமிழ்வேதமுதலியதிருமுறைகளோதுதற்குரியவதிகாரிகள்.

உபாயனப்பேறுடைய துவிசர் மூவரும், சிவதீக்கைப்பேறுடைய சதுர்த்தரான வேளாளரும், மற்றைச் சங்கரகுலத்தருட் சிவதீக்கைப்பேறுடைய அநுலோமர் முதலிய நன்மக்களும், தமிழ்வேத முதலிய திருமுறைகளோதுதற் கதிகாரிகளாவர். மற்றிவர்

சத்தியுடைய தத்த மாளிகைத்தலங்களினும், சிவாலய மடாலய வித்தியாலயங்களினும், ஸ்நானுனுட்டான சிலர்களாய்த் திருமுறைகளைப் பீடத்திலேற்றி ஆராதித்து அவ் வவற் றிற்குரிய இசை முறை பற்றி அன்பா னோதக்கடவர். இவ்வாறன்றி யோதுவார் அவ் வோதற்பய னெய்தப் பெறாமை மேலும் அக்குற்றப் பயனுந் தப்பா தெய்துவர். மதுமா மிச முண்போர் திருமுறைகளை ஓதிடுவரேல் கடுநிரயத்தில் வீழ்ந்து பெருந்துயருழப்ப ரென் றுண்மைநூ லோதும். இனிச் சமயாசாரியர்முதலிய நாயன்மா ரருளிச்செய்த பன்னிரண்டு திருமுறைகளல்லாத தமிழ்ப்புலவர் பாக்களை மற்றவைகளோடு விராயோது தல், அவற்றோ டவைதம்மை யொப்பித்த வுய்தியில் பெருங்குற்ற மாம். அது "ஒப்பிலா வுறுதிமுத்தனேதியபனுவலாதிக்--கொப்புயர்வுரைப்பார்கிங்கையுரைத்திடவுண்ணுவாரும் - வெப்பெரிநிரயந்தன்னுள்வீழ்ந்துவெந்துருகிவீயா-ரெப்பொழுதேறுவாமென்றினைத்தினைத் தேங்குவாரோ" என்னுஞ் சிவதருமோத்தரத்தி னறிக.

ஆதிசத்தத்தானே பரமசிவன் றிருவருள் கைவந்து கிடைத்த வுண்மைநாயன் மார் திருவருணூல்களுந் தழுவப்படு மென்க.

## தமிழ்வேதமுதலியதிருமுறைகள்பரார்த்தவான்மார்த்தமந்திரவோத்தாயதறிவுறுத்தல்.

தமிழ்வேதமுதலிய திருமுறைக டிருவருட் சுருதிக ளாதலேனுக்கி, அவை யவ தரித்தஞான்றே மெய்யுணர்வுடைய வான்றோர் அவைதம்மைப் பரார்த்த வான்மார்த்த சிவாராதனைக்குரிய மந்திரவோத்தாக விதித்தருளி, அவ்வாறு வழங்கிவர ஆணைதந்தரு ளினார். அவர் அது வொன்றோ, அத் தமிழ்வேத முதலிய திருமுறைகளை யருளிச் செய்த சமயாசாரியர் திருவுருக்களை ஏனை நாயன்மார் திருவுருக்களோடு திருக்கோயி லான சிதம்பரந் தி[illegible]வாரூர் திருவேகம்பந் திருவாலவாய் முதலிய சிவாலய மெங் குந் தாபித்து மற்றவர்க்கு நித்திய நைமித்திக வாராதனை விதியுளி யியற்றிவரவு மாணை தந்தருளினார். இனி யாரியவேதாகமபுராணமுதலிய பாராயண மெய்தினும், தேவாரந் திருவாசகந் திருக்கோவை யென்னுந் தமிழ்வேதபாராயணமு மற்றைத் திருமுறைப் பாராயணமு மெய்திடப் பெறாத சிவாலயம், மடாலயம், வித்தியாலயம், மாளிகைக டிருவருள் விளக்கம் இக்கலியுகத்தில் அத்தனை வாய்ப்பப் பொருந்தாவாம். தமிழ் வேதம் அப்பெற்றியவாம் அருட்சுருதிகளாதலேனுக்கியன்றோ "சொற்கோவுந் தோணிபுரத் தோன்றலுமெஞ் சுந்தரனுஞ்-சிற்கோல வாதவூர்த் தேசிகனு-முற்கோலி - வந்திலரே னீறெ ங்கே மாமறைநூ லெங்கே-யெந்தைபிரா னைந்தெழுத்தெங் கே" என் றுன்றோ ரெடுத் தங்ஙன மோதுவாராயிற்றென்பது.

## தமிழ்வேதந்திருச்சிற்றம்பலமெழுவாயிறுவாயாகவோதுமுறைதெரித்தல்.

தமிழ்வேதமுதலிய திருமுறைக டிருச்சிற்றம்பல மெழுவாயாகவு மிறுவாயா கவு மோதற்பாலன. இம்முறை தமிழ்வேத வாசாரியர்களாற் றமிழ்வேத மருளிச்செ ய்தபொழுதே நிறுத்தப்பட்டது. தமிழ்வேதந் தந்தருளிய சமயாசாரியர் திருச்சிற்ற ம்பல மெழுவா யிறுவாயாக அங்ஙனந் தமிழ்வேதமோத வாணைநிறுத்தியருளியதென்னை யெனின்,—திருச்சிற்றம்பலம் பிரணவவுறையுளாதலின், அஃதெழுவா யிறுவாயாகத் தமிழ்வேத மோதிடச் சமயாசாரியர் அங்ஙன மாணை நிறுத்தியருளினா ரென் றுணர்க. திரு ச்சிற்றம்பலம் பிரணவவுறையு ளாமா றியாங்ஙன மெனின்,—கூறுதும். இந்தச் சரீரம் பிரமபுரமாம். பிரமம்-பரமான்மா. புரஞ் சரீரம் புற்கல மென்பன வொருபொருட்

ளைவி. மற்றிந்தச் சரீரஞ் சீவான்ம வாசக்கிரக மாயினும், அச்சீவான்மாவிற் கிதன் கண் ணறி விச்சை தொழில் வியாபாரம் அந்தரியாமியான பரமான்மாவை யின்றி யமையாமையின், அம்முறை பற்றிப் பிரமபுரமென்று அவ்வா றுபசரிக்கப்பட்டதென் றுணர்க. இந்தப்புரத்திலுட்டகர புண்டரீக முளது. தகரபுண்டரீகமெனினும், இருதய கமலமெனினு மொக்கும். இத்தகரபுண்டரீகத்தி லம்பரமுளது. அம்பரமெனினும், ஆகாய மெனினும், வெளியெனினு மொக்கும். இவ்வம்பரஞ் சித்தாகலின், சிதம்பரமெனப்படும். இவ்வாறே விராட்புருடசரீரமானபிரமாண்டமும் பிரமபுரமாம். இதன் கண்ணுந் தகர புண்டரீக முளது. இது விராட்புருடவிருதயகமலமாம். இக்கமலநாளமுதலாகமேனோக் கித் தோன்று முலகத்துக்கமலம்போலாது பீசமுதலாகக்கீழ்நோக்கித் தோன்றியதோர் திப்பியகமலமெனக் கொள்க. இதுமுன்னையிருதய கமலத்துக்கு மாம். இவ்வாறு சாந் தோக்கியத்துட் கூறப்பட்டது.

இனித் தகரவித்தை பரமான்மாவான சிவபரம்பொருளாமாறும், அதனியல்பும், அதனையுபாசிக்குஞ் சீவான்மாவினியல்பும், உபாசிக்குமுறையும், அவ்வுபாசனையாலெய் தும் வீடுபேறும், சைவல்லியமுதலிய உபநிடதங்களிற் பொதுவாற்று னெடுத்தோதப் படும். மற்றிப்பிண்ட வண்ட விருதயபுண்டரீக முப்பத்தாறெனப்படு மாயாதத்துவங்களா மாறும், இத்தத்துவகமலபீடத்தினை வியாபித்து வித்தியாதேகமன்னி விளங்கும் பரமசிவ த்தினைச் சீவான்மாக் கண்டு வழிபடுமாறும், அவ்வழிபாட்டானெய்து மூண்மைஞானத்தி னாற் றுவித பாவனையைக்கைவிட்டுச் சிவோகமெனவத்துவிதபாவனை செய்யுமாறும், அவ் வத்துவித ஞானபாவனையாற் சிவபரம் பொருளைத்தன்னுட் கண்டு முழுதும் வியாபகமாய் நின்றறியு முற்றுணர்வுடையனாய்ப் பொருளுண்மையுணர்ந்து மலவாசனை நீங்கிக் கேவல மாய் நின்று முடிவுகாணில்லாப்பேரின்பம் பெறுமாறும், சைவாகமங்களிற் சிறப்பாற்று னெடுத்தோதப்படும். இந்தத் தகரபுண்டரீகபுரமான சிதம்பரஞ் சேதனாசேதனப்பிர பஞ்சந்தோன்றி நின்றொடுங்குமிடனு முத்தான்ம நிரதிசயானந்த பூரணப்பொதுவுமாம். இதுவே தில்லைத்திருச்சிற்றம்பலமெனப்படும். இத்தில்லைத்திருச்சிற்றம்பல மிங்ஙனம் பரமாசாரப் பொதுவாகலின், சமயாசாரியர் மற்றிதனையெல்லாத்திருத்தளிகளுக்குமுத லான "திருக்கோயி"லென் றவ்வாறு வழங்கியருளுவா ராயினர். இவ்வாற்றாற்றிருச்சிற்ற ம்பலம் பிரணவவுருவமுறையுளாமாறு தெற்றெனவுணர்ந்து கொள்க.

## தேவாரம்.

தேவாரம், தேவாரமென் றுமிற்று. தெய்வத்தன்மை பொருந்திய பாடலையெ ன்றவாறு. தேவாரமென்பது தெய்வத்தன்மைபொருந்திய பதிகப் பாமாலைகளை யுடைய தென வன்மொழித்தொகையாய் மூவர் திருமுறைகளுக்குங் காரணக்குறியாயிற்று. ஆளுடையபிள்ளையார் திருப்பதிகம் பதினாயிரமும், வாகீசர் திருப்பதிக நாற்பத்தொன் பதினாயிரமும், நம்பியாரூரர் திருப்பதிக முப்பத்தேழாயிரமுமாம். இவை நம்முளொடுங் கினபோக வெஞ்சியிக்காலத்து நிலைபெறு மூவர்பதிகங்களுண் முறையே முந்நூற்றெண் பத்துநான்கும், முந்நூற்றுப்பத்தொன்பதும், நூறுமாம். இவ்வெழுநூற்றுத் தொண் ணூற்றொன்றும் பன்னிரண்டு திருமுறையுட்களுண்முறையென் றவ்வாறு வழங்கப்படும். இவை பன் முறையாகவுந் தலமுறையாகவு மோதப்படும்.

சிவாலய முனிவர் தேவாரமோத்து முழுவதையு நித்தலும் பாராயணஞ்செய்யமாட்டா திடர்ப்பட்டு அகத்தியனாரைச் சரணடைந்து அக்குறைக் கூறி வணங்கிட, அவர்

தேவாரப்பதிகங்களுள் இருபத்தைந்தினைவாங்கித் திரட்டிக்கொடுத்து, இவ்விருபத்தைந்தினையும் பாராயணஞ்செய்வோர் அடங்கன்முறை முழுதையும் பாராயணஞ்செய்தாரெய்தும் பயனை யொருதலையாக வெய்துவ ரென்று கட்டளைபுரிந்தருளினார். இங்ஙனமாகலின், அவ்விருபத்தைந்தும், அகத்தியத்திரட்டென்றவ்வாறு வழங்கப்படும். "குருவருளும்வெண்ணீறெழுத்தைந்துங் கோயி-லருளுருவு மென்றலைமே லக்குர்-திருவடியுஞ் சிட்டானவர்ச்சனையுந் தொண்டருஞ் சிவாலயர்ச்சென்-றிட்டா ரகத்தியனா ரெட்டு" எனவும், "தோடுகூற்றுப்பித்தாமூன்றும்-பீடிகைடத்தேசிகன் போருளாரு-நீற்றுப்பதிகஞ்சுழற் றுங்காலை-மாற்றுப்பறையின் வரலாறுகூறுந்-துஞ்சல்காதல்சொற்றுணைமற்று-மஞ்செழுத் துண்மையருளியதாகு-மூரூர்தில்லைநாட்டோர்மூன்றுஞ்-சீரார்கோயிற்றிறமையதாகு - மோருருவரியபாலைவடிவே - மூருவாரென்றவண்டமிழைந்தும் - திருவார்மேனிச்செய்தியதாகும் - பொடியுடையானவனை யந்தணனை-யடியிணைதந்தவருளையதாகும்- பந்துவேற்றுமைகொன்றனவமூன்று - மந்திலிருக்கனைநாட்டியதாகு-மேய்குலைத்தில்லையெனுமிவைமூன்று - நாயனுடைமையுரைநாட்டியதாகு-மிப்பரிசகத்தியமுனிவனிருநிலத் தொப்பருமூவர்தாந்தேவார -முழுதையுஞ்சிவாலயமுனிச்சறிவித்துட்-பழுதலாவகையுட்பரிந்தெடுத்திருபத் - தைந்துயர்பதிகமுமறிவுறத்திரட்டி - டெண்ணருமடியார்கல்யாவையுமுணரும்-புண்ணியமிவையெனக்கொடுபொருந்துமென்றவன் - றனைக்கருள்செய்தனன்றகவுறவேதனுற் - றீதிலாவகத்தியத்திரட்டிணையுலகி - லோதினரடங்கலு மோதினராவரே" எனவருந் தருவாக்குக்களானே அத்திருப்பதிகமிருபத்தைந்தும், அவற்றினியல்பையும், அவைநுதலும் பொருளுந் தெரிந்துகொள்க.

தேவாரவோத்துக்கள் அபயகுல சேகர சோழவேந்தன் காலத்திற் றமிழ்நாட்டின்கண் மறைந்தன. அவ்வரசர்பெருமான் றன்னவைக்களத்துக்குப் போதாநின்ற பெரியோர் அவைதம்முளோரோர் பதிகமோதிடக்கேட்டுக் கைகளிரண்டுந் தலைமேற்பொறக் கண்ணீர்வானந்தவெள்ள மெய்யெலாம் பொழியத் தமிழ்வேதமுதல்வராய நாயன்மார்களைப் போற்றித் தேவாரத்திருமுறைகளை யாண்டுந் தேடிக் கண்டிலனாய்க் கவற்சியுறுவா னாயினன். அங்ஙனங்கவல்கின்றான், திருநாரையூர் ஆதிசைவ வேதியர்மரபின்வந் தவதரித்தருளிய நம்பியாண்டார்நம்பி அத்திருப்பதியில் வீற்றிருந்தருளும் பொல்லாப்பிள்ளையார் திருவருளானே வேதமுதலிய கலைகளெல்லா மோதாதுணர்ந்தருளிய வரலாறு கேட்டு அவர்பாற் போந்து வழிபாடாற்றி, "எம்பிரானே! தேவாரவோத்துக்களையும், அவைதம்மை யருளிச் செய்த மூவர்முதலியோர் சரித்திரங்களையும் உலகில் விளங்கச் செய்தருளுதல் வேண்டுமெனப் பிரார்த்தித்தான். நம்பியாண்டார்நம்பி அவ்வரசன் வேண்டுகோளுக் குடம்பட்டாராய்த் திருக்கோயிலுட்புகுந்து, பொல்லாப்பிள்ளையாருக் கதனைவிண்ணப்பஞ்செய்தார். பொல்லாப்பிள்ளையார் "நம்பீ! தேவாரத்திருமுறைகள் சிதம்பரத்தின் மூவர்கையடையாளமுடையவோ ரறையில் உள்ளன" வென்று திருவாய்மலர்ந்து, அவைதம்மை யருளிச் செய்த வாளுடையபிள்ளையார் முதலிய நாயன்மார் சரித்திரத்தினையும் அவர்க்குச் செவியறிவுறுத்தருளினார். நம்பியாண்டார்நம்பி அவ்வரலாற்றினைச் சோழர்பெருமானுக்குஞ் செவி யறிவுறுத்தருளினார். அவ்வரசர்பெருமான் நம்பியாண்டார்நம்பியொடு திருத்தில்லை சென்று பரமகாரணனான நடராசமூர்த்தியைத் தரிசித்து வணங்கித் தில்லைவாழந்தணர்களையு மிறைஞ்சி அம்முனிவர்கள் கட்டளைப்படி மூவரையுந் திருவுலாச்செலப் போந்து, அவரடையாளமுடைய அவ்வறையின்மாட்டே நிறுத்திக் கதவினைத் திறந்து திருமுறைகளை வன்மீகமூடியிருப்பக் கண்டு, சவையில் பெருங்கவலைக்கடற் படிந்தானாய். அவ்வரசர்பிரானைக் கவலைக்கடனின்று கரையேற்றி மகிழ்விக்குமாறு நடராசமூர்த்தி திரு

வருளினால்"வேந்தர் பெருந்தகையே! தேவாரப்பதிகங்களுள் வைத்து இக்காலத்துக்கு வேண்டு மவை தம்மை நிறீஇ, ஏனையவற்றைச் செல்லுணச்செய்தாம்" என்று ஓர் திரு வாக்கு அந்தரத்தெழுந்தது. அது கேட்ட வேந்தர்பெருமான் மனக்கவலைமாறிக் கழிபேரி றும்பூதுற்று, நம்பியாண்டார் நம்பியைத்தொழுது,"எம்பிரானே! தேவாரத்திருப்பதிகங் களைத் திருமுறைகளாக வகுத்தருண்மோ" வென்றிரப்ப, நம்பியாண்டார்நம்பி அவை தம்மையு மற்றைத் திருவாசக முதலியவற்றினையும் பதினொருதிருமுறைகளாக வகுத் தருளினார். அன்றுதொடங்கித் தேவார பாராயணம் பண்டுபோல யாண்டு நடைபெறுவ தாயிற்று.

## திருவாசகம்.

திருவாசகமென்பது திருமயமான வாசகமெனப்பொருள்படும். ஈண்டுத்திரு அரு ட்டிரு. எனவே, அருளுதவடிவானவாசக மென்றவாறாயிற்று. திருவாசகமென்பது- அழகியவாசகத்தையுடையதென வன்மொழித்தொகையாய் வாதவூரடிக ளருளிச்செய்த தமிழ்வேதத்திற்குக் காரணக்குறி யாயிற்று. இனித் திருவாசகம் பின்மொழியாகுபெய ரென்றுரைப்பாருமுளர். உற்றுநோக்குவார்க்கு அஃதன்மொழித் தொகையேயாம். அவ் வாறு தொல்காப்பியச்சூத்திரவிருத்தியுட் காண்க. வாதவூரடிகள் "நமச்சிவாயவாஅழ்க" வென்பது முதலிய நான்குதிருவகவன் முதற்கொண்டு, திருச்சதகம், நீத்தல்விண்ணப்பம், திருவெம்பாவை, திருவம்மானை, திருப்பொற்சுண்ணம், திருக்கோத்தும்பி, திருத்தெள்ளே ணம், திருச்சாழல், திருப்பூவல்லி, திருவுந்தி, திருத்தோணோக்கம், திருப்பொன்னூசல், அன்னைப்பத்து, குயிற்பத்து, திருத்தசாங்கம், திருப்பள்ளியெழுச்சி, கோயின்மூத்ததிருப் பதிகம், கோயிற்றிருப்பதிகம், செத்திலாப்பத்து, அடைக்கலப்பத்து, ஆசைப்பத்து, அதிசயப்பத்து, புணர்ச்சிப்பத்து, வாழாப்பத்து, அருட்பத்து, திருக்கழுக்குன்றப்பதி கம், கண்டபத்து, பிரார்த்தனைப்பத்து, குழைத்தபத்து, உயிருண்ணிப்பத்து, அச்சப்பத்து, திருப்பாண்டிப்பதிகம், பிடித்தபத்து, திருவேசறவு, திருப்புலம்பல், குலாப்பத்து, அற்பு தப்பத்து, சென்னிப்பத்து, திருவார்த்தை, எண்ணப்பதிகம், யாத்திரைப்பத்து, திருப்ப டையெழுச்சி, திருவெண்பா, பண்டாயநான்மறை, திருப்படையாட்சி, ஆனந்தமாலை, அச்சோப்பதிகமீறாகப் பலவகைப்படுத்துச் செந்தமிழ்வேதமருளிச்செய்தார். இத்தமிழ் வேதப்பகுதிகளருளிச்செய்தவிடனும், அவற்றினுட்கருத்தும், அதனதன் முகத்துக் காண்க. வாதவூரடிகண் மற்றுத் தமிழ்வேதம், "நமச்சிவாய" வென்பது முதலாக வெடுத்தருளிச் செய்தார். திருவுருத்திரத் துள்ளுறையான அத் திருவைந்தெழுத்து வேதமந்திரங்கட் கெல்லா மேலாயு முயிராயு நிற்கு மகிமைநோக்கி யென்க. வேதாகமமுதலிய நூல்க ளெல்லா மித்திருவைந்தெழுத்தின் பொருளே நுதலி யெழுந்தன வென்பது "அருணூலு மாரணமுமல்லாதுமைந்தின்-பொருணூறெரியப்புகின்" என உமாபதிசிவாசாரியர் திரு வருட்பயனு ளோதியவாறு பற்றி யுணர்க. திருவைந்தெழுத்து, பெருவார்த்தை, மகாவாக் கிய மென்பன வொருபொருட்கிளவி. இது சித்தாந்தமகாவாக்கியம். சித்தாந்தமகாவாக் கியமும் வேதாந்தமகாவாக்கியமுந் தம்முளொத்த கருத்துடையன வென்பது சிவஞான மாபாடியத்துட் காணக. ஆளுடையபிள்ளையார் "தோடுடையசெவியன்" எனப் பிரணவ முதலாகக்கொண்டு தமிழ்வேதந் திருவாய் மலர்ந்தருளினார். வாதவூரடிகள் "நமச்சிவாய" வெனப்பஞ்சாக்கர முதலாகக் கொண்டு தமிழ்வேதந் திருவாய் மலர்ந்தருளினார். அற்றே லஃதிங்ஙனமாக; வாகீசர் "கூற்றாயினவாறு" என்றும், நம்பியாரூரர் "பித்தாபிறைசூடி" யென்றும், தமிழ்வேதந்திருவாய் மலர்ந்தருளியதுயாதுபற்றியெனின், குருவருள், சூலை

னோர் மூர்த்தமும், ஆவணவோலைவிவகாரமூர்த்தமும், தமக்கு முன்னீடாகலின், அவை முன்னாகக் கொண்டு அச்சமயாசாரிய ரிருவருந் தமிழ்வேத மங்களந் திருவாய்மல ர்ந்தருளுவாராயிற்றென் றுணர்ந்து கொள்க. அவை அவ்விருவர்க்குங் குருவருண்முறை யாயவாறு "தோடுகூற்றுப் பித்தாமூன்றும்-பீடுடைத்தேசிகன் பேரருளாகு" மென்றான் றோரெடுத்தோதியவாற்றா னறிக. இத் தமிழ்வேதந் தன்னையன்போ டோதுவாரைப் பிற விக்கடலின்னடுத்து அவர்க்குச் சிவானந்தமாக்கவல்ல தென்பது "தொல்லை யிரும்பிற விச் சூழுந் தளைநீக்கி-யல்லலறுத்தானந்த மாக்கியதே - யெல்லை - மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன் - றிருவா சகமென்னுந் தேன்" என்று மான்றோரனுபவத் திருவாக்கா னறிக.

## திருக்கோவை.

வாதவூரடிகள் இத்தமிழ்த் திருக்கோவை நூலை அறிவனூற் பொருளு முலகநூல் வழக்குமென விருபொருளுமுதலி யியற்றியருளினார். அறிவனூற்பொருளாகமப்பொருள். "உலகியல் வேதநூலொழுக்க" மென்பவாகலின், அகத்தியத்தினுந் தொல்காப்பியத்தி னுங் களவியலினும் வேதமரபுபற்றி யெடுத்தோதப்பட்ட களவு கற்பென்னும் பாகு பாடு டைய அகனைந்திணையின்ப வரலாறே ஈண்டுலகநூல் வழக்காம். வாதவூரடிகள் இங்ஙனந் தூலாருந்ததி நியாயம்பற்றி யறிவனூற் பொருளு முலகநூல் வழக்கும் விராய்த் தமிழ்வேதமருளிச்செய்தற்குக்காரணம், இலக்கணமரபியலிற் கூறினும். இந்நூ லிவ்விரு திறனு முதலுதலோடு இயற் றமிழாராய்ச்சிக்கு நியாயவாராய்ச்சிக்கும் வாய்ப்புடைய சொல்வழக்கும் பொருள்வழக்கும் இனிது முதலு நன்னூலுமாம். அது "ஆரணங்கா ணென்பரந்தணர்யோகியராகமத்தின்-காரணங்காணென்பர்காமுகர்காமநன்னூலிதென்ப- ரேரணங்காணென்பரெண்ணரெழுத்தென்பரின்புலவோர் - சீரணங்காயசிற்றம்பலக்கோ வையைச்செப்பிடினே" என்றான்றோர் அதன் மாட்சி யெடுத்துப் போற்றிசைத்தலான் இனிதறியற்பாற்று. ஏரணம்-நியாயம். எழுத்து - இயற்றமிழ் இந்நூல் இங்ஙனஞ்சொன் மாட்சி பொருண்மாட்சி நன்றுபொருந்திச் சிறப்புறுத லோக்கியன்றே "வருவாசகத்தினி ன்முற்றுணர்ந்தோனைவண் டில்லைமன்னைத் - திருவாதவூர்ச்சிவபாத்தியன்செய்திருச்சிற்றம் பலப் - பொருளார்தருதிருக்கோவைகண்டேயுமற்றப்பொருளைத் --தெருளாதவுள்ளத்தவர் கவிபாடிச்சிரிப்பிப்பரே" என நம்பியாண்டார்நம்பியும், "உருவாருந்தமிழ்ச்சங்கத்திடம் பொய்கைத்தோன்றியுயர்ந்தோங்குமெய்ஞ்ஞானவொளியையுடைத்தாகி-மருவாருங்கிளவி யிதழ்நானூறுகிமதுப்பொருள்வாய்மதிப்புலவர்வண்டாயுண்ணத்-தருவாரும்புலியூரினுலகு ய்யக்குனிப்போன்றடங்கருணையெனுமிரவிதன்கதிராலலரும்-திருவாதவூராளிதிருச்சிற்றம் பலவன்றிருவடித்தாமரைச்சாத்துந்திருவளர்தாமரையே" எனவபியுத்தனாரும், "பல்காற் பழகினுந்தெரியாவுளவேற் - றொல்காப்பியந்திருவள்ளுவர்கோவையார் - மூன்றினுமுழங்கு மாண்டினுமிலையேல்-வடமொழிவெளிபெறவழங்குமென்க" எனச் சுவாமிநாததேசிகரும், இதன்பெருமை அவ்வாறு போற்றிசைத்தா ரென்க. இது "திருவளர்தாமரை"யென்பது முதலாகக் "காரணிகற்பக" மென்ப தீறாகக் களவுகற்பென் றிருகைகோளா னியற்கைப் புணர்ச்சி, பாங்கற்கூட்டம், இடந்தலைப்பாடு, மதியுடன்படுத்தல், இருவருமுள்வழி யவன்வரவுணர்தல், முன்னுறவுணர்தல், குறையுறவுணர்தல், நாணநாட்டம், நடுங்க நாட்டம், மடல், குறைநயப்பித்தல், சேட்படை, பகற்குறி, இரவுக்குறி,ஒருவழித்தணத்தல், உடன்போக்கு, வரைவுமுடுக்கம், வரைபொருட்பிரிதல், மணஞ்சிறப்புரைத்தல், ஓதற்பிரிதல், காவற்பிரிதல், பகைதணிவினைப்பிரிதல், வேந்தற்குற்றுழிப்பிரிதல், பொருள்

யையிற்பிரிதல், பரத்தையிற்பிரித லென்னு மிவ்விருபத்தைந்து கிளவிக்கொத்துக்கள் கொண்டு கோத்தப் படுதலிற் கோவையெனப் பட்டது. கோவையென்பதில் ஐ செயப்படுபொருள் விகுதி. இந்நூலானதும் பொரு ளிரண்டனுள் வைத்துலக நூற் பொருண் மரபினிது விளங்குமாறு பேராசிரியர், இதற்கோருரையியற்றினர். இவ்வுரை மற்றிந் நூலுக்கு மங்கைக்கணையின்ப வுறுதிப்பொருளின் றிட்பநுட்பஞ் செவ்விதின் விளக்கி, மற்றிதற் குச் சிறந்ததோ ருரையாம். இனி யிக்காலத் தமிழ்ப்புலவருட் சிலர் இவ்வுரை யாசிரியர் நச்சினார்க்கினிய ரென்ப. திருக்கோவைக்கு நச்சினார்க்கினிய ருரைசெய்திலர். மற்றுப் பிரயோகவிவேகநூலார் "வஞ்சனை ரபஞ்சப்படும்" என்னுங்குறளினுங் "கொள்ளப் படாஅ மறப்பதறிவிலன் கூற்றுக்கே" என்னுந் திருக்கோவையாரினும் பரிமேலழகரும் பேராசிரியரு முறையே யிடைப்பிறழ்வாகக் முடித்தலுங் காண்க; "மருங்கோடித்திவினை செய்யானெனின்" "கரும்பிலக்கண் டன்னம்" என்னுங் குறளினுந் திருக்கோவையாரினும் பரிமேலழகரும் பேராசிரியருஞ் செய்தலோடுங் கற்றோமு முடியு மென்பர்; இனி "கொழுநற்றொழுதெழுவாள்" "தொழுதெழுவார்வினைவளநீறெழ" என்னுந் திருவள்ளுவரினுந் திருக்கோவை யாரினும் பரிமேலழகரும் பேராசிரியருந் தனிவினையாக வுரைப்பர்;" என்றிங்ஙன முரைத்தலானும், "பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியு-மாரக் குறுந்தொகையு ளைந்நான்குஞ்-சாரத் திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும்-விருத்திநச்சினார்க்கினியமே" என்பதனானும், திருக்கோவை யுரையாசிரியர் பேராசிரியரென்றே துணிக. இனித் திருக்கோவை முதலிய வறிவனூற்பொருள், வாதவூரடிகளொப்ப வுலகவியல்பாமை கண்டு முற்றத் துறந்து மெய்புணர்ந்தவாவறுத்துச் சிவானந்தச்செல்வ ரானோர்க்கே யனுபவமாய்ப் புலனாகற் பாலதா மென் றுணர்க. இனிப் பேரின்பப்பொருளான் ஒத்த கிழவனுங் கிழத்தியுந் தம்மு ளஃகாவுமுவலன்பானுகர்ந்து போகருஞ் சிற்றின்பம் போல்வ தொன்றாகலின் மற்றது சிற்றின்ப மங்கைத்திணை பற்றி நிகழ்தல்போலக் குருதரிசனமுன்னான நின்மலசாக்கிராதி யைந்தும்பற்றி நிகழுமீரசாம். அங்ஙன நிகழ்வுழிப் பேரின்பக்கிழத்தி சிற்றம்பலமுங் கிழவோன் முத்தான்மாவுமாம். என்னை? ஆண்டுக்கிழத்தியை "உணர்ந்தார்க்குணர்வரியோன் றில்லைச் சிற்றம்பலத்தொருத்தன் - குணந்தான்வெளிப்பட்டகோவ்வைச்செவ்வாயிக்கொடியிடை" "பாயும்விடையரன் றில்லையன்னாள்" "அளவியையார்க்குமறிவரியோன் றில்லையம்பலம் போல்-வளவியவான்கொங்கை" "தவளைக்கினத்தம்பலவன்குரைகழல்போற்கமலத்-தவளே" "மேயத்தவாய்நின்னலெனைப்புணர்ந்துநெஞ்சந்தெசப்போ - யாயத்ததாயமுதாயணங் காயானம்பலம்போற்-சேயத்ததாய்" என்றிந் தொடக்கத்தாற் சிற்றம்பலத்தொடுசார்த்தொன்றாகக் கூறுதலானும், அச்சிற்றம்பலத்தின்கண்ணதாம் பேரின்பம் விழைந்திரந்து பெறுதற்குரியான் முத்தான்மாவாகிய கிழவனாகலானு மென்க. இனி முத்தான்மா வெய்துதற்குரிய பேரின்பவுறுதிப்பொருள் சிவனருட்குணமான சிற்றம்பலமே யாதல், "ஆரணவுருவார்தில்லையம்பலமெய்தப்பெற்றோ - ரோருணர்வாவரென்றுமொன்றலரொன்றல்லர்-காரணராகாரொத்தகருத்திலர்திருத்தவின்பப்-பூரணரவர்கள்வாழும் புவனமும்பொதுவாமன்றே" என்பதனா னறிக. முத்தான்மாவா லனுபவிக்கப்படுஞ் சிவானந்தம் அவ்வான்மாக்சரியாமியாய் விளங்குஞ் சிவஞானசத்தாகலின், அது சிவனைத் தொழிற்காரணமான பரையாதி சிவசத்திபேதங்களு ளொன்றாகவைத் தெண்ணுதற் கோரியையின்றாய். இவையின்றாகவே, இக்கூற்று முறைபிறழ்வு முதலிய குற்றங்கட்கு மிக்க செய்த்தாமா றுணர்க. "பேரின்பமானபிரமக்கிழத்தியோ-டோரின்பத்துள்ளானென்றுந்தீபற" "இருட்டறைமூலையிருந்தகுமரி-குருட்டுக்கிழவனைக்கூடினாந்து-குருட்டுக்கை

நீக்கிக்குணம்பலகாட்டி-மருட்டியவனைமணம்புணர்ந்தாளே" "என்னிடருளைவல்லியைய னன்மணம்புணர்ந்து - யாருநேயத்தருட்பொருள்வழங்கி-யிறவாவீட்டினிலிருத்திக் - குறைவ யாச்செல்வரொடுகூட்டுந்தமகிழ்ந்தே" என்றற்றொடக்கத்தனத் திருவாக்குக்களு மிவ்வு ண்மை தெளிவித்தல் காண்க. பெத்தத்திற் சிற்றின்பகாரணமாய் மறைந்து நடக்குமருஞ் செய்துவந்த சிவசத்தி முத்தியில் அவ்வியல்பி னீங்கி வெளிநின்று பேரின்பகாரண மாய்ப் போகரூபமாயிற் றென்பார் "பேரின்பமானபிரமக்கிழத்தி" யென்றார். உயிர்க் குப் பரிபக்குவஞ்செய்தற்பொருட்டு மலத்தினைவழிச் சிறுமையுற்று நிற்றலின் றிரோ தானசத்தியை "இருட்டறைமூலையிருந்தகுமரி" யென்றார். இன்னோரன்ன பல்வேறு வகையானுஞ் சிவனை நாயகனாக வருளிச்செய்த திருவாக்கெல்லாம், ஆண்டானடிமைமுறை பற்றி யெழுந்தன. இங்ஙனம் நாயகர்வான் நாயகப்படும் பொருண்முறைபற்றி யெழுந்தது. இவ் விருவழக்கினு மான்மா அடிமைத்திறத்துற்றிருத்தின் முதலானும், சிவ ஞானிக்கு மிறை மைக்குணந்திறந்திருத்தின் முதலானும், நடராசனருட்குணமான சிற்றம்பலம் பெண்பால படுத்தோதப்பட்ட தல்லது நடராசப்பெருமான் பெண்பாற்படுத்தோதப் படாமையா னும், தம்முள் முரணின்மையறிக. இனித் திருக்கோவைப் பேரினபத் துறைக்கட் கிழவி கூற்றுக்கள் ஓரோரிடங்களிற் பண்பின்மொழியானும் வருந்துமொழியானு நிகழ் வன ஆன்மாவின்கண்பிறக்கும் அருட்வேட்கையாவிறப்ப மெளிவரும் கருணையுமிரக்கமுமாகவும், கிழவோன் கூற்றுக்கள் பெருமிதத்தானு மவளிப்பாறு நிகழ்வன இன்பப்பேற்றி னிறு மாப்பும் அவ்வின்பவைத்தவிருவனுபவ வொப்புரவாகவும், கொள்க. இன்னு மிதன்றிறம விரிப்பிற்பெருகுமென்பது.

## திருவிசைப்பா.

அழகிய இசைபொருந்திய பாக்களையுடையதென அன்மொழித்தொகையாய்த் திருமுறைக்குக் காரணக்குறியாயிற்று. இது திருமாளிகைத்தேவர், சேந்தனார், கரு வூர்த்தேவர், பூந்துருத்திநம்பிகாடநம்பி, கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமு தனார், புருடோத்தமநம்பி, சேதிராய ரென்னும் ஒன்பதுநாயன்மாரானு மருளிச்செய் யப்பட்டது. இவை யருளிச்செய்யப்பட்ட தலங்களின்பெயர் அவ்வப் பதிகமுகத்துக் காண்க.

## திருப்பல்லாண்டு.

இத்திருமுறை முதற்கடவுளான பரமசிவனைப் பல்லாண்டுவாழ்கவென வண்பிறழ் பாட்டருளிச்செய்தமையின், பல்லாண்டென்றாயிற்று. பலவாண்டுபயத்தலைச் செய்வதியாது அது பல்லாண்டென அன்மொழித்தொகையாய்த் திருமுறைக்குக் காரணக்குறியாயிற்று. இஃது திருக்கோயின்மேவியமைந்துச் சேந்தனாரால் திருவாய்மலர்ந் தருளப்பட்டது. "சொல்லாண்டசுருதிப்பொருள்சோதித்ததூய்மனத்தொண்டருள்ளீர்-சில்லாண்டிற்சிதை யுஞ்சிலதேவர்சிறுநெறிசேராமே-வில்லாண்டகனகத்திரண்மேருவிடங்கன்விடைப்பாகன்- பல்லாண்டென்னுபதங்கடந்தானுக்கேபல்லாண்டுகூறுதுமே" எனச் சேந்தனார் இசைவுட் டிருவாய்மலர்ந்தருளுதலின், சில்லாண்டிற்சிதையுஞ் சிலதேவர்க்குப் பல்லாண்டுகூறுத லுபசாரமென்றும், அவர்கட்கூறும் பல்லாண்டு மக்கடம்முளொருவரை யொருவர் நீடு வாழ்கவெனக்கூறும் வாழ்த்துப்போல்வதாமென்று மறிக.

## திருமந்திரம்.

இஃது அறுபான்மும்மை நாயன்மாரு ளொருவரான திருமூலநாயனாரா லருளிச்செய்யப்பட்டது. இவர் நந்தி திருவருள்பெற்ற நான்மறையோகிகளிலொருவர். அணிமா முதலாகவரு மெண்பெருஞ் சித்தியும் பெற்றுடையார். சித்தியெனினு முத்தியெனினுஞ் செல்வமெனினு மொக்கும். அணிமாமுதலிய வெண்பெருஞ் சித்திகளாவன: அணுவினு மதிசூக்குமவடிவுற்று நிற்ற லணிமாவென்னுஞ் செல்வம். மேருவினுமிகப்பெரிய வடிவுற்று நிற்றன் மகிமாவென்னுஞ் செல்வம்; விடயங்களை நுகர்ந்து மவற்றிற்றொடக்குண்ணாமை கெரிமையென்னுஞ் செல்வம். சேறுமுதலியவற்றி னியங்கினு மழுந்துதலின்றிக் காற்றினுங் கடுநடையுடைத்தா மெல்லியவடிவுற்று நிற்ற லகிமாவென்னுஞ் செல்வம். மனததான் விழையப்பட்ட வனைத்தும் விழைந்தவாறே பெறுதல் பிராத்தியென்னுஞ் செல்வம். சங்கற்பமாத்திரையா னாயிரமகளிரைப்படைத்து அவ்வாயிரமகளிரொடு மாயிரம் வடிவாய்நின்று கிரீடித்தல் பிராகாமியமென்னுஞ் செல்வம். பிரமன்முதலியோர்மாட்டுத் தன்னாணைசெலுத்தி யவராற் பூசிக்கப்படுதல் ஈசத்துவமென்னுஞ் செல்வம். உலகமுழுவதையுந் தன்வசமாக்குதலு முலகத்தை யுண்டாக்கலும் வசித்துவமென்னுஞ் செல்வம். இவ்வெண்வகைச்சித்தியுள், முன்னைய மூன்று முடம்பானும், பின்னையவைந்து மனமுதலியவற்றானும் பெறப்படுவனவென் றுணர்க. சிவஞானயோகியான மற்றிவர் முனிப் பெருங்கடவுளான குறுமுனிவர்பா லுற்ற தொருகேண்மையினா னற்றமிழ்ப் பொதியமலையை நண்ணி யகத்தியனாருடன் சிலநாளுறைவதற் கெண்ணிக் கொற்றவனார் திருக்கயிலைமலைநின்று நீங்கித் திருக்கேதாரம், பசுபதிநேபாளம், அவிமுத்தம், திருக்காளத்தி, திருவாலங்காடு, திருவேகாம்பரம், திருவதிகை, திருப்புலியூர், இவைகளை வழியில் வணங்கி யாண்டாண்டுறையும் யோகமுனிவர்களை நயந்து காவிரியின் கரையணைந்து, திருவாவடுதுறையைத் தலைக்கூடி, ஆண்டுள்ள பசுபதியார் சிவாலயம் வலம்வந்து பெருங்காதலினாற் பணிந்து விருப்போ டங்குறையுநாளில், கோக்குலங்களை யாண்டன்பான் மேய்த்துவருஞ் சாத்தனூர்மூலனென்பா னோரிடைக்குலமகன், வாழுநாள் உலந் திறந்தொழிந்தானாக, ஆனிரைக ளவனுடம்பினை வந்தணைந்து சுற்றிமிகக்கதறிச் சுழன்று மோந்து துயருழத்தலை அந் நற்றவயோகியார் கண்டு, நம்பரருளாலே யிவ் வானிரைகளுற்ற துயரினை யொழிப்பலென்று தம்முடம்புக் கரண்செய்து தாமுயன்ற பவனவழியினாற் றம்முயிரை யவனுடலிற் பாய்த்தி யெழுந்தார். அதுகண்ட பசுக்க ளெல்லா முவந்து நாத்தழும்புற நக்கி மோந்து கனைத்து நயந்து களிப்பினால் வாலெடுத்துத் துள்ளித் துயர்நீத்து நிரைந்துபோய் மேய்ந்தன. அவர், அவை தம்மைமேய்த்து, அவற்றோடுடன்போந்து, அவை மனைகடோறும் புக்கதற்பின், திருவாவடுதுறை சேர்ந்து, காப்பினில்வைத்த முந்தையுடற் பொறை காணாராய் முழுதுணர்ந்த மெய்ஞ்ஞானச்சிந்தையினில் வந்த செயலாராய்ந்து தெளிகின்றார், தண்ணிலவார்சடையார்தாந் தந்தவாகமப்பொருளை மண்ணின்மிசைத்தந்திருவாக்கினாற்றமிழ்வகுப்பக் கண்ணியவத் திருவருளினாற் கரப்பித்தாரென் றறிந்து திருவாவடுதுறைத் திருக்கோயிலை யணைந்து பரம்பொருளை வணங்கி யத்திருகோயிற் புறக்குடபாலின் மிக்குயர்ந்த வரசின்கீழிருந்து சிவயோகந்தலைநின்று பூவலருமிதயத்துப் பொருளாகிய பரமசிவத்தோ டுணர்ந்து சமாதியில் வீற்றிருந்தருளினார். அங்ஙனஞ் சமாதியில் வீற்றிருந்தருளா நின்ற நாயனா ரவனுடம்பிற் பிறவிவிடந்தீர்ந்து தமிழுலக முய்ய ஞான முதலிய நான்கு மலர்கின்ற நற் றிருமந்திரமாலை யோராண்டுக் கொன்றாகப் பரம்பொருளாகிய பரமசிவனை "ஒன்றவன்

றானே யிரண்டவ னின்னரு—ணின்றனன் மூன்றினு ணான்குணர்ந் தைந்து-வென்றனை
றாறு விரிந்தன னேழும்பர்ச்-சென்றனன் றானிருந் தானுணர்ந் தெட்டே" என்னுந் திருப்
பாட்டுமுதலாக வெடுத்து அவற்கு மூவாயிரந் திருப்பாட்டுச் சாத்தி மூவாயிரத்தியாண்டு
புவிமேன் மகிழ்ந்திருந்து, சென்னிமதியணிந்த வப்பரன் றிருவருளினாற் றிருக்கைலை
யைத் தலைக்கூடி, யொருக்காலும்பிரியாப் பேரானந்த வாழ்வை அவன் றிருவடிக்கீழ
டைந்தார். நாயனார்க்குத் திருமூலரென்னும் பெயர் வந்த வரலாறும், திருமந்திர நூல்
செய்தருளியவரலாறும், இக்கூறியவாற்றா னறிக.

இம்முதற்றிருச்செய்யுளின் பொருள் வருமாறு: அவன் ஒன்றே—மகா வாக்கியத்திற்
றற்பதத்தாலெடுத்துச் சொல்லப்படும் பரமான்மாவான பரமசிவன் ஒரு பொருளேயாம்;
அவன் இன்னருள் இரண்டு—அங்ஙன மொருபொருளாயிருந் தன் னின்னருட் டானே
மியைசத்தியோடெல்லாவற்றிற் சிவமுஞ் சத்தியுமெனவிரண்டுமாய்; மூன்றினுள் நின்றனன்—
தன்போல நித்தியப்பொருள்களாயிருந்து சமலராயுள்ள சீவான்மாக்களை அம்மலப்பி
ணியினீக்கி வாழ்விக்குந்தொருட்டு இலய போகவதிகார அவத்தை யுற்று முறையே
சத்தன் உத்தியுத்தன பிரவிருத்தன் என மும்முதலாய் நின்றான்; நான்குணர்ந்தான்—அங்
ஙனநின்று ஆன்மாக்கள் மெய்யுணர்ந்து வீடுபேறு கூடுதற்பொருட்டுச் சுத்தமாயையைக்
காரியப்படுத்து வேதாகமமென்னு முதனூல்களாலே அறமுதலிய வுறுதிப்பொருணான்கி
னையு மோதியருளினான்;—ஐந்து வென்றனன்—அவ்வாற்றா னான்கையு மறியாவுயிர்களு
க்கு விளைக்கும் பஞ்சபாசவுபாதி தனக்கிலனாய் அமலனாகி நின்றான்; விரிந்தனனாறு—
இன்னும் ஆன்மாக்கள் கன்மபோக நுகர்ந்து மலபரிபாக மெய்துதற்பொருட்டு மந்திர
முதலிய அத்துவாக்கள் ஆறினையு நிக்கிரகவனுக்கிரக சத்தியான அம்மாயையினின்றே விரித்
திட்டான்; ஏழும்பர்ச் சென்றனன்—இன்னும் ஐவகை முத்தொழில்களையும் அதிசூக்
குமமாயும் சூக்குமமாயும் தூலமாயு நடாத்த வேண்டியவின், அவ்வத்தொழில்களினிட
னாய்ச் சிவன் நாதசிவன் எனவும், சதாசிவன் எனவும மகேசன் உருத்திரன் மால் அயன்
எனவும், முறையே அருவம் அருவுருவம் உருவமென்னு முக்கூற் றேழுமைந்த திரு
மேனிகளையுமுற்று மேலாயோங்கினான்;—தானெட்டுணர்ந் திருந்தனன்—தப்பெற்றிய
னாய முதல்வன் முற்றறிவு முதலிய வெண்குண சொரூபனாயுணரப்பட்டு என்னுள்
ளத்தின்கட் சோகம்பாவனையாற் றுவிதமற்று ஏகனாய் மன்னினான்; ஆதலின் அவன்
றிருவருளாலே வேதாகமப் பொருள்களையெடுத்துத் தமிழுலக மெளிதிலுணர்ந்துய்தற்
பொருட்டு இங்ஙனந் திருமந்திரமாலை செந்தமிழாற் கூறலுற்றேனென்றவாறு. அவன்
றிருவருளானே வேதாகமப்பொருள்களையெடுத்துத தமிழுலக மெளிதிலுணர்ந்துய்தற்
பொருட்டு இங்ஙனந் திருமந்திரமாலை செந்தமிழாற்கூறலுற்றே னென்பது, ஒழிபெச்சம்.
உணர்ந்தானெனக காரியத்தைக்காரணமாக வுபசரித்தார். ஏழாயும்பர்ச் சென்றனனென
ஆக்கச்சொல் வருவித்துரைக்கப்பட்டது. உணர்ந்து-உணரப்பட்டு. தான்-முன்னையதசை
நிலை. பின்னையது பெயராய்ச் சுட்டுப்பொருள்படநின்றது; "புலந்தொகுத்தோனே போக்
கறுபனுவல்" லென்புழிப்போல. இஃதெண்ணலங்காரம். தானுணர்ந்தானிருந்தெட்டேயென்
பதற்கு - அவன் அட்டமூர்த்திகளாக வெளிநின்றுணரப்பட்டு யாவருமறிய விருந்தானென்
றுரைத்தலுமொன்று. ஏழுபாரென்பது பாடமாயின், ஏழுவகை ஞானபூமிகளையும் வியா
பித்தானென்க வுரைக்க. ஏழு ஞானபூமிகளாவன: சுபேச்சை, விசாரணை, தநுமானசி;

சத்துவாபத்தி, அசஞ்சத்தி, பதார்த்தபாவனை, துரியகை யென்பனவாம். இம்முதற்செய்யுள், நூற்பொருளை யிங்ஙனந் தன்னகத்தடங்கக்கொண்டு நிற்றலின், வருபொருடெரிக்கு மங்கலமாம். அத்திறம் விரிப்பிற்பெருகும். நுண்ணுணர்வாற் கண்டுகொள்க. இந்நூலின்கண் வேதப்பொருள் அருகிவருமாறுஞ் சிவாகம நாற்பாதப்பொருள் பெருகி வருமாறு மோர்ந்துணர்ந்துகொள்க. இந்நூல் பாயிர முளப்பட ஒன்பது தந்திரங்களுடைத்து. இந்நூற்பொருள் பெரும்பான்மையான் ஆகமநூ னன்குணர்ந்தார்க்கே இனிது புலனாகற்பாலதாம்.

## பதினோராந்திருமுறைப் பிரபந்தங்கள்.

இஃது திருமுகப்பாசுரமுதற் றிருவேகாதசமாலை யீறான நாற்பதுபிரபந்தங்களைத் தன்னுட்கொண்டது. இவற்றுட் டிருமுகப்பாசுரந் திருவாலவாயுடையார் திருவாய்மலர்ந்தருளியது. திருவாலங்காட்டு மூத்ததிருப்பதிகம், திருவிரட்டைமணிமாலை, அற்புதத் திருவந்தாதி யென்னுமூன்றுங் காரைக்காலம்மை அருளிச்செய்தன. க்ஷேத்திரத்திரு வெண்பா ஐயடிகள்காடவர்கோனாயனாரருளிச்செய்தது. பொன்வண்ணத்தந்தாதி, திருவாரூர்மும்மணிக்கோவை, திருக்கைலாயஞானவுலா வென்னுமூன்றுஞ் சேரமான்பெருமாணாயனார் அருளிச்செய்தன. கைலைபாதிகாளத்திபாதி யந்தாதி, திருவீங்கோய்மலை யெழுபது, திருவலஞ்சுழிமும்மணிக்கோவை, திருவெழுகூற்றிருக்கை, பெருந்தேவபாணி, கோபப்பிரசாதம், காரெட்டு, போற்றித்திருக்கலிவெண்பா, திருமுருகாற்றுப்படை, திருக்கண்ணப்பதேவர் திருமற மென்னும் பத்தும் நக்கீரதேவ ரருளிச்செய்தன. திருக்கண்ணப்பதேவர் திருமறங் கல்லாடனாரருளிச்செய்தது. மூத்தநாயனார் திருவிரட்டைமணிமாலை, சிவபெருமான்றிருவிரட்டை மணிமாலை, சிவபெருமான்றிருவந்தாதி கபிலதேவரருளிச்செய்தன. சிவபெருமான்றிருவந்தாதி பரணதேவரருளிச்செய்தது. சிவபெருமான்றிருமும்மணிக்கோவை, இளம்பெருமானடிக ளருளிச்செய்தது. மூத்தபிள்ளையார்திருமும்மணிக்கோவை, அதிராவடிகளருளிச்செய்தது. கோயினான்மணிமாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபாவொருபஃதென்னு மைந்தும் பட்டணத்தடிகள் அருளிச்செய்தன. விநாயகர் திருவிரட்டைமணிமாலை, கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம், திருத்தொண்டர் திருவந்தாதி, ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி, திருச்சண்பைவிருத்தம், திருமும்மணிக்கோவை, திருவுலாமாலை, திருக்கலம்பகம், திருத்தொகை, திருநாவுக்கரசுதேவர் திருவேகாதசமாலை யென்னும் பத்தும் நம்பியாண்டார் நம்பியருளிச்செய்தன. இங்ஙனம் பதினோராந்திருமுறையிற் கோக்கப்பட்ட நாற்பான் பிரபந்தங்களுக்கும் வகை கண்டுகொள்க. திருமுறையிற்கோத்த திருமுருகாற்றுப் படையினைப் பத்துப்பாட்டெனச் சங்கப்பாட்டினுங்கோத்துத் தொகைகொண்டவாறென்னையெனின்,—அதற்குக் காரணஞ் சங்கவிலக்கியவரலாறுரைப்புழிக்கூறுதும்.

## பெரியபுராணம்.

இது சேக்கிழார்நாயனாரா லருளிச்செய்யப்பட்டது. இது பெரியபுராணமெனவும், திருத்தொண்டர்புராணமெனவும் வழங்கப்படும். இவ்விருதிருநாமங்களும் இதற்கு ஆசிரியரோ யிட்டனவென்பது "எடுக்குமாக்கதை"யெனவும் "இங்கிதனுமங்கூறின்— செங்கதி ரவன்போ னிக்குந் திருத்தொண்டர் புராண மென்பாம்" எனவும் போந்த பாயிரத்தாலறிக. பெரியபுராணம் - பெருமையை யறிவுறுக்கும் புராணம். யாதவர் பெருமையென்னு மவாய்நிலைக்கட் டிருத்தொண்டர் பெருமையென்பது தானே போதருமென்பது. அநபாயனென்னுஞ் சோழமகாராசன் சிந்தாமணியென்னும் அவைதிகத்

தொடர்நிலைச் செய்யுளைப் பலபடப்பாராட்டிக் கேட்டான். சேக்கிழார் அதுகண்டு வேந்தர் பெருந்தகாய்! இது சமணர் பொய்நூல்; இதன் கேள்வி மறுமைக்குமாகாது; மற்றிம்மைக்குமாகாது. சிவகதை கேட்பின், மறுமைக்குமாம்; மற்றிம்மைக்குமா மென்றெடுத்தரசற்கு குபதேசித்தருளினார். அநபாயவேந்தன் அடிகேள்! இச்சிந்தாமணி அவகதையாய்ப் பயனுமற்றதாயின் அம்மையு மிம்மையு முறுதிப்பயக்கத்தக்க சிவகதை யாது? அதுகண்ட தனிப்பேரார்? அதுதான் நவகதையோ? புராதனமோ? அதற்கு முத னூலுண்டோ? அதனைக் கேட்பித்தார் யாவர்? கேட்டார் யாவர்? அது தவமுயலுங் கதையோ? தவஞ்செய்து பேறுபெற்ற கதையோ? இவற்றிற்கு அடைவுபட வுத்தரங் கூறுக வென்றான். சேக்கிழார் அன்னுழித் "திருவாரூர்ப்பெருமானடிகள் அடியெடுத்துக் கொடுத்தருளத் திருநாவலூர் நம்பியாரூரர் பதினொருதிருப்பாட்டால் அம்பலவாணர் திருத்தொண்டர் பெருமையினைத் தொகுத்துத் திருப்பதிகம் பாடியருளினார். அது திருத்தொண்டத்தொகையென் றுலகம் பரவப்பெற்றது. அதற்குத் திருநாரையூர்ப் பொல்லாப்பிள்ளையார் பொருளுரைத்தருள நம்பியாண்டார் நம்பி வகைதந்து சுருக்கிமொழிக் கலித்துறையந்தாதி செய்தருளினார். அதனைத் திருமுறைகண்ட அபயகுலசேகரசோழ மகாராசன் முதலியவுயர்ந்தோர் பாராட்டிக் கேட்டனர்" என்றுத்தரங் கூறியருளினார். அதுகேட்ட அநபாயவேந்தன் அவ்வருட்டொண்டர் பெருமை வரலாறெல்லாந் திறம்பட விரித்துச் செந்தமிழ்க்காவியமாகச் செய்தருளுக வென்றிரந்து வேண்டினான். சேக்கிழார் அரசன் வேண்டுகோளுக குடம்பட்டு அவன்பால் விடைகொண்டு திருத்தில்லை நகரினைத் தலைக்கூடித் திருக்கோயிலை வணங்கித் திருச்சிற்றம்பல மணைந்து, "அம்பலத்தெம் பெருமானே! உமதடியார்சீர் அடியேனுரைத் திடற்கெம்படி யடியெடுத்துத் தந்தருளுவீர்" என்று பிரார்த்தித்துத் திருவருளையுன்னி யிறைஞ்சினார். அன்னுழி யிலகு மன்றினிலாடுவார் திருவருளினால் அசரிரீ "உலகெலாம்" என அடியெடுத்துரைசெய்தருளியது. அப்பெரிய வருளுரைவாக்கொலி தில்லைவாழந்தணர் முதலாக வாண்டுத்தலைக்கூடி நின்ற திருக்கூட்டத்தார செவிப்புல மெங்குமாகி நிறைந்தது. சேக்கிழார் அவ்வருளுபதேச வாக்கமிர்தஞ் செவிமடுத்து மெய்யுணர்வெய்தித் தெய்வப்புலமைமிக்கார். அப்பொழுது தில்லைவாழந்தணர் மன்றுடைய பிரானுரை வள்ளலார் திருமாலையுந் திருநீறுந் திருப்பரிவட்டமுஞ் சேவையர் காவலர்க்கு அளித்துச் சிறப்பித்தார். சேக்கிழார்நாயனார் அத்திருவருட் பிரசாதங்களைப்பெறறுச் சிவானந்தக்களியுற்று திருவம்பலத்தினை வணங்கப்போந்து தாம் பாடுகின்ற புராணத்திற்கு மூலமாகிய திருநெறித் தமிழ் அடியாதலால், அத்திருநெறித் தமிழ்வேத முதல்வர்களை வணங்கி யவர் திருவருளைப்பணிங்கிச் சிவசாதனங்கண் மிகப்பூண்டு, ஆயிரக்கால் மணிமண்டபத்தினை யணைந்து, எந்தையார் திருவருளையுன்னி வீற்றிருந்து, அவர் தந்தருளிய "உலகெலாம்" என்பது முதலாகக்கொண்டு திருத்தொண்டத்தொகை திருவந்தாதிவகை வழியே செந்தமிழ்த்தொகை விளங்கிய திருவிருத்தத்தாற் ஞறுவான புராண நூல் விரித்துப் பாடிமுடித்தருளினார்.

உலகெலா முணர்ந் தோதற் கரியவ
னிலவு லாவிய நீர்மலி வேணிய
னலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

உலகு என்பது ஆரியத்திரிசொல். அஃது ஈண்டுயிர்கண்மேனின்றது. உலக மென்பது இடத்தை யுணர்த்துஞ் சொல்லாகலின் மக்கட்டொகுதியை யுணர்த்துமவழி

ஆகுபெயராம் பிறவெனின்,—அற்றன்று; வடநூலுள், "லோகஸ்து ஜாடவதேஜஜநே"
என இரு பொருட்கு முரித்தாக வோதப்பட்டமையின், மக்கட்டொகுதியை யுணர்த்
தும் வழியு முரியபெயரே யாகலின், ஆகுபெயரன்றென்க. இது "காலமூலக" மென்
னுஞ் சூத்திரத்துச் சேனாவரையர் கடாவிடைகளான் விளங்க வெடுத்தோதிய வாற்றானு
முணர்க. அவ்வுயிர்தாம், மலமொன்றே யுடைய விஞ்ஞானகலரும், மலங் கன்ம மென்னு
மிரண்டுமுடைய பிரளயாகலரும், மலங் கன்ம மாயை யென்னு மூன்று முடைய சகல
ருமென மூவகையராதலின், எல்லா மென்றார். மலரடி வினைத்தொகை. சிதசித்பிரபஞ்ச
மெங்கு மலருகின்ற சிலம்படி யென்க. சிலம்பு-ஆரணநூபுரம். அது சிலம்புதலிற் சிலு
ம்பெனப்பட்டது. ௧

இதன் பொருள்:—அம்பலத் தாடுந் துரிய வதிகார சிவனென முழுமுதல்வன்
உலகெலா முணர்ந் தோதற்கரிய சொரூப சிவமாயும், அலகில் சோதிமயமான விலய சிவ
னாயும், நிலவுலாவிய நீர்மலி வேணியுடைய போகசிவனாயு நின்றானாகலின், யாம் இவ்
வருட்காவிய விலக்கியம் யினிது முடிதற் பொருட்டு அவன் மலர் சிலம்படியினை வாழ்த்தி
வணங்குவா மென்றவாறு. யாம் என்று மெழுவாய் வெளிப்படாது நின்றது. நிலவு
ஞானசந்திரகலை. நிலவு உலாவிய-நிலவு விளங்காநின்ற. உலாவியவென்பதனைச் செய்திய
வென்னும் வாய்பாட்டு வினையெச்சமாகக் கொண்டு நிலவுலவும்படி நீர்மிகாநின்ற வேணி
யனெனப்பொருளுரைத்தலு மொன்று. வேணி-அனைத்தையு மொரியல்பா னெருங்கறியுஞ்
சருவஞ்ஞத்துவமெனப்படு மொரு பெருஞ் சுடர்முடி. அளவெனினும் அலகெனினுமொக்
கும். அம்பலஞ் சிதாகாசம். ஆடல்-ஐந்தொழிற்கூத்து. அது "தோற்றந் துடியதனிற்
றோயுந் திதியமைப்பிற்-சாற்றியிடு மங்கியிலே சங்கார-மூற்றமா-யூன்று மலர்ப்பதத்தே
யுற்ற திரோதமுத்தி - நான்ற மலர்ப்பதத்தே நாடு" என்பதனா னறிக. மற் றிவ்விறை
நடனந் திருவஞ்செழுத் தருட் கூத்துமாம். அது "சேர்க்குந் துடிசிகரஞ் சிக்கனவா
வீசுகரம் - மார்க்கும் யகர மபயகரம் - பார்க்கிலிறைக்-கங்கிநகர மடிக்கீழ் முயலகனார்-
தங்கு மகரமது தான்" என்பதனா னுணர்க. இத்திருக்கூத்தானே ஆன்மாவுக்கு மும்மல
நீக்கமெனப்படும் பாச விமுத்தியும், சிவத்துவ விளக்க மெனப்படும் பரமானந்த வனுபூதி
யுங் கைகூடும். அது "மாயை தனையுதறி வல்வினையைச் சுட்டுமலஞ் - சாய வமுக்கி
யருளானெடுத்து - நேயத்தா-லானந்த வாரிதியி லான்மாவைத் தானழுத்த-முனெந்தை
யார்பரதந் தான்" என்பதனா னறிக. இவ்விருதயகமல சிற்சபா நடன தகரவித்தை
வரலாறும், இதனையுபாசிக்கு முறையுஞ் சாந்தோக்கியங் கைவல்லியமுதலிய வுபநிடத
ங்களிற் கண்டுகொள்க. இன்னு மிவ்விருதய புண்டரீகவியல்பு சிறப்பாற்றான் விரித்தெ
டுத்தோதுமாறு ஆகமங்களுட் காண்க.

இறைவன் றன்னியல்பெனப்படுஞ் சொரூப விலக்கணமும் பொதுவியல்பெனப்
படுந் தடத்த விலக்கணமு முடையனென வேதாகமங்க ளோதுதலின், அவற்குத்
தன்னியல்பெனப்படுஞ் சொரூபவிலக்கண மிதுவென்பார் உலகெலாமுணர்ந் தோதற்கரி
யவ னென்றும், பொதுவியல்பெனப்படுந் தடத்த விலக்கண மிதுவென்பார் நிலவு லா
விய நீர்மலி வேணிய னலகில் சோதிய னம்பலத் தாடுவான் என்று மோதியருளினார்.
நிலவுலாவிய நீர்மலி வேணியுடைய சதாசிவத் திருமேனி மேலுள்ள அருவ தத்துவங்
களையுங் கீழுள்ள வுருவ தத்துவங்களையும் வியாபித்து நிற்குஞ் சிறப்பு நோக்கி, அதனை
முற்கூறி யருளினார். அங்ஙனங் கூறினும், அலகில் சோதியனாய் நின்றே நிலவுலாவிய

நீர்மலிவேணியனும் அம்பலத்தாடியுமென்பது கருத்தாம். இனி யிவ்விரண்டு திருமேனி களோடும் அம்பலத்தாடியானென வுடன்பொடு புணர்த்து வினைமுதலாக வோதியமையே சுத்திருமேனியங் கூட்டத் தடத்தத் திருமேனி மூன்றுமாறு காண்க. சேக்கிழார் முனிவர், தாம் "உலகெலா முணர்ந் தோதற் கரியவ"னென்று நடராசப்பெருமான் சிதாகாசத் திருவம்பல வெளியில் அசரீரிவாக்கா லெடுத்தருளக் கேட்டு மெய்யுணர்ந்து இவ்வருட்காவிய விலக்கியஞ் செய்கின்றமை உலகிற் குணர்த்தும்பொருட்டு, அதனை முதலடியாக நிறீஇ இங்ஙன மங்கல வாழ்த்துக் கூறியருளினார். அது "அருளின் னீர்மைத் திருத்தொண் டறிவருந் - தெருளி னீர்த்து செப்புதற் காமெனின் - வெருளின் மெய்ம்மொழி வானிழல் கூறிய - பொருளி னாதி மொழிப்புகல் வாமன்றே" என ஆசிரியர் தாமே பாயிரத்துட் கூறியவாற்றானு முணர்க. அறிவரும்-அறியவரும். வெருளின் மெய்ம்மொழியாகிய வானிழலென்க. வானிழல்-அசரீரித் திருவாக்கு. ஆமென்பது-குறிப்புமொழியாய் ஆகாமைவிளக்கிநின்றது; "உடம்போ டுயிரிடை நட்பு" என்புழிப்போல.

இங்ஙன ஞானமுதலிய நான்கு நெறியினு மொழுகி வழிபடற் குரிய சொரூபமும், நிட்களமும், நிட்களசகளமும், சகளமுமென்னு நான்கு மிதன்கட் பொருந்த விளங்கக் கொண்டாசிரியர் மங்கலங் கூறி யருளியது, தாம் பாட வெடுத்துக்கொண்ட செந்தமிழ்க்காவிய விலக்கியத் தலைவரான உண்மை நாயன்மார் இந்நான்கு திருமேனியும் பற்றி நாற்பாத நெறியினு மொழுகிப் பரமுத்தி பதமுத்திக ளடைதற்குரிய பெற்றிமை விளக்க வேண்டியென்க. இங்ஙனமாதலின், இம்மங்கலத் திருப்பாட்டு வாழ்த்து வணக்க மடிப்பாடாக வருபொருளுரைத்தலாயவாறு காண்க.

இத்திருப்பாட்டிற் கிவ்வாறன்றி விஞ்ஞானகலர் முதலிய மூவருக்கும் அருள் வழங்குதற்குரிய விறைவ னருவுருவத் திருமேனிகள் பொருளாகக்கொண் டுரைப்பாருமுளர். அவர் அலகில் சோதிய னென்பதனை அம்பலத்தாடுவானுக்கு விசேடணமாக்குப. அதனால், அருவம் அருவுருவம் உருவம் என்ற மூவகைத் தடத்தத் திருமேனிகள் பெறப்படுதலன்றி யகண்டாகார நித்தவியாபக சச்சிதானந்த சொருபத் திருமேனி பெறப்படாமையானும், அவ் வுலோகைக நாயகனான நடராசப்பெருமானைச் சகலர் வழிபடற்குரிய மூர்த்தி யென்றல் ஏலாமையானும், அது பொருளன்மையுணர்க. இனி உலகெலா முணர்ந் தோதற்கரியவ னென்பதற்குத் "திருவருட் குறிச் சிவஞானத்தால் இவ்வியல்பினனென வறிந் தோதி யுணர்ந்தும் அவ்வியல்பெல்லாந் தோதுதற்கரியவன்" என்று ஆறுமுக முனிவ ருரைத்தார். "மறையினா லயனான் மாலான் மனத்தினான் வாக்கான் மற்றுங்-குறைவிலா வளவி னாலுங் கூறொணா தாகி நின்ற - விறைவனார் கமல பாத" னெனவெடுத்தோதிய வாசிரியர் சகலாகமபண்டிதர், பின்னர் "அருளினு லாகமத்தே யறியலா மளவி னாலுந் - தெருளலாஞ் சிவனை ஞானச் செய்தியாற் சிந்தை யுள்ளே - மருளெலா நீங்கக் கண்டு வாழலாம் பிறவி மாய - விருளெலா மிரிக்க லாகு மடியரோ டிருக்க லாமே" என்று கூறி யருளினார். இதனானே, இறைவனியல்பு சிவஞானத்தா லுணரப்பட் டதன்றி யேனை யோதவும் படுவதா மென்பது போதருதலின், அவ்வுரை போலியாமென் றொழிக. இனி யுணர்தற்கு மோதற்கு மரிதாம் பொருள் சூனியமாமாலென வாசங்கை நிகழ்ந்தவழி, ஆண்டுணர்ந் தோதற்கரிய னென்ற கருத்துப் பசு பாச ஞானங்களான் முறையே சிந்தித்தற்கும் விவகரித்தற்கு மெய்தா நுண்ணிய னென்பதாகலின், தன் னருளானே உள்ளத்தின்கண் வைத்தாராய வுணர்வார்க்கு முதற்பொருள் அவ்வாற்

றூனை யுணரவு மோதவும் படுவதாகி யுள்ளதொரு சிவசத்தாமெண விடுப்பார், அல
கில் சோதிய னம்பலத் தாடுவான் - மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவா மென்று
ரென்பது. இது "பாசஞா னத்தாலும் பசுஞா னத்தாலும் பார்ப்பரிய பரம்பரனைப் பதி
ஞானத் தாலே - நேசமொடு நாடி" யென்னுஞ் சிவஞானசித்தியினு முணர்க.

ஆறுமுகமுனிவர் இவ்வாறே ஆசிரியர் சொற்பொருட் பெற்றி தேற மாட்டாது,
ஆண்டாண்டுப் போலியாக வுரைத்தனவும், வழுமலிதர வுரைத்தனவு மிகப்பலவாம்.
ஆறுமுகமுனிவ ருரை கூறுதொழிந்த புராணங்கள் சிலவற்றிற் கிராமலிங்கரென்பா
ரொருவர் திருவிருத்தங்கடோறும் ஆசிரியர்கொண்ட சொற்பொருள் விருத்தமுற வுரை
கூறி முடித்தார். இவரெல்லாந் தொல்காப்பிய முதலிய நல்லியற்புலமை நிரம்பி யுரை
கூறினு ரல்லரென்பதற் கிவர் வாக்கிய வியல்வழுக்களே யுறுசான்று மெனக. இனி
வடலூர் இராமலிங்கர் 'உலகெலாம்' என்பதற்குப் பலவாறு விசற்பித் துரைத்தன
சொல் வழுவிராய் வேதாகம வுரையளவை மாறுகலின், உலகங் கொள்ளா தெனக.
"எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு - கொள்ளாத கொள்ளா துலகு."
திருவாசகச் செந்தமிழ் அருமறைக்கு இவர்போல ஒருவர் போலியும் பொய்யுமலிய வுரை
யொன் றெழுதி வெளியிட்டார். இவை கையறியா மாக்கள் புல்லவையினன்றிச் செந்தமி
ழிலக்கிய விலக்கண வைதிக சைவநூ லுரைகளை முற்றக் கற்றுவல்லமுதுவோர் நல்லவை
யிற் செல்லப்பெறு வென்பது. இவரிவ்வாற்றாற் "பொய்படு மொன்றோ புனைபூணுங்
கையறியாப் - பேதை வினைமேற் கொளின்" என்னும் பொய்யாமொழிக்கு இலக்கியம்
புதுக்கினுரெனக. இது செந்தமிழ்ச்சந்தச் செய்யுளானே வேதாகம வருணெறி யறிவுறு
க்கு முத்தமகாவிய மாகலின், தொல்காப்பிய முதலிய பழைய விலக்கணங்களும், தேவா
ரந்திருவாசகமுதலிய திருமுறை யிலக்கியங்களும், திருக்குறளிலக்கியமும், பத்துப்பாட்டு
எட்டுத்தொகை முதலிய சங்கவிலக்கியங்களும், வடமொழி வைதிக சைவ நூல்களு
மரபாற் கற்றுவல்ல வாசிரியரோ இதன் மெய்ப்பொருளுரைக்க வல்லுநரெனக.

பெரியபுராணம் பரமசிவ னருட்பத்தி ஞானநெறிச்சென்ற வித்தகரான வுண்மை
நாயன்மார் கருமஞான வருளொழுக்கஞ் சரித்திரத்தில் வைத்துணர்த்துந் திருவருட்
காவியமாம். இதன்கண் அகம்புறமென் றிருதிறத்துப் பதினூற்றிணை வழக்கும், மனு
முதலிய வான்றோர் வகுத்த வருணவாச்சிரம வழக்கும், புறநெறிச்சமயப் பூர்வபக்க
வழக்கும், அகநெறிச்சமய வாசாரவழக்கும், வைதிகசைவ மெய்ந்நெறி வழக்கும், உண்
மைச் சரியை வழக்கும், உண்மைக்கிரியை வழக்கும், உண்மையோக வழக்கும், உண்
மைஞான வழக்கும், குருலிங்க சங்கம வழிபாட்டு வழக்கும், ஒட்பமுந் திட்பமு நுட்ப
மும் பொருந்தி யுவமையின்றமா றேதப்பட்டன. இஃதிப்பெருமையெல்லா மொருங்கு
டைத்தாய்ச் சிறப்புறுதலினன்றே இதனைத் திருச்சிற்றம்பல மகா சன்னிதி யரங்கிருந்து
கேட்ட வளவர்பிரானுகிய அநபாயவேந்தன் இஃதருண்மொழி யென்று கொண்டு இஃ
தியற்றியருளிய சேக்கிழாருக்கு அருண்மொழித்தேவ ரென்றுஞ் சிறப்புப்பெயர் வழங்கி
யிதனைப் பதினொரு திருமுறைகளோடொன்றென வைத்துப் பன்னிரண்டாந் திருமுறை
யென்று போற்றினுனென்பது.

இனி இக்காலத்தொரு சிலர் "சேக்கிழார் தெய்வப்புலமை நிரம்பி யிதுபாடிற்
றிலர்" என்றும், "பலநூலாய்ந்த புலமை வலியானே யிது பாடினர்" என்றும், "அவர்
பாடிய நாயன்மார் சரித்திரங்கள் ஓரோரிடங்களிற் குறைவுற்றன" என்றும், "அக்குறை

களை நாங் கண்டறிந்தாம்" என்றும், "அவற்றையு மாண்டாண்டுக் கூட்டிப் பொருள் கூறல் வேண்டும்" என்றும், தமக்குவேண்டியவாறு பிறழ்த்துத் திருமுறை வரம்பழிப்பர். மிக்குக் "களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்—குளித்தானைத் தீத்துரீஇ யற்று" எனத் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் புல்லறி வாண்மையு ளோதியருளுதலின், இந்நீரரைக் காரணங் காட்டித் தெளிவித்தல் கூடாதாகலானும், வைதிக சைவ வரன் முறை போற்றுந் தமிழ் நல்லாசிரியர் வழிப்பட்ட நன்மாக்க ளிவர் பிதற்றுரையாற் பேது றுராகலானும், இவர் புல்லறிவுரை களைந்து மெய்ப்பொருடேற்ற வேண்டிற்றில மென்க.

இது முதற் றொடங்கி நமிநந்தியடிகள் புராண மீறாக வொருகாண்டமாகவும், ஆளுடையபிள்ளையார் புராண முதலாக வெள்ளானைச் சருக்க மீறாக மற்றொருகாண்ட மாகவும், வகுக்கப்பட்டது. இக்காண்டங்களுட் சருக்கங்கள் பதின்மூன்றாகப் பிரித்து முறை செரிக்கப்பட்டன. இதன் திருவிருத்த முழுத்தொகை நாலாயிரத்திருநூற்றைம் பத்து மூன்று.

இதன்கண் மாமறையோர் மரபில் வந்தவதரித்த நாயன்மார் புராணம் பன்னி ரண்டு. சிவமறையோர் மரபில் வந்தவதரித்த நாயன்மார் புராண மிரண்டு. மாமா த்திரவேதியர் மரபில் வந்தவதரித்த நாயனார் புராண மொன்று. முடிமன்னர் மர பில் வந்தவதரித்த நாயன்மார் புராண மாறு. குறுநிலமன்னர் மரபில் வந்தவதரித்த நாயன்மார் புராண மைந்து. வணிகர் மரபில் வந்தவதரித்த நாயன்மார் புராண மைந்து. வேளாளர் மரபில் வந்தவதரித்த நாயன்மார் புராணம் பதின்மூன்று. இடையர்மரபில் வந்தவதரித்த நாயன்மார் புராண மிரண்டு. சாலியர், குயவர், தயிலவினையாளர், பரத வர், சான்றார், வண்ணார், சிலைமறவர், நீசர், பாணர் முதலிய மரபுகளில் வந்தவதரித்த நாயன்மார் புராணங்கள் ஒவ்வொன்று. திருமரபு குறித்துரையா நாயன்மார் புரா ணம் பதின்மூன்று. திருக்கூட்டந்தன்னிற் றிருப்பதியறிந்த நாயன்மார் புராண மிர ண்டு. திருமரபறித்த நாயன்மார் புராண மிரண்டு. திருப்பேரறிந்த நாயன்மார் புராண மொன்று. திருமரபு தெரியாத நாயன்மார் புராண மேழு. ஊரறியாத நாயன்மார் புராண மேழு. பேரறியாத நாயன்மார் புராண மெட்டு. இறுதியிலக்கங் கண்ட நாய ன்மார் புராண மொன்று. எண்ணித்தொகையென் றறியாத நாயன்மார் புராண மெட்டு. ஈண்டுக்கூறிய வகைகட்குப் பெயர் வரலாறு புராணத்து ளுற்றுணர்ந்துகொள்க. மற்றுப் புராண வரலாற்றுள் ளிவை வெளிப்படையாம்.

திருத்தொண்டத்தொகையுட் போந்த நாயன்மார்களுட் குருவருளால் வீடுபேறு தலைக்கூடினோர் ஆளுடையபிள்ளையார் திருநாவுக்கரசர் முதற் பதினொரு திருப்பெயர். சிவலிங்க வழிபாட்டால் வீடுபேறுதலைக்கூடினோர் எறிபத்தர் கலையர் முதன் முப்பது திருப்பெயர். திருவேடவழிபாட்டான் வீடுபேறுதலைக்கூடினோர் திருநீலகண்ட ரியற்பகை யார் முதலாகப் பத்தொன்பது திருப்பெயர்.

அற்றே லஃதங்ஙனமாக; சேக்கிழார் திருவருட்புலவரன்றே; இவர்க்கு நாயன்மார் சிலர் மரபு ஊர் பெய ரறியலாகாத தென்னையெனின்,—திருவருள்காட்டிய நெறியானே சேக்கிழார் திருத்தொண்டர் புராணம் பாடியருளினு ராதலின், அது சடாவன்றென்க. "அருளி னீர்மைத் திருத்தொண் டறிவருந்-தெருளி னீரிது செப்புதற் காமெனின்-வெரு ளின் மெய்ம்மொழி வானிழல் கூறிய-பொருளி னாது மெனப்புகல் வாமன்றே" "வெறி யார் பொழிற்சண்பையர் வேந்தர்மெய்ப் பாகரத்தைக்-குறியேறிய வெல்லையறிந்து மும்

பிட்டே னல்லேன்-சிறியே னறிவுக்கவர் தந்திருப் பாதந்தந்த-பெறரியே சிறி தியானறிநீர் மைகும் பிட்டேனன்பால்" என வாசிரியர் தாமே யோதிய திருப்பாட்டுக்களாலும் இது கடைப்பிடிக்க. அஃதேல், திருவருள் நாயன்மாருட் பலர் மரபு ஊர் பெயர் சேக்கிழாருக்குக் காட்டிச் சிலர் மரபு ஊர் பெயர் அவருக்குக் காட்டாதொழிந்த தென்னையெனின்,—நம்பியாரூரர் திருத்தொண்டத்தொகை அருளிச்செய்தது திருவருள் காட்டிய வழியாலென்பது யாவர்க்கு மொப்ப முடிந்த பொருளாம். அத்திருவருள் சிவபிரான் திருவருளானே வீடுபேறுதலைக்கூடிய நாயன்மாரை யின்னையுகத்தில் வாழ்ந்தாரடிகளென்முறைப் பிறரு முளராகவும், அறுபத்துமூன்று திருப்பெயரையே தெரிந்துகொண்டவர்க்குக் காட்டித் திருத்தொண்டத்தொகை பாடுவித்தருளியது, யாதுகாரணம் பற்றியென்று வினவுழிப் பயப்படுவிடையே, ஈண்டும் விடையாமென்றொழிக.

இனித் திருத்தொண்டத்தொகையுட் போந்த அறுபது தனித்திருப்பேர் புராணங்களோடு அத்திருத்தொண்டத்தொகை தந்தருளிய நம்பியாரூரர் அவர் தந்தையார் சடையனார் அவர் தாயார் இசைஞானியார் தம்மையுங் கூட்டத் தனித்திருப்பேர் புராணம் அறுபத்துமூன்றுமாறும், அவ்வறுபத்து மூன்று புராணங்களோடு திருக்கூட்டப்புராணமொன்பதுங்கூட்டப் புராண முழுத்தொகை எழுபத்திரண்டாமாறும், கண்டுகொள்க.

இனித் திருவருள் திருத்தொண்டத் தொகையுட் போந்த நாயன்மார் முன்னை வரலாறியாதுஞ் சேக்கிழார் நாயனார்க்குக் காட்டிக் கூறுவித்தருளாதாயிற்று. மற்றது அத்திருத்தொண்டத்தொகைப் பதிக மருளிச்செய்த திருநாவலூரர் பெருமானார் வரலாறு மாத்திரம் அவர்க்குக் காட்டிக் கூறுவித்தருளிற்று. இவ்வண்ணமருளிய திருக்குறிப்பு யாதெனின்,—நன்றுவினாயினாய்: திருத்தொண்டத்தொகையுட் போந்த நாயன்மார் முன்னை வரலாறுக டனித்தனி கூறப்புகின் அளவுபடாமையானும், அவை கூறாமையாற் பெரியபுராணத்தவ்வவர் சரித்திர வொழுக்க வாராய்ச்சிக்கு நேருங் குறைபொன்றின்மையானும், அது அந்நாயன்மார் முன்னை வரலாறுகள் சேக்கிழார்நாயனாருக்குக் காட்டிக் கூறுவித்தருளாதாயிற்று. மற்று நம்பியாரூரர் புராணம் அத்திருத்தொண்டர் புராணத்திற்கு உபோற்காதப் பிரகரணமாய் அளவுபட்டு நிற்குஞ் சிறப்புடைமையான், அவர் முன்னை வரலாற்றினை மாத்திரம் அது சேக்கிழார் நாயனார்க்குக் காட்டிக்கூறுவித்தருளுவதாயிற்று. இஃதென்சொல்லியவாறோவெனின்,—திருத்தொண்டத்தொகையுட்பட்ட நாயன்மார் புலர் சாதி குலம் பிறப்பாற் சிறந்தாரல்லர்; சாதி குலம் பிறப்பாற் சிறந்த நாம் அவர்தஞ் சரித்திரங்கேட்டு வியப்புறக்கடவமாவதல்லது அவர் தம்மை வழிபடக்கடவமாவ தல்லேமென்று உலகத்தார் தம் புல்லறிவாலமைதந்து பிரயத்திற்களாவர்; திருக்கைலாயக்கோயிலிற் சீகண்ட சிவபெருமானுக் கணுக்கத் தொண்டராயமர்ந்த ஆலாலசுந்தரர் சிவத்துவிச வேதியர் திருமரபில் வந்தவதரித்துச் சிவபிரானுற் றடுத்தாட்கொள்ளப்பட்டு அவர் அடியெடுத்துக் கொடுத்தருளத "தில்லைவா ழந்தணர்த மடியார்க்குமடியேன் திருநீலகண்டத்துக் குயவனார்க் கடியேன்" என்றிவ்வாறு தனித்தனி திருத்தொண்டர் பெயரெடுத்தோதி அவரடியார்க்கெல்லாந் தாமடியாரென்று சேவைசெய்தருளிய முறை கேட்பின், அவ்வுலகர் பொய்ம்மாயச் சாதி குலம் பிறப்புத்தருக்கறறு அவ்வடியார் மெய்யருளடிமைப்பேறெய்தி கூடுத லொருதலையாமென்று கடைப்பிடித்தத். திருவருள் அந்நம்பியாரூரர் முன்னை வரலாறு மாத்திரமே யெடுத்துச் சேக்கிழார்க்குங் காட்டிப் பாடுவித்தருளிய தென்றவாறுமெனக்.

உமாபதிசிவாசாரியர் பெரியபுராண மகிமை வரலாறெல்லாம் இனிது நனி விளங்குமாறு திருத்தொண்டர்புராணவரலாறு எனப் பெயர்தந்து ஒருநூல் இயற்றியருளினார். உமாபதிசிவாசாரியர் அதுவேயுமன்றித் திருத்தொண்டர் சரித்திரம் எளிதினறியும் பொருட்டுத் திருத்தொண்டர் புராணசாரமெனவு மோர்நூலியற்றி யருளினார்.

சிவஞானயோகிகள் இத்திருத்தொண்டர் திருநாமங்களைப் பத்தியோடு என்றும் பாராயணஞ் செய்வார்க் குபகாரமாகத் திருத்தொண்டர் திருநாமக்கோவை எனக் கலிவெண்பாவால் ஒரு நூல் இயற்றியருளினார். திருத்தொண்டத்தொகையினையும் இத்திருத்தொண்டர் திருநாமக்கோவையினையு மந்திரமாகக்கொண்டு பத்தியோடு நித்தலும் பாராயணஞ்செய்வோர் கைதவமு நல்லறிவுங் கற்பனையு மையலுந் தீர்ந் - தத்துவிதாநந்த வகண்டபரிபூரணத்து - னித்தியமாக வாழ்தலொருதலையாம். திருத்தொண்டர் திருநாமபாராயண வழிபாட்டிற்குத் திருத்தொண்டத்தொகையே யமைவதாகவும், சிவஞான யோகிகள், அவர் திருநாமக்கோவை வேறுசெய்தருளியது எற்றுக்கெனின்,—திருத்தொண்டத்தொகையுள் அத்திருத்தொண்டத்தொகை திருவாய் மலர்ந்தருளிய சமயாசாரியரான திருநாவலூரார்பெருமானாரும் அவர் தந்தை தாயராகிய சடையனார் இசைஞானியாரென்பாரும் அடங்காமையின், அவர்தந் திருநாம பாராயணமுமுட னெய்தல்வேண்டிச் சிவஞானயோகிகள் திருத்தொண்டர் திருநாமக்கோவையென்று அங்ஙனம் வேறுநூல் அருளிச்செய்தாரென்க.

இனித் திருமுறைகண்ட புராணம், அறுபான் மும்மை நாயன்மார் பரிபூரணமெய்திய திருநக்ஷத்திரக்கோவை, திருப்பதிகம் பெற்ற திருப்பதிக்கோவை, திருப்பதிகக்கோவையென்பன திருமுறையாராய்ச்சிக் கின்றியமையாத நூல்களாம். இவை யருளிச்செய்த பெரியார் திருநாமம் புலனாகவில்லை. இவை அருளிச்செய்தார் உமாபதிசிவாசாரிய ரென்பாரு முளர்.

## திருப்புகழ்.

இஃது அறுமுகக்கடவு டிருவருட்செல்வரான வருணகிரிநாத ரருளிச்செய்தது. இது அறுமுகக்கடவு டிருப்புகழைப் பொருளாகக்கொண்டமையின், திருப்புகழ் என்று அங்ஙனம் வழங்கப்படாநின்றது. திருப்புகழ் என்பது - திருப்புகழையுடையதெனப் பிரபந்தத்தின்மே னிற்றலின், அன்மொழித்தொகை. யாவர் திருப்புகழென்னு மவாய்விலக்கண் அறுமுகக்கடவு டிருப்புக ழென்பது தானே போதருமென்க. இஃது சந்தத்தொடைச் செந்தமிழ்த் திருப்பாட்டுக்களாற் சிறக்குந் திவ்விய பிரபந்தம். இது சொற்சுவை பொருட்சுவை மிக நிரம்பியது. இது அறுமுகக்கடவு டிருப்படைவீடுகண் மேலதாயும் பொதுவாயும் விளங்கும். இத்திருப்புகழ் பதினாயிரமென்பது, "அருணகிரி நாதர் பதினாயிர மென் - றுனைசெய் திருப்புகழை யோதிர்—பரகதிக்கோ-ரேணி யருட்கடலுக் கேற்ற மனத்தளர்ச்சிக்-காணி பிறவிக் கரம்" என்னு மான்றோர் வாக்கா னறியப்படும். இஃதருட்பாவாகலின், முருகக்கடவு ணித்திய நைமித்திக வாராதனைப் போழ்தினெல்லாம் அப்பிரான் மந்திரமொழிபோலக்கொண்டு பாராயணஞ் செய்யப்படுகின்றது. முருகக்கடவு டிருவடிப்பத்திஞானவான்பயிர் வளர்த்தற் கிது சாலச்சிறந்த சந்தப் பிரபந்தமாம். இத் திருப்புகழ் ஞானமிர்தம் விருப்புடனோதல் கேட்டல்களானுகர்தல் செய்து அறுமுகக்

கடவுடிருவருட்செல்வராய் வாழு மிம்பர் மாநிலப்புலவர் அறிவி லக்கட லமிர்த முண்டு சுவர்க்கத்தில் வாழும் புலவர்களைப் பொருளாகப் போற்றல் செய்ய மாட்டார். இவ்வரு ணகிரிநாதர் இதுவேயன்றித் திருவகுப்புக் கந்தரலங்காரங் கந்தரனுபூதி முதலிய பிர பந்தங்கள் வேறு பலவும் தமிழுலகுய்ய அருளிச்செய்த பெரியார். திருவருட்பாவாத லொபபுமையானே திருப்புகழ் வரலாறு திருமுறை வரலாற்றி னிறுதிக்கட்டந்து கூறி னும்.

## நாலாயிரப்பிரபந்தம்.

திருமா றிருவருட் செல்வர்களான பெரியோர் தம் பெருமா டிருவடித் தாம ரைகட் கன்பாற் சாத்திய பாமாலைகள், நாலாயிரப்பிரபந்தமென வழங்கப்படும். சுருதி மிருதி புராண விதிகாசங்களி னாராயணக்கடவுளைப்பற்றி யோதிய வசனத்தொ குதிகளின் செம்பொருள்களைத் தமிழாக மறிந்துய்யத் திருமா றிருவடித் தொண்டராகி மெய்யுணர்ந்த ஆழ்வார்கள் இங்ஙனஞ் செந்தமிழ்ப் பிரபந்தமாக அருளிச் செய்தார். வைணவப் பெரியோர் இவை தம்மைத் தமிழ்வேதமென் றங்ஙனம் வழங் வர். அவருளொருசாரார் இந்நாலாயிரப் பிரபந்தமே ஒப்புயர்வி றிராவிட வேதமெனக் கொள்ப. மற்றொரு சாரார் வடமொழி மாமறைகளை யொப்புயர்வில் வேதமெனக்கொ ள்ப. இம்முறையானே முன்னையோர் தென்கலை வைணவர்க ளெனவும், பின்னையோர் வடகலை வைணவர்களெனவும், இருபாலராயினர். அங்ஙனமாயினும், நாலாயிரப்பிரப ந்த திருவருட்பாக்களான தமிழ்வேத மென்றற்கண் வைணவரெல்லாரு மொத்த கருத்து டையரோவென்பது. நாலாயிரப்பிரபந்தம் இங்ஙனந் திருவருட் சுருதியாதலிற் றிருமால் ஆராதனையினும் ஏனைக் கர்மானுட்டானங்களினும் அவை தம்மை வைணவர் திருமந்திர மாகக்கொண்டு பாராயணஞ் செய்ப. இப்பிரபந்த வாசாரியரான ஆழ்வார் திருவுருக் களைத் திருமால் சமயத் தான்றோர் திருமா றிவ்வியத் தலிகளினும் வேறு புனிதத் தலங் களினும் பிரதிட்டை செய்து அவர்க்குப் பூசை திருவிழாப் புரிந்து வழிபடுப. இப்பிர பந்த பாராயணமும் இப்பிரபந்த வாசாரியர் திருவுருத்தாபனமும் எய்திடப் பெறாத திருமா றிருக்கோயில்க ளெவ்விதவைபவ முடையவேனும், திருமா றிருவருட்பொலி வதிக முடையவாகாவென்பது திருமால் சமயத்தார் கொள்கை.

தேவார திருவாசகங்கள் சிவபத்திஞான வான் பயிர் வளர்த்தற்குச் சைவர்களுக் கின்றி யமையாத ஞானாமிர்தமென்பது நன்மக்கட் கெல்லா மொப்ப முடிந்த பொருளா னாற் போல, நாலாயிரப்பிரபந்தந் திருமா றிருவடிப் பத்திஞான வான்பயிர் வளர்த்தற் கின்றி யமையா ஞானாமிர்த மென்பது நன்மக்கட்கெல்லா மொப்ப முடிந்த பொருளா மென்க.

நாலாயிரப்பிரபந்தத்துண் முதலாயிரம் பெரியாழ்வார், சூடிக்கொடுத்த நாச்சி யார், குலசேகரப்பெருமாள், திருமழிசைப்பிரான், தொண்டரடிப்பொடியாழ்வார் அருளி ச்செய்தன. பெரியதிருமொழி திருமங்கையாழ்வா ரருளிச்செய்தது. இயற்பா-பொ ய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், திரும ங்கையாழ்வார், திருவரங்கத்தமுதனா ரருளிச்செய்தன. திருவாய்மொழி நம்மாழ்வா ரருளிச்செய்தது.

இனி நாலாயிரப்பிரபந்தத்திற்கு வடகலைதென்கலை வல்ல வைணவ வாசாரியர் கள் வியாக்கியானங்கள் வடமொழி தென்மொழி விரவிய நடையாற் சிறிதாகவும் பெரி

தாகவும் பற்பல செய்திட்டார். நாலாயிரப்பிரபந்தஞ் செந்தமிழ்த்தொடை சிவணிய பாவானும் பாவினங்களானுஞ் சந்தவிசை பொருந்தி விளங்குந் தமிழாய் வடமொழி வேத வேதாந்தார்த்தங்களும் புராண விதிகாசார்த்தங்களு மூட்பொருளாகக்கொண்டு நடத்தலாற் றமிழ்ப் புலமையோடு வடகலை வேதமுதலிய வோதியுணர்ந்தாரே அதன்பொருட் டிட்ப நுட்ப நன்கு காண வல்லார். பிற்காலத்து வைணவப் புலவர் சிலர் மதாபிமானத்தா னாண்டாண்டுச் சிவநிந்தை பொதிந்த நூலுரைகள் செய்தார். நாலாயிரப்பிரந்த மூசுறிஞரான வைணவப் பெரியரா லருளிச்செய்யப்பட்ட நற்றமிழ் நூலாகலின், அக் குற்றத்திற் மிக்க சேய்த்தாயிற்று. இனி நாலாயிரப் பிரபந்தங்களி னொரோ ரிடங்களிற் சிலவுருத்திரர் திருமாலுக்குத் தாழ்ந்தவராக ஓதப்பட்டார். அவர் குணிருத்திரக் கடவுள் கூறான விசாலாக்கன் றுணு சங்கார வுருத்திரனென்பாரே. இனி மகா ருத்திரனாகிய பரமசிவன் றுரியமூர்த்தி யாகலின், அவ்வாதி பகவனைப்பற்றி ஈண்டாராய்ச்சி யில்லை யென்பது கூறல்வேண்டாம். "வைஷ்ணவேஷு புராணேஷு யோவைகக்ஷ்யஸ்து ஸ்ரூயதே। ஸ துஸ்யாஸ்ய ஹராஸ்யாஸ்ய விஹத்தேவ கேவலம்" என்று பராசர புராணங் கூறுதலானும், பிறவாற்றானும், அவ்வுருத்திரர் அமிசபேத விடய மாதல் வச்சிரலேபமாக நாட்டப்படு மென்க.

வைணவர் தமிழ் வேத மாத லொப்புமை நோக்கி நாலாயிரப்பிரபந்த வரலாறு திருமுறை வரலாற்றைச் சாரவைத்தோதினும்.

## திருக்குறள்.

தமிழ்வேத வொப்புமையினானும், சங்க விலக்கியங்களுக்குச் சிரத்தான மாகி நிற்கு மேம்பாட்டினானும், திருமுறை யிலக்கியத்திற்குஞ் சங்க விலக்கியத்திற்கும் இடையே வைத்துத் திருக்குறள் வரலாறு கூறலுற்றாம். திருக்குறள்: திருவள்ளுவ நாயனா ரருளிச்செய்த திருமுறை. இது குறள்வெண்பாவா லருளிச்செய்யப்பட்டமையின், திருக்குறளென் றாயிற்று. திருக்குறளென்பது - திருக்குறள்வெண்பாவை யுடையது என அன்மொழித்தொகையாய் நூலிற்குக் காரணக்குறியாயிற்று.

மற்றிஃது அறம் பொரு ளின்பமென்னு முப்பாலுடைமையால் முப்பாலென்றும், இருக்கு எசுசு சாமம் அதர்வணம் என நான்கவாய் முன்மறைகட்குப் பின்மறையாயெழுந்தமையின் உத்தரவேத மென்றும், தெய்வவருளாற் பிறந்தமையிற் றெய்வநூலென்றும், பொய்யாமொழியா னடத்தலிற் பொய்யாமொழி யென்றும், வேம்புங் கடுவும் போல வெஞ்சொற் - றுங்குத லின்றி வழிநனி பயக்குமென் - றேம்படைக் கிழவியின் அறம் பொரு ளின்பம் வாயுறுத்தருளிச் செய்தலின் வாயுறைவாழ்த் தென்றும், தமிழான் மறைவாய பொருள் கிளத்தலிற் றமிழ்மறை யென்றும், அந்தணர் அரசர் வைசிய ரென்னுந் துவிசர் மூவரு மோதுதற் குரிய சிறப்பியல்புடைய நான்மறைகளும் போலாது அந்தணர் அரசர் வசியர் வேளாளர் என்னு நாற்பால் வருணத்தாரு மற்றைச் சங்கர சாதிகளுட்பட்ட நன்மக்களு மோதுதற்காம் பொதுவியல் புடைத்தாய் மறைபொருள் கிளத்தலிற் பொதுமறை யென்றும், திருவள்ளுவராற் செய்யப்படுங் காரிமாகலின், திருவள்ளுவரென்றும், வழங்கப்படும். திருவள்ளுவர் என்பது காரியமாகிய நூலிற் காரணவிற் கருத்தா வாகு பெயர். இத்திருக்குறளாசிரியர், வேதத்துப் பல விடங்களினு மிலை

மறை காய்கள் போலப் புலப்படா திருந்த நலம்படு பொருள்க ளெல்லாவற்றையுந் தொகுத்தெடுத் துலகத்தார்க்குக் கொடுத்தற் காரணத்தானே திருவள்ளுவ னென்றும், பாய நூலுறுதிப் பொருளெல்லாம் பாரினுள்ளா ரறிந்துய்யப் பாற்பட வெடுத்துக் கூறிய அருட் டலைமையுடைமையானே நாயனு ரென்றும், அறம் பொரு ளின்ப வுறுதிப் பொருளியல்களைத் தமிழுலகந் தெளிந்துய்ய அருள் விநோதத்திற் கூறினமையானே தேவனென்றும், முழுதுணர்வாற் சொற்பொரு டெரிந்து நூல் செய்து எப்பாவலர்க்கு மேலாய் முதல்வராய் நிற்றலினுற்றன் நால்வகைப் பாக்களுள் வைத்து வெண்பாக்களும் அவற்றுள் வைத்துக் குறள்வெண்பாவு முதலாய் நிற்றலின் அக்குறள் வெண்பாவானே தமிழ்நூலியற்றிய அறிவுவலி யுடைமையாற்றன் முதற்பாவலனென்றும், தெய்வ வரு ளானெய்திய புலமை யுடைமையிற் றெய்வப்புலவ னென்றும், மலரயனே வள்ளுவனுய் மறைந்து நான் மறையின் மெய்ப்பொருளை முப்பொருளாகத் தருதலி னான்முகனென் றும், தலைமக்களுக்கெல்லாந் தாய்போல முப்பாலைத் தண்ணளியாற் சுரந்தருளுதலின மாதானுபங்கியென்றும், அறனும் பொருளு மின்புமாந் தெளிதேனை அரிறபச்சொரி தருஞ் செந்நாப்போதுடைமையிற் செந்நாப்போதா ரென்றும், அறத்துப்பாலும் பொருட் பாலுங் காமத்துப்பாலுந் தனித்தனிகொண்டு நூல்க ளியற்றிய சிறுநாவலர்கள் வியப்புற அம் முப்பாலும் ஒருங்குகொண்டு அறம் பொரு ளின்பம் வீடென்னு நான்கு பொருளு மடங்கத் தமிழ்வேத நூல் செய்தலிற் பெருநாவனென்றும், போற்றப்படுகின்றார். திவ்-விளையாட்டு. மாதாநுபங்கி-மாதாவைப்போலு மொழுக்கினன்.

இவ்வுத்தர வேதங் கடைச்சங்கதார் காலந் தவநரித்து அவ ரரங்கேறிய தென்பதற்கு அச்சங்கப் புலவர்களெல்லாந் தனித்தனி இதன் பெருமை நிலையிட் டியற்றிய சிறப்புப்பாயிரச் செய்யுட்களே யமையுஞ் சான்றும். அக்காலத்துக் கடைச்சங்கத் திருந்திது கேட்ட பாண்டியன் உக்கிரப் பெருவழுதி. பாண்டியனுங் கடைச்சங்கப்புலவரும் வணங்கிக் கீழிருந்து கேட்பத் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனுர் உருத்திரசன்மனுரோடு சங்கப்பலகை வீற்றிருந்து திருக்குற ளரங்கேற்றினுர். அது "திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ - டுருத்தகு நற்பலகை யொக்க—விருக்க - வுருத்திர சன்ம னௌவுரைத்து வானி - லொருக்கவோ வென்றதோர் சொல்" என்னு மசரீரி யானேவாக் கான் அறியப்படும். இஃதரங்கேறிய பொழுது "நாடா முதனுன் மறைநான் முகனுவிற் பாடா விடைப்பா ரதம்பகர்ந்தேன்—கூடாரை - யெள்ளிய வென்றி யிலங்கிலைவேன் மாறபின்-வள்ளுவன் வாயதென் வாக்கு." என நாமகளும், "என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினு-நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்—குன்றாத-செந்தளிர்க் கற்பகத்தின் றெய்வத் திருமலர்போன் - மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்." என விறையனுரும் புகழ்ந் துரைத்தருளினுர். உக்கிரப்பெருவழுதி அரங்கிலிருந் திதுகேட்டு வந்து "நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன்-றன்மறைந்து வள்ளுவனுய்த் தந்துரைத்த - நூன்முறையை - வந்திக்க சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சஞ் - சிந்திக்க கேட்க செவி." என்று உலகங் கைக்கொண்டு வழிபட்டோதி யுய்ய இங்ஙனம் வழிபாடு கூறினுன். மற்றுக் கபிலர் பரணர் நக்கீரர் முதலிய கடைச்சங்கப்புலவரெல்லாரு மாண்டிதனைப் பலவாறு புகழ்ந்தெடுத்துப் போற்றி யிதன்றெய்வ மாட்சி நிலையிட்டார். அத்திருப்பாட்டெல்லாம் ஈண்டெடுத்துரைக்கிற் பெருகும். இதன் சிறப்புப்பாயிரமான திருவள்ளுவமாலையிற் காண்க.

திருக்குறள் உருத்திரசன்மனாரு நக்கீரனார் முதலிய சங்கப்புலவர்களுங் கேட்ப அரங்கேறியதுவாய்மையே. அஃதரங்கேறுதற்குமுன்னர் நக்கீரனா ரியற்றிய களவியலுரையுள் அஃது மேற்கோளாக எடுத்துக்காட்டப்படுதல் பொருந்துமா றென்னையெனின், திருக்குறள், நக்கீரனார் களவியலுரை யியற்றுமுன்னரே அவதரித் துலகினிலவிப் பின்னர்ச் சங்கமிரீஇற் றாதலின், அவ்வெடுத்துக்காட்டுப் பொருத்த முடையதேயாம்; காலமாறுபாடாண்டுப் போதருமா றில்லையென்க. அற்றே லஃதாக; வாகீசர் "கனியிருப்பக் காய்கவர்ந்த கள்வனேனே" என்று திருப்பதிகத்தி லருளிச்செய்தார். நாயனார் "கனியிருப்பக் காய்கவர்ந் தற்று" என் றுத்தரவேதத்தி லருளிச்செய்தார். இவை தம்முள் யாது முன்னவதரித்துப் பின் மேற்கோளாயதெனின்,—வாகீசர் கடைச்சங்க மிரீஇய முடத்திருமாறன் காலத்து விளங்கிய சமயாசாரியர். நாயனார் கடைச்சங்கத்திறுவாயி னதனை நடாத்திய உக்கிரப்பெருவழுதி காலத்து விளங்கிய தெய்வப்புலவர். ஆகலின், "கனியிருப்பக் காய்கவர்ந்த கள்வனேனே" என்றெழுந்த வாகீசர் திருவாக்கே முன் னவதரித்துத் திருக்குறளின் மேற்கோளாய தென்று விடுக்க.

திருக்குற டெய்வ மொழியான உத்தரவேதமாகலின், உத்தம மறைநூலென்க. "நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப் - பால்கடுகங் கோவை பழமொழி—மாமூல - மின்னிலைசொல் காஞ்சியுட னேலாதி யென்பவே - கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு." என்னும் வெண்பாவி லெடுத்தோதப்பட்ட முப்பா றிருக்குற ளென்றுகொண்டு, திருக்குறள் பதினெண்கீழ்க்கணக்கி லொன்றாமென் றதனை யவற்றோ டொப்பிப்ப ரொரு சாரார். திருக்குறள் பெரிய தமிழ்வேதமாதலின், அதனை நாலடி முதலிய சிறுநூல்களோ டெண்ணித் தொகைகோடல் சாலாமையின் ஆண்டு முப்பாலென்றது திருக்குறளன்றென்று மறுத்துரையாடுவர் மற்றொரு சாரார். ஆண்டு முப்பா றிருக்குறளெனக் கொள்ளினும் ஏனையவற்றோ டொப்புப் பெறாதென்பது, கடைச்சங்கப்புலவர் கோவூர்க்கிழார் "அறமுத னான்கு மகலிடத்தோ ரெல்லாந் திறமுறத் தேர்ந்து தெளியக்—குறள் வெண்பாப் - பன்னிய வள்ளுவனார் பான்முறைநே ரொவ்வாதே - முன்னை முதுவோர் மொழி" என்று திருக்குறளுபோற்காதத்துள் எடுத்தோதுமாறுபற்றி நன்கு தெளியப்படும். ஆண்டு முன்னை முதுவோர் மொழிகளென்றவை வடமொழியின் மனுவு மற்றை முனிவரும் இயற்றிய தருமநூன் முதலியனவுந் தென்மொழியிற் சங்கத்தாரும் பிறரு மியற்றிய நீதிநூன் முதலியனவு மாம். மற்றுத் தேவாரந் திருவாசகந் திருக்கோவை திருமந்திரம் என்பன இறப்பிறவத்தான் மனந்தூயராய் முக்குணவவத்தை முற்றக் கடந்து மிக்க தெய்வப் பெற்றி யெய்திய வுண்மை நாயன்மார் திருவாக்குக்களாய் நிற்றலின், அத்திருமுறைகளோடு இத்திருக்குறளுக்கொப்பு நேர்தல் செப்பமேயாமென்க. அறருகலினன்றே, ஔவை "தேவர் குறளுந் திருநான் மறைமுடிவு-மூவர் தமிழு முனிமொழியுங்-கோவை - திருவா சகமுந் திருமூலர் சொல்லு - மொருவா சகமென் றுணர்" என்று அவ்வாறு எடுத்துச் செய்யுள் செய்வாளாயிற் றென்க.

தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் போகமும் வீடும் பொருந்து நெறியை யறிந்து மேவுதற்குரிய நன்மக்கட் குறுதியென இறைவனும் அவ்விறைவ னருள்பெற்றுடையாருமோதியருளிய அறமுதலிய வுறுதிப்பொரு ணான்கனுள் அறம் பொரு ளின்பமென்னு மூன்றும் பற்றித் தமிழ் மறைநூல் செய்தருளினார். மற்று நாயனார், திருக்குறட் டமிழ் மறைநூலுட் சிறப்புடைய சாத்தியமாகிய வீடு கூறிற்றில ராயின், அது

தான் றெய்வமுழு நூலாகாதெனின்,—"தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண் குறளா-லானா வறமுதலா வந்நான்கு-மேனோருக்-கூழி னுரைத்தார்க்கு மொண்ணீர் முகி லுக்கும்-வாழியுல கென்னாற்று மற்று" "அறம்பொரு ளின்பம்வீ டென்னுமந் நான்கின்-றிறந்தெரிந்து செப்பிய தேவை - மறந்தேயும் - வள்ளுவ னென்பானோர் பேதை யவன் வாய்ச்சொற் - கொள்ளா ரறிவுடை யார்" "இன்பம் பொருளறம் வீடென்னு மிந்நான்கு-முன்பறியச் சொன்ன முதுமொழிநூன் - மன்பதைகட் - குள்ள வரிதென் றவைவள் ளுவருலகங் கொள்ள மொழிந்தார் குறள்." "இம்மை மறுமை யிரண்டு மெழுமைக்குஞ்-செம்மை நெறியிற் றெளிவுபெற-மும்மையின்-வீடவற்றி னின்கின விதிவிளங்க வள்ளுவ னார் - பாடின ரின்குறள்வெண் பா" "ஒருவ ரிருகுறண் முப்பாலி னோதுந் - தருமமுத னான்குஞ் சாலு - மருமறைக-ளைந்துஞ் சமயநூ லாறுநம் வள்ளுவனார் - புந்தி மொழிந்த பொருள்." "அறனறிந்தே மான்ற பொருளறிந்தே மின்பின் - றிறனறிந்தேம் வீடு தெளி ந்தே-மறனெறிந்த - வாளார் நெடுமாற வள்ளுவனார் தம்வாயாற் - கேளா தனவெல்லாங் கேட்டு" என முறையே நக்கீரனாரும், மாமூலனாரும், நரிவெருத்தலையனாரும், இழிகட் பெருங்கண்ணனாரும், களத்தூர்க்கிழாரும், கொடிஞாழன்மாணிபூதனாரு முதலாயினார், நாயனார் வீடுமுளப்பட வெடுத்தாறுதிப்பொருணான்குந் திருக்குறளுள் அருளிச்செய்தா ரென்றெடுத்தோதுதலின், திருக்குறள் வீடுபேற றுறுதிப்பொருளுங் கூறிற்றோர் நூலேயா ம். நாயனார்தாமருளிச்செய்த தமிழ்மறையுள் வீட்டியல் யாங்ஙனங் கூறினாரெனின், துற வறமாகிய காரண வகையாற் கூறினாரென்க. அற்றேல், வீட்டியலை யேனை முப்பொருள் கள்போல இலக்கண வகையாற் கூறாது காரண வகையாற் கூறியது என்னையெனின்,— வீடு சிந்தையு மொழியுஞ் செல்லாநிலைமைத் தாகலின், இலக்கணவகையாற் கூறும் பான் மைத்தன்றென் றுணர்ந்து அங்ஙனங் காரண வகையாற் கூறினாரென்க. ஆசிரியர் தொல் காப்பியனார் "அந்நிலை மருங்கி னறமுத லாகிய - மும்முதற் பொருட்கு முரிய வென்ப" எனச்சூத்திரஞ்செய்ததூஉம் இக்கருத்துப்பற்றியேயாம். இனி வீடுபேற்றியனுதலி யெழு ந்த வேதாந்த சித்தாந்த நூல்களும் வீட்டியற் பொருட்டிறஞ் சிரவண மனன மென்னு மிருதிறத்தாற் றடத்தமாகவுஞ் சிரவண மனன நிதித்தியாசன நிட்டை யென்னு நாற்றிற த்தாற் சொரூபமாகவுஞ் சாதனவகையாற் கூறினவேயாமென்க. திருக்குறளில வீட்டின் சாதனஞ் சுருக்கமாகக் கூறப்பட்டது. வேதாந்த சித்தாந்த நூல்களில் விரிவாகக் கூறப் பட்டது. இதுவே தம்முள் வேறுபாடு. இங்ஙனமாகலின், திருக்குறள் அறம் பொருள் இன்பம் வீடென்னும் உறுதிப்பொருணான்குந் திறம்படக் கூறு முழுநூலேயாமென் றும், நக்கீரனார் முதலியோர் அப்பெற்றி தேர்ந்தே அஃதறமுதலிய வுறுதிப்பொருணான் குந் தெளித்துரைக்குந் தமிழ்மறை நூலாமென் றங்ஙன மதனைச் சிறப்பித்துப் பாயிரஞ் செய்தாரென்றும், உணர்க. திருக்குறள் வீடுமுளப்பட அறம் பொருளின்பங் கூறுமாறு முன்னர் விளங்கத் தெரித்தும். "வீடென்பது சிந்தையு மொழியுஞ் செல்லா நிலைமைத் தாகலின், துறவறமாகிய காரண வகையாற் கூறப்படுவதல்லது இலக்கண வகையாற் கூறப்படாமையின், நூல்களாற் கூறப்படுவன ஏனை மூன்றுமேயாம்" என்ற பரிமேலழக ருரையானும் மேலது துணிக. நச்சினார்க்கினியர் இப்பெற்றி தேராது அகத்தியனார் தொ லகாப்பியனார் திருவள்ளுவநாயனார் தமிழான் வீடு கூறாரென்னும் பொருள்படத் தொல் காப்பியவுரையிற் றமக்குவேண்டியவாறெல்லாமுரைத்தார்.

நாயனார் நான்கவாய உறுதிப்பொருட் பெற்றி அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பாலென மூன்று பாலாற் கூறுவான் றொடங்கி, உயிர்கள் போகமும் வீடு

மேவுநெறியறிந் துய்யுமாறு அநுசிக்கண் முதனூலான் அவற்றை யோதிய வாதிபகவ னாமுதற்கடவுளை வழுத்துவதாகிய மங்கலக் கடவுள் வாழ்த்தும், அம்முதற்கடவுள தாணையான் உலகமும், அதற்குறுதியாகிய வறம் பொரு ளின்பங்களு நடத்தற் கேதுவாகிய வான்சிறப்பும், அம்முதற்கடவு ளருளிச்செய்த முதனூனெறி யொழுகி அருந்துயர்க் குரம்பை யெனப்படு மகட்பொருளாகிய யாக்கையுங் கரணமும் அவற்றாற் றுய்க்கப்படும் புறப்பொருள்களாகிய புவனமும் போகமு நிலையாமை நாடி முற்றத் துறந்து மெய்யுணர்ந்து அவாவறுத்து முதற்கடவு ளருட் பெற்றி தலைக் கூடினமையானே அவ்வறமுதற் பொருள்களை முதற்கடவுளருளால் உலகிற்குள்ளவா றுணர்த்தவல்ல முனிவராகிய நீத்தார்பெருமையும், அங்ஙன மவரா லுணர்த்தப்பட்ட வுறுதிப்பொருள்களுட் பொருளு மின்பமும் போலாது, அறம் இம்மை மறுமை வீடென்னு மூன்றும் பயத்தற் சிறப்புடைமையின் அஃதேனையவற்றின் மகிமை பெரிதுடைத்தென அதன் வலியுறுத்தலும், முறையானே பாயிரமாக முதற்கட் கூறியருளினா ரென்பது. நாயனார் அறம் பொரு ளின்பங்கண் முறையே இம்மை மறுமை வீடென்னுமூன்றும் பயத்தலும் இம்மை மறுமை யிரண்டும் பயத்தலும் இம்மையே பயத்தலுமாகிய சிறப்புச் சிறப்பின்மை நோக்கி அறத்துப்பாலை முன்னும், பொருட்பாலை அதன் பின்னும், காமத்துப்பாலை இறுதியினு முறையே வைத்து, அவற்றிய னெறித்தற் கமர்ந்தருளினாரென்க. இனிப் பொருடான் அறஞ்செய்தற்குங் காமந்துய்த்தற்கு முபகாரமாத லுடைத்தாகலின், அதன் முறை வைப்புச் சிங்க நோக்கா மென்க.

இல்லறந் துறவறமென்னு மிரண்டறங்களுள் இல்லறம் இல்லாளோடுகூடி வாழு மொழுக்கமாகலானும், பொருளு மின்பமுந் தனக்கங்கமாகக்கொண்டே யியலும் பெற்றித்தாகலானும், பொருளு மின்பமும் வேறுதலின்றி அறத்தின்வழி நிகழு நீரனவா யதனு ளடங்கு மியற்கையவாகும். "சிறப்புடை மரபிற் பொருளு மின்பமு - மறத்தின் வழிப்படூஉந் தோற்றம் போல" என்றதூஉம் இக்கருத்துப்பற்றியேயாம். இங்ஙனம் அறத்தின்கண் அடங்கும் பொருளின்பங்களை நாயனார் வேறு பிரித்துப் பொருட்பாலென்றுங் காமத்துப்பா லென்றுந் தனித்தனி பிரீஇயது, பொருளினீட்டுதலும் அதன் பாதுகாப்பும் அதனு னறஞ்செய்தலும், அரசன் காவலோடாத்துமுறைமை யன்றி [illegible] ணக்காரணம் பற்றியல்லது செல்லாமையின், அன்ன வியற்கைகளுடைய அப்பொருண்மேலிட்டு அரச னிகி விரித்து முறைபெறக் கூறல்வேண்டியும், உருவுந் திருவும் பருவமுங் குலனுங் குணனு மன்பு முதலியவற்றுற் றம்முளொத்த பான்மையுடைய தலைமக்களான அறக்கிழவனுங் கிழத்தியும் ஓர் காலத்தொரு பொருளா னியைந்து நுகர்தற் சிறப்புடைமையி னவ்விரு வகைக் கைகோள் வரலாறு விரித்துச் சுவைபெறக் கூறல்வேண்டியு மென்றுணர்க. இனிப்பொருளும் இன்பமும் அவ்வாறு கௌணமாய் அறத்தி னடங்குதலின், திருக்குறண் முக்கிய விருத்தியால் அறங்கூறிய நூலேயாதல் காண்க.

இல்லறம் இருவகைப்பற்றின் முறுகிய மந்த வதிகாரிகளாகிய மக்களுக்கு அப்பற்றுக்க ளன்னுகர்ச்சியா னறுந்து சித்தசுத்தி யெய்துதற் பொருட்டு விதிக்கப்பட்டதோ ரொழுக்கமாதலின், அவ்வொழுக்காற்றான் முனிவருந் தேவரும் விழைதரு போகம் ஈண்டுத் துய்த்துச் செல்லாநின்றார், அத்துய்ப்பினுள்ளே பொய்ப்பற்றறுத்து மெய்ப்பற்றுநாடித் துறவறம் பூண்டு அந்தக்கரணங்க டேவாதற் பொருட்டு விரத முடைய தலை யுறுதியாகக் கைக்கொள்ப. ஆதலின், நாயனார் இல்லற வியன் முன்னும் துறவறவிய

லதன் பின்னு நிறுத்தியருளினர். அற மேற்கூறிய நியாயம்பற்றியே இல்லறந் துறவற மென இரண்டாயதென்பது "காமஞ் சான்ற கடைக்கோட் காலை - யேமஞ்சான்ற மக்களொடு துவன்றி-யறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்-சிறந்தது பயிற்ற லிறந்ததன் பயனே" என வருந் தொல்காப்பியச் சூத்திரத்தினானு மறிந்துகொள்க.

இனித் துறவறந்தான் வினைமாசு தீர்ந்து அந்தக்கரணங்க ளேவாதற்பொருட்டுத் துறந்தாராற் காக்கப்படும் விரதங்களும் அவற்றான் அவை தூயவாய வழி உதிப்பதாய ஞானமுமென இருவகைப்படும். இனி விரத மங்கமு ஞான மங்கியு மாகலின், விரத மூன்னும், ஞான மதன்பின்னும், நிறுத்தியருளினர். இங்ஙனம் விரதத்தான் அந்தக்கரணசுத்தி யெய்தி வீடு பயக்கு முணர்வெய்தப் பெற்றோர், தோற்றமுடையன யாவு நிலையுதலிலவாந் தன்மை யுணர்ந்து, ஒரோவழிச் செல்வம் பெறிற் கடவுட்பூசை கடவுண் ஞான முடையார் கைத்தான முதலிய ஞானக்கிரியையே புரிந்து, புறமாகிய செல்வத்தின் கண்ணும் அகமாகிய யாக்கையின்கண்ணு முளதாய பற்றினை அவற்றது நிலையாமையுணர்ந்து காலம்பெறத் துவரத் துறந்து, யானென தென்னுஞ் செருக்கறுத்துப், பரம்பொருளான இறைமுதற்கடவுள் ஓதிய வீட்டு நெறியினை இதுவே நன்னெறியென்று மனத்துட்கொண்டு, அதன்க ணுபாயமாய தியான சமாதிகளை மனத்தாற் செய்து, பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் அவிச்சையான் விளையும் ஐய விபரீதங்களானன்றி உண்மையானறிந்து, அனுபவமுடைய தேசிகர்பாற் றத்துவ உபதேச மொழிகளைக் கேட்டலாகிய சிரவணமும் அவ்வுபதேச மொழிப்பொருளை அளவையானும் பொருந்துமாற்றானுந் தெளிய வாராய்தலாகிய மனனமுஞ் செய்து, பிறப்பிற்கு முதற்காரணமாய அவிச்சைகெட வீட்டிற்கு நிமித்தகாரணமாகிய செவ்விய பரம்பொருளை அனுபூதியிற் காண்டலாகிய நிதித்தியாசன சமாதிகளுற்று, மேற்சாரக்கடவன துன்பங்களிலராய்க், காமம் வெகுளி மயக்கமென்னுங் குற்றங்கண் மூன்றனுடைய பெயருங் கூடக்கெடப் பெறுதலானே அவற்றின் காரியமாகிய வின்பத்துன்பநுகர்ச்சி முற்றக்கெடுத்து, எடுத்தவுடம்பும் அதுகொண்ட வினைப்பயனு நின்றமையின் நினைவு பயிற்சிவயத்தாற் பழைய புலன்கண் மேற்சேறலுறின், இடைபறாத மெய்யுணர்வி னுறைத்துநின்று அவ்வவாவினை யாற்றவறுத்து, மலவாதனையு நீங்கிச் சீவன் முத்தராயிருந்து ஊழ்ப்புக் கவற்சிகளும் பிறப்புப்பிணி முப்பிறப்புக்களு மின்றிக் கேவலமாய் நின்று முடிவு காண்கில்லாப் பரவீடாகிய நிரதிசயவின்பம் பெறுவரென்று, இவ்வாறு நிலையாமையுந் துறவு மெய்யுணர்வு மவாவறுத்தலுமாகிய ஞானசாதனங் கூறுமுகத்தானே வீடு பேற்றுறுதிப்பொருட் பெற்றி நன்குவிளக்கி யருளினர்.

இங்ஙனமாகலின், திருக்குறள் பொருளின்ப மகப்படக் கொண்டறங்கூறி வீட்டியல்பு நன்று நாட்டிய தத்துவஞான நூலா முத்தரவேதமென்பது தெற்றென வுணர்ந்துகொள்க.

அற்றேலஃதாக ; நாயனார் உத்தரவேதத்தறிவுறுத்த முதற்கடவுளும் வீடுபேறுஞ் சமயங்கள் கூறுங்கடவுளருள் வைத்தும் வீடுபேறுகளுள் வைத்தும் யாவனெனவும் யாதெனவுஞ் சிறப்பாற்றானறியுங் குதூகலம் பெரிதுடையேன் ; கூறல்வேண்டு மென்னையாயின்,—நாயனார் முழுமுதற்கடவுளிவனென்பதூஉம், மெய்வீடுபே றிதுவென்பதூஉம், மதிநுட்பநூலோ டுடைய புலவர் சிறப்பாற்றாற் குறிப்பானறிந்திட வைத்துக் கடவுளியலும் வீடுபேற்றியலும் ஆத்திக சமயங்கட் கெல்லாம் பொதுவாக வெளிப்படையானெடுத்தோதுந் திருக்குறளில் அங்ஙனஞ் சிறப்பியல்பு அறிவுறுத்தன் முறைமையன்றாயினும், இக்

காலத் தேகான்மவாதிகளு ளொருசாராரும் பிறரு நாயனார் வாழ்த்திய கடவுளும் அவரோதிய வீடுபேறுந் தத்தஞ்சமயக் கொள்கைகளோ டியைபுற்று நிற்குமெனச் சில போலியுரைகட்டி யெழுதித் தம்முள் வைத்துப் பாராட்டித் தமக்கென வொன்றிலராகிய பேதைகளை அப்போலிக் கட்டுரைகொண்டு மயக்கித் தந்நெறியினீர்க்கக் கேடுபல சூழுதலானும், பரிபாகியாகிய நீ அவ்விரண்டன் சிறப்பிய லறியலுற்று வினா நிகழ்த்தலானும், "அகரமுதலவெழுத் தெல்லாம்" என்னு முதற்றிருக் குறளின் மெய்ப்பொருள் விரிக்குமுகத்தானே அவ்விரண்டன் மெய்ம்மைத் தன்மை சிறி தீண்டுத் தெரிக்கலுற்றாம்.

## கடவுள் வாழ்த்து

### முதற்றிருக் குறள் விருத்தி.

அகர முதல வெழுத் தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

என்பது திருக்குற ளொன்னுதலிற்றோ வெனின்,—உலகிற்கு முதற்கடவு ளொருவ னுள னென்பதூஉம், அம்முதற் கடவுடான் ஆதிபகவ னென்பதூஉம், உணர்த்துத னுதலிற்று. உத்தரவேத வுரையாசிரியரான பரிமேலழகியார் மற்றிம்முதற் குறளினுக்கு இயற்றிய பிண்டப்பொழிப் புரையும் அதன் விசேடவுரையும் வருமாறு :—எழுத்து எல்லாம் அகரமுதல உலகு ஆதிபகவன் முதற்று:—எழுத்துக்களெல்லாம் அகரமாகிய முதலையுடையன ; அதுபோல உலகம் ஆதிபகவனாகிய முதலையுடைத்து என்றவாறு. இது தலைமைபற்றிவந்த எடுத்துக் காட்டுவமை. அகரத்திற்குத் தலைமை விகாரத்தா னன்றி நாதமாத்திரையாகிய இயல்பாற் பிறத்தலானும், ஆதிபகவற்குத் தலைமை செயற்கையுணர்வானன்றி இயற்கையுணர்வான் முற்றுமுணர்தலானுங்கொள்க. தமிழெழுத்திற்கேயன்றி வடவெழுத்திற்கு முதலாத னோக்கி, எழுத்தெல்லா மென்றார். ஆதிபகவன் என்னு மிருபெயரொட்டுப் பண்புத் தொகை வடநூன்முடிபு. உலகென்றது ஈண்டுயிர்கண்மேனின்றது. காணப்பட்ட உலகத்தாற் காணப்படாத கடவுட்கு உண்மை கூறவேண்டுதலின், ஆதிபகவன் முதற்றே யென உலகின்மேல் வைத்துக் கூறினார் ; கூறினாரேனும், உலகிற்கு முதல் ஆதிபகவ னென்பது கருத்தாகக் கொள்க. ஏகாரந் தேற்றத்தின்கண் வந்தது. இப்பாட்டான் முதற்கடவுள துண்மை கூறப்பட்டது.

அதுபோலவென்பதிசை யெச்சம். அது வருவித் துரைசெய்யப்பட்டது. அகர நாத மாத்திரையான வியற்கைத் தோற்ற முடைத்தாய் நிறைந்து முதன்மையுற்று நிற்ப ஏனையெழுத்துக்களெல்லாம் அதனியக்கத்தான் விகாரமுயற்சியிற் றோன்றி அதனானே வியாபிக்கப்பட்டுப் பரதந்திர முடையவாய் நிலவுதல்போல, ஆதிபகவன் இயற்கையுணர்வினானே முற்றுமுணர்ந்து யாண்டு நிறைந்து முழுமுதல்வனாய் விளங்கி நிற்ப, உலகனைத்தும் அவனாணையான் வியாபிக்கப்பட்டுப் பரதந்திரமுற்று வினைக்கீடாக வுடல் கரணமெய்தித் தோன்றி இடவிடய வியாபாரமுடையவாய் நிலவாநின்றனவென்பதிதன் கருத்தாம். இடம்-புவனம், விடயம்-போகம். இத் திருக்குறளினுக் கிதுவே பொருளென்பது, உமாபதி சிவாசாரியார் "அகர வுயிர்போ லறிவாகி யெங்கு நிகரிலிறை நிற்கு நிறைந்து" என்றதன்பொருள் எடுத்தோதிய வுபபிருங்கணத் திருவாக்கானுமறிக. அகரவுயிர் முதலாதல்போல வென்க. முதலாத லென்பது அவாய் நிலையான் வருவித்து முடிக்கப்பட்டது. இவ்வாறு வருவித்து முடிப்பதனை வடநூலார் அத்தியாகார மென்பர். முதலாதல் - முதலாய் நிற்றல். முதலாயென்னுமுவமையடை பொருளினு நிறைந் தென்னும் பொருளடை உவமையினுங் கூட்டியுரைக்கப்பட்டன. பொருளெ

னினு முவமேய மெனினு மொக்கும். இங்ஙனம் ஆதிபகவனாகிய முதற்கடவுளை எழுத்துக்களினிறைந் தவைதமக்கு முதலாய் நிற்கும் பொதுவியல்புபற்றி அகரத்தோடொப்பித்தருளினும், அப் பரம்பொருள் அறிவுருவா யாங்கணு நிறைந்து எப்பொருட்கு மாதாரமாய் நிற்கு முழு முதலான வுடையா னாகலின், உண்மையிற் றன்னுடைப்பொருளாகிய பசுபாசங்களு ளொன்றனோடு முவமிக்கப்படா னென்பதே நாயனருக்குக் கருத்தென்ப தறிவிப்பார் " அறிவாகி யெங்கு நிகரிலிறை நிற்கு நிறைந்து " என்றச்சுருதிப் பொருளினை இங்ஙனந் தெளித் தோதியருளினர். இனி உடைப்பொருள் அடிமையு முடைமையுமென விருவகைப்படும். அவற்று ளுயிர் வருக்கமெல்லா மாதிபகவனாகிய விறைவனுக் கடிமை யெனவு மாயை கன்மங்களு மவற்றின் காரியங்களு முடைமை யெனவு முணர்ந்துகொள்க.

நாயனார் ' அகர முதல வெழுத்தெல்லா மாதி பகவன் முதற்றே யுலகு ' என றங்ஙன மெடுத்துக் காட்டுவமையாற் கூறியருளிய பொருட் பெற்றி யினிது புலப்படும் பொருட்டு உமாபதி சிவாசாரியர் இங்ஙனம் உவமாலங்காரத்தில் வைத் துபபிருங்கண மாக வெடுத்தோதியருளினர். உபபிருங்கணமாவது:—முதனூல் வசனங்களின் மெய்ப் பொருளினிது புலப்படுமாறு வேண்டுஞ் சொற் றலைப்பெய்து அவை தம்மை ஆண்டுக் கிடந்தவாறே யெடுத்துரைக்கும் வாக்கியமாம். இது முற்றுவமையாமாறு முன்னர்க் காட்டுதும்.

எடுத்துக்காட் டென்னு முவமையினை வடநூலார் நிதரிசனாலங்கார மென்றுரைப் பர். நிதரிசன லங்காரத்திற்கும் உவமாலங்காரத்திற்கும் வேறுபாடு யாதெனின்,— உவமான வுவமேயங்களிரண்டன் சாதிருசிய தருமம் பேதநெறியானே உவமவுருபு பற்றி வெளிப்படையால் விளக்குவ துவமாலங்காரம். அவ்விரண்டன் சாதிருசிய தருமம் அபேத நெறியாற் குறிப்பி னுணர்த்துவது நிதரிசனம். இதுவே தம்முள் வேறுபாடென்க. உவமத் தொகையில் அதிவியாத்தி நீக்குதற்கு அபேத நெறியானென்றும், குறிப்பினென்றும், உரைத்தாம். இன்னும், உவமத் தொகை, சாதிருசியம் புலப்படுத்தும் உவமவுருபு விதியானெய்திடுவதாகவுங் கவி தொகையிலக்கண மேவ வேண்டி அதுதொகுத் தோதுவதாம். நிதரிசனங் கவி அவ்வுருபு வேண்டாது அபேதம் போதரக் கருதிப் பிரயோகிப்பதாம். இங்ஙனமாகலின், இரண்டற்கும் வேற்றுமை பெரிதாதலறிக. அற்றேலஃதாக; திருட்டாந்தாலங்காரம் உவமான வுவமேய சாதிருசியம் அவ்வாறே யுவமவுருபின்றிக் குறிப்பா னுணர்த்துவ தாகலின், நிதரிசன லங்காரத்திற்கு அதன்கண் அதிவியாத்திவரும்பிறவெனின்,— திருட்டாந்தாலங்காரம் "வேந்த நீ கீர்த்திமான் வெண்மதியங்காந்திமான் " என்றங்ஙன முவமான வுவமேய சாதிருசியம் பேத நெறியா னுணர்த்தும். நிதரிசனாலங்காரம் அவ்வாறன்றி அவ்விரண்டன் சாதிருசியம் அபேத னெறியானுணர்த்தும். ஆகலின், நிதரிசனத்திற்கு அதன்கண் அதிவியாத்தி வருமா றின்றென்க. கீர்த்தியுங் காந்தியும் பேதமுடையனவாயினும், வெண்மைப் பண்பு இரண்டன்கண்ணு மொத்தலின், அவ்வொப்பினானே திருட்டாந்த மாகா நின்றது. மற்று எழுத்தெல்லாவற்றிற்கும் அகரமுதலாதலும் உலகுக்கெல்லாம் ஆதிபகவன் முதலாதலும் அவ்வாறு பேதமுறாது அபேதமாயொத்தலின், நிதரிசன மாகாநின்றது. அற்றேல், முகமதி யென்னு முருவகமும் அபேத சாதிருசிய முணர்த்தலின், நிதரிசனத்திற்கு அதன்கண் அதி வியாத்தி வருமெனின்,—அற்றன்று; உருவகமாவது உவமான வுபமேய வாக்கியங்களினுள்ள ஒவ்வோர் பதமாத்திரையானே அபேத சாதிருசிய முணர்த்

துவதாகலானும், நிதரிசனமாவது அவ்வாறன்றி உவமான வுவமேய வாக்கிய முழுதுங் கொண்டு அபேத சாதிருசிய முணர்த்துவதாகலானு மென்க. இனி நிதரிசனாலங்காரம், திருட்டாந்தாலங்காரம், ரூபகாலங்காரம், அதிசயோத்தியலங்காரம், உத்பிரேட்சாலங்கார மென் றித்திறத்தனவற்றிற்கு உவமான வுறுப்பு உவமேய வுறுப்புச் சாதிருசியதரும மென்பன பொதுவிய லாதலும், உவமாலங்காரம் இவற்றிற்செல்லா மடியாதலுங், காண்க. இன்னும், இவ்வலங்காரங்களின் இலக்கண நுட்பம் ஈண்டு விரிக்கப்புகிற் பெருகும். குவலயானந்த முதலிய வடநூல்களிற் கண்டுகொள்க.

ஈண்டுக் கூறியவாற்றாற் சாதிருசியதருமம் போதித்தற்கண் ஏனையவற்றை நோக்க எடுத்துக்காட்டுவமை சிறத்தல் இனிதுவெளிப்படுதலின், நாயனார் அவ்வுவமை யுள்ளவைபற்றி முதற்கடவுள தன்மை இவ்வாறு சாதித்தருளினா ரென்க.

நாதமாவது தூல வுடலின்கண் மன்னும் அருவுடம்பி னுள்ளான பரசரீரத்தினின்றுஞ் சுத்த மாயா விருத்தியாய்த் தோன்றும் வியஞ்சக வொலி யென்ப. அகரம் அதன் விருத்தியா யுந்தியினின் றெழுதரும் உதானனென்னும் வாயு வேகத்தினாற் றாக்கப்பட்டுக் கண்டமருவி முயற்சி விகார மின்றி இயல்பினானே வைகரியாய்த் தோன்றுதலின், அதனை விகாரத்தா னன்றி நாத மாத்திரையாகிய வியல்பாற் பிறக்குந் தனிமை யுடைத் தென்றார். ஆதிபகவன் றனக்கோ ராதார மின்றி எப்பொருட்குந் தானாதாரமாய் இயல்பாகவே பாசங்களி னீங்கி யாங்கணு நீக்கமின்றி நிறைந்து அனைத்தையுஞ் சுட்டிறந் தொருங்கே யறியு முற்றறி வுடையனாகலின், அவனைச் செயற்கை யுணர்விலனன்றி இயற்கை யுணர்வான் முற்று முணருந் தலைமைப்பாடுடைய னென்றார். இங்ஙனங் கூறவே, ஆகார முதலிய வெழுத்துக்கள் அந்நாத காரிய விருத்தி யுற்று அவ்வாயுவாற் றாக்கப்புண்டு உரங் கண்ட முச்சி மூக்கென்னு மிடங்கள் பற்றியும் இதழ் நாப் பல் அண மென்பவற்றின் றொழின் முயற்சி பற்றியும் வேறுபாடுற்று அகர வொலிவிராய்த் தோன்றித் தலைமையின்றி நிற்கும்; அதுபோல உலகு அநாதியே பாசத்தடையுற்று ஆதிபகவனை யாதாரமாகக்கொண் டவனாணையான் வினைக்கீடாக வெய்துந் தனுகரணங்கள் பற்றித் தொடக்குற்றுத் தோன்றி அறிவிச்சை தொழில் சிறிது விளங்கிச் சிற்றுணர்வுஞ் சுட்டறிவுடையவாய்த் தலைமைப்பாடின்றி நிற்குமென்பது தானே போதருமென்க. செயற்கை யுணர்வெனினுஞ் சென்னிய ஞானமெனினு மொக்கும். இயற்கை யுணர்வெனினு நைசர்க்கிக ஞானமெனினு மொக்கும். முற்றுணர்வெனினுஞ் சர்வஞ்ஞத்துவமெனினு மொக்கும். சிற்றறிவெனினுங் கிஞ்சிஞ்ஞத்துவமெனினு மொக்கும்.

ஆரியமுந் தமிழுங் கடவுண் மொழிகளாய் நடத்தலின் எல்லாமென்பது பற்றி யவ்விரண்டனையுந் தழீஇயனாரேனும், ஏனை மொழிகளின்கண்ண வாகிய வெழுத்துக்க டாமும், அகர முதலவாய் நடக்கக் காண்டலின், அவையும் எல்லாமென்பதனாற் றழுவப் படுதற் கேற்றவாமென்க. இனி எழுத்தெல்லாம் அகர முதல என்பதற்குத் தமிழின் கணுள்ள ஆகாரமுதல் ஔகார மீறாகக் கிடந்த பதினோருயிரெழுத்துக்களும், ககரமுத னகர மீறாகக்கிடந்த பதினெட்டு மெய்யெழுத்துக்களும், அகரத்தை முதலாகக்கொண் டதனோடுசிவணி இயங்குவனவாமென்று பொருள் கோடலுமாம்.

அற்றேலஃதங்ஙனமாக, ககர முதலிய மெய்யெழுத்துப் பதினெட்டுந் தனித்தியங்கு மாற்றலுடையன வன்மையின், அவற்றிற்கு அகரத்தை முதலாகக் கொண்டத

னோடு சிவணி இயக்க முறுதல் பொருத்தமாம்; ஆகார முதலிய உயிரெழுத்துக டனித்தியங்கு மாற்ற லுடையனவாகலின், அவற்றிற்கு அகரத்தை முதலாகக் கோடலன்றி அதனோடு சிவணி இயக்கமுறுமென்றல் பொருந்தாதாம்; "மெய்யி னியக்க மகரமொடு சிவணும்" என வாசிரியர் தொல்காப்பியனாரும் அத்தன்மை யொன்றுமே கூறியொழிந்தாரெனின்,—ஆகார முதலிய வுயிரெழுத்துக்க டனித்தியங்கு மாற்றலுடைய வென்ற தற்குக் கருத்து மெய்யெழுத்துக்கள்போலச் சடமாத லின்றித் தம்மியல்பின் உயிர்ப்புடையன வென்பதேயாம். இனி அவ்வுயிர்ப்பும் அவை தமக்கு அகரத்தொடு சிவணுதலாற்றானே செம்மையுறுவதாம். யாங்ஙனமெனிற்,—காட்டுதும்: இகர ஈகார உகர ஊகாரங்கள் அகரத்துக்குரிய அங்காப்பு முயற்சியோடு சிவணிப் பிறக்கும். எகர ஏகார ஒகர ஓகாரங்கண் முன்ன ரகரக்கூறும் பின்ன ரிகர வுகரக்கூறுகளு மியைந்து பிறக்கும். ஐகார முன்னர் அகரக்கூறும் பின்னர் இகரக்கூறும் இடையில் யகரமுந் தலைக்கூடிப் பிறக்கும். ஔகார முன்னர் அகரக்கூறும் பின்னர் உகரக்கூறும் இடையில் வகரமுந் தலைக்கூடிப் பிறக்கும். ஆகலின், உயிர் பதினொன்றுந் தம் மியக்கத்திற்கு அகரமாகிய முதலை யின்றியமையாமை கண்டுகொள்க. ஏகாரமுதலியன வன்னவாதல் மாபாடியங்கையடங்களிற் காண்க. இகர ஈகார உகர ஊகாரங்க ளன்னவாதல் சிவஞானமாபாடியத்துக் காண்க. ஐகார ஔகாரங்க ளன்னவாதல் "அகர விகர மைகார மாகும்" "அகர வுகர மௌகார மாகும்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரங்களா னறிக. இது தொல்காப்பியச் சூத்திர விருத்தியினுங் கண்டுகொள்க. இனி ஆசிரியர் தொல்காப்பியனார் "மெய்யி னியக்க மகரமொடு சிவணும்" என்று கூறினாற்போலப் "பதினோருயிரி னியக்கம் அகரமொடு சிவணும்" என்று கூறாராயது, அத்தன்மை பிறர்க்கு உணர்த்துதல் அரிதாதனோக்கியேயாம். நச்சினார்க்கினியரு "மெய்யி னியக்க மகரமொடு சிவணும்" என்னுஞ் சூத்திரத்து இவ்வாறே யுரைத்து, "இறைவன் இயங்குதிணைக்கண்ணு நிலத்திணைக்கண்ணும் பிறவற்றின்கண்ணும் அவற்றின் றன்மையாய் நிற்குமாறு எல்லார்க்குமொப்ப முடிந்தாற்போல அகரமும் உயிர்க்கண்ணுந் தனிமெய்க்கண்ணுங் கலந்து அவற்றின் றன்மையாகி நிற்குமென்பது சான்றோர்க்கெல்லா மொப்ப முடிந்தது; அகரமுதல வென்னுங் குறளான்—அகர மாகிய முதலையுடைய வெழுத்துக்க ளெல்லாம்; அதுபோல இறைவனாகிய முதலை யுடைத்து உலகு என வள்ளுவனார் உவமை கூறிய வாற்றானும், கண்ணன் "எழுத்துக்களில் அகரமாகின்றேன் யானே" யெனக் கூறியவாற்றானும், பிறநூல்களானு முணர்க" வென்றிவ்வாறு விளக்கினார். கண்ணன் எழுத்துக்களில் யானே அகரமாகின்றே னென்றது, சிவாகமம் பாவனை தலைப்பட்ட வொற்றுமை பற்றியே யென்பது, சிவஞானமாபாடியத்துக் காண்க. "அக்கரங்க ளின்று மகர வுயிரின்றே - லிக்கிரமத் தென்னு மிருக்கு" "ஒன்றென மறைகளெல்லா முரைத்திட வுயிர்க ளொன்றி, நின்றனனென்றுபன்மை நிகழ்த்துவ தென்னை யென்னி, னன்றவை பதிதானொன்றென் றறையுமக்கரங்க டோறுஞ், சென்றிடு மகரம்போல நின்றனன் சிவனுஞ் சேர்ந்தே" "எவ்விடத்து மிறையடியை யின்றியமைந் தொன்றையறிந் தியற்றிடா வுயிர்க ளிறைவன்றானுஞ் செவ்வியினி னுளம்புகுந்து செய்தியெலா முணர்ந்து சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்ப, னிவ்வுயிர்க டோற்றம்போ தவனையின்றித் தோற்ற விவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லாமாய் நிற்கு, மவ்வுயிர்போ னின்றிடுவ னுதலானு மரனடியை யகன்று நிற்ப தெங்கே யாமே" என்றத்துவித சித்தாந்த சைவ சுருதிகள் இவ்வியல்பு தெருட்டுதலுங் காண்க.

அவற்றுள், "இகர விறுபெயர் திரிபிட னுடைத்தே" என்னுந் தொல்காப்பியச் சூத்திரவிதியால், நம்பிக்கொற்றன் நம்பிச்சாத்தன் நம்பிப்பிள்ளை யென்பனபோல ஆதிப்பகவனென வல்லொற்றுமிக்குப் புணர்தற்பாலது அங்ஙனம் புணராது ஆதிபகவனென இயல்பு புணர்ச்சி யுற்றது வடநூல் விதிபற்றி யென்பது. சூஜி: என்னும் இகாராந்தப் புல்லிங்க சத்தம் பகவத்சத்தத்தோடு புணருங்கால் ஆகமம் ஆதேசம் லோபம் என்னுந்திரிபுகளுள் யாதும் பெறாது ஆதிபகவனென அங்ஙன மியல்பாய்ப் புணர்தல் வடமொழி வியாகரண வழக்காறும். இனி ஆதிபகவனென்னு மிருபெயரொட்டுப்பண்புத் தொகைக்கணிலைமொழியீற்று ஸு (விசர்க்கம்) 'ஸுபொயாதுவோ ராதிவஜிகயொ:' என்னுஞ் சூத்திர விதியால் லுக்காயிற்று. ஈண்டு லுக்கு அனுவிருத்தியான் வந்தியையும். அனுவிருத்தியாவது மேலே போந்த சூத்திரத்தின்கணுள்ள ஒரேகதேச பதங் கீழே போதருஞ் சூத்திரப் பொருட்கு உபகாரமாக வந்தியைவது. மற்றிது அதிகாரமன்றோவெனின்,—அன்று. என்னை? அதிகார மேலே போந்த சூத்திர முழுதுங் கீழே போதருஞ் சூத்திர விதிக் குபகாரமாக வந்தியைவ தாகலி னென்க. ஆதிபகவ னென்பது கர்மதாரயசமாச னன்றே; சமாசன் பிராதிபதிகமாமோவெனின்,—"க்ருத்தத்திதஸமாஸாஸ்ச" என்னுஞ் சூத்திரவிதியால் சமாசனும் பிராதிபதிகமாத னோர்தா ரென்க. ஈண்டுப் பிராதிபதிகச் சொல் "ஸுபோதாதுப்ராதிபதிகயோ: ப்ராதி வஜிகம்" என்னு மூற் சூத்திரத்தினின்றும் அனுவிருத்தியான் வந்தியையும். மற்று ஆரியமொழிக டமிழில் வடசொல்லாய்ப் புணர்ச்சி யுறுங்கால், தமிழியன் முடிபு பெறுதலன்றி வடமொழியியன் முடிபும் ஒரோவழிப் பெறுமென் றாசிரியர் தொல்காப்பியனார் தொல்காப்பிய வெழுத்ததிகாரத்துப் புணரியலி லோதாமை அந்நூற்குக் குன்றக் கூறலென்னுங் குற்றமாகாதோ வெனின்,—"ஈறியன் மருங்கி னிவையிவற் றியல்பெனக்-கூறிய கிளவிப் பல்லா றெல்லா-மெய்த்தலைப் பட்ட வழக்கொடு சிவணி-யொத்தவை யுரிய புணர்மொழி நிலையே" என்னுந் தொகைமர போத்துப் புறனடைச் சூத்திரத்தி னிவ்வாறு வரும் வடநூற் புணர்ச்சி முடிபும் அடங்குதலின், ஆகாதென்க. தொல்காப்பியனார் இன்னோரன்ன வடநூன் முடிபுகளை அமைத்துக் கொள்க வென்றாண்டுக் கிளந்தோதாராயினார், "வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ-யெழுத்தொடு புணர்ந்த சொல்லா குமமே" எனச் சொல்லதிகாரத் தெச்சவியலில் வடசொன் முடிபெல்லாமடங்க வங்ஙனமெடுத் தோதுங் கருத்தின ரா யென்க. வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ யெனவே, சொற் புணர்ச்சி யாண்டுக் கிடந்த முடிபானும்வந் தெழுத்தொடு புணர்ந்த சொல்லா மென்பது தானே போதரு மென்க.

லோக மென்னும் ஆரியச் சொல் உலகெனத் தற்பவமாயிற்று. அது புவனத்திற்கும் உயிர்களுக்குந் தனித்தனி உரியபெயராம். உயிர்கள் சேதனப் பிரபஞ்சமும் புவனம் அசேதனப் பிரபஞ்சமு மாகலின், ஆதிபகவன் றமக்கருள் வழங்குஞ் சச்சிதானந்த முழுமுதல்வனென் றறிந் தவனுணைவழி யொழுகிப் போகமும் வீடுபேறும் பொருந்துங் கிழமை சேதனப் பிரபஞ்சமான வுயிர்களுக்கே யுரித்தா மென்பார், முக்கியவிருத்தியால், "உலகு ஈண்டுயிர்கண் மேனின்ற" தென்றவ்வா றுரைத்தார். அங்ஙன முரைத்தாரேனும், அசேதனப் பிரபஞ்சமுங் கௌணம்பற்றி உலகென்னுஞ் சொல்லால் ஆண்டுக்கொள்ளப்படுவதேயாம்; என்னை? அதன் றோற்றமும், நிலையும், ஒடுக்கமும், ஆதிபகவனுனை

முதல்வனுணையின்றன்றே நிகழ்தலா னென்க. உலகென்னுஞ் சொல் லிருவகைப் பிரபஞ்சத்தினையு மிங்ஙன முணர்த்திற் றெனவே, அவ்விரண்டும் ஆதிபகவனாகிய முதலை யுடையன வென்று பொருளாய் அகரமுதல வெழுத்தெல்லா மென்றது முற்றுவம மாயிற் றென்க. இஃதென்சொல்லியவாறோ வெனின்,—எழுத்துக்கள் உயிர்மெய்யென விரண்டாய் அகரமுதலவாதல்போலப் பிரபஞ்சமுஞ் சேதனம் அசேதனமென விரண் டாய் ஆதிபகவனாகிய முதலையுடைய தென்றவாறு மென்க. உயிரெழுத்துச் சீவான்மா விற்கு மெய்யெழுத்துத் தத்துவப் பிரபஞ்சத்திற்கும் அகரம் ஆதிபகவற்கும் உவமை யாமென்பது.

உலகந் தோன்றி நின்றொடுங்கி வருதல் காட்சி யளவையா னறியப்படுதலானும், இறைவனியல்பு அங்ஙனங் காட்சியளவை பற்றி யறியப்படாது கருதலளவையின் வைத்து ஊகித் துணரற்பாலதாகலானும், காணப்பட்ட வுடைமையாகிய வுலகத்தாற் காணப்படாத வுடையானாகிய கடவுளி னுண்மை சாதிக்கவேண்டி உலகு ஆதிபகவன்முத ற்றே யென்றவ்வாறோதியருளினார். அவ்வாறோதினும், பசுபாசங்களாகிய வுடைப்பொ ருள்கள் வியாப்பியவாதேயவுடைமையாயும் இறைவன் ஔபச்சிலேடிக வியாபக வாதார முதலுமாகலின், ஆதிபகவன் உலகிற்கு முதல்வனென்பதே நியாயநெறியாம்.

சூனியமே யான்மாவென்பாரும், தேகமே யான்மாவென்பாரும், இந்திரியமே யான்மாவென்பாரும், அந்தக்கரணமே யான்மாவென்பாரும், சூக்குமதேகமே யான் மாவென்பாரும், பிராணவாயுவே யான்மாவென்பாரும், பிரமப்பொருளே யுபாதிவச த்தாற் சீவான்மாவென விவகரிக்கப்பட்டு நிற்குமென்பாரும், பூதமுதலிய தத்துவமனைத் துங் கூடியசமூகமே யான்மாவென்பாருமென வான்மாவினியல்பு கூறும் வாதிகள் பல திறத்தர். அவரெல்லாங் கூறுஞ் சூனியான்மவாத முதலிய வனைத்தும் வழியளவை யான் விளக்கி ஆன்மாச் சூனிய முதலியவற்றின் வேறாயுள்ளதெனச் சைவோபநிட தங்களுஞ் சைவாகமங்களு நிரூபித்துப் பெறுவிக்குமேனும், அவ்வனுமான வாகம வாராய்ச்சி தோன்றி நின்றொடுங்கி வாராநிற்கு முலகச் செல்கதியாகிய காட்சி பற்றியே யுறுதி யுறுதலின், காணப்பட்ட வுலகத்தாலென் றவ்வாறுரைத்தார். இறைவன் சேத னசேதனப் பிரபஞ்சங்களோ டொன்றி யவையேயாய் மறைந்து இப்பெற்றிய னென் றுணரவு முரைக்கவும் வாராத அறிவுருவாய் நிற்றலின், அஃமுதல்வனைக் காணப்படாத கடவுளென் றவ்வாறுரைத்தார். காட்சியளவை யெனினும் பிரத்தியக்கப்பிரமாண மெனி னு மொக்கும். வழியளவை யெனினும் அனுமானப்பிரமாண மெனினு மொக்கும். உரையளவை யெனினும் ஆகமப்பிரமாண மெனினு மொக்கும். ஔபச்சிலேடிக வியா பகமாவது—எள்ளினெய்போல யாண்டு நீக்கமற நிறைந்திருத்தல். இறைவற்கு விசு வாந்தரியாமியா மியல்பும் விச்சுவாதிகனா மியல்பும் சொரூபவிலக்கண மென வேதாகம ங்க ளிரண்டு மொப்ப வெடுத்துக்கூறுதலின், இறைவன் உலகிற்கு முழு முதலாதல் என்று முள்ள வியல்பேயாம். என்றுமென்றது—பெத்த முத்தி யிரண்டினு மென்ற வாறாம். விசுவாந்தரியாமியெனினும், விசுவான்மாவெனினு மொக்கும். "சுவேதாச் வியாநுஹதொஜஹீயா நாதூஸ்ய ஜதெராநிஃஹிதொ மஹாயா । தமக்ருதுஃ பஶ்யதிவீதஶொகொ தாதுஃப்ரஸாதாநுஹிமாநமாத்மந꞉ ॥ என்னுங் கடவல்லி மந்திரமும் இவ்வியல்பு இனிது தெருட்டுதல் கண்டு கொள்க. இனி விச்சுவாதிக வியல்

பும் விசுவான்ம வியல்புந் தூரிய மூர்த்திக்கே யுரிய சிறப்பிலக்கணமென்பது “[illegible] ” என்னுஞ் சிவதத்துவ விவேக சுலோக வியாக்கியானத்திற் கண்டு கொள்க.

உலகாயதரும் புத்தரு மீமாஞ்சகருஞ் சாங்கியரு மென்றித் திறத்தார் முறையே தூல சூக்கும பூதங்களே முதலாம்; ஜீவான்மா, பிரகிருதி முதலாம்; இவற்றிற்கு வேறாகப் பரமான்மா வென்றொரு பரம்பொருள் முதலாத லில்லையென்ப ராகலின், அவர் கொள்கை மறுத்து முதல்வ னுண்மை நிறுத்தவும், ஏகான்மவாதிகளும் ஐக்கியவாத சைவருஞ் சிவாத்துவிதசைவரும் பாரமார்த்திகமான முத்திநிலையில் உயிர்கள் பேதமாதலின்றி முதல்வனோ டொன்றா யொழியு மென்றுஞ் சிவசமவாதசைவர் முதல்வனோடு சமமாய் நிற்கு மென்றுங் கூறுபவாகலின், அவர் கொள்கை மறுத்து முத்தி நிலையினும் உயிர்க்கு முதலாய் நின்றுபகரிக்கு முறை இறைவற் குண்மை நிறுத்தவும், வேண்டி, “ஆதிபகவன் முதற்றே யுலகு” என் றவ்வாறு தேற்றேகாரங் கொடுத்து ஓதியருளினாரென்க. இங்ஙனம் எடுத்துக் காட்டுவமை யளவையின் வைத்து ஆதிபகவனாகிய இறை முதற்கடவுளும் பசுபாசமாகிய விருவகைச் சேதனா சேதன வுலகு மென்னு முப்பொருளும் இம் முதற் றிருக் குறளால், நாயனார் விளக்கியருளினார். அசேதனம்—மலங் கன்ம மாயை யென மூன்றாம். இம் மூன்றும் உள்பொருளாமாறு முன்னர்த் தெரிக்குதும்.

ஆதிபகவனாகிய இறைமுதற்கடவு ளெனப்படும் பரப்பிரமப் பொருள் போலச் சீவான்மாவு மாயையு நித்தியப்பொருள்களாதல் ‘ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீஶநீஶௌ’ ‘[illegible]’ ‘மாயிநந்து மஹேஶ்வரம்’ எனவருஞ் சுவேதாசுவதரோபநிடத வசனங்களா னறிக. இவற்றிற்குப் பொருள் - பரமான்மாவுஞ் சீவான்மாவுமாகிய விருவரு நித்தியர்; இவருட்பரமான்மா முற்றறிவுடையோன்; சீவான்மாச் சிற்றறிவுடையோன்; பரமான்மா ஆளுமீசன்; சீவான்மா ஆளப்படுமநீசன்; மாயையைப் பிரகிருதி யென்றறிக; மாயையுடையவன் மகேசுரனென்றறிக வென்பதாம். இப்பொருள் கூறிய முறையாற் கொள்க. இன்னும், “[illegible]

ந்யோ அபிசாகசீதி || ஸமாநே வ்ருக்ஷே புருஷோ நிமக்நோ(அ)நீசயா சோசதி
முஹ்யமாந: ஜுஷ்டம் யதா பச்யத்யந்யமீசமஸ்ய மஹிமாநமிதி வீதசோக: || ஸ காரணம்
கரணாதிபாதிப:" என்றற் றொடக்கத்துப்பிரபலசுருதி வசனங்களும், பரமான்மாச்
சீவான்மா இருவருந்தம்முள் வேறாதலு நித்தியராதலும் பரமான்மாச் சீவான்மாவிற்கந்த
ரியாமியாதலுநியமிப்பவனாதலு மாயையால் அசேதனப்பிரபஞ்ச காரியஞ்செய்வோனாத
லும் பெத்தமுத்தி யிரண்டினு முபகாரி யாதலும் வீடுபேறருளுவோனாதலு நன்று நிறு
த்துமென்க. அற்றேல், உபநிடதங்கள் "ஏகமே" யென வெடுத்தோதிய தெற்றிற்கெ
னின்,—பதிப்பொரு ளொன்றே யென்னுங் கருத்தால் உபநிடதங்க ளங்ஙன மோதின.
ஆகலின், அது மேற்கூறிய வசனங்களோடு முரணுமா றில்லை யென்பது. "விண்ணுமண்
ணுந் தோற்றுவிக்குந் தேவ னொருவனே" "ஒருவனே யுருத்திரன் இரண்டாமுதற் கட
வுளில்லை" "பரமப்பொருளொன்றே" யென்றற் றொடக்கத்துச் சுருதிகள்போல ஏகமே
என்பதூஉம் பதிப்பொருளொன்றென்பது நாட்டுதற்கேயெழுந்ததென்பது. அற்றேல், "பிர
மப்பொரு ளில்லையாயி னொரு பொருளுமில்லை" என்று சுருதி கூறிய தென்னை யெ
னின்,—பிரபஞ்சத் தோற்ற நிலை யொடுக்கங்கள் பிரமத்தி னுபகாரத்தை யின்றி யமையா
மையின், சுருதி யங்ஙன மோதிற்று. இங்ஙனமாகலின், அதுவு மேல் வசனங்களோடு
முரணா தெனக. அற்றேல், உபநிடதங்கள் ஏகமாகிய பிரமத்தை யேகமென்றல் பொரு
ந்தும்; யாண்டு மவ்வாறு ஏகமென்னாது, சில விடங்களில் "பிரமமத்துவிதம்" என வபே
தங்கூறுவ தென்னை? அத்துவித மிருபொருட் கண்ணதெனக் கொள்ளின், ஒரு பொருளை
யத்துவிதமென்றல் பொருந்தாதாலெனின்,—ஆண்டுப் பிரமமத்துவிதமென்றது பிரமமுயி
ர்களின் வேற்றுமையின்றி நிற்பதென்னும் பொருட்டாகலான் அஃது ஏகமென்பதோடு
முரணுமா றிலையென்க. நகரம் அப்பிராமணனென வருமொழிப் பொருளி னன்மை
யினையும், அப்பிரகாசமென வருமொழிப்பொருளி னின்மையினையும், அதன்மமென வரு
மொழிப் பொருளின் மறுதலையினையு முணர்த்தி நிற்கும். அவற்றுள், அத்துவிதமென்
னுஞ் சொற்கண்ணதான நகரம் வேறன்மைபுணர்த்தி யன்மைப் பொருட்டாம். அற்றேல்,
ஆசிரியர் பதஞ்சலியார் மாபாடியத்து ளெடுத்தோதிய நகாரப்பொருள்களான தச்சாதிரு
சிய முதலியவாறனுள் அன்மைப் பொருள் யாதாமெனின், முதற்கண்ணதான தத்சாதிரு
சியமா மெனக. அத்துவித சொரூபஞ் சிவஞான மாபாடியத்துத் தடைவிடைகளான் விரி
த்தோதப்பட்டது. ஆண்டு இன்மை மறுதலைப் பொருள்கள் சுருதி விரோதமாமாறும்,
அன்மைப் பொருள்சுருதி சம்மதமாமாறு நன்றுநாட்டப்பட்டன. சிவசீவ பேதப்பொரு
ளிரண்டுந் தம்மு ளபேதமாதற் குரிய சம்பந்த விசேட முணர்த்துதலே அத்துவித
மென்னுஞ் சொற்குப் பொருளென்ப தாண்டை முடிபுரை யாமென் றுணர்ந்துகொள்க.

இனி ஏகான்மவாதிகளு ளொருசாராரான மாயாவாதிகண் மாயையாவது மெய்ப்
பொருளென்றுஞ் சொல்லப்படாது, பொய்ப் பொருளென்றுஞ் சொல்லப்படாது, அநிரு
வசனமாய் நிற்பதொன் றெனவும், அஃதுகலினன்றே மாயை யெனப் பெயர்பெற்றதெ
னவும், அத்தன்மைத்தாகிய மாயையிற் சித்தாகிய பரப்பிரமங் கண்ணாடியி னிழல்
போல அத்தியாசமாய்த் தோன்று மெனவும், அங்ஙனந் தோன்றியவழிப் பேய்த்தேர்
நீராகவுங் கயிறு பாம்பாகவுந் திரிவுகாட்சியாற் காணப்படுமாறுபோல அத்தோற்ற மண்
புன லனல் கால் முதலிய பிரபஞ்சமாய்க் காணப்படு மெனவும், இங்ஙனமாகலிற் சித்
தினுடைய விவர்த்தமே சகமெனவுங் கூறுவர். மெய்ப்பொருளு மன்றிப் பொய்ப்பொ

ருளு மன்றி நிற்ப தொன் றுண்டென் றெடுத்துக் காட்டுதற் கொரு பொருளின்மையின், வழியள்ளவைக் கேலாமையான், வழியளவைக் கேலாதாகவே யுரையளவைக்கு மேலாதாகலானும், பேய்த்தேரிற் றோன்று நீர் மாத்திரையே யசத்திய மாவதன்றி யுள்பொருளாய்த் தோன்றுவதாகிய பேய்த்தேர் அநிருவசன மாகாமையின் அஃதாண்டைக் கெடுத்துக் காட்டாதல் செல்லாமையானும், மாயை யநிருவசன மென்பது ஒரு சமயத்தார்க்கும் கொள்கை யன்மையானும், அஃதொன்றுக் வைத்து மறுக்கற்பாற் றன்றென் றொழிக. அல்லதூஉம், விவர்த்தனவாதிகள் ஒன்று பிறிதொன்றுபோலத் தோன்றுதல் விவர்த்தன மென்பர். அஃ தசத்தியமேயாம. பிரவஞ்சஞ் சத்திய மென்பது காட்சி முதலிய வெல்லா வளவைகளானுந் துணியப்படுதலின், அத் தன்மைத் தாகிய பிரவஞ்சஞ் சித்தினுடைய விவர்த்தனமாமா றியாண்டைய தென்க. இதனானு மாயை யநிருவசன மன்றென்பது தெற்றென வுணர்க. மாயை யநிருவசன மாயின், அதன் காரியமாகிய பிரவஞ்சஞ் சூனியமாதல் வேண்டு மாகலா னென்பது.

அற்றேல், பிரவஞ்சஞ் சத்திய மென்றற்குப் பிரமாண மென்னை? காட்சியே பிரமாண மெனின்,— அற்றன்று; காட்சியானே நிகழ்காலத்துப் பிரவஞ்சஞ் சத்திய மென் றுணரப்படு மாயினு முக்காலத்தினு மொருதன்மைத்தாகிய சத்தியப்பொருள் பிரவஞ்ச மென்ப ததனானுணரப்படாமையின். அன்றியுங் காட்சி யளவையான் இது குடம் இஃதாடையெனவிதிமுகத்தாற் காணப்படுவ தன்றி, இஃதாடையன்று இது குடமன்றென மறுதலைமுகத்தாற் காணப்படாமையின், அன்மையாத லுணர்ந் தன்றிப் பேதந் தோன்றாமையின், பேதப் பிரவஞ்ச முண்மைக்குக் காட்சி யளவை பிரமாண மன்று. அற்றேல், ஆடை குடத்தின் வேறு குடமாடையின் வேறு என்னுங் காட்சியெல்லார்க்கு மொப்ப முடிந்த தாகலிற் பேதப் பிரவஞ்ச வுண்மைக்குக் காட்சி யளவை பிரமாணமன்றென்றல் பொருந்தாதெனின்,— அற்றன்று; அத்தன்மைத்தாகிய காட்சி சவிகற்பமாகலின், சவிகற்பமெல்லா மயக்கமாகலானென்க. பேதப்பிரவஞ்சவுண்மைக்குக்காட்சி யளவைபிரமாணமின்றாகவே, அவிநாபாவமாகிய வேதவுணர்தற் கிடமின்மையின், வழியளவைபிரமாணமன்று. அவ்விரண்டிற்குமாறுபாடாகியபொருளி னாகமவளவையும் பிரமாணமாகா தென்க. இன்னும், இஃதிதனின் வேறென்னுஞ் சவிகற்பக் காட்சி பிரமாணமென்பார்க்கும் அபேதவுணர்வு நிகழ்ந்தன்றிப் பேதவுணர்ச்சி நிகழாது; எய்தியதற்கன்றி விலக்கின்மையின். அங்ஙனமாகவே, முற்படத் தோன்றும் அபேதவுணர்ச்சி பிரமாண மென்ப தொருதலையாகக் கோடல் வேண்டும். வேண்டவே, பிற்படத் தோன்றும் பேதவுணர்ச்சி யதனை யவாய்நிற்றலிற் பிரமாணமாகாமை யறிக. அபேதவுணர்ச்சி காட்சி யளவையானே பெறப்படுதலின் குடமாடையின் வேறன்று; திரவியமாகலால், ஆடைபோலுமென்னு மனுமானமும், வேற்றுமையின்றிக் கூறும் வேதவாக்கியங்களும், அதற்குப் பிரமாணமா மென்க. ஆகவே, வான் வளி தீ நீர் முதலியவனவாக நீ வேற்றுமைபடக்கூறும் வாக்கியங்களெல்லா மிவ்வளவைகளோடு முரணுதலின், உபசாரமே யன்றிப் பொருள்படா வென்பது கண்டுகொள்க. இங்ஙனம் பேதவுணர்ச்சிக்குப் பிரமாணமின்மையிற் பேதப் பிரவஞ்சமாகிய பிரமேயமின்மையுந் தானே போதரும். அவ்விரண்டு முளவெனக் கொள்ளினும், பிரமிதிக்கும் பிரமேயத்திற்குஞ் சம்பந்தமென்னை? தாதான்மியமோ? காரணகாரியத் தன்மையோ? சையோகமோ? சமவாயமோ? வேறொன்றோ? எனக் கடாயினார்க்குத், தாதான்மியமாவது ஒன்றுதானே யொருவாற்றானிருவகைப்பட்டுப் பிரிப்பின்றி நிற்றற் குரித்தாதலாகலின், அத்தன்மைத்தாகிய தாதான்

மிய சம்பந்தங் குடஞானத்திற்குங் குடத்திற்கு முண்டெனின்,— குடஞானம்போலக் குடமு மகத்தின்கணுளதாதல் வேண்டும். குடம் புறத்தின் கண்ணதாகலுங் குடஞான மகத்தின் கண்ணதாதலு மெல்லார்க்கு மொப்பமுடிந்தமையின், அவற்றிற்குத் தாதான் மியங்கூறல் பொருந்தாமையானும், காரண காரியத் தன்மையே சம்பந்தமெனின்,—கார ணகாரியங்களி னொன்றுள்வழி யொன்றின்றாதல் பொருந்தாமையின், கனவின்கட் குட ஞான முதலிய வுணர்வுண்மையின், குடமுதலியனவு மாண்டுளவாதல் வேண்டும். அஃ தின்மையானும், விடயமும் விடயிப்பதுமாந் தன்மை சம்பந்த மெனின்,—விடயமாவ திதுவென்றறிய வாராமையானும், சம்பந்தமே பெறப்படாமையின், பேசப் பிரவஞ் சம் பிரமிதிக்குப் புலனாகாமையானும், பிரவஞ்சம் அசத்தியப் பொருளே யாகலான், அவ ற்றிற்குக் காரணமாகிய மாயை யநிருவசன மென்றல் பொருத்தமுடைத் தென்று, இங் ஙன மாயாவாதிகள் கடாவிடைகளாற்சாதிப்பராகலின், ஆண்டிறுக் கென்னை யெனின்,— கூறுதும். பிரவஞ்சஞ் சத்தியப் பொருளென்பதற்குக் காட்சியளவையே பிரமாணமாம். கயிற்றை யரவெனக்காணுந் திரிவு காட்சியிற்போல மாசறு காட்சியின் வேறுபடுதலின் மையின், நிகழ்காலத்திற் கண்டது முக்காலத்தினு மொக்குமாகலானும், நிருவிகற்பக் கா ட்சியின் விதிமுகத்தாற் பேதமறியமாட்டா தாயினுங் குற்றியோ மகனோ வெனனுணமைய த்தின் பின்னர் இது குற்றியே மகனன்றெனா வெதிர்மறை முகத்தாற் பேதவுணர்வு காட் சிக்குப் புலப்படுதலானும், திரிவுகாட்சியிற் கயிறு பாம்புபோலவு மாலைபோலவு மொவ் வொருவர்க் கொவ்வொரு காலத்திற் றோன்றும் ; அதுபோலன்றி மாசறுகாட்சியின் எல் லார்க்கு மெக்காலத்துங் குடங் குடமேயாய்த் தோன்றுவதல்லது வேறுபடத் தோன்றா மையிற் சவிகற்பக் காட்சி பிரமாணமே யாகலானும், அன்றியுங் கயிற்றுக்கு மரவிற்குங் கோணி நீண்டு கிடத்தல் முதலிய விலக்கண வொப்புமையா னுண்டொன்றை யொன்றா கத் திரியக் காண்டல் பொருந்தும் ; அதுபோலச் சித்தாகிய பிரமத்தைக் குடமுதலிய பொருளாகத் திரியக்காண்டற்குத் தம்மு ளொப்புமை யின்மையின் அதனையு மவ்வாறு திரிவுகாட்சி யென்றல் பொருந்தாமையானும், சவிகற்பக் காட்சிக்கு நிருவிகற்பக் காட்சி காரணமாகலிற் காரணத்துள்ளதே காரியத்தினு முண்மையாற் பெயர் சாதி குண முத லிய பேதவுணர்ச்சி நிருவிகற்பக் காட்சியி னின்றாயிற் சவிகற்பக் காட்சியினு மின்றாய் முடியுமாகலின், நிருவிகற்பக் காட்சியினுஞ் சூக்குமமாய்ப் பேதந் தோன்று மாகலானும், அதுபற்றி எய்தியதற்கே விலக்காகலிற் பேத முணர்ந்தன்றிப் பேதமின்மை யுணர்தல் கூடாமையின் அபேத ஞானமும் பேதஞானத்தை யவாவி நிற்றலின், அபேத ஞான முற்படத் தோன்றுதல்பற்றிப் பிரமாணமென்றல் பொருந்தாமையானும், ஆடை குடத் திற்கு வேறென்றற் றொடக்கத்துப் பேதவுணர்ச்சி முக்காலத்தினும் வேறுபடாமையின், ஆடை குடத்தின வேறன்றென்றற் றொடக்கத்து அபேதவுணர்ச்சி யெதிர்காலத்தின் வே றுபடுதலின், வேறுபடாமையும் வேறுபடுதலும் பற்றியே பிரமாணமென்றும் அப்பிரமா ணமென்றுங் கோடல் பொருந்த முடைத்தாகலானும், காட்சியளவையே பேதவுணர்ச் சிக்குப் பிரமாணமாத லறிக. ஆகவே, அபேதஞ் சாதித்தற்கு முற்கூறிய வனுமானமும் போலியாயவாறு காண்க. அங்ஙன மல்லாக்கால், அவ்வனுமானத்தானே ஆடையெடுக் கச் சென்றான் குடத்தை யெடுத்து வருதல் வேண்டுமென் றொழிக. இதனானே யபேத ங்கூறு மாகமங்களு முபசாரமென்பது கண்டுகொள்க. இன்னும், பிரவஞ்ச மித்தை யெனத் துணிவதற்குக் கொண்ட பிரமாண மெய்யோ ? பொய்யோ ? எனக் கடாயினார் க்கு, மெய்யெனிற் பிரவஞ்சத் துட்பட்ட பிரமாண மெய்யெனவே யம்முறையாற் பிர

வஞ்சமு மெய்யேயாம். பொய்யெனிற் பொய் பிரமாண மாகாமையிற் பிரவஞ்ச மெய்ப் பொருளென்பது தானே போதரும். அற்றேல், பிரமிதிக்கும் பிரமேயத்திற்குஞ் சம்பந்த மென்னை யெனின்,—அறியப்படுவது மறிவதுமாகிய விடய விடயித்தன்மையே சம்பந்தமென் றுணர்க. விடய விடயித் தன்மை சம்பந்த மன்றென்பையாயின், நீ பிரவஞ்ச மித்தை யென்றுணரு முணர்விற் கதுவிடய மாகாமையிற் பிரவஞ்ச மித்தை யன்றெனப்பட் டொழிகவே வழுவாமென் றொழிக.

அற்றேல், விடயமாவதியாதெனின்,—எவ்வுணர்வு நிகழ்ந்தவழியெப்பொருள் விளங்கும் அஃததற்கு விடயமென்க. விளங்குதல் விளங்குதற் குரிமையாதல். ஆகவே, இங்ஙனங் கூறியவாற்றாற் பிரமாணமுஞ் சம்பந்தமு முண்மையிற் பிரமேயமாகிய பிரவஞ்ச மெய்ப்பொருளே யாகலான் அதற்கு முதற்காரணமாகிய மாயையு மெய்ப்பொருளாவதன்றி யநிருவசனமாதல் பொருந்தாமை யறிக.

இனி வேதத்து ளோரிடத்தும் பிரமப்பொருளை "உபாதான"மென்னுஞ் சொல்லா லெடுத்தோதக் காணாமையால், பிரமம் பிரவஞ்சத்திற்குப் பரமாதார வியாபக நிமித்த மென்பதே வேதத்துக்குங் கருத்தாமென்க. இன்னும், அவ்வமுதற் காரணங்களின் குணமெல்லா மவ்வக்காரியங்கட்கு முளவென்பது நியமமாதலின், சித்தாகிய பிரமத் திற்றோன்றிய பிரவஞ்சமுஞ் சித்தாதல் வேண்டுமன்றிச் சடமாதல் பொருந்தாதென்க. அற்றேல், பாலினுண்டாகிய தயிருக்குப் பாலின்குணமு நெல்லினுண்டாகிய பதர் பலாலங்கட்கு நெல்லின் குணமுங் கொம்பி லுண்டாகிய புல்லுக்குக் கொம்பின் குணமுஞ் சிலம்பியி லுண்டாகிய நூலுக்குச் சிலம்பியின் குணமுங் கோமயத்திலுண்டாகிய தேளுக்குக் கோமயத்தின் குணமுங் காணாமையின், காரணத்தின் குணமே காரியத் திற்குங் கோடுமென்னு நியமம் பொருந்தாதாலெனின்,—அற்றன்று ; ஒன்றன்குண மொன்றற்காதலின்மையின், காரணத்தின் குணமே காரியத்திற்கு மென்பதற்குத் தாற்பரியம், காரணத்தின் குணங்களோ டொத்த குணங்களே காரியத்திற் குளவாதலன்றி யவற்றிற்கு மாறுதலையான குணங்க ளுளவாகாவென்பதேயாமாகலான், ஈண்டெடுத்துக்காட்டிய வற்று ணியமத்துக் கிழுக்கின்மையறிக. சிலம்பியி னூல் வருதற்குச் சூக்கும காரணஞ் சிலம்பி வயிற்றினுண்மையானுங் கோமயத்திற் றோன்றியது தேளினுடம்பேயாகலானும், இன்னோ ரன்னவையெல்லாம் பிறவிப்பேத மாகலானும், ஆண்டையப்பாடின்மை கண்டு கொள்க.

ஈண்டுக் கூறியவாற்றான் மாயையே பிரவஞ்சத்திற்கு முதற்காரண மென்பதூஉம், அதற்குத் தாரகமாய் விரவி நின் றதிட்டித்தலான் முதல்வ னிமித்த காரணமே யாவனென்பதூஉம், தனிபொருளாயின்மை காண்க. "மாயையான் விசேடிக்கப்பட்டு விசிட்டமாய் நின்று முதல்வனு முதற்காரணமாம்" என்ற நீலகண்ட வாசிரியரும் பரந்து சென்று முடிவின்கண் இவ்வாறு கோடலே சித்தாந்தமாக வலியுறுத்தினர். அது சென் மாதிகரணத் திறுதியிற் சிவாதித்தியமணிதீபிகையினுங் காண்க.

அற்றேல், "பிரமத்தையுணர்ந்தோன் எல்லா முணர்ந்தோன்" என்றற் றொடக்கத்து வேத வசனங்கள் பயப்பா டிலவாமெனின், உடையானியல்புணர்ந்தவழி, உடைப் பொருளான உயிர் மாயை கன்மங்களும் அவ்விலக்கணத்து ளகப்பட்டு வியாப்பியமாய் நிற்றலின், அவையு மினிதுவிளங்குமென்பது அவற்றிற்குப் பொருளாதலின், பயப்பா

டையனவேயாமென்க. நான்மணிமாலையில், "நுரையுந் திரையு நொய்யுறு கொட்பும் வளைவில் சீகர வாரியுங் குரைகடற் - பெருத்தலுஞ் சிறுத்தும் பிறங்குவ தோன்றி - யெண்ணில வாகி யிருங்கட லடங்குந் - தன்மை போலச் சராசர மனைத்து - நின்னிடைத் தோன்றி நின்னிடை யொடுங்கும்" என்றது, முதல்வன் மாயைக் காதாரமாய் நிற்றல் பற்றி யாகலின், ஆண்டையப்பாடின்மை யறிக. இது கிழங்கினின்றுந் தோன்றுந் தாமரையைப் பங்கசம் என்பது போல்வதோ ருபசார வழக்கெனக் கொள்க. மாயைக்குத் தாரகமாய் நிற்றல்பற்றியே யவ்வாறுரைத்த தென்ப துணர்ந்து கோடற்கே, நீரிற் றோன்றியொடுங்கு நுரை முதலியவற்றை நீர்க்கிடனாகிய கடலிற் றோன்றி யொடுங்குதல் போலென் றுவமை கூறினா ரென்க. கடலென்றது—நீர்க்கிடங் கொடுத்து நிற்கு மாகாயம். நின்ற திருத்தாண்டகத்தும் பிறாண்டும் "இருநிலனாய்த் தீயாகி - எம்மடிக ணின்றவாறே" என்பது முதலாக எழுந்த தமிழ்வேதத் திருவாக்குக்களும், "அறிவானுந் தானே யறிவிப்பான் றானே, யறிவா யறிகின்றான் றானே—யறிகின்ற, மெய்ப்பொருளுந் தானே விரிபொழில்பா ராகாய, மப்பொருளுந் தானே யவன்" என்னும் அம்மை திருவாக்கும், உலகெலாமாகி வேறா யுடனுமாய் முதல்வன் நிற்றல்பற்றியாகலின், ஆண்டாசங்கை யின்மையுங் கண்டுகொள்க. இதனானே, அபேதங்கூறும் வசனங்களு முபசாரமேயன்றி யுண்மையன்றென்பது கண்டுகொள்க. இவ்வாறன்றி முதல்வன் மாயைபோல முதற்காரணமாவனெனின்,—அது மேற்கூறியகுற்றங்கட் கிடனாதலன்றியு "நிருவிகாரி" யென்னுஞ் சுருதிகளோடு முரணுதலு முடைத்தென்க. இங்ஙனங் கூறியவாற்றால், "காரிய காரணங்கண் முதறுணை நிமித்தங் கண்டாம் - பாரின்மண் டிரிகை பண்ணு மவன்முத றுணைநி மித்தந் - தேரின்மண் மாயை யாகத் திரிகைதன் சத்தி யாக - வாரியன் குலால னாய்நின் றாக்குவ னகில மெல்லாம்" என்னு மத்துவித சைவசித்தாந்த வழக்கே சுருதி யுத்தி யனுபவ மூன்றற்கு மேற்றதாய்த் திருக்குறட் பொருளை வலியுறுத்தற் குரிய மெய்ப்பிரசங்கமாமென் றறிந்துகொள்க.

அற்றேலஃதங்ஙனமாக; நிமித்தகாரணனாகிய முதல்வன் முதற் காரணமாகிய மாயைக் காதாரமாவனாயின், உவமப்பொருளாகியகுயவனு மண்ணுக்காதாரமாதல் வேண்டுமாலெனின்,—அறியாது கடாயினாய். உவமமெல்லாமொருபுடை யொத்தலேயன்றி முழுவது மொத்தலின்று. முழுவது மொக்குமென்பாரை முதல்வனுக் குரிய வியாபக முதலிய குணங்களுங் குயவனுக்கு முளவாதல் வேண்டுமெனக் கடாயினார்க்கு விடையென்னையெனக் கூறி மறுக்க. ஒருபுடை யொத்தலானன்றே யொருபொருளுக் கோரோரியல்புபற்றி வேறு வேறுவமை கூறியதூஉ மென்க. அற்றேல், இவ்வியல்பிற் குவமை யாதோ வெனின்,—நன்றே கடாயினாய். குழவியுடம்பின் முதற்காரணமாகிய வுத்திரசுக்கிலங்களுக் காதார மதற்கு நிமித்தகாரணமாகிய தாய் தந்தை யாதலுஞ் சிலம்பி நூலின் முதற் காரணத்துக் காதார மதற்கு நிமித்தகாரணமாகிய சிலம்பியாதலு மறிந்தாயன்றே! இவ்வாறு பலவுளவெனக் கொள்க. பிரமவிவர்த்தன வபேதவாதநிராகரணம் ஆசிரியர் சிவஞானயோகிகள், சிவஞான மாபாடியத்து விரித்துரைத் தருளினார். சிவஞான போதத்துப் பிரமாணவோத்தி னிரண்டாம்பாதத் திரண்டாமதிகரணத்துட் காண்க.

ஆதிபகவனாகிய முதல்வன் எள்ளினெய்போலப் பசுபாசங்களிற் கலந்து நீக்கமற வெளபச்சிலேடிக வியாபகமாய் நிற்குமியல்பினனாதலின், அவன் பிரபஞ்சகாரிய மியற்றுதியற்றுதற்குக் குலாலனை யங்ஙன முவமையாகக் கூறுதல் கருத்தாவாதன் மாத்திரை

க்கேயன்றி வேறில்லையென்பது தெரிந்துகொள்க. இயற்றுதியற்றுதலாவது - கரணத்தா னன்றிச் சங்கற்பமாத்திரையாற் செய்தலாம். மற்றுக்குலாலன் சங்கற்பத்தானன்றிக் கரணத்தாற் காரியஞ் செய்யும் வினைமுதலாகலின் சங்கற்பத்தாற்காரியஞ் செய்யு மாதி பகவனுக்குக் கருத்தா முறையினுஞ் சிறிதொப்புப்பற்றியே யுவமமாகின்றானென்றுணர்க. ஈண்டுச்சங்கற்பமென்றது,— வியாபக சிற்சத்தி சன்னிதிப் பிரேரகத்தினை. கர்த்திருத்துவமங்ஙன மிருவகையாமாறு: "கர்த்ருத்வம் த்விவிதம் விப்ர ஸங்கல்பாத் காரணாத் ததா| நஹி ஸங்கல்பாத் காரணாத் கர்த்தா ஸ்ருஷ்ட்யாதௌ க்ரியதே வபு: | ஶிவஸ் ஸங்கல்பாத் காரணாத் வி க்ஷேத்ராவகாஶதா" என்னும் பவுட்கராகம வசனத்தானறிக.

இறைவ னெள்ளினெய் போலப் பசுபாசங்களிற் கலந்து நீக்கமற வெளபச்சிலேடிக வியாபகமாய் நிறைந்து நிற்குமென்னு மத்துவித சைவ சித்தாந்த திருவசனவுரையை, இக்காலத் தேகான்ம வாதிகளு ளொருசாரரருட்பட்டார், எள்ளினெய் கோதிடை யுற்றுப் பிரிந்திருக்கக் காண்டலின், உவமேயமா முதல்வனு மொன்றனிடை யீர்ந்துப் பிரிந்து வியாபகமாகுங் கொலென் றுசங்கை நிகழ்த்துவர். ஒரு பொருட் கொரு பொருளுவம மாதலொருபுடை யொத்தல் பற்றியே யெனபது மேற்கூறினுமாகலின், அங்ஙன மாசங்கித்த லுவமை யிலக்கணமறியார் கூற்றேயா மென்றொழிக. பசு பாசங்களின் முதல்வன் கலந்து நீக்கமற வியாபகமாய் நிற்றற்கு எள்ளினெய்யை யுவமானமாகக் கூறுவது, நெய் எள்ளில் உள்ளும் புறம்புமாய்க் கலந்திருத்தல் பற்றியேயன்றிப் பிறிதில்லை யென்க. இங்ஙன மாசங்கிப்பார் ஆயிரம்பூப் பொன்னோடொக்கு மென்றவழி யஃதுருக்கியடித்து நீட்டவும் படுங்கொலெனவும், இவணுதல் பிறைமதி போலு மென்றவழிக் குறைதலும் வளர்தலு வானுறியங்குதலு மென்றினையும் இவணுதற் குளகொலெனவு மாசங்கிப்பாராகலின், அவை யவர் வெள்ளறிவு வியாபாரமாமென் றொழிக்கப் படுவன வல்லது மறுத்தற் கேற்பன வல்ல வென்றறிக. ஈண்டுக் குறைதன் மறைதலும் வளர்தல் வெளியாதலுமாம். இன்னும், அவர் பசுபாசங்கண் மெய்ப் பொருளென்பார் முதல்வன் வியாபகத்துக்கு நூனதை கூறுபவராவர். யாதினாலெனின்,—பசுபாசங்களுள்ள விடங்களின் முதல்வனிருப் பிடையறவுற்று அவன் வியாபகங் குறைவுறுதலா லென்றிங்ஙன மாசங்கை நிகழ்த்தாநிற்பர். இன்னோரன்ன வாசங்கைகளை அவர் பிராகிருத அவயவ கண்டப் பொருட் பயிற்சியினா னிகழ்த்துகின்றார். என்னை? அவயவமுடைய கண்டப்பொருளன்றி நிரவயவகண்ட சச்சிதானந்தப் பொருண் மற்றொன்றா னிடையறவுற்றுக் குறைவுறா தாதலானென்க. ஆதிபகவனாகிய விறைவ னிரவயவகண்ட சச்சிதானந்த முதற்பொருளாகலின், அவன் அனாதியே தன்போல நித்தியமாய்த் தனக்கு வியாப்பியமான சிதசித்துக்களில் யாண்டுங் கலந்து நீக்கமறத் தன்பூரணத்திற்கு நூனதையா தமின்றி யவையே தானாய் நிற்கும் பெற்றியுடையனாமென்க. இனி அப்பெற்றி யுயிர்களா லிற்றென வறியவு மோதவும் வராத சொரூப மாம். அற்றாகலினன்றே சுருதிகளு மவன் சொரூபவியல்பு "வாங் மனசாதீத மென்றும்" "அநிர்த்தேசியம்" என்று மங்ஙனமெடுத்து முறையிட் டோய்ந்தன வென்பது. "வாக்கு மனங்கழிய நின்ற மறையோனே" என்னுந் தமிழ்வேதமு மக்கருத்தே பற்றி யெழுந்தது. வளி தீ நீர் நில மெனவொன்றற் கொன்று தூலமாகி நிலைபெறும் பூதங்களுணிற்குஞ் சூக்கும பூதமான வாகாய மிடங் கொடுத்து வியாபகமாய் நிற்கும் பெற்றியே மக்கட் குற்றறிதற் கரிதாயதுண் பொருளாம். ஆனபின், நிரவய வகண்ட சத்தாயுஞ் சித்தாயு மானந்தமாயு நிற்கும் பரப்பிரம

மூதற் பொருள் பசுபாசங்களுக்கு அந்தரியாமியாயும் வியாபியாயும் பூரண முற்றுநிற்குஞ் சொரூபவியல்பை, மாயா தனுகரணங்களாற் கட்டுற்றவற்றி னுபகாரத்தானுஞ் சுத்த மாயா நாத விருத்தி காரிய சத்த சமூகமான வேதமுதலிய கலையறிவு மின்மினி விளக்கத் தானுஞ் சிறிதறிவு விளங்கி, அங்ஙனம் விளங்கிய சிற்றறிவு மாத்திரையானே, நாம் பிரமமென்று தருக்கி, இறைவன் திருவருட்கயலாய்க் கேவலமுற்றுழலும் பசுபோதப் புல்லறிவுயிர்கள், நாமறிந்தாமென் றுரைப்பதூஉம், பசுபாசங்கண் மெய்ப்பொருளாயின் அவற்றினிருப்பான் முதல்வன் வியாபகத்திற் கிடையறவு முட்டுற்று தூனதை புகுதருமென்று பாண்டித்தியம்போல அபிநயித்துக் குதர்க்க நிகழ்த்ததூஉம், புல்லறிவு முதிர்ச்சியாவதல்லது மற்றியாதாமென்க. இதுகாறுங் கூறியவாற்றால் "அகர முதலெழுத்தே ஆகாரமுதலிய வெழுத்துக்களாய்த் தோன்றுகிற்கும். அதுபோலப் பிரமப் பொருளொன்றே அவிச்சையினாற் சிற்சடங்களாய்க் காணப்படும்" என்னும் பிரமவிவர்த்தன ஏகான்மவாதக் கொள்கை, ஆகாய சித்திரம்போல வெறும் போலியாயது, தெளிந்து கொள்க.

ஏகான்மவாதிகள் இன்னுந் தங்கொள்கை நிறுத்தவேண்டி, "அகரம் அங்காத்தன் மாத்திரையானே பிறக்கும். ஏனைய வெழுத்துக்களும் அவ்வங்காப்பே காரணமாகக்கொண்டு பிறந்து வேறுபட்டு நடக்கும். அங்காப்பு முயற்சியில்வழி யவற்றிற்குத் தோற்றரவு கூடாதாம். இங்ஙனமாகலின், அவையெல்லாம் அகரமுதற்காரணகாரியமே"யென் றிங்ஙனங் கூறுகிற்பர். அகர வக்கரம், நாதகாரியமானவோர் திரவியம். அங்காப்பு, அண்ணத்தன் றொழில். என்றது.—கீழ்மேலுதடுகளி னீக்கவியாபாரம். திரவியமுந் தொழிலும் வேறாகலின், அங்காப்பே அகரமெனக்கொண்டு அவ்வங்காப்புமுயற்சியிற் பிறத்தலின், ஏனையெழுத்துக்களும் அகர காரியமேயாமென்றல் திரவியத்திற்குந் தொழிலுக்கும் வேற்றுமை யறியார் கூற்றேயாமென்று மறுக்க. இன்னும், இதனை யோர்திருட்டாந்தத்தில் வைத்துப் புலப்படக் காட்டுதும். ஒரு வாயில் ஓரரண்மனையில் அரசன் புறம்போதரற்கென வமைக்கப்பட்டு அரசவாயிலென வழங்கப்படும். அவ்வாயிலால் அரசன் புறம்போதராநிற்பன். அவன் புறம்போதருங்கால் அவற்குரிய ஊர்திப்படைவீரருங் காலாட்படைவீரரும் அவ்வாயிலாற்றானே படையமைந்துடன்போதராநிற்பர். அங்ஙனம் போதருல்பற்றி அரசன் படைவீரராகான். படைவீரர் அரசனாகார். அதுபோல, அங்காப்பு முயற்சினால் அகரமும் ஏனையெழுத்துக்களும் பைசந்தியவத்தையினீங்கி வைகரியாய் வெளிப்படுதல்பற்றி அகர மேனையெழுத்துக்களாகாது. ஏனையெழுத்துக்கள அகர மாகா. அரண்மனைவாயிற் புதவனீக்கமென்னுந் தொழில் அரசன் புறம்போதற்குச் சிறப்புடைத்தாய்ப் படைவீரர் புறப்போக்கிற்கும் ஏற்புடைத்தாம். அற்றே யுதடுகளி னீக்கமெனப்படுந்தொழில் அகரம் புலனாதற்குச் சிறந்த முயற்சியாய் ஏனையெழுத்துக்களின் புலப்பாட்டிற்கும் ஏற்கு முயற்சியாம். இதில் அரசன் அகரத்திற்கும் இருவகைப்படைவீரர் ஏனை யிருவகை யெழுத்திற்கும், வாயிற்புதவங்க ளிரண்டுமேல் கீழுதடுகளிரண்டற்கும்,அவற்றினீக்கம் உதடுகளினீக்கத்திற்கும், திருட்டாந்தமாயினமை காண்க. இனி அரசன் வாயிலாற் புறம்போதற்குமுன் அரண்மனையுள் வீற்றிருந்தான். அவன் மெய்காவற்படை வீரரும் ஆண்டே அவற்காத்துட னின்றார். அதுபோல, அகரம் உதடுகளின் அங்காப்பினாற் புலனாதற்குமுன், நாத தத்துவத்தின்கட் சத்திமாத்திரையாய் வீற்றிருந்தது. ஏனையெழுத்துக்களும் அகரச்சத்தியான் வியாபிக்கப்பட்டு ஆண்டே சத்திமாத்திரையாய் அதற்குரிமையுற்று நிலைபெற்றன. இவ்வெழுத்துச்சத்திக ளித்த மாதலால், அக்கரமென் றங்ஙனம் வழங்கப்படும். இதனானே, அகர

நாதத்தின்கட் சத்திமாத்திரையாய் நிற்குஞ் செவ்வியிற்றானே, அங்ஙனஞ் சத்திமாத்திரை யாய் நிற்கு மேனையெழுத்துக்களுக்கு முதலாய், நிறையுயிர் முயற்சியி னுதமாத்திரை யாய் விகாரமின்றி அங்காப்புமுயற்சிபற்றி யியல்பான் வெளிப்படு மென்பதூஉம், ஏனையெழுத்துகளும் அதன்சத்தியான் அங்ஙனம் வியாபிக்கப்பட்டு நின்றவாறே, நிறை யுயிர் முயற்சியால் அதன்றோற்றத்திற்குச் சிறந்த அங்காப்பு முயற்சிபற்றி, அசனுயிர்ப் பானே விகாரமுற்றுத் தோன்றுமென்பதூஉம், அம்முறையானே அகரம் ஏனையெழுத்து க்களின் றோற்றவியக்கங்களுக்கு நிமித்தமாமென்பதூஉம், எழுத்துக்களுக்கு முதற்காரண நாதத்தின்கட்கிடக்கு மவ்வச்சத்திக ளென்பதூஉம், அண்ணத்தின் றொழிலாகுமங்கா ப்புமுதலிய முயற்சிகள் எழுத்துக்களின் றோற்றத்திற்குத் துணைக்காரண மென்பதூஉம், கண்டுகொள்க. நாதத்தின்கண் அகரமுதலிய வெழுத்துச்சத்திகளெல்லாம் வெவ்வேறா யிருத்தலின், அவை வெவ்வேறு பொருளாதலன்றி ஒன்று மற்றொன்றாகித்திரிந்த பொ ருள்களல்லவென்ப துணர்க. ஈண்டுக்கூறியவாற்றால், அங்காப்பு. முயற்சியேகொண்டு "அகர முதற்காரணமாகி நிற்ப, ஏனையெழுத்துக்களெல்லாம் அதன் காரியமாய்த்தோன்றி விளங்காநிற்கும். அதுபோலப் பிரமமுதற்காரணமாகி நிற்பச் சிற்சடங்களெல்லாம் அதன் காரியமாய்த் தோன்றி விளங்காநிற்கு"மென்னும் பிரமவிவர்த்தனவாதம் அளவை கட்கன்றிப் பொருட்துமாற்றிற்கு மேலாதவாறு கண்டுகொள்க. வடநூலார் பொருந்து மாற்றினை யுத்தியென்பர். உயிர்க்கு அந்தரியாமியாய்நிற்கு முதல்வன் சிற்சத்தி உயிர்க் கிழவன் சிற்சத்தியினைப் பிரேரிக்க, உயிர்க்கிழவன் சிற்சத்தி நாதத்தினை யியக்க, நாதந் தன்விருத்திரூபமான அகரத்தினை யியக்க, அகரம் ஆகாரமுதலிய வெழுத்துக்களை யியக் கித் தோற்றுவித்தலின், அகரம் ஏனையெழுத்துக்களின் றோற்றத்திற் கெல்லா நிமித்தகார மாமென் றங்ஙன முரைத்தாம். உண்மையில் எழுத்துக்களின் றோற்றத்திற்கு அகரம் அவாந்தர நிமித்தமென்றும், பரமநிமித்தகாரண முதல்வன் சிற்சத்தியேயாமென்றும், கடைப்பிடித் துணர்ந்துகொள்க.

நாயனார் ஆதிபகவனை முதல்வனு மவனுடைப்பொருள்களான சேதனசேதன விருவகையுலகு மிவ்வாறு மெய்ப்பொருள்களென நிதரிசனவுவமையளவையான முதற்க ணிறுத்திக், "கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ - னற்றா டொழாஅ ரெனின்" "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார் - நிலமிசை நீடுவாழ் வார்" "வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்—கியாண்டு மிடும்பை யில" இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன் - பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு" "பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க - நெறிநின்றார் நீடுவாழ் வார்" என்றிங்ஙன மெய்ப்பொருளான வான் மாக்க டந்தலைவனை வாதிபகவனை யவனருளிய மெய்ந்நூல் கற்றுணர்ந்து மனமுதலிய முக்கரணங்களையு மம்முதல்வன் பணிக்காக்கின், அவன் றிருவருட்பேறெய்திப் பேரின்ப வாழ்வு தலைக்கூடு மென்றும், "தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான்— மனக்கவலை மாற்ற லரிது" "அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற் – பிறவாழி நீந்த லரிது" "கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான் – றாளை வணங்காத் தலை" "பிறவிப் பெருங்கட லீந்துவர் நீந்தா - ரிறைவ னடிசேரா தார்" என்றவ்வாறு வழிபாடாற்றுதவழிப் பிறவிப்பெருங்கடலிற்பட் டதனு ளழுந்துமென்றும், ஒருதலைப்ப டுத்து, ஆன்மாக்கள் பொருளின்பந் தலைக்கீடாகக்கொண் டறஞ்செய்து வீடுபேறு கூடு நெறி உத்தரவேதத்துச் சத்தியமாக வெடுத்தருளிச் செய்தாராகலின், ஆன்மாக்களும், அவை வினைப்போகம்புசிக்குமுகத்தாற் பக்குவமெய்தற்குக்கருவியாய்நிற்குஞ் சகமும்,

வீடுபயக்குமிறைவழிபாடான சாதகமும், பேறுமென்னு மிவையெல்லாம், வெறுங்கற்பனை யென்றுகொண்ட ஏகான்மவாதிகட்கும், இங்ஙனங்கூறும் உத்தரவேதத்திற்கும், யாதுஞ் சம்பந்தமின்றாம். உத்தரவேதமான திருக்குறளும், தேவாரம், திருவாசகம், திருக்கோவை, திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருமந்திரம், நாற்பான்பிரபந்தங்கள், பெரியபுராணமென்னுந் திருமுறைகளும், தங்கொள்கைக்கு முழுமாறாகின்றது கண்டு, அவற்றை அயலாகக்கருதி யொதுங்குநீரரான ஏகானமவாதிகளுட்பட்டார்சிலர் இக்காலத்து அவற்றின்கணுள்ள திருவாக்குக்களில் ஒரோவொன்றையெடுத்து இங்ஙனம் போலியாகவுரைசெய்து, உரிமைகோடற்குக்காரணம், உயர்ந்தோரெல்லாந் இத்திராவிடச்சுருதிகடெய்வமொழியாதறோர்ந்து பாராயணஞ் செய்து திருவருடலைக்கூடமுயலாநின்றார். நாம் அவற்றைத்தழுவாது ஒதுங்குதலால், நம்மைப் பரமசிவன் றிருவருட் கயலானவரென்றும், நம் ஏகான்ம வாதக் கொள்கை தம் உண்மைநாயன்மார் வைதிகசைவத் திருவருணெறிக்குப் புறம்பாயதென்றும், தமிழுலக நம்மனோரைக் காணும் பொழுதெல்லா மிகழ்ந் தவமதித்தனுகாது செல்கின்றது. உத்தரவேதந் திருமுறையென்பவற்றின்கணுள்ளவோரோர் செய்யுட்களை யெடுத்து நம்மதமாக்கியுரை செய்தபோற்றின், நம்மை இகழாது மதித்து நம்மோ டுளையாடவரும். அன்னுழி யதனை நம் மதத்திலீர்த்துக் கொள்ளலாமெனக் கொண்ட துரபிமானமே பிறிதில்லையென்றறிக.

நாயனார் "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார்" "சிறப்பென்னுஞ் செம்பொருள்" என் றிவ்வா றுதிபகவனாகிய முதற்பொருளை நித்தியசத்தென் றெடுத்தோதியதுபோல, ஆன்மாக்களையு "மன்னுயிரோம்பி" "மன்னுயிர்க்கின்னாசெயல்" "மன்னுயி ரெல்லாந் தொழும்" "மனநல மன்னுயிர்க் காக்கம்" என் றிங்ஙன நித்திய சததென்றெடுத்தோதுதலின், உயிர்க ணித்தியப் பொருள்களென்பது உத்தரவேதத்து வெளிப்படைப் பொருளா மென்க. "மன்னுயி ரோம்பி" யென்னுந் திருக்குறளுரையிற் பரிமேலழகியார் "உயிர்க ளெல்லா நித்தமாகலின் மன்னுயிரென்றார்" என் றவ்வா றுரைத்தார். "பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு - மருளானா மாணாப் பிறப்பு" "எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்-மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்பன தமக்கிட்டமாவனவென்று கொண்டு,ஏகான்மவாதிகள், அவற்றையெடுத்துப் படித்துப் பிரவஞ்சமித்தை யென்பதே நாயனார்க்குங் கருத்தாமென்பர். ஆண்டுப் "பொருளல்ல" வென்றதும் "எப்பொரு ளெத்தன்மைத் தாயினு" மென்றதுங் காரியப் பிரவஞ்சத்தினை. தத்துவப்பிரவஞ்ச மெய்ப்பொருளாயினுங் காரியவவத்தையினின்ற வதன் றூலவடிவம் இத்துணைப் பொழுது நிற்குமென நம்மனோரா லறியவாராது நீர்மேலெழுத்துங் கனவும் பேய்த்தேரும்போ னிலைபெறுவதுபோலத் தோன்றிக் காட்சிப் புலனாய் விரையக்கெட்டு மறைந்துபோதற் சிறப்புடைத்து. அங்ஙன மறைந்துபோகு நீர்மையுடையதனை நிலையுதலுடையதென்று திரியக்கொள்ளுமுணர்வு பிறப்பிற்கேதுவாதலால், அம்மயக்கவுணர்வை மெய்யுணர்வாற் களைந்து பரம்பொருளோடு ஒற்றுமையுறுதற்கேதுவாகிய உண்மைஞானநிட்டை கூடுகவென்பார் "பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு—மருளானா மாணாப் பிறப்பு" "எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்—மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்றங்ஙன மோதியருளினார். ஆகலின், அத்திருக்குறள்களும் அவைபோல்வனவும் அவர்க்கிட்டவிகாதஞ்செய்து நமக்கனுகூலம்புரிவனவாமென்க, "பொருளல்லவற்றை "எப்பொருளெத்தன்மைத் தாயினும்" என்பவற்றாற்

காரியப்பிரவஞ்சமே கருதப்பட்டதென்பது" "நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்-புல்லறி வாண்மை கடை" என்னுந் திருக்குறளா னறியற்பாற்று. "தோற்ற முடையனவற்றைக் கேடிலவென்று கருதும் புல்லறிவால் அவற்றின்மேற் பற்றுச்செய்தல் பிறவித்துன்பத்திற் கேதுவாகலின் அது விடைய்தவார்க் கிழுக்கென்ப திதனாற் கூறப்பட்டது" என்னும் பரிமேலழகருரையும் இதனைக் கரிபோக்கி நிறுத்துமென்க. இன்னும், "இரந்து முயிர்வாழ வேண்டிற் பரந்து - கெடுக வுலகியற்றி யான்" என்னுந் திருக்குறளிற்போந்த 'உலகியற்றியான்' என்னும் பிரயோகம் ஆதிபகவ னுலகிற்கு னிமித்த காரணனேயாதலை நன்று நிறுத்திற்று. யாங்ஙனமெனின்,— அது மாயையினு லிவ்வுலகியற்றியானென்னத் துணைக்காரண முதற்காரணங்களின் வேறுபடுத்து வினைமுதலான நிமித்தகாரணத் தன்மை விளக்கி "ஆதிபகவன் முதற்றே யுலகு" என்னு முபக்கிரமத் திருவாக்கினை வலியுறுத்தலி னென்க. இன்னும், "மாயையைப் பிரகிருதியென் றறிக" "மாயையுடையவன் மகேசுர னென் றறிக" என நிமித்த காரணத்தையு முதற்காரணத்தையும் பகுத்து வேறு வேறோது முபநிடத வசனங்களும் ஆதிபகவன உலகிற்கு நிமித்தகாரணனே யாமென்னு முத்தரவேத மகாவாக்கியத்திற் குறுசான்றாத லறிக. மாயையைப் பிரகிருதியென் றறிக வென்பது - மாயையை முதற்காரண மென் றறிக வென்றவாறாம். பிரகிருதி முதற்காரணம் உபாதானஞ் சமவாயிகாரண மென்பன வொருபொருட் கிளவி. "மா வென்ப தொடுங்குதல் யா வென்பது வருதலாகலின், எல்லாக் காரியங்களுந் தன்பால் வந்து ஒடுங்குதற்குந் தன்கணின்று தோன்றுதற்குங் காரணமாய் நின்றது மாயை யெனப்படு மாகலான், ஒன்றற்கொன்று நுண்ணிதிற் செல்லுஞ் சூக்குமங்கட்கு முடிவிடமாய் நின்ற சூக்குமப் பொருள் யாது அதனை மாயையென்றலே பொருத்தமுடைமை யறிக" என்றார் சிவஞானமாபாடியகாரர். இனி முதல்வன் மாயைக் காதாரமாய் விரவி நிமித்தகாரணனாயினும், மாயையான் விசேடிக்கப்பட்டு விசிட்டனாய் முதற்காரணமு மாவனெனச் சிவாத்துவிதசைவர் கூறுவர். அது பொருந்தாது. என்னை? தோன்றி நின் றழியு முடம்பொடு கூடியவழி விகாரப்படுதல்பற்றி யுடம்பொடு விசிட்டனாய்நின்ற சீவான் மாவுந் தோன்றிநின் றழிவனென்பது பொருந்தும்; அதுபோல மாயையொடு விசிட்டனாய் முதல்வனு முதற்காரண மாமென்பார்க்கு, விசிட்டமாவது விசேடணமும் விசேடியமு மவ்விரண்டினியைபு மென்னு மவற்றின் வேறன்மையான் முதல்வனு மவ்வாறு விகாரியாதல் வேண்டப்படும். படவே, 'நிருவிகாரி' என்னுஞ் சுருதியொடு முரணுமாகலானென்க. விசிட்டமாவது அம்மூன்றற்கும் வேறெனக்கொள்வார்க்கு, முதல்வன் முதற்காரணமென்பதே பொருந்தாதாய் முடியுமென் றறிக. அல்லதூஉம், நிமித்தகாரணமே முதற்காரண மென்றெடுத்துக் காட்டுதற் கொரு பொருளின்மையின், அது வழியளவைக் கேலாமையானும், வழியளவையினும் ஆகமவளவை வலியுடைத்தெனின்,— ற்றாயினும், வழியளவை யாகமவளவையொடு முரணுதாகலானும், ஒரோவழி முரணுமாயின், அதுபற்றி யாண்டுந் துணிவுபெறாமையின், வழியளவை பிரமாணமன்றெனப்பட்டு, அதுபற்றியோதிய நிகமாகமவசனங்கள் பயனிலவாய் முடியுமாகலானும், நிகமாகமப் பொருள்க டம்முண் முரணுவனபோலத் தோன்றியவழி யவற்றுள் வன்மைமென்மை யுணர்ந்து பொருள்கோடற்கு வைத்ததே வழியளவை யாகலான் அஃததனோடு முரணுதல் பொருத்த மின்மையானும், அது விடையன்மை யறிக. இனி இவ்விரண்டும் பொருந்தாமையானும், வேறுவிடுக்குமா றின்மையானும், மாயையே முதற்காரணம்; அத

ற்குத் தாரகமாய் விரவிநின்றதிட்டித்தலான் முதல்வனு முதற்காரண மெனக் கோடல்வேண்டும். அங்ஙனங்கொள்ளின் விகாரியாதலின்மையான், முதல்வனு முதற்காரணமா மென்பது வாய்பாடுமாத்திரையே யன்றிப் பொருட்படாமையின், அஃது எமது அத்துவித சித்தாந்தமென் றொழிக. இவ்வாறாகலின், ஏகான்மவாதிகள் பிரவஞ்ச மசத்தியமென்பது சாதித்தற்கு அத்திருக்குறள்களைத் தமக் கனுகூலமாகக் கோடல் வியர்த்த வியாபாரமே யென்பது தெற்றென வுணர்ந்துகொள்க.

இனிப் பகவச் சொற்பொருட்பெற்றி சிறிது பகர்தும். பகமென்பது ஐசுவரியம் வீரியம் புகழ் திரு ஞானம் வைராக்கிய மென்னு மாறற்குமாகலின், பகவன் அவ்வறு குணங்களையு முடையோ னென்றும். பகம் என்பது அவ்வாறற்குமாமாறு 'ஐச்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய வீர்யஸ்ய யசஸச்ஶ்ரிய: | ஜ்ஞாநவைராக்யயோச்சைவ ஷண்ணாம் பக இதீரணா' என்னும் விண்டு புராண வசனந்தா னறிக. இவ்வாறும் பரமசிவனுக் கியற்கைக் குணங்களாகலின், அப்பரப்பிரம முதல்வனே பகவனென் றவ்வாறு நாயனாரால் உத்தரவேதமுகத் தோதப்பட்டா னென்க. இவ்வறு குணங்களும் பரமசிவனுக் குள்ளன வென்பதற்குப் பிரமாண மென்னையெனின்,— அவற்கு ஐசுவரிய முண்மைக்கு ஈசுரபதச் சுருதியும், வீரிய முண்மைக்கு உக்கிரபதச் சுருதியும், புகழுண்மைக்குச் சிவபதச் சுருதியும், திருவுண்மைக்கு இருக்கு வேதமும், ஞானமுண்மைக்குச் சருவஞ்ஞ சுருதியும், வைராக்கிய முண்மைக்குக் காமரிபுபதச் சுருதியும், பிரமாணமா மென்க. "திருவினுற்சிரேட்டர்; திருவை யெய்தும் பொருட்டுப் பரமசிவனது விசித்திரமான லிங்கந் தேவராற் பூசிக்கப்பட்டது" என்று, இவ்வாறு இருக்குவேதத் தெடுத்தோதப்பட்டது. அதர்வணவேதஞ் சிவநாமங்களுட் பகவனுமந் தப்பெய் தெடுத்தோதிற்று. சுவேதாச்சுவதரோபநிடதஞ் சிவபிரானைப் 'பகேச' னென் றெடுத்தோதிற்று. இவற்றானும் பகவனாமப் பொருளாயுள்ளோன் பரமசிவனேயென்பது கடைப்பிடிக்க. அரதத்தாசாரியரும் உமாபதிசிவாசாரியருஞ் சதுர்வேததாற்பரிய சங்கிரகத்தினும் பவுட்கராகம விருத்தியினும் இங்ஙனம் பகவப்பெயர் சிவபரமாதலை நன்கு விளக்கியிட்டார்.

இனி மெய்யுணர் வெய்திய தேவர் முனிவராதியோரைப் பகவப்பெயரால் வழங்குதல் அவர்மாட்டு விளங்கும் பரமசிவ விபூதியையுபற்றி யாதலின, அஃதுபசாரமே யா மென்க. நாராயணக் கடவுட்குப் பகவனும மியற்கை யாகாதோவெனின்,— நாராயணக்கடவுள் பரமசிவனைக்குறித்து அருந்தவ முழந்து ஐசுவரியம் வீரிய ஞான முதலியன எய்தியவரலாறு, இதிகாச புராணங்களிற் கேட்கப்படுதலின், பகவப்பெயர்வழக்கு அவற்குஞ் செயற்கையானுயதன்றி யியற்கையா னுயதன் றென்க. அற்றேல், நாராயணக்கடவுளடியார் பாகவதரெனவும், அவன்பெருமை யெடுத்தோதும் புராணம் பாகவதமெனவும், அங்ஙனம் வழங்கப்படுமா றென்னையெனின்,— ஈசுரனடியார் சிவபாகவதரெனவும், கௌரிமகிமையெடுத்தோதும் புராணந் தேவிபாகவதமெனவும், வழங்கவுங் காண்டுமாகலின், அவ்வழக்குக் கொண்டுதானே நாராயணக்கடவுட்கு அஃதியற்கைப்பெயரென்ற லமையா தென்க. இனி நிகண்டுநூலார் "பகவனே யீசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன்" என்றுகூறியது, அது முக்கியவிருத்தியாற் பரமசிவனுக்கும் கவுணவிருத்தியான் மாயோன் முதலிய கடவுளருக்கும் வழங்கப்படுதல் பற்றி யாகலின், அஃ தொட்டப்பா டில்லையென்க. அது முக்கிய விருத்தியாற் பரமசிவ

னையே யுணர்த்துமென்ப தறிவித்தற்கே "பகவனேயீசன்" என்று அங்ஙனமுதற்கண் ணிறீஇயினு ரென்க.

இனி அப்பரிச்சின்னைசுவரிய முணர்த்து மீசானப்பெயர் பரமசிவனுக் குரியதா கலின், அதுவே பகவப்பெயர் அம்முதல்வ னுமமென்பதற்கு அமையுஞ் சான்று மென்க. ஈசுரபதம் ஐசுவரியயோகத்தாற் பொதுப்பெயராம் பிறவெனின்,— அற்றன்று; ஈசுர பதம் யோகம்பற்றிப் பொதுவாயினும், யோகரூடிபற்றிப் பரமசிவனுமமேயா மென்க. ஈசுரபதம் பரமசிவனுக்கு யோகரூடியாமென்றற்கட் பிரமாணம் யாதெனின்,— "ஈஶ்வரஶ்ஶர்வ ஈஶாநஶ்ஶங்கரஶ்சந்த்ரஶேகர:" எனவரும் அபிதான கோசமிருதி பரம்பரை யே பிரமாண மென்க. அவயவசத்தியொன்றேயுடைய தனித்த யோகத்தினும், அவயவ சத்தி சமுதாயசத்தி யென்னு மிரண்டு மொருங்குடைய யோகரூடி பிரபலமுடைத் தென்க. இக்கருத்து மீமாம்சை நூலார்க்கு முடன்பாடாதல் அந்நூலிற் காண்க. அற் றாகலினன்றே பிரமமீமாஞ்சையில் "ஶப்தாதேவ ப்ரமித:" என்னும் அதிகரணத்தில் "அங்குட்டமாத்திரனை புருடன் புகையில்லாத அனலையொக்கும்; இறந்தகாலத்து நிகழ் காலத்து முள்ளபொருள்கட்கு ஈசானன்; அவனே யின்றுமுளன்; நாளையு முளனு"மென் றெழுந்த கடவல்லி மந்திரத்திற்கு, அங்குட்டமாத்திரனென்ற பரிமாணலிங்கத்தினுற் சீவான்மாப் பொருளாத லோர்ந்தவழி, ஈசானனென்னும் அபிதானச் சுருதிவடிவான சொல் லுண்மையிற் சீவான்மா ஆண்டுப் பொருளாகானென விலக்கிப் பரமான்மாவே ஆண்டுப்பொருளாதற் பாலனுமென்று துணிபு போந்ததூஉமென்க. ஈசான பதத்திற்குக் கேவல யௌகிகத்தன்மையே யுளதாயின், பரமான்மாவை யுணர்த்துஞ் சிறப்புச்சொல் லாண்டின்றெனப்பட்டு, இறப்பெதிர்வி னுள்ளனவற்றிற்கு ஈசானனென்னு மிலிங்க மாத்திரையாற் பரமான்மாப் பொருளாத றுணிவாய், "ஶப்தாதேவ ப்ரமித:" என் னுஞ் சூத்திர மின்றுவற்றலாய் முடியுமென்க. இனி 'அமிர்தத்திற் கீசானன்' எனப் புருடசூத்தத்தின்கண்ணும் வருதலின், அதன்கணுள்ள புருடபதமும் பரமசிவனையே பொருளாகக் கொண்டதென்பது தானே போதரு மென்க. அஃதேல், புருடசூத்த 'நாரா யண' மென் றங்ஙனம் வழங்கப்படுமாறென்னையெனின்,— புருடசூத்தத்திற்கு "நாரா யணம்" என்னும் பெயர் நாராயணக்கடவுள் பொருளாதல் பற்றிப் போந்த வழக் கன்று. மற்றியாதுபற்றிப் போந்த வழக்கெனின்,— அவனிருடியாதல்பற்றிப் போந்த வழக்கா மென்க. ஈசானபதம் போலப் புருடபதமுஞ் சிவனுமமாதலைச் சிவதத்துவ விவேகநூலுடையார் சிவதத்துவவிவேகத்துஞ் சிவகர்ணாமிர்தத்தின் நடைவிடைகளான் மிக விரித்துரைத்தார். கண்ணபிரான் அருச்சுனற்கு "தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே யத: ப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா புராணீ" என்று கீதையில் எடுத்தருளிச்செய்யு முகத்தால், புருடசத்தத்துக்குப் பொருளாயுள்ளோன் பரமசிவனேயென்பதை நன்று நிறுத்தினுன். என்னை? தான் பரமபுருடனுயின், "ஆதிபுருடனை நான் சரணடைகி ன்றேன்" என்று கண்ணபிரான் அங்ஙன மோதானுகலினென்க. அல்லதூஉம், பாரதம் இலிங்கம் ஆதித்தபுராணமுதலியவற்று ளோதப்பட்ட சிவநாமங்களு ளடங்காத விண்டு நாமங்களில்லையாகலானும், "நாமாநி தவ கோவிந்த யாநி லோகே மஹாந்தி ச | தாந்யேவ மம நாமாநி நாத்ர கார்யா விசாரணா" என்றெழுந்த அரிவஞ்சத்தில் "உன்பெயர்களு மகி மைபொருந்திய பிறர் பெயர்களும் என் பெயர்களேயாம்; இதன்கணுராய்ச்சி வேண்

டா"வென்று சிவபிரான் கண்ணனை நோக்கிக் கூறியதனானும், பகவப்பெயர் புருடப் பெயர்கள் பரமசிவ நாமமேயாத றெள்ளிதிற் றுணியப்படுமென்க.

இனிப் பிரமன்முதலிய மூவரையு முறையே "படைப்புக்கடவு டிதிக்கடவுள் சங்காரக்கடவுள்" எனவும், "சாக்கிரமூர்த்தி சொப்பனமூர்த்தி சுழுத்திமூர்த்தி" எனவுங் கூறிப், பரமசிவனைத் 'துரியமூர்த்தி' யென வுபநிடதங்களெல்லா மூவரின் வேறாக வைத்தோதுதலின், அப்பரப்பிரம முழுமுதல்வனே நாயனாரால் "ஆதிபக வன்" என்று அங்ஙனம் விசேடிக்கப்பட்டானென்பது தெற்றென வுணர்ந்துகொள்க. இன்னும், மாலயனுருத்திரனென்னு மூவரையு முறையே சாத்துவிககுணமூர்த்தி இராசத குணமூர்த்தி தாமதகுணமூர்த்தியென்றோதிப், பரமசிவனைக் "குணாதீத" னென்றவ்வா றுபநிடத முதலியன வோதுதலானும் அம்முழுமுதல்வனே ஆதிசத்தத்தால் விசேடிக்கப் பட்ட பகவனென்பது துணிபா மென்க. இனிச் சங்காரவுருத்திரனுஞ் சங்கரித்தற் றொழிலின்பொருட்டுத் தாமதகுணத்தை மேற்கொண்டதல்லது இயல்பாகத் தாமதகுண முடையனல்லன்; தாமதகுணத்தின் காரியமாகிய துயின் மயக்கம் வஞ்சமுதலியன அக்கடவுண்மாட்டின்மையின். துயின் மயக்கம் வஞ்சமுதலியன மாயோனுக்குளவாதல் புராண இதிகாசங்களிற் கேட்கப்படுதலின், அக்கடவுட்குச் சாத்துவிககுணங் கூறியது காத்தற்றொழின் மாத்திரைக்கேயெனக் கொள்க. இன்னோரன்னவையெல்லாம் பிரம தருக்கத்தவத்துள் விரித்துக் காட்டியவாற்றா னறிக. மாயோனுக்குக் காத்தற்றொழி லும் பிருதிவி முதற் பிரகிருதி மாயைகாறும் வியாபித்து நிற்கும் பிரதிட்டாகலை பரி யந்தமே யென்க. என்னை? நிவிர்த்தி பிரதிட்டை வித்தை சாந்தி சாந்தியதீதை யென்னு மைங்கலைகளான் வியாபிக்கப்பட்ட தத்துவ புவனங்களுக்கு முறையே பிரமன் மா லுருத்திரன் மகேசுரன் சதாசிவன் என்னு மைவரு மதிகாரிகளென ஆகமங்களோதுதலி னென்க. பிரகிருதிக்கு மேலுந் தத்துவ புவனங்களுண்மை சைவோபநிடதங்களினுங் கேட்கப்படுதலின், அது சைவாகமப்பொருளென்று புறங்கூறுத லேலாதென்க. புரா ணங்களினும் பாரதத்தினு மாயோனுக்கும் பிரமனுக்குந் தாழ்வாக வுருத்திரப்பெயராற் கூறப்படுவோர் காத்தற்றொழிலும் படைத்தற்றொழிலு மினிது நடாத்துதற்பொருட்டுச் சங்காரவுருத்திரன் கூறாய் அவர்பாற் றோன்றிய நீலலோகிதன் முதலிய வவதாரமூர்த்தி களே யா மென்க. அது பாரததாற்பரியசங்கிரக முதலியவற்றுட் காண்க. அதர்வ சிகை முதலிய வுபநிடதங்களிற் "பரமசிவன் மும்மூர்த்திகளையும் படைத்தான்" என்பது போலக் குணமூர்த்திகளை அங்ஙனங் கூறாது தம்மை யொழித் தொழிந்த விருவரையும் படைத்தார் எனவே கூறுதலின், அவர் முழுமுதல்வ ராகாமை கடைப்பிடிக்க. "அயனை முன் படைத்திடு மொருகற்பத் தரியைமுன் படைத்திடு மொருகற்பந் - தயருருத்திரன் றனைமுனம் படைப்ப னொருகற்பமற் றொருகற்பந் தன்னின் - முயலுமூவரை யொருங்கு டன் படைப்பன் முன்பிறந்தவர் மற்றிருவரையுஞ் - செயலினாற் படைக்கவு மருள்புரி வன் சிவபிரானெனி லேற்றமிங் கெவர்க்கோ" எனச் சிவதத்துவவிவேகத்திற் கூறியதனை யும் ஈண்டு விரித்துரைத்துக்கொள்க. பாரதத்தில் "அளவில்பே ரொளிப் பகவனுஞ்சிவ னுக் கச்சுத னான்மாவாம்" என்றது அபேதம்பட வுபசரித்துக் கூறியதாம். ஈண்டு ஆன் மாவென்றது அந்தரியாமியென்னும் பொருட்டெனக் கொள்ளின், அளவில் பேரொளிப் பகவனென் றுயர்த்துக்கூறியதனொடு முரணுமாறறிக. பாரதத்தின் மோக்க தருமத்தில் "ஆதலாலெனக் கான்மாவே யாமுருத் திரனை முன்னர்க்-காதலாற் பூசிக்கின் றேன்யான்" எனக் கண்ணன் கூறியவாக்கியத்திற் சிவபிரானைத் தனக்கான்மா வென்றது அந்தரியாமி

யென்னும் பொருட்டேயாம்; தன்னாற் பூசிக்கப்படுங் கடவுளாதற்குரிய ததுவேயாகலா னென்க.

இனி வேதத்துட் கருமகாண்டத்தில் "விண்டு பரமன், அங்கியவமன், அவ்விருவருக்கு மிடையே யெல்லாத்தேவரும்" என்றது, ஆண்டுச் செய்வதொரு வேள்வி விசேடத்தில் அவிப்பாக மேற்குமுறையின் விண்டு முந்தினவன்; அங்கி பிந்தினவன்; அவ்விருவருக்கு மிடையே யேனைத்தேவ ரெல்லாமென்னும் பொருட்டாகலின், ஆண்டுப் பரமமவமமென்பன ஆதியந்தமெனவே பொருள்படுமாறு காண்க. அவ்வாறன்றி ஆண்டு விண்டு பரமனென்றதற்கு விண்டு எல்லாக்கடவுளருக்கு மேற்பட்டவனென்றும், அங்கியவமனென்றதற்கு அங்கி யெல்லாக்கடவுளருக்குங் கீழ்ப்பட்டவனென்றும் பொருள் கொள்ளின், "அங்கி கடவுளர்க்கு மேற்பட்டவன்" என்று ஆண்டாண்டுக்கூறுஞ் சுருதி மிருதி புராணங்கள் பலவற்றோடு முரணுமென் றொழிக. இவ்வாறு முன்பின் முரணாமைப் பொருள் கொள்ளவறியாது "விண்டு ஆன்மா" என்றதுபற்றியும், "விண்டு பரமன்" என்றது பற்றியும், விண்டுவுக்கு முதன்மை கோடல் பொருந்தாமை யறிக. இன்னும் வருவன வெல்லா மிவ்வாறே யோர்ந்துணர்க. ஈண்டுக் கூறியவாற்றானுந் துரிய மூர்த்தியான பரமசிவனே ஆதிபகவனென் றவ்வாறோதப்பட்டா னென்று தெளிந்துகொள்க.

பாஞ்சராத்திரிகளின்னுங் கூறுமாறு: அரசனுலாப் போதுங்காலைத் தொகுதி தொகுதியாகச் செல்வாருள் அரசனுவா னிவனென்பது ஆடை யணி யானை குதிரை முதலிய வைபவம் பற்றித் துணியப்படாதாம். என்னை? அவை அமைச்சர் படைத்தலைவர் முதலியோர்க்கும் பொது; அல்லதூஉம், அரசனுவகையுற்றுழி யமைச்சர் முதலாயினோர்க்குத் தன்னினு மிக்க வரிசையளித்தலு முண்டாகலின். அதுபோல வேதத்துட் கூறப்படுங் கடவுளருட் பரப்பிரமப் பொருளாவா னிவனென்ப தேனைப்பெருமைகளாற் றுணியப்படாதாம். மற்றுக் கிரீடங்கவித்து வெண்கொற்றக் குடைநிழற்கீழ் வருதலொன்றேபற்றி யரசனுவா னிவனென்பது துணியப்படுமாறுபோலக் காரணவாக்கியங்களுட் படைப்பு முதலியவற்றிற்குக் காரணமாகக் கூறப்படுதலொன்றேபற்றி யவனே பரப்பிரமமென்பது துணியப்படும். காரணப்பொருளாவான் நாராயணனே யென்பது சுபால முதலிய வுபநிடதங்களிற் காணப்படும். அற்றேல், சிலவுபநிடதங்களிற் காரணப்பொருள் 'சத்' தென்றும் 'பிரம' மென்றும் 'ஆன்மா' வென்று மங்ஙனம் பொதுவகையானும், 'இரணியகருப்ப' னென்றுஞ் 'சிவ' னென்று 'முருத்திர' னென்று மிங்ஙனஞ் சிறப்புவகையானும், வெவ்வேறு பெயரா னெடுத்தோதவும் படுமாலோ வெனின்,— அற்றன்று; சுபாலமுதலியவற்றுட் காரணப்பொரு ணாராயணனென்ற தலகத் தோன்றுமுறைமை பெடுத்துக் கொண்டவழிக் கூறப்பட்டதாகலான் அதுவே யுண்மைப்பொருளெனவுஞ் சத்துப் பிரம மான்மா வென்றற்றொடக்கத்துப் பொதுப்பெயர்கள் சாகடசுநியாயம்பற்றி நாராயணனையே யுணர்த்திநிற்கும்; அங்ஙனமன்றி இடுகுறிப் பெயர் காரணத்தைவிலக்குமெனக் கொள்ளினும் ஆகுபெயராய்த்தான், மாயோனுடைய வாயிரம் பெயர்களுட் சிவன் முதலிய நாமங்களும் எடுத்தோதுதலின் இடுகுறியாய்த்தான், நாராயணனையேயுணர்த்திநிற்கு மெனவுங் கொள்ளப்படும். அற்றேல், நாராயணன் முதலிய மாயோன் பெயர்களுங் காரணக்குறியாய்ச் சிவனையே யுணர்த்திநிற்குமாகலின், காரணப்பொருள் சிவனென்னு முபநிடதங்களே வலியுடையவென மாறிக் கொள்ளிற் படுமிழுக்கென்னையெனின்,—அற்றன்று; மாயோன்பெயருள் ஏனையவெல்லாங் காரணப்பெயராய் வேறொரு கடவுளை யுணர்த்துமெனக் கொள்ளினும், நாராயண

னென்னும்பெயர் இடுகுறிப்பெயராதலேயன்றி ஏனைய பெயர்கள்போலக் காரணப்பெய ராகுமென்றற் கேலாது. அஃதெங்ஙனமெனின்,—நாரமென்பது நீர்; அயனமென்பதிடம்; நாரம் அயனமாகவுடையவ னாராயணனென அன்மொழித்தொகையாய் இருமொழியும் புணர்ந்தவழி, ரகரத்தின் முன்வந்தநகரம் ஒருமொழிக்கண்ணதாயின், ணகரமாய்த் திரியும்; உயிரெழுத்துக்களும், யகர வகரங்களும், ககர பகர வருக்கங்களும், இடையே நிற்பினும், அங்ஙனந் திரியும்; ரகரநிலைமொழிக் கண்ணதாக நகரம் வருமொழிக் கண்ணதேல், இடுகுறிப்பெயராயின், ணகரமாய்த்திரியுமென்பது பாணினிசூத்திரமாகலின், நாராயண னென்பதனைக் காரணக் குறியாக்குவார்க்கு நகரம் ணகரமாகத் திரியுமென்றற் கோத்தில்லையென்பது. அற்றாகலி னன்றே சிவன்முதலிய பெயர்போல அவயவப் பொருள் பற்றிக் காரணக்குறியாய் மற்றோர் கடவுளை யுணர்த்துதல் பொருந்த நாராயணனென்னுஞ் சிறப்புப் பெயராது சுபால முதலியவற்றில் எடுத்தோதியதூஉமென் றிங்ஙனம் பிதற்றுவர். இவையனைத்துஞ் சுவேதாச்சுவதர முதலியவுபநிடதங்களை யோதியுணராதமடவோர் கூற்றேயாமென்று மறுக்க. படைப்பு முதலியவற்றிற்குக் காரணமாதலன்றே பிரமத்திற்குச் சிறந்தவிலக்கண மென்ப தொக்கும். அதுபற்றியன்றே பரப்பிரமப்பொருள் பரமசிவனேயெனத் துணிந்தாமென்க. சுபாலமுதலியவுபநிடதங்கள் உலகந்தோன்றி யொடுங்குமுறைமை யுணர்த்தப்புகுந்தனவன்றிக் காரணப்பொருளை யுணர்த்தப் புகுந்தனவல்ல. இடையே இயைபுபற்றிக் காரணப்பொருளு முடன் கூறப்பட்டது. சுவேதாசுவதரத்தின் அவ்வாறன்றிச் சுபால முதலியவற்றுட் பொதுவகையா னுணர்ந்த காரணப்பொருளைச் சிறப்புவகையா னுணர்தற்பொருட்டுக் 'காரணமாகிய பிரமம் யா' தென முனிவர் வினவும் வினைமுதற்கணெடுத்துக் கொண்டு, உபநிடதமுழுவதும் பரமசிவனுக்குரிய சிறப்புப்பெயர்களாற் பரமேசுரன் பெருமை விளங்கக் கூறுதலானும், இவ்வாறனையுபநிடதங்களுண் முதற்க ணெடுத்துக்கொள்ளாமையானும், ஏனை யுபநிடதங்களினுஞ் சுவேதாச்சுவதரம் வலியுடைத்தாகலான், அதனுட்கூறப்படுங் காரணப்பொருளாகியபரமசிவனே பரப்பிரமமெனவும், ஏனைக் காரணவாச்சியங்களுட்கூறும் பெயர்களெல்லாஞ் சாகபசுநியாயத்தாற் பரமசிவனையே யுணர்த்தி நிற்குமெனவும், இரணியகருப்ப னாராயணன் முதலிய சிறப்புப்பெயர்களும் அவயவப்பொருள்பற்றிக் காரணப்பெயராய்த்தான், அங்ஙனமன்றி ஆகுபெயராய்த்தான், பரமசிவனையே யுணர்த்திநிற்குமெனவும், உணர்க. எல்லாப்பெயரும் பரமசிவன்பெயரென்பதே வேதத்தின் றுணிபென்ப தாண்டுக் காண்க. நாராயணனென்னும் பெயர் மாயோனுக் கிடுகுறியாதலினன்றே இயைபுபற்றிப் பரமசிவனையுணர்த்தும்வழி ஆகுபெயரெனக் கொண்டாமென்பது. கங்கையினிடைச்சேரியென்புழிக் கங்கையென்பது இடுகுறியாய் வெள்ளத்தினை யுணர்த்திநிற்றலானன்றே கரையை யுணர்த்தும்வழி இயைபுபற்றி ஆகுபெயரெனக் கொண்டதூஉமென்க. கரையினை யுணர்த்தும்வழியு மாற்றலா னுணர்த்துமாயின், ஆகுபெய ரென்றற் கேலாமையறிக. இங்ஙன நாராயணனென்பது மாயோனுக் கிடுகுறிப் பெயராய்நின்றே கங்கையினிடைச்சேரி யென்புழிப்போல இயைபுபற்றி ஆகுபெயராய்ப் பரமசிவனை யுணர்த்துமெனக்கோடலின், ஆண்டு ணகரமாய்த்திரிதற் கிழுக்கின்மையின், நாராயணனென்னுஞ் சொல் அவயவப்பொருள்பற்றிக் காரணக்குறியாதற் கேலாதெனக் கொண்டவழியும், அவர்கருத்து நிரம்புமாறில்லையென்க. இவை சிவதத்துவவிவேகத்துஞ் சிவஞானமாபாடியத்து மோதியவாறுபற்றி யுரைக்கப்பட்டன. இன்னுஞ் சிவஞானமாபாடியத்துள் ஆசிரியர் சிவஞானயோகிகள், "உண்மையானோக்குங்கால், நாராயணனென்பது அவயவப்

பொருள்பற்றிக் காரணக்குறியாய்நின்றே பரமசிவனையுணர்த்துமென்பது காட்டுதும்" என்றெடுத்துக்கொண்டு, "நரருடையதொகுதி நாரமெனத் "தொகுதிப் பொருள்பற்றி அண்விகுதிவரும்" என்னும் பாணினிசூத்திரத்தால் அண்விகுதி பெற்றுநிற்ப, அதனமேல் ஆசாரப்பொருளுணர்த்துங் ககரஙகர விர்துக்களையுடைய யகரவிகுதிவந்து திரிந்து நாராயவென அயனீண்டு நாராயமென நின்றவழி, அதுவும் பகுதிப்தன்மைப்படுதலின், அதன்மேல் வினைமுதற் பொருளுண்மையுணர்த்தும் லகரடகரவித்துக்களையுடைய யகரவிகுதி யநவெனத்திரிந்து நாராயநனென நின்றவழி, "வினைப்பெயர் விகுதியினின்ற நகரம் ணகரமாய்த்திரியும்" என்பதனால் அங்ஙனந்திரிந்து, நாராயணனெனவொருமொழியாய் உயிர்த்தொகையையொத்து நிற்பனென்னும் பொருட்டாய்க் காரணக்குறியாயவாறு காண்க. இங்ஙன நாராயணனென்பது லகரடகர வித்துக்களையுடைய அகரவிற்றுச் சொல்லாதலினன்றே பெண்பாலி னாராயணீயென ஙகரபகரவித்துக்களையுடைய ஈகாரவிகுதியீற்றான் யாண்டும் வழங்குவதூஉமென்க. அகரவிகுதியீற்றுச் சொல்லெனக் கொள்ளாக்கால், நாராயணீயென வீகாரவிகுதி பெறுதற்கு விதியின்மையுணர்க. நாராயணனென்னும் வடமொழிக்கு இங்ஙனம் விகுதிமேல் விகுதிபுணர்த்துச் செய்கை செய்வனவெல்லாம் வடமொழிவியாகரணம் வல்லார்வாய்க் கேட்டுணர்க. இன்னும் விரிக்கிற் பெருகுமென்றொழிக. இத்தாவது-செய்கை செய்தன்முதலியவற்றிற்குக் கருவியாக முதனூலாசிரியனாற் படைத்திட்டுக் கொள்ளப்பட்ட கருவிச்சாரியை. "இரணியகருப்பனை காரணப்பொருளென்பாரையும் இவ்வாறே கூறி மறுக்க" என்று, இவ்வாறு நாராயணநாமங் காரணக்குறியாய்ப் பரமசிவனை யுணர்த்துமாறு சாதித்தார்.

"உயர்சா யத்திரிக் குரியபொரு ளாகலிற் - றசரதன் மதலை தாபித் தேத்தலிற் - கண்ணன் கயிலையி னண்ணிநின் றிரப்பப் - புகழ்ச்சிறி னமைந்த மகப்பே றுதவலிற் - றனது விழியுட னொராயிரங் கமலப் - புதுமலர் கொண்டரி பூசனை யாற்றலின் - ஆங்கவற் கிரங்கி யாழியீ ந்தருடலின் - ஐங்கணைக் கிழவனை யழல்விழிக் காக்கலின் - அமைப்பருங் கடுவிட மமுதுசெய் திடுதலிற் - றென்றிசைத் தலைவனைச் செகுத்துயிர் பருகலின் - அவுணர் முப்புர மழியவில வாங்கலிற் - றக்கன் வேள்வி தகர்த்தருள் செய்தலிற் - றனஞ்செயன் றனக்குத் தன்படை வழங்கலின் - மானுட மடங்கலை வலிதபக் கோறலின் - மாயோன் மகஉ வாகிய காலைத் - தடமுலை திளைத்துச் சாத்தனைத் தருதலின் - ஆழ்கடல் வரைப்பினுள் ஞான்றே ரனேகர் - அன்புமீ தூர வருச்சனை யாற்றலி - னன்கிரு செல்வமு மாங்கவர்க் கருடலின் - ஐயிரு பிறப்பினு மரியருச் சித்தலின் - இருவரு மன்னமு மேனமு மாகி - அடிமுடி தேட வழற்பிழம் பாகலிற் - பிறப்பிறப் பாதி யுயிர்க்குண மின்மையிற் - கங்கை சூழ் கிடந்த காசிமால் வரைப்பிற் - பொய்புகல் வியாதன் கைதம் பித்தலின் - முப்புர மிறுப்புழி முகுந்தப் புத்தேள் - மால்விடை யாகி ஞாலமொடு தாங்கலின் - அயன்சிர மாலை யளவில வணிதலின் - ஞானமும் வீடும் பேணினர்க் குதவலிற் - பசுபதிப் பெயரிய தனிமுதற் கடவுள் - உம்பர்க ளெவர்க்கு முயர்ந்தோன் - என்பது தெளிக வியல்புணர்ந் தோரே" என அரதத்தாசாரியர் அருளிச்செய்ததனையு மீண்டு விரித்துரைத்துப் பரமசிவ பரத்துவ மினிது தெளிந்துகொள்க. இங்ஙனங் காத்தற்கடவுளாகிய நாராயணனும், படைத்தற்கடவுளாகிய இரணியகருப்பனும் பரமகாரணராகாமை தெரிக்கவே, இவரோடொருங்கெண்ணப்படுஞ் சங்காரக்கடவுளாகிய வுருத்திரனும் பரமகாரண னாகானென்பது தானே போதருமென்க.

*இதுகாறுங் கூறியவாற்றான் மூவரையுந் தோற்றுவித்து முத்தொழிலினிறுத்தும் பரமகாரணக்கடவுளு மகாசங்கார காரணனுமாகிய பரமசிவனே ஆதிபகவனென்று அங்ஙனங் குறிக்கப்பட்டா னென்ப தொருதலையா னுணர்ந்துகொள்க.*

*ஆசிரியர் சிவஞானயோகிகள் இப்பெற்றியெல்லா மாராய்ந்து தெளிர்தன்றே,* **"சீர்கோளிறை யோன்றுண்டத் தெய்வநீ யென்றேப்பாற் - சோர்விலடை யாற்றெளிந்தோஞ் சோமேசா-வோரில், அகர முதல வெழுத்தெல்லா மாதி-பகவன் முதற்றே யுலகு"** *என்று முதுமொழிவெண்பாவில் அவ்வா றெடுத்தோதியருளினு ரென்க. அகர முதல வெழுத்தெல்லா மாதி - பகவன் முதற்றே யுலகு என்னுந் திருக்குறளினை யோரின், அதன்கட் பிரயோகிக்கப்பட்ட ஒப்பாற் சீர்கொளிறை யொன்றுண்டென்பதூஉம், அடையா னத்தெய்வநீ யென்பதூஉம், தெளிந்தோ மென்க. ஆண்டடையென்ற தாதி சத்தத்தினை. இதுகாறும் உலகிற்குப் பரமகாரணனாகிய முதற்கடவு ளொருவனுளனென்றும், அவன் உலகமும் பல்லுயிரு மொன்றி நிறைந்தோங்கியிலகு மாதிபகவனெனறும் எழுந்த முதற்றிருக்குறட் சொற்பொரு ளுட்ப மொருவாறு விரித்துரைத்தாம். இனி நாயனார் உத்தரவேதத்து இங்ஙனம் போந்த முதற்கடவு டிருவடி சேர்தலென் றெடுத்தருளிச்செய்த வீட்டின் சிறப்பியல்பு சிறிது தெரித்தும்.*

*நாயனார் முதற்கணெடுத்தோதிய கடவுள்வாழ்த்துக் கேற்ப உத்தரவேதாந்தமாக நிலையிட்ட நிலையாமை துறவு மெய்யுணர்வு அவாவறுத்த லென்னு நான்கதிகாரங்களால் வீடுபேற்றின் சிறப்பியல்பு அறிவுறுத்தவாறு மேற்றொகுத்தெடுத்து விளக்கினும். நாயனார் அங்ஙன நான்கவாகத் தொகுத்த ஞானவதிகரணத்துப் "பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ் - செம்பொருள் காண்ப தறிவு" "சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச் - சார்தரா சார்தரு நோய்" "காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற - னாமங் கெடக்கெடு நோய்" என்னு மகாவாக்கியங்களிற் "பிறப்பென்னும் பேதமை நீங்க" வென்றதனாற் சகசபந்தமான மூலமலவீடும், "சார்புகெட" வென்றதனாற் கருமமலவீடும், "காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற-னாமங்கெட" வென்றதனான் மாயாமலவீடும், குறித்தருளினார். பேதமையை விளக்கு மூலமலத்தைப் பேதமை" யென் றுபசரித்தார். இம்மூவகை வாக்கியக்கூறுகள் அம்மும்மலங்களின் மேலவாமாறு பரிமேலழகியார் அவற்றிற்குரைத்த வுரைகளானு மறிக. காமவெகுளி மயக்கங்கண் மாயா தனுகரண புவனபோகங்கள் பற்றியே யான்மாவின்கண் மிக்கு நிகழ்தலின், அவற்றினீக்க மாயாமல வீடா மென்க. அது ஆசிரியர் சிவஞானயோகிகள் "காரிகையர் ரைப்பொன்னைக் காட்டவுங்கா மாதிமும்மைச் - சோர்விழந்துய்ந் தாரரசர் சோமேசா - வோருங்காற், காம வெகுளி மயக்க மிவைமூன்ற - னாமங் கெடக்கெடு நோய்" என்றவ்வாறு முதுமொழிவெண்பாவில் எடுத்தோதியதனானு முணர்க. இதனானே, ஆன்மாப் பற்றற்ற வாதிபகவன் பற்றினைப்பற்றி, ஆணவங் கன்ம மாயையென்னு மும்மலங்களினீங்கி வேண்டுதல் வேண்டாமையிலாத அவ்வாதிபகவன் றிருவடிச்சார்பு தலைக்கூடி யானந்த சொரூபியாய் வாழுதலே வீடுபேற்றின் சிறப்பியல்பென்பது நாயனாருக்குக் கருத்தாயவாறு கண்டுகொள்க. மல நித்தியமாகலின் நீங்கவென்றுங் கெடவென்று மவ்வா றருளிச்செய்தார். நீங்குதலாவது-ஆன்மஞானத்தினைத் தடைசெய்யமாட்டாது தன்சத்தி மடங்குதலாம். கெடுதலு மப்பொருட்டு. கருமமலமு மாயாமலமும் ஆகந்துகமாகலின், சகசமலவுபாதி நீக்கத்தின் அவையும் விண்டொ*

ழியு மென்பார், "சார்தரா சார்தரு நோய்" என்றுங் "காமம் வெகுளி மயக்க மிவைமூ ன்ற - னாமங் கெடக்கெடு நோய்" என்று மவ்வா றருளிச்செய்தார். இங்ஙனஞ் சிவத்து வாபிவியத்தியுற்று ஆதிபகவனோ டேகமாய்நின்ற முத்தான்மாவை மும்மலங்களும் வாதி யாவென்பது "அவனே தானே யாகிய வந்நெறி - யேக னாகி யிறைபணி நிற்க - மல மாயை தன்னொடு வல்வினை யின்றே" என்னுஞ் சிவஞானபோதச் சூத்திரத்தானு மறிக. செம்பொருள் - பரமான்மாவான ஆதிபகவன். "சார்புணர்ந்து" என்புழிச் சார்புமது. பரம்பொரு ணிருவிகாரியா யென்று மொரு பெற்றித்தாதலிற் "செம்பொருள்" என் றும், எப்பொருட்கும் பரமாதாரமாய் நிற்றலிற் "சார்பு" எனறும், அவ்வா றோதப் பட்டது. "செம்பொருள் காண்பதறிவு" "சார்புணர்ந்து" எனவே, முத்திநிலையின் ஞாதிருவான முத்தான்மா ஞேயப்பொருளான செம்பொருட் சிற்சத்தியெனப்படு ஞானத்தோ டொற்றித்து அத்துவிதமாய் நிலைபெறு மென்பதூஉ மாயிற்று. இதனானே பாரமார்த்திகமான முத்தியிற் றுவம்பதவாச்சியனான சீவான்மாக் கெட்டுத் தற்பதவாச் சியனான பரமான்மாவா யொழியுமென்னு மேகான்மவாதிகள் வீட்டியல்பு நாயனார்க் குங் கருத்தாகாமை தெளிவாயிற்று. அற்றேல், வேதாகமங்கள் "பிரமாகம்" "சிவோ கம்" என்றங்ஙனம் பாவிக்க வோதிய தென்னையெனின்,— பசுக்கள் பாசவிமோசன முற்றுத் தமக்கந்தரியாமியும் வியாபியுமான பரசிவத்துவந் தங்கண் அபிவியத்தியுறும் பொருட் டுபாசிக்க, வேதாகமங்களில் அங்ஙனம் அத்துவிதபாவனை விதிக்கப்பட்டது. ஆக லின், அதுகொண்டு தானே யேகான்மவாதஞ் சாதித்தல் சாலா தென்க. "பிரமாகம்" 'சிவோகம்" என்னு மத்துவிதபாவனையால் ஆன்மாக்கள் சிவகுணங்க டங்கண் விள ங்கப்பெற்றுச் சிவமாயிருப்பனவன்றிக் கெட்டொன்று யொழியா. அரதத்தாசாரியர் க்கு மிதுவே கருத்தாதல் "வேதத்தில் ஆண்டாண்டுப் பிரமப்பொருளாகிய சிவபிரா னுக்கும் ஆன்மாவிற்கும் அத்துவிதபாவனை கூறப்படுமா றென்னையென் றுசங்கித்தெ டுத்துக்கொண்டு, கருடனு மாந்திரிகனுந் தம்முள் வேறுதல் வெளிப்படையாயினுங் கருடோகமென்னு மத்துவிதபாவனை விடநிவிர்த்திப்பொருட்டு வேண்டப்படும்; அது போலப் பிரமப்பொருளாகிய பரமசிவனும் ஆன்மாவுந் தம்முள் வேறுதல் வெளிப்ப டையாயினு மலநிவர்த்திப்பொருட்டு வேதத்தில் அத்துவித பாவனை கூறப்பட்டது; அதுகொண்டுதானே நிருபசரித வைக்கியங் கூறுதல் சாலாதென்பது" என்றங்ஙனஞ் சதுர்வேததாற்பரியசங்கிரகத் தோதியவாற்றா னறிக.

இனிச் செம்பொருளான ஆதிபகவற்குச் சருவஞ்ஞத்துவமுதலிய வெண்குண முடைமை சொரூபவியல்பெனப்படுஞ் சிவத்துவமாம். இவ்வெண்குண சொரூபசிவத் துவப்பேற்ற முத்திதசையில் ஆன்மாவிற்கு ஆன்மலாபமெனப்படுஞ் சாயுச்சியப் பெரும் பேறும். ஆதிபகவன் எண்குண முடையனாதல் "கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான் - றாளை வணங்காத் தலை" என்னுங் கடவுள்வாழ்த்துத் திருக்குறளானறிக. அற்றேல், "ஆதிபகவன்" எண்குண சொரூபனாயின், அவன்றன்னை "நிர்க்குணன்" "குணா தீதன்" என்று வேதாகமங்க ளோதுதல் பொருந்தாதெனின்,— வேதாகமங்கள் பர மான்மாவை "நிர்க்குணன்" "குணாதீத" னென்றோதியது, சாத்துவிக இராசத தாமத மென்னு மாயாகுணங்க ளில்லாதவனென்னுங் கருத்துப்பற்றி யல்லது முற்றறிவு முத லிய சிற்குணங்க ளில்லாதவனென்னுங் கருத்துப்பற்றி யன்றாகலின், அது பொரு ந்துவதாம்; முற்றும் பொருந்தாமை யாண்டைய தென்க. இச்சிற்குணங்களுமில்லா வியல்பே அவனுக்குச் சொரூபமெனின்,— சத்தாகை சித்தாகை ஆனந்தரூபமாகை

யுஞ் சருவஞ்ஞத்துவ முதலியவற்றை யகப்படுத்துநிற்குஞ் சிற்குணங்களாகலின் 'ஆதிபகவ' னென பரப்பிரமப்பொருள் அவற்றை யிலக்கணமாக வுடைத்தென்றலுஞ் சொரூபவியலாகாதாம். அதுவேயுமன்றி அங்ஙனம் வேண்டுவார் பிரமப்பொருள் ஓரிய ல்புமில்லா வெறும் பாழென்றுராய் நிரீச்சுரவாதிகட்குச் சகபாடிகளாயு மொழிவரென்க. எண்குணங்களாவன: சருவஞ்ஞத்துவம், திருத்தி, அனாதிபோதம், சுவதந்திரம், அலு த்தசத்தி, அனந்தசத்தி, நிராமயான்மா, விசுத்ததேக மென்பன. திருத்தியெனினும் பூர் த்தியெனினு மொக்கும். அனாதிபோதம் அநாதிமுத்தத்துவ மெனவும் வழங்கப்படும். இவையே இறைவற்குச் சிவத்துவமெனப்படு மெண்குணமாமாறு: "ஸர்வஜ்ஞதா த்ருப்தி ரநாதிபோத: ஸ்வதந்த்ரதா நித்யமலுப்தசக்தி: | அநந்தசக்திஸ்ச நிராமயாத்மா விசுத்ததேஹ: ஸிவகுணாஷ்டகம்" என்னுஞ் சருவஞ்ஞானோத்தராகம வசனத்தா னறிக. இவ்வெண்குணங் களுள், நிராமயான்மாவை அனாதிபோதத்திலும், விசுத்ததேகத்தினை அலுத்தசத்தியினு மடக்கி அறுகுணங்களாகவும் ஓதுப. இவ்வறுகுணங்கள் சத்துச் சித்து ஆனந்தமென மூன்றுபடங்குமா றோர்ந்துணர்க. இனி நின்மலமான பரப்பிரமப்பொருள் அவிச்சையாற் கட்டுண்டு சீவான்மாவெனநின்று, பிரமாகம் பாவனை பேணி, மறித்தும் பிரமமா மெனின்,— நின்மலமான பிரமப்பொருளை அவிச்சையான மலங் கட்டுறுத்தமாட் டாது. கட்டுறுத்துமெனின், அது நின்மல பரப்பிரமப் பொருளாமாறில்லை. அன்றியும், சீவற்கு வீடுபேறுளதாயவழியும் அஃததனைக் கட்டுறுத்துமெனப்பட்டு வீடுபேறென்பது போலியாய் முடியுமென்க. அற்றேல், நிராலம்பஞ் சருவசாரமுதலிய வொருசாருபநிட தங்கள் அங்ஙன மோதியவா றென்னையெனின்,— சுவேதாச்சுவதரமுதலிய சைவோ பநிடதங்கள் சீவான்மாப் பிரமம்போல வனாதி நித்தியப்பொரு ளென்றும், அப்பிர மந் தனக்கந்தரியாமியாயும் வியாபியாயு நின்றுபகரிக்க அனாதிமலவினைக்கீடாகப் பிறப் பிறப்புற்று வினைப்போகம் புசிக்குமுறையின் மலபரிபாக மெய்திப் பரமசிவன் திரு வருளுற்றுக் கட்டுநீங்கி முற்றறிவெய்தி மெய்யுணர்ந்து மலவாசனையு நீங்கி சிவ பரப்பிரமப்பொருளோ டத்துவிதமாய் நின்று முடிவு காண்கில்லாப் பேரின்பத்தினை நுகராநிற்குமென்றும், எடுத் தொருதலைப்படுத் தோதுதலின், நிராலம்பஞ் சருவ சாரமுதலிய வுபநிடதங்களிற் பிரமசத்தத்தா லெடுத்தோதப்பட்ட சித்துப் பரசித் தான பரப்பிரம மன்று. அபரசித்தான ஆன்மாவே அவிச்சையாற் பந்தமுற்றுச் சாதகமுறையிற் பிரமோபாசனை பேணிப் பிரமமா மென் றவ்வுபநிடதங்களா லங்ஙன மோதப்பட்டது. இங்ஙன மாகலின், அவ்வுபநிடதங்களும் உத்தரவேதமுந் தம்மு ளரணுற்று நடப்பன வன்றி முரணுற்றுக் கிடப்பன வல்ல வென்று அறிந்து கொள்க. அற்றேலஃதாக; அபரசித்தான ஆன்மாவைப் பரசித்தினுக்குரிய பிரமசத்த த்தால் அவை எடுத்தோதுதல் சாலுமோ வெனின்,— பரசித்தான பரப்பிரமம் அபர சித்தான வான்மாவுக் கந்தரியாமியாய் அதுவே தானாய் நின் றுபகரித்தலின், அவ்வொ ற்றுமை பற்றி பரப்பிரமநாமத்தாற் சீவான்மாவை அங்ஙன மவை யுபசரித்து வழங் கின. ஆகலின், அது சால்பேயா மென்க. கீதாசாரியனாகிய கண்ணன் பரப்பிரமமான சிவனருட் பெற்றியைச், சிவோகம் பாவனை யொற்றுமைபற்றி, "நானே சடசித்தெ ல்லா மானேன்" என்று தன் பெற்றியாகக் கொண்டு கூறியதூஉம், இதற் குறுசான்று மென்க.

அற்றே லஃதங்ஙனமாக; "எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண் மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்னுந் திருக்குறளுரையில், "கோச்சேரமான் யானை

க்கட்சேய் மாந்தரஞ்சேர லிரும்பொறை யென்றவழி, அரச னென்பதோர் சாதியுஞ் சேரமானென்ப தொரு குடியும், வேழ நோக்கினையுடையா னென்ப தொரு வடிவும், சேயென்பதோ ரியற்பெயரும், மாந்தரஞ்சேர லிரும்பொறை யென்பதோர் சிறப்புப் பெயரும், ஒரு பொருளின்கட் கற்பனை யாகலின், அவ்வா றுணராது, நிலமுதல் உயி ரீறாகிய தத்துவங்களின் றொகுதியென வுணர்ந்து அவற்றை நிலமுதலாகத் தத்தங் காரணங்களி னொடுக்கிக்கொண்டு சென்றால், காரண காரியங்க ளிரண்டு மின்றி முடி வாய் நிற்பதனை யுணர்தன் மெய்யுணர்வாம்" என் றிவ்வாறு பரிமேலழகியா ருரைத் தது தமக் கனுகூலமென்று இக்காலத்து ஏகான்மவாதிகளு ளொருசாரார் கூறுபவா லெனின்,— சாதி குடி வடிவு பெய ரென்பன மாயாகாரியமான வுடம்பைப் பற்றிய கற்பனை வழக்காதலின், அது பொதுவியலென் றுணர்ந்து கைவிட்டுச், சிவான்மா வைத் தத்துவங்களின் வேறாகக்காண்டல் ஒருவற்கு மெய்யுணர்ச்சியாமென்பதே அவ் வுரைக் கருத்தாகலின், அது அவர் ஏகான்மவாதக் கொள்கைக்குப் பிரதிகூலமாவதன்றி யாது மனுகூலம் பயக்குமாறில்லை யென்க. ஆண்டு நிலமுத லுயிரீறாகிய தத்துவத் தொகுதியென்றதனால், புருடனு முபாதியாகிக் கழிக்கப்படும் பிறவெனின்,— "சுவை யொளி யூறோசை நாற்றமென் றைந்தின் - வகைதெரிவான் கட்டே யுலகு" என்னுந் திருக்குறளுரையிற் பரிமேலழகியார் மாபூத மைந்து, அவற்றிற்கு முதற்காரணமான தன்மாத்திரை யெனப்படுஞ் சூக்குமபூத மைந்து, அவற்றின் கூறான ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் பத்து, மான் அகங்கார மன மென்னு மந்தக்கரண மூன்று, இவற் றிற்கெல்லா முதலாகிய பிரகிருதி யொன்று, இவற்றின்க ணின்று போக நுகரும் புரு டன் ஒன்றெனத் தத்துவ மிருபத்தைந்து சாங்கியர் கூறுப" வென்றெடுத்துப், "புரு டன் றான் ஒன்றிற் றோன்றாமையானுந் தன்கட் டோன்றுவன வின்மையானுங் கார ணமு மாகான் காரியமு மாகான்" என்றுரைக்கு முகத்தால், அவன் உபாதிமா னன்றி உபாதியாகா னென்பது நேர்ந்தாராகலின், புருடனை உபாதியான தத்துவத்து ளொன் றென வைத்துக் கழித்தல் அவர்க்குக் கருத்தன் றென்க. மற்றுப் புருடனைத் தத்து வங்களோடு சேர்த்துத் தொகை கொண்டது, புருடன் றத்துவ சரீரத்தோடு விரவி நின்று அதனாற் பயன்கொள்ளும் பெற்றிநோக்கி யென்க. "எப்பொரு ளெத்தன்மைத் தாயினும்" என்னுந் திருக்குறளிற் "காரண காரிய மிரண்டுமின்றி முடிவாய் நின்றதனை யுணர்த" லென்றதூஉம், புருடன் றன்னுண்மை யுணர்தலேயாம். புருடன் இங்ஙனந் தன்னுண்மை யுணர்வுழிச் செம்பொரு ளனக்காதாரமா முண்மையினையுந் தெளியுமாக லின், தன்னுண்மை யுணர்வே அவற்கு மெய்யுணர்வுமா மென்க. "சிறப்பென்னுஞ் செம்பொருள் காண்பது" "சார்புணர்ந்து சார்புகெட வொழுகின்" எனப் பின்னர்ச் சொன்மூர்த்தியிற் காண்பானுங் காணப்படுபொருளுமாக வைத்து மெய்யுணர் வொருப் படுத்தியதே, இதற் குறுசான்றா மென்க. சாங்கியர் நிரீச்சுரவாதிகளாகலின், நில முதற் புருடன் காறுந் தத்துவ மெடுத்தோதினா ரென்றும், அவர் கொண்ட புருடன் சிவான்மாவென்று முணர்க. அற்றே லஃதாக; பரிமேலழகியார் நிரீச்சுரவாத நிசழ்த்துஞ் சாங்கியநூல் பற்றித் திருக்குறளிற் றத்துவ வாராய்ச்சி செய்யப்புகுந்த தென்னையெ னின்,— சாங்கியம் வைதிகசாத்திரமாய் நின்று பிரகிருதிமாயையைச் சத்தான முத ற்காரணமெனக் கொண்டு பிரவஞ்ச மற்றதன் யதார்த்த காரியமாமென் றெடுத்தோது தலின், பரிமேலழகியார் தத்துவ வாராய்ச்சிக்கு அதனை யோர் கருவியாகக் கொண்டார்; "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண் - மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்னு முறநிக்கட்டுரை மேற்கொண் டென்க. அற்றேல், சாங்கியர் கூறுந் தத்துவ காரண காரியவாத மொப்பிக்கொண்டார், அவர் கூறும் அத்தியாசவாதமு மொப்பிக் கோடற்பாலரெனின்,— சாங்கியர் பிரகிருதிமாயை முதற்காரணத்தில் வித்தின் மரம் போலப் பிரவஞ்சஞ் சத்திமாத்திரையாய்ச் சூக்குமமுற்றிருந்து தூலமாய் வெளிப்படு மெனக்கொண்டது சற்காரியவாதமாகலின், அதனை ஒப்பிக்கொண்டார். அவர் கூறும் அத்தியாசவாதஞ் சுருதியொடு முரணுதலானும், யுத்திவிரோதமென்று எல்லாச்சமயத் தாரானு மிகழப்படுதலானும், அதனை யொப்பிக்கொண்டிலர். அத்தியாசவாதஞ் சுருதி யுத்தி விரோதமாமாறு மேலுரைத்தாம்; கடைப்பிடிக்க.

இனிப் "பிறப்பென்னும் பேதைமை" என்ற மூலமலத்தி னியல்பு சிறிது காட்டுதும். மூலமலமாவது பிராந்தி ஞானமே பிறிதில்லை யென்ப ரொருசாரார். ஒருசாரார் ஞானாபாவ மென்பர். ஒருசாரார் தமோகுண மென்பர். ஒருசாரார் மூலப்பகுதியிற் றோன்று மவிச்சையென்பர். ஒருசாரார் மாயை கன்மங்களென்பர். ஒருசாரார் சிவசத்தியென்பர். ஒருசாரார் ஆன்மாவின் குணமென்பர். மலமாவது இவை யனைத்தினும் வேறாய் ஒன்றாய் நித்தமாய் வியாபகமாய் ஞானநிரோதகமாகிய திரவிய மென்பது தொகுத்துக் காட்டுதும். மேற்கூறிய அளவைகளால் ஆன்மாத் தோற்றக்கேடின்றி நித்தமாய் வியாபகமாய் நிற்பதென்பது துணிபாம். இனி ஆன்மா வுக்குத் தோற்றக்கேடுக ளுளவாயின், செய்த வினை நசிப்பச் செய்யாதவினை யுண்டா மெனப்பட்டு வினை யிலக்கணத்தோடு முரணும். ஈன்றணிய குழவி தாய் முலைப் பால் பசிப்பிணி தீர்க்கு மருந்தென் றறிந்து தன்கண் முயலுதல் காண்டும். அஃ தும் முற்பயிற்சி வயத்தா னுளதாகிய வாசனை யில்வழிக் கூடாது. இனி நித்தப்பொருளை யவயவ முடைத்தெனப்பட் டழிவெய்துவதாகிய வேகதேச மென்றல் கூடாமையின், ஆன்மா வியாபியென்பதூஉம் பெற்றாம். பெறவே, அவ்வக் குணங்கள் அவ்வக் குணிக ளின் வேறன்மையின், ஆன்மாவின் குணமாகிய ஞானமும் அவ்வாறே நித்தவியாபக மாதல் பெறப்பட்டது. அறிவாவது ஒன்றனை விடயித்திலே பிறிதன்றாகலின், அங் ஙனம் விடயிப்பதாகிய வறிவு ஒருகா னிகழ்ந்தும் ஒருகா னிகழாதுங் காலத்தானும் இடத்தானும் ஏகதேசமாய் நிகழ்தலுங் காண்டும். அவ்வறிவு செயற்கையா னிங்ஙன நிகழ்தற்குக் காரணமுண்டென்பது பெறப்படுதலின், அது பிராந்தி ஞான முதலியவ ற்று ளொன்றென்றல் கூடாமையின், பாரிசேடிய வளவையான் அவற்றின் வேறாகிய சகசமலம் அத்தன்மைத்தா யுண்டென்பது பெற்றாம்.

அற்றேல், காரணம் பிராந்தி ஞானமுதலியவற்றி னொன்றேயாக; அவற்றின் வேறுண்டென்பதற்குப் பிரமாண மென்னையெனின்,— கூறுதும். கயிற்றை யரவெ னக் காணும் பிராந்தி கண்ணின்கண் யாதானு மோர் குற்றமில்வழி நிகழாமையின், அதுபோலத் தேகமே யான்மா வென் றறிதற்கேதுவாகத்தப் பிராந்தி ஞானமும் ஆன்மா வின்க ணொரு குற்ற மில்வழி நிகழாமையின், அக்குற்றமாகிய சகசமலம் பிராந்தி ஞானத்தின் வேறு யுண்டென்பது பெறப்படும். இனி ஞானாபாவமே யது வெனின்,— ஞானத்தின் என்றுமபாவத்திற்கும் அழிவுபாட்டபாவத்திற்கும் ஒன்றினொன்றபாவத்தி ற்கும் ஒருகாலு மழிவின்மையான் முத்தியென்ப தொன் றில்லையாய் முடியும். வீடு பேறுண்மை வேதாகமங்களிற் பெறப்படுதலின், அவற்றொடு முரணாமைப் பொருட்டு ஞானாபாவமாவது ஞானத்தின் முன்னபாவமெனக் கோடல்வேண்டும். வேண்டவே,

த்தமாகிய ஞான மூன்னில்லாதொழிதற்கு வேறு காரண முண்டெனப் பெறப்படுத லின், அதுவே சகசமல மெனப்படு மெங்க. இனித் தமோகுண முதலிய வொன்றன் காரியமாய் இடையே தோன்றி யழிவனவாகலின், அவை யநாதியே ஞான திரோதக மாய் ஆன்மாவைப் பந்திக்கமாட்டாமையின், சுத்தமாய் நின்ற வான்மாவை இடையே பந்தித்து நின்றனவெனின், அவை யிடையே பந்தித்தற்குக் காரணம் வேண்டும். காரணமின்றிப் பந்திக்குமெனின், முத்திபெற்றவழியும் பந்திக்குமென்பது முடியுமாக லின், அவற்றின் வேறாய் அநாதியே பந்திப்பதாகிய சகசமல முண்டென்பது பெறப் படும். இனி மூலப்பகுதியிற் றோன்று மவிச்சையே யதுவெனின்,— மூலப்பகுதியிற் றோன்று மவிச்சை அநாதியி லான்ம ஞானத்தினைப் பந்தித்ததென்ற லேலாமையானும், அது மாயாகாரிய மாதலின், ஞான வியஞ்சகமாவதல்லது ஞான திரோதகமாகாமையா னும், அநாதியே ஆன்மஞானத்தினைத் தடைசெய்து நிற்குஞ் சகசமலம் வேறுண் டென்பது பெறப்படும். இனி மாயை கன்மங்கள் ஆன்மாவின் வேறுமாய்ச் சடமு மாய்ப் பந்தமுஞ் செய்து நிற்றலின், அவையே யமையும்; வேறு மோர் சகசமல முண்டெனக்கோடன் மிகையாமாலோவெனின்,— அவை யங்ஙனமாயினும், ஞானதிரோ தக மல்ல வாதலான், ஞான திரோதகமாகிய மூலமலம் வேறுண்டெனக. இனிச் சிவ சத்தி ஞான திரோதகமாய் நிற்குமெனின்,— சித்தாகிய சிவனது சத்தியுஞ் சித்தாவதன் றிச் சடமாதலின்மையாற் றனக்குப் பகையாகிய சடப்பொருள் சித்தைப் பந்தமுறுத் தவ தன்றிச் சித்துப்பொருள் சித்தைப் பந்தமுறுத்துமா றின்மையானும், உறுத்து மெனின், முதல்வனது பெருங்கருணைக் கிழுக்காகலானும், சடப்பொருளாய்ப் பந்த முறுவிக்குஞ் சகசமலம் வேறுண்டென்பது பெறப்படும். இனி மலஞ் சடமாய் நிற் றலின், ஆன்மாவின் குணமெனக்கோடலே பொருத்த முடைத்தெனின்,— அறியாது கூறினாய்; குணமாயி னிடையே நீங்குதல் கூடாமையானும், ஆன்மா வறிதற்குண முடைத்தாதலின், அறியாமையு மறிவுமாகிய விரண்டு மறுதலைக்குண மொருபொருட் குக கூடாமையானும், அஃதான்மாவின் வேறாயதோ ரகவிருளாகிய திரவிய மென் பது தெற்றென வுணர்ந்துகொள்க. சிவாதித்தமணிதீபிகையுடையாரு முதலதிகர ணத் திறுதியிற் பயன் கூறும்வழி, ஞானாபாவமே யஞ்ஞான மென்பாரை மறுத்து, மலந் திரவியமென்றும், அநாதிப்பொருளென்றும், மலசத்திகள் பலவென்றும், முத்தி யின் மலசத்திக்குக் கேடன்றி மலத்துக்குக் கேடின்மையின் அநாதிப்பொருளாதற் கிழுக்கில்லை யென்றும், கடா விடைகளான் விரித்துக் கூறியவா றுண்டுக் காண்க.

அஞ்ஞானமென்னு மகவிருண் ஞானாபாவ மாகாதென்று இவ்வாறு மறுக்கப் படவே, அந்தகாரமென்னும் புறவிருள் ஆலோகத்தின் அபாவமென்பதூஉ மறுக்கப்பட் டவாறாயிற்று. அதுவுஞ் சிறிது காட்டுதும். ஆலோகத்தி னபாவமே யந்தகாரமென்பார்க்கு, அம்முறை பற்றிச் சுகத்தி னபாவமே துக்கம்; தன்மத்தின் அபாவமே அதன்மம்; சையோகத்தி னபாவமே விபாகமென் றிவ்வாறு கோடல் வேண்டும். அங்ஙனங் கொள்ளாமையால் அவர்க்கு மது கருத்தன்று போலுமெனை மறுக்க. அன்றியும், ஆண் டொளி யில்லை, இருளுள்ளதென, ஒளியின்மையின் வேறா யிருளென்னு முணர்வு நிக ழ்தலானும், யாட்டின் கழுத்திற் றூங்கு முலையோ டொக்கும் அபாவத்தாற் செய்யக் கடவதொன்று யாண்டு மின்மையானும், கண்ணொளியைத் தடைசெய்து நிற்பதாகிய விருளை அபாவமென்றல் கூடாமை யறிக. இவ்விருளின தன்மை வெள்ளிடையி னலரவிழித்து நோக்கியவழியு மறைத்தற்றொழி னிகழ்தல்பற்றிப் பாரிசேடிய வள

லையா னறியப்படும். அற்றேல், நீலவடிவிற்றாய்த் தோன்றுதலின் இருள் காட்சிப் பொருளென்றாற் படு மிழுக்கென்னை யெனின்,— அற்றன்று; துன்னிய விருளின்கண் விழித்துழிப்போலக் கண்ணிமை யிறுக மூடியவழியு மொருதன்மைத்தாய்த் தோன்று தலின், வேற்றுமை யின்மையான், அது மயக்கவுணர்வேயாமென்பது போதருதலின், விழித்தழி யவ்வாறு தோன்றுவது மதுபோல மயக்கவுணர்வாவ தன்றி, இருளின் றோற்றமன்றென்பது அநுபவத்தாற் கண்டு கொள்க.

உலோகாயதர் செவி முதலிய விடங்களே யிந்திரிய மென்பராகலின், கண்ணெ ன்னு மிடத்தின் வேறாக ஒளிப்பொருளாகு மிந்திரியம் உண்டென்பதற்குப் பிர மாண மென்னையெனின்,— செவிடனுக்குச் செவியுளதாகவு மோசை கேளாமையின், அது கேளாமைக்குக் காரணஞ் செவியென்னு முறுப்பின் வேறா யதனை அதிட்டித்து நிற்கு மிந்திரிய மில்லாமையே யன்றிப் பிறிதின்மையாற் செவியென்னு முறுப்பு இந் திரியமாகாமை எல்லார்க்கும் விளங்கக் கிடந்தது. இதுபற்றி யேனை யிந்திரியங்களுமவ் வவ் விடங்களின் வேறுதல் கண்டுகொள்க. ஞானேந்திரியங்க ளைந்தும் அறிதற் கருவிகளாகலின், சாத்துவிகாகங்காரத்திற் றோன்றியனவாம். கண்ணிந்திரியம் ஒளிக் கருவியாகலின், உருவத்தை யறிவதாம். இது ஆன்மாவின் ஞானசத்தியா லதிட்டிக்கப்பட் டுப் பொருள்களை விசேடண விசேடிய வியல்புபற்றி அறியுமா றின்றி நிருவிகற்பமா யறியுங் கருவியென் றுணர்க. இதுவேனை ஞானேந்திரியங்களுக்கு மொக்கும். காட்டு மொளியின் வேறாய்க் கண்ணுக் கொளிக்குண முண்டென்றற் கேது வென்னை? கண் ணுக் கொளிக்குண முண்டெனின்,— மின்மினித் துணையாயினுந் தானே விளங்குதல் வேண்டுமாலெனின்,— ஆகாயத்தின் கண்ணதாகிய சத்தகுண முரசு குணில் சையோக முதலிய வியஞ்சகங்களான் விளக்கப்பட்டுழி விளங்கி அல்லுழி விளங்காதொழிதலே யன்றித் தினைத்துணையாயினுந் தானென விளங்குமா றின்றென்பது பற்றி வியஞ்சக த்தி னெதிரொலி வடிவாற் றோன்று மவ்வோசையை ஆகாயத்தின் குணமன் றென் பார் யாரு மில்லை. அதுபோலக் கண்ணின் கண்ணதாகிய வொளியும் வியஞ்சகமாகு ஞாயிற்றி னொளிமுதலிய வுள்வழி விளங்கி அல்லுழி விளங்காமை மாத்திரையே பிறி தில்லை யாகலான், அதனைக் கண்ணின் குண மன்றென்றல் அறிவில்லார் கூற்றேயா மெனவும், அக்கண்ணொளி தன்னை விளக்குதற்குரிய வியஞ்சகப்பொருள் ஏகதேசமா யின் ஏகதேசத்து விளங்கியும் வியாபகப்பொருளாயின் வியாபகமாய் விளங்கியு நிற்கு மியல்பிற்றெனவு முணர்க. இனிக் கண்ணுக் கொளியில்லை, ஞாயிற்றினொளி முதலிய னவே கண்ணின்கணின்று காண்டல் வியாபார நிகழ்த்துமெனின்,— அங்ஙனமாயின், ஞாயிற்றி னொளி முதலியன கண்ணின்கணின்றே காண்டல் வியாபார நிகழ்த்துமென்னு நியமம் வேண்டா; உடம்பினுள் யாண்டாயினு மோரிடத்தைப் பற்றி நின்றுங் காண் டல் வியாபார நிகழ்த்துமென் றொழிக. அற்றேல், அவ்வாறு ஒளியுடைத்தாகிய கண் ணிந்திரியந் தன் றொழிற்பாடு நிகழ்தற்குப் பிறிதோ ரொளியி னுபகாரத்தை யின்றி யமையாதவா றென்னையெனின்,— அங்ஙன மாயினுங் கண்ணிந்திரியந் தூலவொளி யாகலின், தமோகுணசாரமான இருளென்னும் பகைப்பொருளின் சத்தியான் மடங் கிக், காண்டல் வியாபார நிகழ்த்துதற்கு அக்கினியென்னும் பூதத்தின் கூறுன ஞாயிற்றி னொளி விளக்கொளி முதலிய சூக்குமவொளி யுபகாரத்தை வேண்டற்பால தாகின்ற தென் றுணர்க. ஆசிரியர் சிவஞானயோகிகள் சிவஞானமாபாடியத்துக் கண்ணிந்தி ரிய வியல்பும் அதன் குற்ற சகசமான விருளியல்பும் அதன் றோற்றமுறையும் வாதி

கள் கூறும் பூர்வபக்கங் களைந்து மிக விரித்துரைத்தார். அது சிவஞானபோதத்துப் பிரமாணவோத்தி னிரண்டாம்பாதத் திரண்டா மதிகரணத்துக் காண்க. அத்துவித சைவசித்தாந்த வாசாரியர்கள் இப்புறவிருளை அகவிருளிற்குங் கண்ணை யூன்பாவிற்கு ஞாயிற்றினைச் செம்பொருளாகிய சிவத்திற்கும் உவமானமாக எடுத்தோதி அம்முப் பொருண் மெய்ப்பெற்றி தெருட்டுவர். அது சிவஞானபோத முதலியவற்றுட் காண்க.

இனி நாயனார் காமத்துப்பாலில், "தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிது கொ - றாமரைக் கண்ணா னுலகு" என்று ஓதியருளினார். பரிமேலழகியார் "தாமரைக் கண்ணா னுலகு" என்பதற்குத் "தவயோகங்க ளெய்துஞ் செங்கண்மா லுலக" மென்று பொருளுரைத்தார். இதனானே செங்கண்மா லுலகெய்தி வாழ்தலே வீடுபே றென்பது நாயனார் கருத்தாகாதோ வெனின்,— ஆகாது; என்னை? செங்கண்மாலுலகு விரசைநதியடுத்து மேற்பதங்களு ளொன்றாய் விளங்கு மேகதேச விடமாகலானும், மாயாகாரிய மாகலானும், அஃது காமிய கன்ம தவ யோக முழப்பார் உறும் பதமுத்தி யாவதல்லது நிட்காமிய மெய்ஞ்ஞானமுடையா ரெய்தும் நித்தவியாபக பர வீடுபே றாகாமையின். செங்கண்மால் குணமூர்த்திக ளொருவனாய் நிவிர்த்திகலையி லடங்கிய தத்துவபுவனங்களைக் காக்குங் கடவுளென்பது மேற்காட்டியவாற்றா னினிது விளங்குதலின், அக்கடவுள் ஓர்வகைப் பரபோக மருளுங் குணமூர்த்தி யன்றி நிர்க்குண சொரூப வீடுபேறருளும் பரப்பிரம முதற்பொருளாகா னென்க. அல்லதூஉம், பாஞ்சராத்திரிகள் செங்கண்மால் அப்பிராகிருத மங்கல திவ்விய தேகியாய் மேலுலகி லுறைவனென்று கூறுதலின், மாயாகாரியமான பஞ்சகோசமு நீங்கிய சின்மய நித்த வியாபக சொரூபானந்த வீடுபேற்றினை அவ னருளுவ னென்றல் சிறிது மியையா தென்க. இனி "நிரதிசய வின்பத்திற்குரிய நீ இச்சிற்றின்பத்திற் கின்னையாதல் சாலா தென்ற பாங்கற்குத் தலைவன் சொல்லிய" தென்று அத்திருக்குறளுக்குப் பரிமேலழகியார் கருத்துரைத்தது, இவ்வுலகவின்பத்தினை நோக்க அச்செங்கண்மா லுலகவின்ப நிரதிசய மென்றவாறேயாம். பரமுத்திப்பேறு, உருவ வருவ வுலகெல்லாம் வெறுத்த சிதானந்த வாழ்வென்பது, "குறித்தடியி னின்றட்ட குணமெட்டுச் சித்தி கோகனதன் முதல்வாழ்வு குலவுபத மெல்லாம் - வெறுத்துநெறி யறுவகையு மேலொடுங்கி முடங்க வெறும்பொயென நினைந்திருக்க மேலொடுங்கி றில்லா - னிறுத்துவதோர் குணமில்லான் றன்னையொரு வருக்கு நினைப்பரியா னொன்றுமிலா னேர்படவந் துள்ளே - பொறுப்பரிய பேரன்பை யருளியதன் வழியே புரிந்திடுவ னெங்குமிலாப் போகத்தைப் புரிந்தே" என்னு மத்துவித சைவசித்தாந்தத் திருவாக்கினா னறிக. இதுவே பரிமேலழகியார்க்கு முடம்பாடாமாறு, "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார் - நிலமிசை நீடுவாழ் வார்" என்னுந் திருக்குறளில் "நிலமிசை" யென்பதற்கு, "எல்லா வுலகிற்கு மேலாய வீட்டுலகின்க" ணென் றுரைத்தவாற்றா னுணர்க. சின்மய வீடுபேற்றினை வீட்டுலகென்றது, இறைவனருள்சேர்தலை "இறைவனடி சேர்த" லென்றதுபோல்வதோ ருபசாரவழக்கு.

இதுகாறுங் கூறியவாற்றால் ஏகான்மவாதிகள் கூறு நிருபசரித வைக்கியமும், பாஞ்சராத்திரிகள் கூறு நாராயணசாரூபமும், நாயனார் கருதிய வீடுபேறாகா வென்பதூஉம், அத்துவித சித்தாந்திகள் கூறுஞ் சிவனடிசேர்த லென்னும் உபசரித வைக்கிய சிவசாயுச்சியமே அவர் கருதிய வீடுபே றென்பதூஉம், தண்பொரு ளாயினமை காண்க. தெய்வத்திருவருள் கைவந்து கிடைத்துப் பரமஞானானுபூதி கைகண்ட

சமயாசாரியர் நால்வரும், "சொற்றுணை வாழ்க்கை துறந்தன் றிருவடி யேயடைந்தாம்" "கோமாற்கே நாமென்று மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச்சேவடியிணையே குறுகினோமே" "இவன்மற் றென்னடி யானென விலக்குஞ் சிந்தை கண்டுநின் றிருவடி யடைந்தேன்" "நின்னருட் டாளிணைக்கீழ் - மறிவறியாச் செல்வம் வந்துபெற்றார்" "தையலிடங் கொண்டபிரான் றன்கழலே சேரும்வண்ண-மையனெனக் கருளியவாறு" "கரணங்க ளெல்லாங் கடந்துநின்ற கறைமிடற்றோன் - சரணங்களே சென்று சார்தலுமே" "காட்டா தனவெல்லாங் காட்டிச் சிவங்காட்டித் - தாட்டா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி" என்றிங்ஙன மருளிச்செய்யுமுகத்தாற் சுத்தாத்துவித சைவசித்தாந்த உப சரித வைக்கிய சிவசாயுச்சியமே மெய் வீடுபேறென்பது நேர்ந்தருளினா ரென்க. "செவ்வேற் சேஎய் - சேவடி படருஞ் செம்ம லுள்ளமொடு" என் றருளிச்செய்தலின், நக்கீரனார்க்கும் அதுவே கருத்தாயவாறு காண்க.

இக்காலத் தேகான்மவாதிகளுட் சிலர் "நவமாய செஞ்சுடர் நல்கலுமே நாம மறந்து - சிவமாய வாபாடி" "சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட-வத்தன்" "சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந் திருப்பெருந் துறையுறை சிவ னே" "அறுதி சிவரூப மாகியவாறே" "ஏகனுகி யிறைபணி நிற்க" "ஏகமாய் நின்றே யிணையடிக டாமுணரா" என்றற்றொடக்கத் துபசரித சுத்தாத்துவித வைக்கிய சிவசாயுச் சியங்கூறுஞ்சுருதிகள், தமதேகான்மவாத நிருபசரித கேவலாத்துவிதவைக்கியம் பேசின வென்று பிதற்றுவர். பரமசிவன் பெத்த முத்தி யிரண்டினும் ஆன்மாவிற்கு நாயகனென் றும் ஆன்மாப் பரமசிவனுக்கு என்று மீளா வடிமை யென்றுங் கூறி, இருளும் வெளி யும் போலும் பேதமும் பொன்னு மணியும் போலும் அபேதமுஞ் சொல்லும் பொரு ளும் போலும் பேதாபேதமும் பூர்வபக்கமாக வொதுக்கி, முத்திறமுந் தன்க ணடங் கக்கொண் டத்துவிதஞ் சாதிக்கும் வைதிக சைவசித்தாந்தச் சுருதிகள், தமக்கனுகூலமா மென்று அவர் அவைதம்மைத் தம்முட் கொண்டு போற்றல், "மெய்ச்சோதி தங்கு சிறுகொள்ளி தன்னை விரகின்மை கொண்ட குருகார் - கச்சோத மென்று கருதிக் குட ம்பை தனிலுய்த்து மாண்ட கதை" யாய் முடியு மென்க. மேலும் விரிக்கிற் பெருகும்.

முதற்றிருக்குறள் விருத்தி யொருவகையான் முடிந்தது.

உத்தரவேதம் பாயிரமுளப்பட அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பாலென நான்கு பகுதித்தாம். அவற்றுள், பாயிரங் கடவுள்வாழ்த்து, வான்சிறப்பு, நீத்தார் பெருமை, அறன்வலியுறுத்த லென்னு நான்கதிகாரங்க ளுடைத்து. அறத்துப்பால் இல் லறவிய றுறவறவியலென விரண்டியல்க ளுடைத்து. இல்லறவியல் இல்வாழ்க்கை, வாழ்க்கைத்துணைநலம், புதல்வரைப்பெறுதல், அன்புடைமை, விருந்தோம்பல், இனியவை கூறல், செய்ந்நன்றியறிதல், நடுவுநிலைமை, அடக்கமுடைமை, ஒழுக்கமுடைமை, பிற னில்விழையாமை, பொறையுடைமை, அழுக்காறாமை, வெஃகாமை, புறங்கூறாமை, பய னிலசொல்லாமை, தீவினையச்சம், ஒப்புரவறிதல், ஈகை, புகழ் என்னு மிருபஃததிகா ரங்க ளுடைத்து. புகழ் இல்லறத்தார்க்குளதாம் இம்மைப்பயனாதலின், இல்லறவியலி னிறுதிக்கட் டந்தோதப்பட்டது. துறவறவியல் விரத ஞானமென விரண்டாம். விர தம் அருளுடைமை, புலான்மறுத்தல், தவம், கூடாவொழுக்கம், கள்ளாமை, வாய்மை, வெகுளாமை, இன்னாசெய்யாமை, கொல்லாமை யென்னும் ஒன்பததிகாரங்களுடைத்து. ஞானம் - நிலையாமை, துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்த லென்னு நான்கதிகாரங்க

னுடைத்து. ஊழ் அறத்துப்பாலி னிறுதிக்கண்ணதாகிய வோரதிகாரம். இது பொருள்
இன்பங்க ளிரண்டற்கும் பொதுவாய் ஒன்றனுள் வைக்கப்படாமையானும் மேற்கூறிய
வறத்தோ டியைபுடைமையானும் மறத்துப்பாலி னிறுதிக்கண் வைக்கப்பட்டது. பொ
ருட்பால் அரசியல், அங்கவியல், ஒழிபியலென மூன்றியல்க ளுடைத்து. அவற்றுள்,
அரசியல்— இறைமாட்சி, கல்வி. கல்லாமை, கேள்வி, அறிவுடைமை, குற்றங்கடிதல்,
பெரியாரைத்துணைக்கோடல், சிற்றினஞ்சேராமை, தெரிந்துசெயல்வகை, வலியறிதல்,
காலமறிதல், இடனறிதல். தெரிந்துதெளிதல், தெரிந்துவினையாடல், சுற்றந்தழால்,
பொச்சாவாமை, செங்கோன்மை, கொடுங்கோன்மை, வெருவந்தசெய்யாமை, கண்
ணோட்டம், ஒற்றாடல், ஊக்கமுடைமை, மடியின்மை, ஆள்வினையுடைமை, இடுக்கண
ழியாமை யென்னு மிருபத்தைந் ததிகாரங்க ளுடைத்து. அங்கவியல்— அமைச்சு,
சொல்வன்மை, வினைத்தூய்மை, வினைத்திட்பம், வினைசெயல்வகை, தூது, மன்ன
ரைச்சேர்ந்தொழுகல், குறிப்பறிதல், அவையறிதல், அவையஞ்சாமை, நாடு, அரண்,
பொருள்செயல்வகை, படைமாட்சி, படைச்செருக்கு, நட்பு, நட்பாராய்தல், பழைமை,
தீநட்பு, கூடாநட்பு, பேதைமை, புல்லறிவாண்மை, இகல், பகைமாட்சி, பகைத்திறந்
தெரிதல், உட்பகை, பெரியாரைப்பிழையாமை, பெண்வழிச்சேறல், வரைவின்மகளிர்,
கள்ளுண்ணாமை, சூது, மருந்தென்னு முப்பத்திரண்டதிகாரங்க ளுடைத்து. ஒழிபி
யல் - குடிமை, மானம், பெருமை, சான்றாண்மை, பண்புடைமை, நன்றியில்செல்வம்,
நாணுடைமை, குடிசெயல்வகை, உழவு, நல்குரவு, இரவு, இரவச்சம், கயமை யென்
னும் பதின்மூன் றதிகாரங்களுடைத்து. காமத்துப்பால் களவியல் கற்பியலென விர
ண்டாம். களவியல் - தகையணங்குறுத்தல், குறிப்பறிதல், புணர்ச்சிமகிழ்தல், நலம்பு
னைந்துரைத்தல், காதற்சிறப்புரைத்தல், நாணுத்துறவுரைத்தல், அலரறிவுறுத்தலென்னு
மேழதிகாரங்க ளுடைத்து. கற்பியல - பிரிவாற்றாமை, படர்மெலிந்திரங்கல், கண்விது
ப்பழிதல், பசப்புறுபருவரல், தனிப்படர்மிகுதி, நினைந்தவர்புலம்பல், கனவுநிலையுரைத்
தல, பொழுதுகண்டிரங்கல், உறுப்புநலனழிதல், நெஞ்சொடுகிளத்தல், நிறையழிதல்,
அவர்வயின்விதும்பல், குறிப்பறிவுறுத்தல், புணர்ச்சிவிதும்பல், நெஞ்சொடுபுலத்தல்,
புலவி, புலவிநுணுக்கம், ஊடலுவகை யென்னும் பதினெட்டதிகாரங்க ளுடைத்து.
இதற்குரை பல வுளவேனும், பரிமேலழகியா ரியற்றிய வுரையே அவற்றினு ளெல்
லாஞ் சிறந்து திருக்குறண் மெய்ப்பொரு டெரிப்பதாம். பரிமேலழகியார் திருக்குற
ளுரை அக்குறள்போலச் சொற் சுருங்கிப் பொருள் விளங்கி உள்ளுந்தோறு முள்
ளொளி பெருக்குவதாம். பரிமேலழகியார் வடமொழிக் கடலுந் தென்மொழிக் கடலு
நிலைகண்டுணர்ந்து மதிநுட்பம் வாய்ப்பப் பொருந்து யுசகங் கைக்கொண்டு போற்றத்
திருக்குறளுக்கு மெய்யுரை கண்டார். "ஆயுந் தோறுந் தொறு மின்பந் தருங்கலை"
என்னு முறுதிக்கட்டுரைக்குப் பரிமேலழகியா ரியற்றிய திருக்குறளுரை சிறந்த நிதரி
சனமாம். தமிழாசிரிய ருரைகளுட் பரிமேலழகியா ருரைக் கொப்பாவன முன்னோ
ருரைகளு ணச்சி[illegible] ருரையும் பின்னோ ருரைகளுட் சிவஞானயோகிக ளுரைகளு
மாம். ஆசிரியர் சிவஞானயோகிகள் யாண்டும் பரிமேலழக ருரைக்கருத்தைத் தம்முரை
களுட் போற்றி யாளுமுகத்தால், அவ்வுரை மேன்மை அறிவுறுத்திட்டார். ஆயி
னும், பாயிரவிருத்தியினும், சூத்திரவிருத்தியினும், அவர் சொன்முடிவு பொருண்முடிவு
களுள் ஒரோவொன்றை யெடுத்தாசங்கித்துத் தங்கருத்து வேறு நிலையிட்டனர். அவை
ஈண்டுக் காட்டலுறின் விரியும். பாயிரவிருத்தியினுஞ் சூத்திரவிருத்தியினுங் காண்க.

பரிமேலழகியாருரை இவ்வாறு சிறத்தலி னன்றே, "பாலெல்லா நல்லாவின் பாலாமோ பாரிலுள்ள - நூலெல்லாம் வள்ளுவர்செய் நூலாமோ-நூலிற் - பரித்த வுரையெல்லாம் பரிமே லழகன் - றெரித்தவுரை யாமோ தெளி" என் றுன்றே ரதன்பெருமை அவ்வா றெடுத்துப் போற்றினு ரென்பது.

## திருவள்ளுவமாலை.

திருவள்ளுவமாலை திருக்குறளின் சிறப்புப்பாயிரம். இது அசரீரி, நாமகள், இறையனார், உக்கிரப்பெருவழுதி, கபிலர், பரணர், நக்கீரர், மாமூலனார், கல்லாடர், சீத்தலைச்சாத்தனார், மருத்துவன்றாமோதரனார், நாகன்றேவனார், அரிசிற்கிழார், பொன் முடியார், கோதமனார், நத்தத்தனார், முகையலூர்ச் சிறுகருந்தும்பியார், ஆசிரியா நல்லந்துவனார், கீரந்தையார், சிறுமேதாவியார், நல்கூர்வேள்வியார், தொடித்தலைவிழு த்தண்டினார், வெள்ளிவீதியார், மாங்குடிமருதனார், எறிச்சலூர்மலாடனார், போக்கியார், மோசிகீரனார், காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார், மதுரைத் தமிழ்நாயகனார், பாரதம் பாடிய பெருந்தேவனார், உருத்திரசன்மகண்ணர், பெருஞ்சித்தனார், நரிவெருத் தலையார், மதுரைத் தமிழாசிரியர் செங்குன்றூர்க்கிழார், மதுரை யறுவைவாணிகர் இளவேட்டனார், கவிசாகரப்பெருந்தேவனார், மதுரைப் பெருமருதனார், கோவூர்க்கிழார், உறையூர் முதுகூற்றனார், இழிகட்பெருங்கண்ணனார், செயிர்க்காவிரியார் மகனார் சாத் தனார், செயலூர்க் கொடுஞ்செங்கண்ணனார், வண்ணக்கஞ்சாத்தனார், களத்தூர்க்கிழார், நச்சுமனார், அக்காரக்கனிநச்சுமனார், நப்பாலத்தனார், குலபதிநாயனார், தேனீக்குடிக் கீரனார், கொடிஞாழன்மாணிபூதனார், கவுணியனார், மதுரைப்பாலாசிரியனார், ஆலங் குடிவங்கனு ரென்னு மைம்பத்துமூவருந் தனித்தனி யியற்றியருளிய ஐம்பத்துமூன்று திருவெண்பாக்களுடையது. இவ்வைம்பத்து மூவருள், அசரீரி யாண்டு நீக்கமற நிறை ந்து நிற்கு முதற்றெய்வம். நாமகள் - சகல கலாரூபியான வாணி. இறையனார் - ஆல வாயி னவிர்சடைக்கடவுள். உக்கிரப்பெருவழுதி - கடைச்சங்கேளான்று அரங்கிருந்து திருக்குறள் கேட்ட பாண்டியன். கபிலரெழுவாயாக ஆலங்குடி வங்கனு ரிறுவாயாக நின்றோர் கடைச்சங்கப்புலவர் நாற்பத்தொன்பதின்மர். நக்கீரனார் களவியலுரையுட் கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் நாற்பத்தொன்பதின்மரென் றுரைத்து எடுத் தோதிய சேந்தம்பூதனார், பெருங்குன்றூர்க்கிழார், இளந்திருமாறனார், மருதனிளநாகனு ரென்னு மியற்பெயருடையார் திருவள்ளுவமாலையிற் காணப்படாமை ஒரு மாறு பாடுபோலு; மென்று மலையற்க; இவ்வியற்பெயருடையாரே ஆண்டு வேறியற்பெயரா லங்ஙனம் வழங்கப்படுகின்றமையின்.

## முதுமொழிவெண்பா.

இது உத்தரவேத வதிகாரங்களிலுள்ள வொவ்வோர் திருக்குறண் முதுமொழி களுக்கு எடுத்துக்காட்டிலக்கியமாக வியற்றப்பட்டமையின், முதுமொழிவெண்பாவென னும் பெயர்த்தாயிற்று. இது சோமேசரை முன்னிலையாக்கிப் பாடப்பட்டமையின் சோமேசர் முதுமொழிவெண்பா வென்றும் வழங்கப்படும். இஃதியற்றினார் ஆசிரியர் சிவஞானயோகிகள். இதனுட் டிருக்குறண் முதுமொழிகளும் எடுத்துக்காட்டிலக்கியங்க ளுந் தம்முளொத் தொழுகு நேர்ச்சி, திருவள்ளுவநாயனாரே மறிந்துமவதரித்துத் திருக் குறளுக் கெடுத்துக்காட் டிலக்கிய மருளிச்செய்தா ரென்று வியக்கத்தக்கதாம். இனி அரங்கேசர்வெண்பா முருகேசர்வெண்பாவென்று பெயரிட்டுச் சிலர்பாடியன, திருக்கு

றொரு மெடுத்துக்காட்டுந் தம்முளியைபுபெருது, வெற்றெனத் தொடுத்தலாயு மற்றொன்றுய் விரிந்து நிற்றலின், போலிநூல்களாம்.

இனி ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வாக்குண்டாம், நல்வழி என்னுஞ் செந்தமிழ்நூல்கள் திருக்குறள்போல நீதியுரைக்கும் பொய்யாமொழிகளாதலின், அதனோடொன்றெனவைத்துப் போற்றற்பாலனவாம். இவை ஔவை திருவாய்மொழிகள்.

## கடைச்சங்கவிலக்கியம்.

நற்றமிழ்ப் பாண்டி நன்னாட்டு நான்மாடக்கூடன் மாநகரில் அங்கயற்கண்ணியோடு அமர்ந்து வீற்றிருக்குந் திங்களங் கொழுந்தணிந்த சிவபிரானருளிய சங்கப்பலகை வீற்றிருந்து தமிழாராய்ந்த நக்கீரனார் முதலிய நல்லிசைப்புலவரும் அவர்ப்பொருவுறாஉம் பிறரு மியற்றிய நற்றமிழ்நூல்கள்: பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கென் றிப்பாரில் வழங்கப்படும். நக்கீரர் முதலிய கடைச்சங்கப் புலவர் அகத்தியமென்னு முதனூலினையுந் தொல்காப்பிய முதலிய வதன் வழிநூல்களையும் விழிகளாகக்கொண்டு முத்தமிழ் நன்குராய்ந்து செந்தமிழிலக்கியம் பல செய்திட்டார். அவரியற்றிய சங்கச் செந்தமிழிலக்கியங்கள் சொல்வளம் பொருள்வளந் துறுமிக் கற்போர் நெஞ்சங் கவர்ந்து மேனிலத்தோரும் வினவியு நானிலச் செவியமிர்தாய் இகபர நல்கி மிக விளங்குவன. பிற்காலத்து நூலு முறையுந் தமிழுலகம் பெட்புறச்செய்து தமிழாசிரியர் பெருமை பெறுதற்குச் செந்தமிழ்ப்பிரமாண வரம்பாய் நிலவாநின்றன இந்தச் சங்கச் செந்தமிழிலக்கியங்களெனின்,— அவற்றின் றெய்வச் சொற் பொருட் சிறப்பு இப்பரிசிற்றென்று முற்ற வெடுத்தியம்பல் எளிதன்று.

## பத்துப்பாட்டு.

திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்பன பத்துப்பாட்டாம். திருமுருகாற்றுப்படை முதலிய விப்பத்தும், அறம் பொரு ளின்பம் வீடென்னு முறுதிப்பொரு ணான்கனு ளொரோவொன்று நுதலியனவாயும், நல்லிசைப்புலவர் நாட்டியனவாயும், அகவற்பாவிலக்கண மொத்தனவாயும், ஒற்றுமை யுறுதலின், அவற்றைச் சங்கத்தார் பத்துப்பாட்டெனக் கோத்து ஒன்றாக்கினார். இவற்றுள், திருமுருகாற்றுப்படை உறுதிப்பொரு ணான்கனு ளிறுதிக்கண்ணதாய்ச் சிறந்த வீடுபேறு நுதலுதலின், அதனை ஏனை யொன்பது பாட்டிற்குஞ் சிரத்தானமாக்கி, முதற்கட் கோத்திட்டார். திருமுறை செய்தருளிய நம்பியாண்டார்நம்பி இது வீடுபேற் றுறுதிப் பெரும்பயன் கூறுந் தெய்வப்பாட்டாதனோக்கிப் பதினொராந்திருமுறையி லெடுத்துக் கோத்துப் போற்றினார். இது கோத்தார் சங்கப்புலவரென்பது, நச்சினார்க்கினியர் மலைபடுகடாத்துள் "திபி னன்ன வொண்செங் காந்தள்" என்னுந் தொடர்க்கு எழுதிய வுரையா னறிக.

**திருமுருகாற்றுப்படை**—இது குமரவேளை மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடியருளியது; வீடுபேறு வேண்டினானொரிரவலனை வீடுபெற்றானொருவன் முருகக்கடவுள்பால் ஆற்றுப்படுத்தலைப் பொருளாகக்கொண்டது. முருகாற்றுப்படை யென்பது முருகனிடத்து ஆற்றுப்படுப்பது என்றாம். முருகு என்னும் பண்புமொழி பண்பியேனின்றது. ஆற்றுப்படை-ஐ-வினைமுதல்விகுதி. இது முருகக்கடவு டிருப்பரங்குன்றம், திருச்சீரலை

வாய், திருவாவினன்குடி, குன்றுதோறாடல், திருவேரகம், பழமுதிர்சோலையென்னு மாறு படைவீடுகளினும் ஊரூர்கொண்ட சீர்கெழு விழவு முதலியவற்றினும் வீற்றிருப்பனெனக் கூறி அக்கடவுள்பால் ஆற்றுப்படுக்கும். இது புறத்திணையியலுள் "தாவி னல்லிசை" யென்னுஞ் சூத்திரத்துள் "ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப் - பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச் - சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்" என்பதனாற் கந்தழியைப் பெற்றானொருவன், அதனைப் பெறல்வேண்டி னொருவனுக்குப், பெறுமாறு வழிப்படுத்துக் கூறுமென்பது பற்றிச் செய்யுள் செய்தவாறு. கந்தழியாவது ஒரு பற்றுமற்று அருவாய்த் தானே நிற்குந் தத்துவங் கடந்த பொருள். அது "உற்ற வாக்கையி னுறுபொரு ளறுமல ரெழுதரு நாற்றம்போற் - பற்ற லாவதோர் பரம்பொருள்" என வதனை யுணர்ந்தோர் கூறியருளியவாற்றா னறிக. மாயிரு ஞாலத்து மறைமுதற் கடவுள் பூசையின் மனம் பேதுற்ற ஒன்றொழிந்த வாயிர வரை மலைக்குகையிற் றொகுத்து அன்ன திறமுடையா னின்னு மொருவனைத் தேடித் தன்னை அன்னதாகக்கண்டு ஆண்டவரோடு சிறைப்படுத்துப் பட்டினி தீர்க தண்ணீராடுவான் புக, பூதத்திற் றப்பித் தாமும் பிறரு முய்யல் வேண்டி, நக்கீரனார் இத் திருமுருகாற்றுப்படையினைப் பாட, முருகக்கடவுள் இப்பாட்டுவந்து கொண்டருளிச் செவ்வேல் விடுத்து அப்பூதத்தினைச் செற்று நக்கீரருள்ளிட்டாரனைவரையு முய்யச் செய்தருளினர். இவ்வரலாறு காளத்திமான்மியத்து நக்கீரச்சருக்கத்துக் காண்க. இதனைப் புறந்தூய்மை யகந்தூய்மை பேணிச் சிறந்தொழி யிருந்து முருகக்கடவுளைச் சித்தாசனத்திலேற்றி யப்பிரான் றிருவடிக்கட் பிரிவறப்பொருந்திய சித்தத்தோடு நித்தலும் பாராயணஞ்செய்வார், பகையும் பிணியு மிடியும் பாற்றலும், செந்தமிழ்ப்புலமை வளமுறக் கெழுமலும், பாச வைராக்கியம் பகரொணா ஞான மாசறப் பெறுதலும், அம்முருகக்கடவுள் மலரடிக்கீழ்ப் பரமானந்த வாழ்வு தலைக்கூடுதலும், ஒருதலையாக வெய்துவர். இது தேவர் மக்கள் எனப் பகுத்த விருவகைப் பாடாண்டிணையுட் பிறப்பில் பெற்றிமையுடைய கொடிநிலை கந்தழி வள்ளியென்ற மூன்றனுள், நின்ற கந்தழியியல்பு கூறினமையின், தேவர்பகுதியான பாடாண்பாட்டென்றறிக. கொடிநிலை கீழ்த்திசைக்கண்ணேயே நிலைபெற்றுத் தோன்றுஞ் செஞ்சுடர் மண்டிலம். கந்தழியிலக்கண மேற்கூறப்பட்டது. வள்ளி தண்கதிர்மண்டிலம். இம்மூவகைத் தெய்வமுந் தேவர் பகுதியாய்ப் பாடாண்டிணைக்குரியவாமாறு, "கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற - வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றுங் - கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே" என்னும் புறத்திணையியற் சூத்திரத்தா னறிக. வடுநீங்கு சிறப்பு பிறப்பிறப்பில பெற்றி.

**பொருநராற்றுப்படை** — இது சோழன் கரிகாற்பெருவளத்தானை முடத்தாமக் கண்ணியார் பாடியது. பரிசில்பெறல்வேண்டிய பொருநனொருவனைப் பரிசில்பெற்றானொருவன் சோழன் கரிகாற்பெருவளத்தானிடத்து ஆற்றுப்படுத்தலைப் பொருளாக வுடையது. பொருநர் ஏர்க்களம் பாடுவோர் போர்க்களம் பாடுவோர் பரணி பாடுவோரெனப் பல திறத்தர். அவருள் ஈண்டுக் கூறியோன் போர்க்களம் பாடுவோன். இப்பாட்டுக் கரிகால் வளவன் கொடை, பிரதாபம், நாட்டுவளம், நதிவளங்களை மிகக் கூறும். இப்பாட்டினுள் "அறாஅ யாண ரகன்றலைப் பேரூர்ச் - சாறுகழி வழிநாட் சோறு நசையுறாது - வேறுபுல முன்னிய விரகறி பொருந" என முன்னிலை யொருமையா லெடுத்து, "வெண்ணிற் றாக்கிய வெருவரு நோன்றாட் - கண்ணார் கண்ணிக் கரி

கால் வளவன் ருணிழன் மருங்கி னுறுகுபு குறுகித் - தொழுதுமுன் னிற்றவி ராயின்;" என முன்னிலைப்பன்மையான் முடித்தது, "முன்னிலை சுட்டிய வொருமைக் கிளவி- பன்மை யொடு முடியினும் வரைநிலை யின்றே - யாற்றுப்படை மருங்கிற் போற்றல் வேண்டும்" என்னு மெச்சவியற் சூத்திர விதிபற்றி யென்பது. இங்ஙனம் பொருநர் பாணர் விறலியர் என்றிவரை யாற்றுப்படுத்தற்குவிதி, "கூத்தரும் பாணரும் பொரு நரும் விறலியு - மாற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப் - பெற்ற பெருவளம் பெறாஅ ர்க் கறிவுறீஇச் - சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்" என்பது. இதன்கண், "ஆசிரிய நடைத்தே வஞ்சி" என்பதுபற்றி வஞ்சி மிகவும் வந்தன. இது பரிசில் வேண்டிய பொருநனைப் பரிசில் பெற்றானொருவன் அது வழங்குதற்குரியா னின்ன னென்று ஆற்றுப்படுத்தலின், மக்கட் பகுதியாகிய பாடாண்பாட் டென்றுணர்க.

சிறுபாணாற்றுப்படை—இது ஏறுமாநாட்டு நல்லியக்கோடனை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் பாடியது. பரிசில்பெறவேண்டிய பாணனொருவனைப் பரிசில்பெற்றானொருவன் ஏறுமாநாட்டு நல்லியக்கோடன்பால் ஆற்றுப்படுத்துதலைப் பொருளாகக் கொண்டது. பாணனெனினும் பாடுவோனெனினுமொக்கும். பாணர் இசைப்பாணர் யாழ்ப்பாணர் மண்டைப்பாணர் எனப் பலதிறத்தர். இப்பாட்டிற் "பொன்வார்ந் தன்ன புரி யடங்கு நரம்பி - னின்குரற் சீறியாழ் - வயிற் றழீஇ வளம் பழுநிய நயந்தெரி பாலைக் கைவல் பாண்மகன் கடனறிந் தியக்க - வியங்கா வையத்து வள்ளியோர் நசைஇத் - துனிகூ ரெவ்வமொடு துயராற்றுப் படிப்ப - முனிவிகந் திருந்த முதுவா யிரவல" என வருதலின், இவன் யாழ்ப்பாணனென வறிக. இப்பாட்டு நல்லியக்கோடன் விசாரணமும், அவன் சார் தனின் வளமும், அவனூரின் சிறப்பும், அவன் சொலுவீற்றிருப்பும், எழுவகை வள்ளல் களின் வரலாறும், பிறவும், மீக்கூறும். இது பரிசில் வேண்டிய பாண்மகனொருவனைப் பரிசில்பெற்றானொருவன் அது வழங்குதற்குரிய னின்னனென்று ஆற்றுப்படுத்தலின், மக்கட்பகுதியான பாடாண்பாட்டென் றறிக.

பெரும்பாணாற்றுப்படை— இது தொண்டைமா னிளந்திரையனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடியது; பரிசில் வேண்டிய பாணனொருவனைப் பரிசில் பெற்றானொருவன் தொண்டைமானிளந்திரையனிடத்து ஆற்றுப்படுத்தியதைப் பொரு ளாக வுடையது: இவன் றொண்டைக்கொடியால் யாத்து விடப்பட்டுத் திரையாற் றரப்படுதலின், தொண்டைமானிளந்திரைய னெனப்பட்டான். அது "இருநிலங்கட ந்த திருமறு மார்பின் - முன்னீர் வண்ணன் பிறங்கடை யண்ணேன் - திரைதரு மரபி னுர வோ னும்பல்" என இப்பாட்டின் வருதலா னறிந்துகொள்க. புறங்கடையெனப் பாட மோதவாரு முளர். இப்பாட்டுத் தொண்டைமானிளந்திரைய னாட்டு நானில வைந்தி ணைப் பகுதிகளி னியல்பும் அவன் காஞ்சிநகர் வீற்றிருப்பும் வண்மையு மீக்கூறும். மேலதைச் சிறுபாணாற்றுப்படை யென்று மிதனைப் பெரும்பாணாற்றுப்படை யென்றும் வழங்கினர், அடிகளின் சிறுமை பெருமை நோக்கி யென்க. இது பரிசில் வேண்டிய பாண்மக னொருவனைப் பரிசில் பெற்றா னொருவன் அது வழங்குதற்குரிய னின்ன னென்று ஆற்றுப்படுத்தலின், மக்கட்பகுதியான பாடாண்பாட்டென் றறிக.

முல்லைப்பாட்டு— இது காவிரிப்பூம்பட்டினத்துப் பொன்வணிகனார் மகனார் நப்பூதனார் பாடியது; தலைமகன் பகைமேற் சென்ற தலைவன் வருங்காறும் ஆற்றியிருந்தாட்குத் தலைமகன் வந்தது கண்ட தோழிமுதலியோர் வாயிற்க டம்மோட் கூறு தலைப் பொருளாக வுடையது: இது தலைவி தனித்திருக்கும் பெற்றியுங் கார்ப்பெற்

றியும் பகைவர் துயர்ப்பெற்றியுந் தலைமகன் விறலு மீக்கூறும். "செலவிடை யழுங்கல் செல்லாமை யன்றே—வன்புறை குறித்த தவிர்ச்சி யாகும்" என்ற தொல்காப்பியர் கருத்திற்கேற்ப நப்பூதனா ரிச்செய்யுள் செய்தாரென் றுணர்க. இது அன்புறு கற்பாட்டியான தலைவியை வன்புறை குறித்துப் பிரிதலொழுக்கங் கூறுதலின், கற்பென்னுங் கைகோண் மேலதாய் முல்லைபற்றி யெழுந்த பாலைப்பாட்டென் றுணர்க.

**மதுரைக்காஞ்சி**— இது மாங்குடிமருதனார் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய னெடுஞ்செழியனைப் பாடியது; வீடுபேறு குறித்து நிலையாமை செவியறிவுறுத்தலைப் பொருளாக வுடையது. இது பாண்டியன் முன்னோர் பெருமையும் பாண்டிநாட்டின் கணுள்ள நானில வைந்திணை வளனு மதுரைமாநகர்ச் சிறப்பும் அவன் வீரமும் பிறவு மீக்கூறும். இது நெடுஞ்செழியற்கு வீடுபேறேதுவாகச் சான்றோர் பல்வேறு நிலையாமை அறைத லுணர்த்துதலின், பெருந்திணைப்புறனா யெழுந்த காஞ்சிப் புறப்பாட்டென் றுணர்க.

**நெடுநல்வாடை**— இது பாண்டியனெடுஞ்செழியனை மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடியது; கொற்றவையைப் பரவுவாள், செருவென்ற பாண்டிய னெடுஞ்செழியனைத் தணந்து வருந்துந் தலைவிக்கு வருத்தந்தீரிய வுன்றலைவன் பகைவென்று விரைந்து வருகவென்று பரவுதலைப் பொருளாக வுடையது. இது கூதிர்கால வியல்புந் தமியளான தலைவி வருத்த மிகுதியும் படைவீட்டிற் றலைவனிருக்கு மியல்பு மீக்கூறும். இது நெடுஞ்செழியன் பண்ணைசையாற் சென்று பொருதலின், முல்லைப்புறனா யெழுந்த வஞ்சிப் புறப்பாட்டென்றும் வஞ்சிக்குக் கொற்றவை நிலையுண்மையின், இதன்கட் கொற்றவையை வெற்றிப்பொருட்டுப் பரவினா ளென்று முணர்க.

**குறிஞ்சிப்பாட்டு**— இது கபிலர் ஆரியவரசன் பிரகதத்தனைத் தமிழறிவுறுத்தற்குப் பாடியது. தலைவியினது வேற்றுமை கண்டு வருந்திய செவிலிக்குப் பாங்கி யறத்தொடு நிற்றலைப் பொருளாக வுடையது. இது மலைவளனும் இல்லறநெறியுந் தம்பதி தம்முட் பேணு மன்பி னீர்மையுங் கற்பின் சிறப்பு மீக்கூறும். இது களவென்னுங் கைகோள்பற்றி யெழுதலிற் குறிஞ்சிப்பாட்டென் றுணர்க.

**பட்டினப்பாலை**— இது சோழன் கரிகாற் பெருவளத்தானைக் கடியலூ ருருத்திரங்கண்ணனார் பாடியது. வேறுபுலஞ் சேறனுடைய தலைவன் றலைவியைப் பிரிந்து வாரேனென்று தன்னெஞ்சுக்குச் செலவழுங்கிக் கூறுதலைப் பொருளாக வுடையது. இது சோணாட்டினையுங் காவிரியையுங் காவிரிப்பூம்பட்டினத்தையும் ஆண்டு வைகுங் கரிகாற்பெருவளத்தான் பெருவிறலையும் அவன் செங்கோலினையுஞ் சிறப்பித்துரைக்கும். இது அன்புறு கற்பாட்டியான தலைவியை வன்புறை குறித்துப் பிரிதலொழுக்கங் கூறுதலின், கற்பென்னுங் கைகோண் மேலதா யெழுந்த பாலைப்பாட்டென் றுணர்க.

**மலைபடுகடாம்**— இது இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் பல்குன்றக்கோட்டத்துச் செங்கண்மாத்துவேள் நன்னன்சேய் நன்னனைப் பாடியது. இது பரிசில்பெறச் சமைந்த கூத்தனொருவனைப் பரிசில்பெற்றானொருவ னன்னனிடத்து ஆற்றுப்படுத்தியதைப் பொருளாக வுடையது. இவ்வாற்றான் இதனைக் கூத்தராற்றுப்படையெனவும் வழங்குப. இது நன்னன்பாற் செல்லும்வழியி னியல்

யும், அவ்வழியிடத்துள்ள உணவின்றிறனும், அவன் மலையியல்பும், சோலையியல்பும், வண்மையும், ஆற்றலும், சுற்றத்தொழுக்கமும், நாளோலக்கமும், மற்றவனவிரமென்னு மலையில் வீற்றிருக்குங் காரியுண்டிக்கடவுண் மகிமையும், அவன் முன்னோர் பெருமையு மீக்கூறும். மலையை யானைக்கு மலையோசையை அதன் கடாத்திற்கும் ஒப்பித்து, மலைபடுகடா மென்று இப்பாட்டிற்குப் பெயர் கூறியவாறு, இதனுட் காண்க. இது பரிசில் பெறவேண்டிய பொருநனொருவனைப் பரிசில்பெற்று னொருவன் அது வழங்குதற் குரியா னிவனென்று நன்னனிடத்து ஆற்றுப்படுத்தலின், மக்கட்பகுதியாகிய பாடாண் பாட்டென் றுணர்க.

பத்துப்பாட்டிற்கு மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் உரையியற்றினர். இவ்வுரை, பத்துப்பாட்டின் பதப்பொருண் மிகத் தெளித்துப் பாட்டினுட் கோளினிது விளக்கிச் சிறப்பு மிக வுறுகின்றது. பத்துப்பாட்டாசிரியர்கள, ஆண்டாண்டு மாட்டேற் றுறுப்பா னியாத்த தொடர்களை யுரையாசிரியர் யாற்றொழுக் காக்கிப் பொருள் புலப்படுத்தும் வித்தகங் கல்வித்துறை போய சொல்விற்பன்னர் கண் மிக வியந்தேத்தற்பாலது.

## எட்டுத்தொகை.

நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பன, எட்டுத்தொகையாம்.

**நற்றிணை.**—இது கபிலர் முதல் ஆலங்குடி வங்கனா றிறுதியானோரா லியற்றப்பட்டது. இதன் கடவுள் வாழ்த்துச் செய்தார் பாரதம் பாடிய பெருந்தேவனார். கடவுள் வாழ்த்துளப்பட ஒன்று தலையிட்ட நானூறு செய்யுளுடையது. அகப்பொருட் பகுதிகளை மிகத் தெளித்துரைப்பது. இது தொகுப்பித்தான் பன்னாடு தந்த பாண்டியன் மாறன்வழுதி.

**குறுந்தொகை**—இது திப்புத்தோளார் முதல் அம்மூவனா றிறுதியானோரா லியற்றப்பட்டது. இதன் கடவுள்வாழ்த்துச் செய்தார் பாரதம் பாடிய பெருந்தேவனார். கடவுள் வாழ்த்துளப்பட இரண்டு தலையிட்ட நானூறு செய்யுளுடையது. இது அகப்பொருட் பகுதிகளை மிகத் தெளித்துரைப்பது. இத்தொகை முடித்தான் பூரிக்கோ. இத்தொகையின் முன்னூற்றெண்பத்திரண்டு செய்யுட்களுக்குப் பேராசிரிய ருரைகண்டாரென்பதும், ஏனை இருபது செய்யுட்களுக்கு நச்சினார்க்கினிய ருரைகண்டாரென்பதும், "நல்லறி வுடைய தொல்பே ராசான் - கல்வியுங் காட்சியுங் காசினி யறியப்- பொருடெரி குறுந்தொகை யிருபது பாட்டிற் - கிதுபொரு ளென்றவ னெழுதா தொழிய - விதுபொரு ளென்றதற் கேற்ப வுரைத்தும்" என்னு நச்சினார்க்கினிய ருரைச் சிறப்புப்பாயிரத்தா னறியப்படும்.

**ஐங்குறுநூறு**—இதன் கடவுள் வாழ்த்துச் செய்தார் பாரதம் பாடிய பெருந்தேவனார். முதனூறு செய்தார் ஓரம்போகியார். இரண்டாநூறு செய்தார் அம்மூவனார். மூன்றாநூறு செய்தார் கபிலர். நாலாநூறு செய்தார் ஓதலாந்தையார். ஐந்தாநூறு செய்தார் பேயனார். இது மருத முதன் முல்லையிறுதி யைந்திணைகளையும் பொருளாக வுடையதென்பது, "மருதமோ ரம்போகி நெய்தலம் மூவன் - கருதுங் குறிஞ்சி கபிலர்- கருதிய - பாலையோ தல்லாந்தை பன்முல்லை பேயனே - நூலையோ தைங்குறு நூறு" என்பதனா னறிக. இது தொகுத்தார் புலத்துறை முற்றிய கூடலூர் கிழார். தொகுப்பித்தான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை.

**பதிற்றுப்பத்து**:—இது பப்பத்தாக ஒவ்வொரு புலவர் சேரர்குலத்தாரைப் பாடியது. இதுபற்றியே இத்தொகை பதிற்றுப்பத்தென வழங்கப்படுகின்றது.

**பரிபாடல்**— இது ஒருவகைப் பாவிசேடமாய் நூலுக்குப் பெயராயிற்று. இது எழுபது பாக்களை யுடையதாய் முறையே திருமால் செவ்வேள் கார்கோள் வையை மதுரை மேலதாதல், "திருமாற் கிருநான்கு செவ்வேட்கு முப்பத் - தொருபாட்டுக் கார்கோளுக் கொன்று - மருவினிய - வையையிரு பத்தாறு மாமதுரை நான்கென்ப - செய்யபரி பாடற் றிறம்" என்பதனு னறிக.

**கலித்தொகை**— இஃதியற்றினார் ஆசிரியர் நல்லந்துவனார். அது "புரியுண்ட புணர்ச்சியுள்" என்னு நெய்தற் கலியுரையிற் "சொல்லொடுங் குறிப்பொடு முடிவுகொ ளியற்கை - புல்லிய கிளவி யெச்சமாகும்" என்பதனாற் சொல்லெச்சமுங் குறிப்பெச்சமுமாகத் தம் பேரறிவு தோன்ற ஆசிரியர் நல்லந்துவனார் செய்யுட் செய்தார்" என்று நச்சினார்க்கினிய ரெடுத்தோதியவாற்று னறிக. இது நல்லந்துவ ரொருவராற்றானே யியற்றப்படினும், கலியின் பகுதிகள் ஒருவயிற் சேர்தலின், தொகை யெனப்பட்டது. இது நூற்றைம்பது கலிப்பாக்களை யுடையது. முறையே பாலை குறிஞ்சி முல்லை மருத நெய்தல் என்னு மைந்திணைப்பொருளு மறிவுறுப்பது. இதற்கு நல்லுரைகண்டார் நச்சினார்க்கினியர். நச்சினார்க்கினியர், "ஒலித்திரை யுலகத்தி னுணர்ந்தோ ருரைக்குங்-கலித் தொகைக் கருத்தினைக் காட்சியிற் கண்டதற் - குள்ளுறை யுவமமு மேனை யுவமமுந் - தெள்ளிதிற் றெரிந்து திணைப்பொருட் கேற்ப - வுள்ளுறை யுவமத் தொளித்த பொருளைக் - கொள்பவர் கொளளக் குறிப்பறிந் துணர்த்தி - யிறைச்சிப் பொருளுக் கெய்துவகையைத் - திறப்படத் தெரிந்து சீர்பெறக் கிளர்த்தித் - துறைப்படு பொருளொடு சொற் பொருள் விளக்கி - முறைப்பட வினையை முடித்துக் காட்டிப் - பாட்டிடை மெய்ப்பாடு பாங்குறத் தெரித்துப் - பாற்பட நூலின் யாப்புற வுரைத்த - நாற்பெயர் பெயரா நடப்பக் கிடத்திப் - போற்ற வின்னுரை பொருள்பெற விளம்பிய" மதிநுட்பம், புலவருள்ளங் கவர்ந்துகொள்ளு மேதகவு மிக வுடைத்து.

**அகநானூறு**— இதன் கடவுள்வாழ்த்துப் பாடினார் பாரதம் பாடிய பெருந்தேவனார். ஏனைச் செய்யுட்கண் மாமூலனார் முதல் உலோச்சனா ரீறானோரால் இயற்றப்பட்டன. ஒன்று [illegible] நானூறு அகவற்பாக்களை யுடையது. அகப்பொருட்டுறைகளை மிகத் தெளித்துரைப்பது. இதன் முதற்கணுள்ள நூற்றிருபது பாக்கள் களிற்றியானை நிரையெனவும், இடைக்கணுள்ள நூற்றெண்பது பாக்கண் மணிமிடைபவளமெனவும், இறுதிக்கணுள்ள நூறுபாக்க ணித்திலக்கோவை யென்வும், வழங்கப்படும். இது தொகுத்தான் மதுரை யுப்பூரிகுடிகிழார் மகனுவான் உருத்திரசன்மன். தொகுப்பித்தான் உக்கிரப்பெருவழுதி. இது அகமெனவும், அகப்பாட்டெனவும், நெடுந்தொகையெனவும், வழங்கப்படும்.

**புறநானூறு**— இதற்குக் கடவுள்வாழ்த்துப் பாடினார் பாரதம் பாடிய பெருந்தேவனார். ஏனைச் செய்யுட்கள் செய்தார் முரிஞ்சியூர் முடிநாகராயர் முதற் கோவூர்கிழா ரிறுதியா யுள்ளார். இது நானூறு அகவற்பாக்களையுடையது. இது புறப்பொருட் பகுதிகளை மிகத் தெளித்துரைப்பது. இது புறமென்வும் புறப்பாட்டென்வும் வழங்கப்படும்.

## கல்லாடம்.

இது கல்லாடனாரா லியற்றப்பட்டு அப்பெயர்த்தாயிற்று. விநாயகக்கடவுள் வாழ்த்து முருகக்கடவுள் வாழ்த்துளப்பட நூற்றிரண் டகவற்பாக்க ளுடையது. அகப்பொருட்பகுதிகளை மிகத் தெளித்துரைப்பது. "கல்லாடர் செய்பனுவற் கல்லாட நூறுநூல் - வல்லார்சங் கத்தில் வதிர்சருளிச் - சொல்லாயு - மாமதுரை யீசர் மனமுவந்து கேட்டுமுடி - தாமசைத்தார் நூறு தரம்" என்று முன்னோர் செய்யுள் இதன் பெருமைக் குறுசான்றும். இந்நூற்கு மயிலேறும்பெருமாள்பிள்ளை யெழுதியவுரை முப்பத்தேழு அகவன்மாத்திரையின் விளக்கமுறுகின்றது. இன்னும், பெருந்தேவனார் பாரதந் தகடூர்யாத்திரை முதற் கடைச்சங்கவிலக்கியம் பிறவு முள.

## பதினெண்கீழ்க்கணக்கு.

பதினெண் கீழ்க்கணக்கின்வகை: "நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்-பால்கடுகங் கோவை பழமொழி - மாமூல - மின்னிலைய காஞ்சியுட னேலாதி யென்பவே-கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு" என்பதனா லறிக. இந்நிலை சொல் காஞ்சியென்ப தூஉம் பாடம்.

## காவியவிலக்கியம்.

தமிழ்க் காவியஞ் சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதி, சூளாமணி, இரகுவம்மிசம், நைடத முதற் பல வுள. இக்காவியங்க டொல்காப்பியவியல் வழிப்பட்டு மேற்கூறிய சங்கத் தமிழ்ச்சொற் பிரயோகம் பெரும்பாலு மருவி நவரசங்களுட் சிலவும் பலவுந் தங்கணடங்கக்கொண் டுலகவியல் நீதி வைராக்கிய முதலியவைகளை நன்றறிவுறுத்துவன.

## சிந்தாமணி.

இது சைனகாவியம். இந்நூலாசிரியர் சைனமுனிவரான திருத்தக்கதேவர். இவர் சைவராயிருந்து ஆருகதராயினரென்பர் சிலர். அது பொருந்தாமை வைதிககாவியதூடணமறுப்பிற் காண்க. இக்காவியத்தலைவன் சீவகனென்னு மோரரசன். இக்காவிய மவன் பிறப்பெழுவாயாகக் கதிகூடிய திறுவாயாக வுள்ள கதை கூறுவது. இது கடவுள்வாழ்த்து அவையடக்கம் பதிகமென்பவற்றோடு நாமகளிலம்பகம், கோவிந்தையிலம்பகம், காந்தருவதத்தையிலம்பகம், குணமாலையிலம்பகம், பதுமையிலம்பகம், கேமசரியிலம்பகம், கனகமாலையிலம்பகம், விமலையிலம்பகம், சுரமஞ்சரியிலம்பகம், மண்மகளிலம்பகம், பூமகளிலம்பகம், இலக்கணையிலம்பகம், முத்தியிலம்பகமென்னும் பதின்மூன்றிலம்பகங்க ளுடைத்து.

**கடவுள்வாழ்த்து**— சித்தசரணம் அருகசரணஞ் சாதுசரணந் தன்மசரணநுதலுவது.

**பதிகம்**— சீவகன் கதையைத் தொகுத்துக் கூறுவது.

**நாமகளிலம்பகம்**— சச்சந்தன் ஏமாங்கதநாட்டில் இராசமாபுரத்தி லுதித்துச் செங்கோல்செலுத்தி விசையையென்னும் பட்டத்தரசி காமக்கடற்படிந்து கட்டியங்காரனென்னு மமைச்சனை அரசு நடாத்த நிறுவி அவனாற் கொலையுண்டதூஉம், சீவகன் அவனுக்கு அவன் மனைவி விசையைபாற் றோன்றித் தெய்வத்திறத்தா லுய்ந்து வளர்ந்து பலகலை கற்று நிலவியதூஉம், கூறுவது. இது சீவகன் நாமகளைக் கூடிய வரலாறு தெரித்தலின், நாமகளிலம்பகமென்றாயிற்று. நாமகளைக் கூடினதென்றது அவன் கலைப்பயிற்சி தலைக்கூடியதென்றவாறும்.

**கோவிந்தையிலம்பகம்**— சீவகனிரைமீட்டுப் புகழ்மாலைசூடித் தன்றோழன் பதுமுகனுக்குக் கோவிந்தையென்னு நந்தகோபன மகளை மணஞ்செய்வித்த வரலாறு கூறுவது.

**காந்தருவதத்தையிலம்பகம்**— சீவகன் வித்தியாதரவேந்தனான கலுழவேகன் மகள் காந்தருவதத்தையை வீணைவென்று அவண் மணமாலைசூடி அது பொறாத வரசரைப் போரிற் புறங்கண்டு அவளை மணந்த வரலாறு கூறுவது.

**குணமாலையிலம்பகம்**— சீவகன் பொழிலாட்டிற் குணமாலை சுண்ணம் புகழ்ந்து அவள் அசனிவேகமென்னுங் கட்டியங்காரன் பட்டக் களிறு கோட்பட்டுழி யதனெதிரேறிச் செருக்கடக்கி விலக்கி அவளை மணஞ்செய்த வரலாறு கூறுவது.

**பதுமையிலம்பகம்**— சீவகன் சுதஞ்சணனென்னுந தேவனாற் கட்டியங்காரன் யாப்புறாத காவலிற் றப்பிப் பலதேய யாத்திரை போந்து பல்லவதேயத்துச் சந்திராபநகர்க் கரசனான தனபதிமகள் பதுமையைப் பாப்புவிடமகற்றி யவளன்பிற் கோட்பூண்டு அவளை மணந்த வரலாறு கூறுவது.

**கேமசரியிலம்பகம்**— சீவகன் றக்கநாட்டிலுள்ள கேமமாபுரம் புக்கு அந்நகர் வணிகன் சுபத்திரன்மகள் கேமசரி ஆடவற்காணுமளை யாண்மையிற் பேதுறுத்து மணஞ்செய்த வரலாறு கூறுவது.

**கனகமாலையிலம்பகம்**— சீவகன் மத்திமதேயத்து ஏமமாபுரமெய்தி அப்புராதிபனான தடமித்திரன் குமாரர்க்கு விற்கலை கற்பித்து அவ்விதத்தாற் காரணமாக அவன் மகள் கனகமாலையைக் கலியாணஞ்செய்த வரலாறு கூறுவது.

**விமலையிலம்பகம்**—சீவகன் றண்டகாரணிய மெய்தித் தாய் விசையையைத் தரிசித்து அவள் வரம்பெறறுத் தன்னகர் ஏமாங்கதநாட் டிராசமாபுரத்தினோபாற் செல்வுழி ஆண்டுள்ள சாகரதத்தன் மகள் விமலை கண்வலைப்பட்டு அவளை மணந்த வரலாறு கூறுவது.

**சுரமஞ்சரியிலம்பகம்**— சீவகன் றன்சுண்ணம்பழித்தலிற் பரிந்து ஆடவற் சினந்து அவர்க் கூடலோம்பேன் என்று விரதஞ் சாதித்தாள் சுரமஞ்சரியை வேடமறைந்து புக்குக் கீதநாடகங் காட்டி மயக்கி வதுவையயாற்றிய வரலாறு கூறுவது.

**மண்மகளிலம்பகம்**— சீவகன் மறலியை வரவழைத்தல்போலத் தன் மாமனை வரவழைத்த கட்டியங்கார னோலைகண்டு அவற் பொருது கோறற் கிது வாய்த்த பொழுதென் றெண்ணித் தம்பியர் தோழர் தம்மோடு கூடி நால்வகைப் படையமைந்து போந்து இராசமாபுரத்தோர்பால் வைகிடதூஉம், மாதுலன் கோவிந்தன் சூழ்ச்சிவலையின் வந்தகப்பட்ட கட்டியங்காரனென்னு மதக்களிற்றின்முன் சிங்கவேறுபோல வெளிநின்று அவன்படையறப்பொருது அவற்கொன்று மண்மகளுரிமை எய்தியதூஉம், கூறுவது.

**பூமகளிலம்பகம்**— சீவகன் இராசமாபுர வரண்மனை புகுந்து வேத்தவை சார்ந்து சிங்காதனமேறி மணிமுடிசூடி மன்பதைபுரந்த வரலாறு கூறுவது.

**இலக்கணையிலம்பகம்**— சீவகன் காந்தருவதத்தை குணமாலை முதலிய தேவிமாரோடு பதுமை முதலிய தேவிமாரையும் இராசமாபுரத்தரண்மனையிற் றலைக்கூட்டித் தன்மாமன்மகள் இலக்கணையை மணந்து இம்மாதராரோ டின்புற்றிருந்து

அரசாண்டு தற்புதல்வர்க்கெல்லாம் வளனும் வரிசையுமுதவி அங்கண்மாஞாலமுவப்பச் செங்கோல் செலுத்திய வரலாறு கூறுவது.

முத்தியிலம்பகம்— சீவகன் றத்தை முதலிய வுத்தம பத்தினிமார்வயிற் சற்புத்திரர்ப்பெற்றுச் சோலைவிளையாட்டின் மேவி ஆட்டயர்ந்திருப்புழிச், சுரிவன்குரங்கு தன் காதன் மந்திக்குப் பொற்றிரளென்ன வயங்கும் பலாவினற்சுளைகிறி நல்காநிற்பச் சோலைகாப்பான் யோர் தச்சனியைக்கவர்ந்து கடுவனை மந்தியோடோட்டிச் சிந்தை மகிழ்ந்துண்பது கண்டு, வெறுக்கையில் வெறுக்கைவைத்துக், கைப்பழமிழந்த குரங்கு நாடுசாவலிழந்த கட்டியங்காரனை யொத்தது; இக்காவலன் அவனைக்கொன்று அரசினையெய்திய வென்னையொத்தான்; வலியார் வசத்ததாய் மாறிமாறிச் செல்லுமாண்பிற்றாய அரசு போற்றேனென்று துறந்து அருகன் றிருவடி யடையும் அறம்பேணிக் கதியடைந்த வரலாறு கூறுவது.

இதற்கு நல்லுரைகண்டார் மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர். இவ்வுரை செய்யுட்களின் பொழிப்புத்திரட்டிச் சொன்முடிபு விளக்கி மேற்கோள்காட்டிப் பொருணுட்பந் தெளித்துக் கவியிருதயந்தோற்றிச் சிந்தாமணிக்கு நந்தாவிளக்காம்.

## சிலப்பதிகாரம்.

இது முத்தமிழிலக்கியமான வோர் சைனகாவியம். கடைச்சங்கத் தமிழ்ப்புலவரான சீத்தலைச்சாத்தனு ருளப்பாடுகொண்டு இளங்கோவடிகளியற்றி யவரைக் கேட்பித்த காவியமென்பது, இந்நூற் றிகழ்ந்த அணைரப்பட்ட காவியத்தலைவன் கோவலன். கோவலன் கண்ணகியென்பாளை வேட்டு இல்லறஞ்செய்யு நாளின் மாதவியென்னு நாடகக்கணிகை மடல்கோட்பட்டுச் செல்வமிழந்து தமரறிவுறாமே தன் மனைக்கிழத்தியாகிய கண்ணகியோடு மதுரைமாநகரையெய்தி ஆண்டிருந்து பொருள்செயல்வேண்டிக் கடிமனைக்கிழத்தி யடிமணிச்சிலம்பு விற்பான் புகவு ஆண்டைத் தட்டானொருவன் சூழ்ச்சிவலையிற் பட்டானப் பாண்டியன் காவன்மீளியர் வாளிற் கிலக்காகிய வண்ணமும், கண்ணகி காதற்கொழுநன் வாளிற் கிலக்காகிய கடுந்துயரான் மதுரைதீயிட்டவண்ணமும், கோவலனை மலைநாட்டுத் திருச்செங்குன்றிற நெய்வவடிவிற்கண்டு தலைக்கூடிச் சுவர்க்கம் புக்க வண்ணமும், செங்குட்டுவன் அவ்வதிசயங்கேட்டு அவட்குக் கோவில்கண்டு அவளுருப் பதிட்டைசெய்து வழிபட்ட வண்ணமும், பிறவும், கூறும். இக்கதை புகார்காண்டம், மதுரைக்காண்டம், வஞ்சிக்காண்டமென மூன்று வகைப்படுத்துக் கூறப்படும். இது சிலம்பை முக்கிய விடயமாகக்கொண்டெழுந்த காவியமாகலின், சிலப்பதிகாரமெனப்பட்டது. இதன் புகார்காண்ட மதுரைக்காண்டங்கட்கு நல்லுரை கண்டார் அடியார்க்கு நல்லாரென்பவர். அடியார்க்குநல்லார் முத்தமிழிலக்கண மரபு வழாது சொற்றிறம் பொருட்டிறம் விளங்க வுற்றாரோடி யிதற்குரை யுலக முவப்ப வெழுதினார்.

## மணிமேகலை.

இது மதுரைக்கூலவாணிகன் சாத்தனா ரியற்றிய வோர் பௌத்தகாவியம். இக்காவியத்தலைவி மாதவிமகளான மணிமேகலையாகலின் அப்பெயர்த்தாயிற்று. இது மணிமேகலை தந்தையாகிய கோவலற்கும் தாயாகிய கண்ணகிக்கும் முற்கை யூழ்வினைப்பயன் விளைந்த முறை கேட்டு வைராக்கிய மெய்தக தரும் தவத்திறம் பூண்டு புத்ததருமங் கேட்டுப் பவத்திற மறுகென நோற்பதைப பொருளாக வுடையது. இது விழாவறை

காதை, ஊரலருரைத்தகாதை, மலர்வனம்புக்ககாதை, பளிக்கறைபுக்ககாதை, மணிமே
கலாதெய்வம் வந்து தோன்றியகாதை, சக்கரவாளக்கோட்டமுரைத்தகாதை, துயிலெ
ழுப்பியகாதை, மணிபல்லவத்துத் துயருற்றகாதை, பீடிகைகண்டு பிறப்புணர்ந்தகாதை,
மந்திரங்கொடுத்தகாதை, பாத்திரம்பெற்றகாதை, அறவணர்த்தொழுதகாதை, ஆபுத்தி
ரன்றிற மறிவித்தகாதை, பாத்திரமரபு கூறியகாதை, பாத்திரங்கொண்டு பிச்சைபுக்க
காதை, ஆதிரைபிச்சையிட்டகாதை, உலகவறவி புக்ககாதை, உதயகுமர னம்பலம்புக்க
காதை, சிறைக்கோட்டமறக்கோட்டமாக்கியகாதை, உதயகுமரனைவாளாலெறிந்தகாதை,
கந்திற்பாவை வருவதுரைத்தகாதை, சிறைசெய்காதை, சிறைவிடுகாதை, ஆபுத்திரனாட
டைந்தகாதை, ஆபுத்திரனோடு மணிபல்லவமடைந்தகாதை, வஞ்சிமாநகர் புக்ககாதை,
சமயக்கணக்கர் தந்திறங்கேட்டகாதை, கச்சிமாநகர்புக்ககாதை, தவத்திறம்பூண்டு தரும
ங்கேட்டகாதை, பவத்திறமறுகெனப் பாவைநோற்றகாதை யென முப்பான்பகுதித்தாம்.
அற்றே லஃதாக; பொய்யடிமையில்லாத புலவரான சீத்தலைச்சாத்தனார் இவ்வவைதிக
பௌத்த புறச்சமயப் பொருள்பற்றிக் காவியஞ் செய்த தென்னையெனின்,— மணிமே
கலை வண்ணங் கண்ட புலவராகலானும், அப்பொழுதைக் காவலரிது பாடியருளுக
வென வேண்டுதலானும், மணிமேகலை யாக்கைநிலையாமை மேலிட்டு வைராக்கியந்
தவம் பேணிய வரலாறும் பிறவும் உலகுக் குணர்த்தல்வேண்டுமென்னுங் கருத்துத் தம்
மைத் துரத்தலினாலும், சாத்தனாரிது யாத்தன ரென்க. மற்றுச் சாத்தனார் பௌத்த
மெய்யென்று காட்டல்வேண்டி இது யாத்திலரென்பது. "நுதல்விழி நாட்டத் திறை
யோன் முதலாப் - பதிவாழ் சதுக்கத்துத் தெய்வ மீறாக - வேறுவேறு சிறப்பின் வேறு
வேறு செய்வினை - யாறறிமரபி னறிந்தோர் செய்யுமின்" என்று சிவபரத்துவமு மித
னுட் சாத்தனா ரெடுத்தோதினார்.

## குண்டலகேசி.

இது பௌத்தகாவியம். இந்நூற்செய்யுட்களி லொரோவொன்று சிவஞானசித்
திப்பரபக்கவுரையிலும் பிறாண்டும் உரையாசிரியர்கள் எடுத்தோதிடக் காண்கின்றா மன்றி
நூன்முழுதும் வழங்கக்காண்கின்றிலம்.

## வளையாபதி.

இதில் ஒவ்வோர் கூறு மேற்கோளாய் முன்னோ ருரைகளில் வந்திடக் காண்கி
ன்றா மன்றி நூன்முழுதும் வழங்கக் கண்டிலம்.

## சூளாமணி.

இது சைனகாவியம். தோலாமொழித்தேவ ரியற்றியது. இக்காவியத்தலைவன்
பயாபதி. இவன் சங்கவண்ணன் மேகவண்ணனென்னும் புத்திரரிருவரைப் பயந்தவர
லாறும், இவரு ளிளையோனை திவிட்டனென்னு மேகவண்ணன் மாயச்சீயத்தை வதை
செய்த பராக்கிரமவரலாறும், இரசநூபுர விஞ்சையர் வேந்தன்மகள் சயம்பவையென்
னும் பொற்கொடியை வேட்டவரலாறும், அவன் அச்சுவகண்டன் முதலிய பகைமன்
னரைப் போரிலடர்த்து வென்றிமாலை சூடிய வரலாறும், தன் மகட்குச் சுயம்வர
நாட்டிய வரலாறும், பயாபதி நிலையாமை நோக்கி யரசுரிமை துறந்து அருகனறநெறி
தேர்ந்த வரலாறும், அருகசரணாகதியெய்திய வரலாறும், இது மீக்கூறும்.

## இரகுவம்மிசம்.

இது வைதிககாவியம். ஈழநாட்டு யாழ்ப்பாண நல்லூர்க்கரசனான பரராசசே
கரன் மருகன் அரசகேசரி யியற்றியது; வடமொழியின் மகாகவியான காளிதாச ரிய

ந்திய இரகுவம்மிசகாவியத்தை மூலமாகவுடையது. காவியத்தலைவர் இரகுபூபதியும் அவன்வழித்தோன்றல்களும். இது சூரியகுலத்திற் பிறந்த இட்சுவாகு குலத்தோன்றலான திலீபன் தேனுவழிபாடாற்றி இரகுபூபதியைப் புத்திரனாகப் பெற்றுப் பரிமேதமியற்றிக் கதியடைந்த வரலாறும், இரகு திக்குவிசயங்கொண்ட வரலாறும், அவற்கு மகனாக வுதித்த வயன் படையொடெழுந்து போய்ப் பஃறேய மன்னர் திறைகொண்டு விதர்ப்பவரசன் மகள் இந்துமதி மாலையிடப்பெற் றவளைக் கடிமணம் புணர்ந்து அது பொறாது எதிர்ந்த பகைவேந்தரைப் புறங்கண்டு தன்னகரெய்திய வரலாறும், இரகுபூபதி கதியுற்றவரலாறும், இந்துமதி தன்னாயகனோடு சோலை விளையாட்டயர்ந்தூழியஞ் தூரத்தியங்கு நாரதன் வீணைமீது கிடந்த கற்பகப்பூந்தார் மெய்ப்பட்டுப் பிறப்பு நீங்கிய வரலாறும், அவனுக்கு இந்துமதி வயிற்றிற்றோன்றிய சுந்தரப்புதல்வனான தசரதன் வேட்டம்போய் முனிசாபமேற்ற வரலாறும், அவன் புத்திரவேள்வி புரிந்து சிராமசந்திரன் முதலிய நால்வரையும் பெற்ற வரலாறும், சீதை வனம்புக்க வரலாறும், இலவணன் சம்புகன் வதையுண்ட வரலாறும், இராமன் பரிவேள்விசெய்த வரலாறும், குசனயோத்தியெய்திய வரலாறும், அவன் நாகராசன் றந்த வாகுவலயங் கொண்டு நாககன்னிகையை மணந்து முடிசூடி யுலகாண்ட வரலாறும், பிறவும், எடுத்தோதும்.

## நைடதம்.

இது வைதிககாவியம். இந்நூல்செய்தான் அதிவீரராமபாண்டியன். காவியத்தலைவன் நளச்சக்கிரவர்த்தி. இந்நளோபாக்கியானம் வியாசபாரதத்தி லோதப்பட்டது. இது நளன் குணமாட்சியும், அவன் விதர்ப்பநாட்டரசன் மக டமயந்தியைச் சுயம்வாத்தாற் கூடியவரலாறும், அதுகண்டு பொறாது பொரவெதிர்ந்த சுராதிபரையு நராதிபரையும் போரிற் புறங்கண்டவரலாறும், புட்கரனோடு சூதாடி நாடுநகரிழந்து தமயந்தியோடு கானடைசென்றவரலாறும், ஆண்டுத் தீவினையாலவட் டணந்தவரலாறும், பின் னல்வினையாலவ டாளையூரி லவளைத் தலைக்கூடியவரலாறும், மீட்டு மரசுரிமை யெய்தியவரலாறும், நாட்டி யுரைக்கும்.

## புராணவிலக்கியம்.

கந்தபுராணம், உபதேசகாண்டம், வாயுசங்கிதை, பிரமோத்தரகாண்டம், காசிகண்டம், கோயிற்புராணம், காஞ்சிப்புராணம், திருத்தணிகைப்புராணம், பிரபுலிங்கலீலைமுதற் புராணவிலக்கியங்கள் பல வுள. இப்புராணவிலக்கியங்கள், தொல்காப்பியவியற்றமிழாணையிற் றோன்றிச் சங்கச்செய்யுட் பிரயோகம் பழைய் காவியம்பிரயோகமாண்டாண்டுப் பொருந்தி வடசொன் மிக விராய் வேதாகமப்பொருளுட்கொண்டு அலங்காரவகை பல தழீஇ நடப்பனவாம்.

## கந்தபுராணம்.

இது கச்சியப்பசிவாசாரியரா லியற்றப்பட்டது. இது வடமொழிக் காந்தபுராணத்துச் சங்கரசங்கிதையிலுள்ள அறுமுகக்கடவுள் சரித்திரமோதுதலின், கந்தபுராணமெனப்பட்டது. இது உற்பத்திகாண்டம், அசுரகாண்டம், மகேந்திரகாண்டம், யுத்தகாண்டம், தேவகாண்டம், தக்ககாண்டமென வாறு காண்டங்களுடையது. இதன் செய்யுட்கள் பதினாயிரத்தின் மிக்கன. இது அறுமுகக்கடவு ளுருவவாதார வரலாறும், சூரபன்மன் காசிபமுனிவற்கு மாயைபாற் றோன்றி வீர வேள்வி செய்து சிவபிரான்பால் ஆயிரத்தெட்டண்ட நூற்றெட்டுகங்காறும் ஆளும் பெருவரம் பெற்றுத் தேவரைச் சிறைசெய்து அரசுபுரிந்த வரலாறும், அவனை அறுமுகக்கடவுள் பொருது

வென்று ஆட்கொண்ட வரலாறும், தேவர் சிறை நீக்கி அவரை விண்குடி யேற்றிய வரலாறும், அறுமுகக்கடவு டெய்வயானை வள்ளிநாயகி திருமணம் புரிந்தருளிய வரலாறும், இந்திரகுமாரனான சயந்தனுக்கு வியாழப்புத்தேள் அசுரர் சிறைப்பட்டதற்குக் காரணங் கூறிய வரலாறும், பிறவும், கூறும். இது அறுமுகக்கடவுண் மகிமையெல்லா மங்கை நெல்லிக்கனிபோல எடுத்து விரித்துரைக்குந் திவ்விய புராணமாய்த் தமிழ்ப் பெருங்காப்பியமாய் நிலவுவது. இதன் செய்யுட்கள் திராட்ச கதலி இட்சு நாளிகேர பாகங்கள் கொண்டன. இது நவிற்றொறு நவிற்றொறு நாசயம் பயப்பது. பயிற்றொறும் பயிற்றொறு மறுமுகக்கடவு டிருவடிப் பத்தி ஞானம் விளைப்பது. கச்சியப்பசிவாசாரியர் சாலிவாகனசகாப்தம் ஏழுநூற்றில் இதனை யியற்றி யரங்கேற்றினார். அரங்கேற்றுழித் திகடசக்கரமென்னுந் தலைச்செய்யுண் முதற்கண்ணதான திகமென்னுஞ் சொல்லிறுதி மகரந் தகர வல்லெழுத்தின் முன் டகரமாய்த் திரிந்ததற்கு விதி தொல்காப்பியத்தி லில்லையென்று அவ்வரங்கிலுள்ள புலவரொருவர் தடை நிகழ்த்தினாரென்றுங் கச்சியப்பசிவாசாரியர் "இத்தடை நியாயமாயினுங் குமாரகோட்டத்தடிகள் அவ்வா றெடுத் தருளிச்செய்ய நாமுதற்கொண்டு பாடினோமாகலின் இதன்கட் குற்ற மாராய்தன் முறையன்று" என்று விடை நிகழ்த்தினாரென்றுஞ் சிலர் கூறுப. ஆண்டு மகரந் தகரத்தின்முன் டகரமாகத் திரிந்தது விகடசக்கரனென்னு மெதுகை நோக்கி யாகலின், அது தொல்காப்பிய விதியாமன்றி விரோதமாகா தெனக. இன்னோரன்ன செய்யுட்டிரிபுகள், "கிளந்த வல்ல செய்யுளுட் டிரிநவும்" என்னு மதிகாரப் புறனடையா லமைத்துக்' கோடற்பாலன வெனக. இங்ஙனமாகலின், அங்ஙனம் புலவர் தடைநிகழ்த்தினாரென்பதூஉங் கச்சியப்பசிவாசாரியர் இங்ஙனம் விடை நிகழ்த்தினாரென்பதூஉம், பொருந்தாமை யறிக. இப்பொருந்தாமையை மேலுந் தடைவிடைகளால் விரிக்கிற் பெருகும்.

### உபதேசகாண்டம்.

இது சங்கரசங்கிதையின் ஏழாவது காண்டம்; சூரன் முதலியோர் முன்னை வரலாறும், விபூதி ருத்திராக்க மகிமைகளும், சிவநாமமகிமையும், பிறவும், எடுத்தோதுவது. இதனை மொழிபெயர்த்துப் பாடினார் கோனேரியப்பர்.

### வாயுசங்கிதை.

இது சிவபுராணம் பத்தனுண் முதற்கண்ணதான சைவபுராணத் துட்டாது. சைவபுராணம் வித்தியேசுவரசங்கிதைமுதல் வாயுசங்கிதை யீறாகப் பன்னிரண்டுசங்கிதைகளுடைத்து. பன்னிரண்டுள் இறுதிக்கண்ணதாய் நிலவு மிவ்வாயுசங்கிதை குலசேகரவரகுணராமபாண்டியனாற் றமிழில் மொழிபெயர்த்துப் பாடப்பட்டது. இது பூர்வகாண்டம் உத்தரகாண்டமென விரண்டு காண்டங்க ளுடைத்து. இதற் சிவபரத்துவமுஞ் சிவோபாசனையுஞ் சிவாகமமகிமையுஞ் சிவதீக்கைப் பெருமையுஞ் சைவாசாரியாபிடேகமுறை முதலியனவு நன்குரைக்கப்படும்.

### பிரமோத்தரகாண்டம்.

இது சிவபுராணம் பத்தனு ளோதப்பட்ட பஞ்சாக்கரமகிமை, சிவராத்திரிமகிமை, பிரதோடமகிமை, சோமவாரவிரதமகிமை, சிவயோகிமகிமை, விபூதிமகிமை, உமாமகேசுரபூசைமகிமை, உருத்திராக்கமகிமை, சீருத்திரமகிமை முதலியவைகளை யெடுத்துரைப்பது. இதனைத் தமிழின் மொழிபெயர்த்தியற்றினோன் வரதுங்கராமபாண்டியன்.

## காசிகண்டம்.

இது காந்தத்துட்பட்ட காசிகண்டமகிமை நுதலுவது. பூர்வகாண்ட முத்தர காண்டமென விரண்டுகாண்டங்க ளுடைத்து. இதில் வாராணசிச்சிறப்பும், கங்கையின்மகிமையும், மகளிரிலக்கணமும், அவர் சற்பொழுக்கமும், பிரமசரியநெறியும், இல்லறநெறியும், பொதுவான வைதிகாசாரமும், யோகவொழுக்கமும், முத்திமண்டபவரலாறும், பிறவும், எடுத்தோதப்படும்.

## கோயிற்புராணம்.

இது சிதம்பரமான்மிய நுதலுவது. கோயிலெனினுஞ் சிதம்பரமெனினு மொக்கும். இது வியாக்கிரபாதமுனிவர் பதஞ்சலிமுனிவர் ஆனந்ததாண்டவந் தரிசித்துய்யல்வேண்டி யருந்தவம் புரிந்தமையும், அவரைப் பரமசிவன் சிற்சபையில் விளங்கி யருணடந் தரிசிப்பித் துய்யக்கொண்டமையும், சிங்கவன்மன் சிவகங்கை மூழ்கி யிரணியவன்மனாய் முனிவரிருவ ருபதேசமும் பெற்றுத் தாண்டவங்கண்டு நடராசருக்குத் திருக்கோயிலெடுத்து நித்திய நைமித்திக பூசை விழாச் செய்தமையும், நடராசர் திருவடித் தொழும்பாற்றி மூவுலகு மொரு குடைக்கீழாண்டு வீடுபெற்றமையும், எடுத்தோதும். இதனைத் தமிழின் மொழிபெயர்த்துப் பாடியருளினார் உமாபதிசிவாசாரியர். இதன்கட் சைவசித்தாந்த நுண்பொருள்க ளுள்ளுறையாக வோதப்பட்டன ஆண்டாண்டுப் பல வுள.

## காஞ்சிப்புராணம்.

இது காந்தத்துச் சனற்குமாரசங்கிதையிற் சாளிகாகண்டத்திற் போந்த காஞ்சி மான்மியநுதலுவது. இதனைத் தமிழின் மொழிபெயர்த்துப் பாடினார் ஆசிரியர் சிவஞான யோகிகள். இது சொற்சுருங்கிப் பொருள்விளங்கி நவின்றோர்க்கினிதாய்த் திருமுறைகளினுஞ் சங்கவிலக்கியங்களினு முள்ள நன்மொழி புணர்ந்து வேதாகம விழுப்பொருள் பயந்து வைதிகசைவ காவியவரசாய் வயங்குவது. தொல்காப்பிய வியற்பிரயோகஞ் செய்யுட்கடோறுந் துலக்குவது. அகத்திணைமரபும் புறத்திணைமரபு மிகத் துறைப்படுத்துரைப்பது. வைதிகசைவ வொழுக்க மெய்பெறக் கிளப்பது. சைவசித்தாந்தத் தனிப்பொருள் செவ்விதிற் றெரிப்பது. பிற்காலத்து நல்லிசைப்புலவர் நாடு நகரச் சிறப்பும், வைதிகசைவமரபும், சிவசரியை கிரியை யோக ஞானவொழுக்கும், பாடிப் பெருமை பெற்றது, இந்நூலி னுநகரச்சிறப்பும் வைதிகசைவமரபு வாய்பாடுஞ் சரியை கிரியை யோக ஞானவுபதேச நுண்பொருளு மடிப்பாடாகக்கொண்டெனின், இதன்பெருமை யலகிட்டுரைத்தல் புலவர்க் கெளி தன்று.

## திருத்தணிகைப்புராணம.

இது காந்தத்துட்பட்ட சங்கரசங்கிதையின் பிற்கூற்றிற் போந்த தணிகை மான்மிய நுதலுவது. சொல்லானும பொருளானுந் தோமற னல்லிசைப்புலவர் நாட்டிய காவியங்கட்கு நிர்நாயகமாவது. வைதிகமரபுஞ் சைவமரபும் வல்லவாற்றானெல்லாம் விளக்குவது. புறத்திணையு மகத்திணையும் புலங்கொளப் போதிப்பது. முருகக்கடவுள் அருள்விளையாடன் முற்றவெடுத்து மொழிகுவது. சரியை கிரியா யோக ஞான நாற்பாதப்பொருளும் பாற்படவெடுத்துப் பகருவது. இதன்செய்யுட்களெல்லாம் இட்சுபாக மளிகைபாக நண்ணி நல்ல சொல்லணியும் பொருளணியு மெல்லையின்றி விளங்க விருப்பன. இதனைப் பாடினார் ஆசிரியர் சிவஞானயோகிகண் முதன்மாணாக்கரான

கச்சியப்பமுனிவர். இந்நூலாசிரியராகிய கச்சியப்பமுனிவர் விநாயகபுராணம் பேரூர்ப்புராணந் திருவானைக்காப்புராண மென்னுஞ் செந்தமி ழிலக்கியங்களுஞ் செவ்விதினியற்றியிட்டார்.

பிரபுலிங்கலீலை.

இது உருத்திரன் கூறாய் விளங்கிய அல்லமதேவன் உமையின் கூறாய் விளங்கிய மாயையோடாடி மற்றவள் வலிபுறங்கண்ட வரலாறும், வீரசைவ மாகேசுரர்களான சரணர் பலர்க்கு அவன் ஞானோபதேச மருளிய வரலாறும், பிறவும், எடுத்தோதும். இஃது ஓர் ஐக்கியவாத சைவ புராணம். இஃதியற்றினார் துறைமங்கலச் சிவப்பிரகாச முனிவர். இஃது சொல்லணி பொருளணி நிரம்பியதோர் நல்ல காவிய ரத்தினம்.

இன்னுஞ் செந்தமி ழிலக்கியமாயுள்ள புராணங் கூர்மபுராணம், இலிங்கபுராணம், சூதசங்கிதை, சேதுபுராணம், திருவிளையாடற்புராண முதற் பலவுள.

இதிகாசவிலக்கியம்.

இதிகாசங்கள் இராமாயணம் பாரதமென விரண்டாம்.

இராமாயணம்.

இது வடமொழியில் ஆதிகவிராசனென் றுலகம் போற்றும் வான்மீகி யென்னு முனிபுங்கவனுலியற்றப்பட்டது. அது தமிழ்ப்புலவரான கம்பனாராற் றமிழின் மொழிபெயர்த்து அப்பெயரானே பாடப்பட்டது. இது சிராமசந்திரன் தசரதசக்கிரவர்த்தி புத்திரனுயவதரித்துச் சீதாபிராட்டியை மணந்த வரலாறும், அச்சிராமசந்திரன் மந்தரை சூழ்ச்சி வழிப்பட்டுக் கைகேசி செய்த சூழ்வினையா லுடிமூந்து காடு சென்ற வரலாறும், ஆண்டு இலங்கை வேந்தனுன இராவணன் மாயம் புணர்த் தெய்திச் சீதாபிராட்டியை வவ்விப் போகத் துயருழந்து கிட்கிந்தை தலைக்கூடிய வரலாறும், ஆண்டு வாலியைக் கொன்று சுக்கிரீவ னட்பெய்தி யனுமானைத் தூதிற் போக்கிச் சீதாபிராட்டியைத் தேடுவித்த வரலாறும், அனுமான் சீதாபிராட்டியை யிலங்கையிற் கண்டுருக்காட்டிச் சூளாமணி நல்கி யாற்றுவித் தரக்கரை முருக்கி யிராமசந்திரன்பான் மீண்டு சீதையறந்தலை நின்றமர்ந்தது கூறிய வரலாறும், இராமசந்திரன் குரக்கரசினத்தோடு படையமைந்து சேதுபந்தன மியற்றி யதன்வழியா லிலங்கை தலைக்கூடி இராவணன் முதலியோரை வதைத்துச் சீதாபிராட்டியைச் சிறையினீக்கி மீண் டயோத்தி தலைக்கூடித் திருமுடி சூடி யுலகாண்ட வரலாறும், பிறவும், கூறும். வடமொழி இராமாயணம் வான்மீகி நவரச புஞ்சமாக வியற்றிய வுத்தம காவியமாகலின், கம்பனார் அம்மூலராமாயணச் சுலோகமதா நன்று தழீஇ யொன்பான் சுவையுமொன்றினென் றதிக மென் றிம்பர்மா நிலக் கவிக ளெடுத் தேத்த விஃதியற்றியிட்டார். கம்பனார் தமிழ் நன்குணர்ந்த கவிஞர் சிகாமணியாகலின், தமிழிராமாயணத்தி லாண்டாண்டு நாடு நகர வர்ணனை பொழில்வர்ணனை காலவர்ணனைகளு மூலக நீதிகளும் பிறவுந் தாமே மேவரக் கொண்டு கவிகள் செய்திட்டார். இதன் செய்யுட் பெரும்பான்மையான் இட்சுபாக நாளிகேரபாக நண்ணி நடப்பன. இது வடமொழி ராமாயணம்போலப் பாலகாண்டம், அயோத்தியாகாண்டம், ஆரணியகாண்டம், கிட்கிந்தாகாண்டம், சுந்தரகாண்டம், யுத்தகாண்டமென ஆறு விபாகங்களாகப் பகுக்கப்பட்டுப் பதினுயிரத்தின் மிக்க செய்யுளுடைத்தாய்ப் பெருங்காப்பியமென வழங்கப்படும் பெருமையுடையது. இதன் உத்தரகாண்டம் ஒட்டக்கூத்தராற் றமிழின் மொழிபெயர்த்துப் பாடப்பட்டது. இது இராமசந்திரன் முடிசூடிப் பரிவேள்வியாற்றியதும், பிறவும், கூறும்.

## பாரதம்.

இது வடமொழி வியாச மாபாரதப்பொருளுதலுவது. வில்லிபுத்தூராராலு நல்லபிள்ளையாலுந் தமிழின் மொழிபெயர்த்துப்பொரா லிடற்றப்பட்டது. இது ஆதிபருவமுதற் சுவர்க்காரோகண பருவமிறுதியாகப் பதினெட்டுப் பருவங்களையுடையது. அவற்றுள் ஆதிபருவம், சபாபருவம், ஆரணியபருவம், விராடபருவம், உத்தியோகபருவம், வீட்டுமபருவம், துரோணபருவம், கன்னபருவம், சல்லியபருவம், சௌப்திகபருவமென்னும் பத்தும் வில்லிபுத்தூராராலும், சீபருவம், சாந்திபருவம், அநுசாசனிகபருவம், அசுவமேதபருவம், ஆச்சிரமவாசபருவம், மௌசலபருவம், மகப்பிரத்தானிகபருவம், சுவர்க்காரோகணபருவமென்னுமெட்டு நல்லபிள்ளையாலு மொழிபெயர்க்கப்பட்டன. இது நான்குவேதார்த்தங்களையுஞ் சரித்திரங்கண் மேலிட்டு அறிவுறுத்தலின், ஐந்தாம்வேதமென வழங்கப்படும் இதன்கட் பலகலைகளின் சாரங்களும் புருடார்த்தங்களு நன்று வெளியிடப்படும். இதுவுந் தமிழ்ப் பெருங்காப்பியமாகச் சான்றோராற் போற்றப்படுகின்றது.

## பல்வகைப்பிரபந்தவிலக்கியம்.

கலிங்கத்துப்பரணி களவெண்பாப்போலு மூன்றோர் பிரபந்தங்களும், குமரகுருபரமுனிவ ரியற்றிய பிரபந்தங்களும், சிவப்பிரகாசமுனிவ ரியற்றிய பிரபந்தங்களும், சிவஞானயோகிக ளியற்றிய பிரபந்தங்களும், அவர் நன்மாணாக்க ரியற்றிய பிரபந்தங்களும், இவைபோல்வன பிறவுஞ் செந்தமிழ்ப் பிரபந்தவிலக்கியங்களாம்.

**குமரகுருபரமுனிவரியற்றியபிரபந்தங்கள்:** திருச்செந்தூர்க் கந்தர்கலிவெண்பா, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், மீனாட்சியம்மைகுறம், மீனாட்சியம்மை யிரட்டைமணிமாலை, மதுரைக்கலம்பகம், நீதிநெறிவிளக்கம், திருவாரூர் நான்மணிமாலை, முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ், சிதம்பரமும்மணிக்கோவை, சிதம்பரச் செய்யுட்கோவை, சிவகாமியம்மை யிரட்டைமணிமாலை, பண்டாரமும்மணிக்கோவை, காசிக்கலம்பகமென் றித்திறத்தன.

**சிவப்பிரகாசமுனிவரியற்றியபிரபந்தங்கள்:** நால்வர்நான்மணிமாலை, திருச்செந்தூலந்தாதி, பழமலையந்தாதி, நன்னெறி, திருவெங்கைக்கோவை, திருவெங்கைக்கலம்பகம், திருவெங்கையுலா வென்றித்திறத்தன.

**சிவஞானயோகிகளியற்றிய பிரபந்தங்கள்:** அரதத்தாசாரியர் சுலோக பஞ்சக மொழிபெயர்ப்பகவல், சிவதத்துவவிவேகம், சோமேசர் முதுமொழிவெண்பா, குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி, இளசைப் பதிற்றுப்பத்தந்தாதி, கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதி, செங்கழுநீர்விநாயகர்பிள்ளைத்தமிழ், அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ், திருவேகம்பரந்தாதி, திருமுல்லைவாயிலந்தாதி, திருத்தொண்டர் திருநாமக்கோவையென் றித்திறத்தன.

சிவஞானயோகிகண் மாணாக்கர் பிரபந்தங்கள்: தணிகையாற்றுப்படை, துறைசைக்கோவை முதலியன. இவற்றுள், தணிகையாற்றுப்படை கச்சியப்பமுனிவராலும் துறைசைக்கோவை சுப்பிரமணியமுனிவராலு மியற்றப்பட்டன. இவை தொல்காப்பியமுதலாணை யியற்றமிழிலக்கியமாய்ச் சங்கச்செய்யுட் பிரயோகம் யாண்டும் பயின்று சொல்லணி பொருளணி துறுமி விளங்கு நல்ல தமிழ்ப்பிரபந்தங்களாம். இவற்றுள், குமரகுருபரமுனிவர் பிரபந்தங்களுஞ் சிவஞானயோகிகள் பிரபந்தங்களும் வேதாந்தத்தெளிவாஞ் சைவசித்தாந்த நுண்பொருள் விளக்குங் கொழிதமிழ்க் கவிகளுடையனவுமாம்.

இலக்கியமரபியன் முற்றிற்று.

---

## சாத்திரமரபியல்.

### அட்டாதசவித்தை.

வித்தை பதினெட்டாவன: வேதநான்கும், சிக்கை கற்பசூத்திரம் வியாகரண நிருத்தஞ் சந்தோபிசித் சோதிடமென்னு மங்கமாறும், புராண நியாயநூன் மீமாஞ்சை மிருதியென்னு முபாங்க நான்கும், ஆயுள்வேதம் வில்வேதங் காந்தருவவேத மருத்த நூலென்னுமிவை. இவற்றுள், வேதநான்கும் பிரமகாண்டமும் பிரமஞானத்திற்கு நிமித்தமான கருமகாண்டமு முணர்த்துவனவாம். சிவாகமங்களும் பிரமகாண்டமாயடங்குமென்ப. வேதாகமங்கள் பரமசிவன் வாய்மொழியென்று சுருதியும் புராணமுஞ் சிவாகமுமோதுதலானும், பஞ்சப்பிரமம் பிரணவம் பஞ்சாக்கரம் பிராசாதமுதலிய மந்திரங்களும், பதிபசுபாச முதலிய பொருள்வழக்கமும், திருநீற்றினுத்தூளனந் திரிபுண்டரமுருத்திராக்கந்தரித்தல் சிவலிங்கபூசை முதலிய கருமங்களும், பிறவும், இரண்டன்கண்ணுமொப்பச் சுருக்கமாகவும் விரிவாகவுஞ் சொல்லப்படுதலானும், வேதசத்தத்தில் சிவாகமமு மடங்குமெனக்கொண்டு வித்தை பதினெட்டென் றுண்மை நூல்களங்ஙனமோதுன. நீலகண்டவாசிரியர் "வயஞ்து வேதசிவாகமயோர்பேதம் நபச்யாமஃ வேதோபி சிவாகமஃ" வேதசிவாகமங்கட்குப் பேதங்காண்கின்றிலம்; வேதமுஞ் சிவனாற் செய்யப்படுதலின் ஆகமமெனப்படும் என்றும், சிவஞானயோகிகள் "வேதம் பொருள் பலபடத் தோன்றுஞ் சூத்திரமுஞ் சிவாகம மதனை யவ்வாறுக வொட்டாது தெளித்துரைக்கும் பாடியமும்போலப் பரமசிவனாற் செய்யப்பட்டமையின், அவை முறையே பொதுநூல் சிறப்புநூலெனப்பட்டுச் சூத்திரமும் பாடியமும்போல வேறுவைத் தெண்ணப்பட்டன" என்றும், தத்தம் பாடியவுரைகளிற் கூறியருளியவாற்றானும், இது கடைப்பிடித்துணர்ந்து கொள்க. "ஸர்வோ ருத்ரமயஃ சிவஃ" என்னுஞ் சுருதியு மிவ்வுண்மைக்குச் சான்றாம். வேதமென்னுஞ்சொல் அறிதற்கருவி யெனப் பொருள்பட்டுச் சதுர்வேதங்களுக்குக் காரணவிடுகுறியாயுஞ் சைவாகமங்களுக்குக் காரணக்குறியாயும், ஆகம மென்னுஞ் சொல் பரமசிவன்பானின்றும் வந்த தென்னும் பொருட்டாய்ச் சைவாகமங்களுக்குக் காரணவிடுகுறியாயும் சதுர்வேதங்களுக்குக் காரணக்குறியாயும், வடமொழி தென்மொழி நூலுரைகளில் வழங்கப்படுமாறுந் தெரிந்துணர்ந்துகொள்க. ஒருசார் வைதிகர் இவ்வுண்மை பகுத்துணரமாட்டாது, அட்டாதசவித்தையிற் சிவாகமம் படிக்கப்படாமையின், அது பிரமாணநூலாகாதென்று தமக்கு வேண்டியவாறு பிதற்றுப. இனிச் சைவாகமங்கள் வேதச்சொல்லிலடங்கி அட்டாதசவித்தையாதல் அதன் பெருமைக்குக் குறைவாமென்று கூறுவாரைச் சதுர்வேதங்கள் ஆகமச் சொல்லினடங்கிப் பிரமாணமாதன் மற்றவற்றின் பெருமைக்குக் குறைவாகாதோவென்று கடாவி மறுக்க.

இனி வேதம் "சுயம்பு" வென வழங்கப்படுவதூஉம், "அபௌருஷேய" மென வழங்கப்படுவதூஉம், சுயம்புவான பரமசிவனாற் செய்யப்பட்ட காரியமாதல்பற்றியும், பசுக்களாகிய புருடராற் செய்யப்பட்ட தன்றென்னுங் கருத்துப் பற்றியுமே யாம். ஆகலின், அவ்வழக்கேகொண்டு அது இறைவன் வாய்மொழி யன்றென்றல் பொருந்தாதென்க. சங்கத்தார் "செய்யா மொழிக்குந் திருவள்ளுவ ருரைத்த-பொய்யா மொழிக்கும் பொரு ளொன்றே" யென்றதூஉம், பசுக்களான தேவர் முனிவர் முதலியோராற் செய்யப்படாத மொழியென்னுங் கருத்துப்பற்றியேயாம்.

இனி வேதங்களை யெடுத்தல் படுத்தல் முதலிய விசை வேறுபாட்டா னுச்சரிக்குமா றுணர்த்துவது சிக்ஷை. வேதங்களிற் கூறுங் கருமங்களை யனுட்டிக்குமுறைமை யுணர்த்துவது கற்பசூத்திரம். வேதங்களி னெழுத்துச் சொற்களதியல் புணர்த்துவது வியாகரணம். வேதங்களின் சொற் பொரு ளுணர்விப்பது நிருத்தம். வேதமந்திரங்களிற் காயத்திரி முதலிய சந்தங்களின் பெயரும் அவ்வவற்றிற்கு எழுத்தினைத் தென்றனு முணர்த்துவது சந்தோபிசிதி. வேதத்திற் செய்யப்படுங் கருமங்கள் செய்தற்குரிய கால விசேடங்களை யுணர்த்துவது சோதிடம். இங்ஙனமாகலின், இவையாறும் வேதத்திற் கங்கமெனப்பட்டன. பரமசிவ னுலகத்தைப் படைக்குமாறு முதலாயின கூறும் வேதவாக்கியப் பொருள்களை வலியுறுத்து விரித்துணர்த்துவது புராணம். இதிகாசமு மீண் டடங்கும். வேதப்பொருளை நிச்சயித்தற்கனுகூலமான பிரமாண முதலியவற்றை யுணர்த்துவது நியாயநூல். வேதப்பொருளின் முற்பரிய முணர்த்துதற் கனுகூலமான நியாயங்களை யாராய்ச்சி செய்துணர்த்துவது மீமாஞ்சை. அது பூர்வமீமாஞ்சை யுத்தரமீமாஞ்சையென விருவகைப்படும். அவற்றுண் முன்னையது மீமாஞ்சையெனவும், வேதமெனவும், பின்னையது வேதாந்தமெனவும், வழங்கப்படும். அவ்வவ்வருணங்கட்கு நிலைக்குமுரிய தருமங்களை யுணர்த்துவது மிருதிநூல். புராண முதலிய நான்கும் வேதத்திற் குபாங்க மெனப்படும். எல்லா மனுட்டித்தற்குச் சாதனமான யாக்கையை நோயின்றி நிலைபெறச்செய்வது ஆயுள்வேதம். பகைவரா னலிவின்றி யுலகங்காத்தற்கு வேண்டப்படும் படைக்கலம் பயிறலை யுணர்த்துவது வில்வேதம். எல்லாக்கடவுளர்க்கு முவகைவரச்செய்யு மிசை முதலியவற்றை யுணர்விப்பது காந்தருவவேதம். இம்மைக்கு மறுமைக்கு மேதுவாகிய பொருள்களையீட்டு முபாய முணர்விப்பது அருத்தநூல். இவை நான்கு முபவேத மெனப்படு மென்றுணர்க.

## வைதிகசாத்திரம்.

இனி மீமாஞ்சை, நியாயம், வைசேடிகம், சாங்கியம், யோகம், வேதாந்தமென்னு மாறும் வைதிகசாத்திரமெனப்படும். இவை தரிசனமெனவும் பெயர் பெறும். இவற்றுள் இறுதிக்கண்ணின்ற வேதாந்தம உத்தரமீமாஞ்சை பிரமமீமாஞ்சை யெனவும் வழங்கப்படும். மீமாஞ்சைநூல் செய்தார் சைமினிமுனிவர். இது பாட்டம் பிரபாகரமென விரண்டாம். நியாயநூல் செய்தார் கௌதமமுனிவர். இவர் அக்கபாதரெனவும் பெயர் பெறுவர். வைசேடிகநூல் செய்தார் கணாதமுனிவர். இவை யிரண்டுந் தருக்கநூல்களாம். சாங்கியநூல் செய்தார் கபிலமுனிவர். யோகநூல் செய்தார் பதஞ்சலிமுனிவர். வேதாந்தநூல் செய்தார் வியாசமுனிவர். இது மாயாவாதம் பாற்கரியவாதம், கிரீடாப்பிரமவாதம், சத்தப்பிரமவாதமென நான்காம். இவரெல்லாம் வேதத்தைப் பொதுவகையான் மூலமாகக்கொண்டு அதனுட் சிலபொருளைச் சமுத்திரகலச நியாயம்பற்றி யாண்டாண் டெடுத்துக்கொண்டு அரனருளால் ஒவ்வோரதிகாரிகளின் பொருட்டு அவ ரறிவளவிற் கேற்பத் தொகுத்தும் விரித்து மிந்நூல்கள் செய்தாராகலின், இவை முதனூல் வழிநூல் சார்புநூலென்னு மூன்றனு ளொன்றற்கேலாதனவாய் வைதிகசாத்திரமென வேறாய் நிலைபெறறன. அற்றேல், முதல் வழி சார்புநூலென நிலைபெறுவன யாவையெனின்,— வேதாகமங்கள் பரமசிவனாற் செய்யப்பட்டு ஏனைநூல் கூறும் பொருளியல்புகளெல்லாந் தங்க ணடங்கக்கொண்டு வியாபகமாய் நிற்றலின் அவை முதனூலாம். முதல்வனாற் றரப்படு முதனூலை யொன்றாக வைத்தெண்ணாது இங்ஙன மிருவகைப்படுத் தெண்ணியதென்னையெனின்,— இதற்குச் சமா

தானம்: மூர்னூன் "மூன்றுவருணத்திற் குரிமையாதலு நான்குவருணத்திற் குரிமையாதலும் பற்றி, முறையே வேதாகமமென விருபகுதியாகவைத் தெண்ணப்பட்டது" என்பர் நீலகண்டவாசிரியர். "வேதநூல் சைவநூலென் றிரண்டேநூல்கள் வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்க ளாகிநூ லனுசியம லன்றருநூ லிரண்டு மாரணநூல் பொதுச்சைவ மருஞ்சிறப்பு நூலா - நீதியினு லுலகர்க்குஞ் சத்திநிபா தர்க்கு நிகழ்த்தியது நீண்மறையி னொழிபொருள் வேதாந்தத் - தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல் சைவம் பிறநூ றிகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்த மாகும்" எனவும், "உலகியல் வேதநூ லொழுக்க மென்பது - நிலவு மெய்ந்நெறி சிவநெறிய தென்பதாம்" எனவுங் கூறுபவாகலின், அங்ஙனந் நூலாருந்தகி முறைபற்றிக் கூறுதலின் இருபகுதிப்பட்டதெனவே யாம் கோடும்" என்பர் சிவஞானமாபாடியகாரர். இவ்விருசமாதானங்களுள் இட்டமாயது கொண்டமைக. இனி மிருதி புராணங் கலைகள் உபாகம முதலாயினவெல்லாம் வேதாகமப்பொருளை யுள்ளவா றுணர்ந்தார் அவற்றைப் பிறர்க்கினிது விளக்குதற்பொருட்டு நால்வகை யாப்பினு ளொன்றான் வழிப்படுத்துச் செய்த நூல்களாகலான், அவை வழிநூலெனப்படும். சிக்ஷை சற்பசூத்திர முதலிய வேதாங்கங்களுங் காருடந் தக்கிணமுதலிய வாகமாங்கங்களு முறையே யவ்விரண்டினையு முள்ளவாறுணர்தற்குச் சார்பாய்ப் புடைபட்டு நிகழ்தலின், அவை சார்புநூலெனப்படுமென் றறிந்துகொள்க.

மீமாஞ்சை முதலிய சாத்திரங்களாறும் அன்னவாயினும், அவற்றுண் மீமாஞ்சைநூல் வேதத்துள் விதித்த கருமத்தை யாராய்ச்சி செய்தற் குபகாரமாயும் எல்லா நூலார்க்கு முபகாரமாகு நியாயங்களெடுத்தோதுவதாயு நிலவுதலானும், வைசேடிக நையாயிகநூல்கள் எல்லா நூற்கு முபகாரமாகுந் தருக்கமுறை யெடுத்தோதுதலானும், சாங்கிய மூலப்பகுதியையும் புருடனையும் பகுத்துணரும் விவேகமுந் தத்துவ சற்காரியவாதமு மெடுத்தோதுதலானும், யோகம் எண்வகை யுறுப்பிற்றாகிய யோக முறை தெரித்தலானும், உத்தரமீமாஞ்சையெனப்படும் வேதாந்தம் பலதுறைப்பட்டுக் கிடக்கு முபநிடதவாக்கியங்களை அவ்வப் பொருட்பெற்றிக்கேற்ப வொருதுறைப்படுத்துப் பரமேசுரவுபாசனை கடைப்பிடித்துச் செய்ய விதித்தலானும், வேதாகமமுதலிய சாத்திரவாராய்ச்சிக்கு இன்றியமையாத கருவிகளாக வேண்டப்பட்டு நிலவுமென்க. இச்சாத்திரங்களாறுங் கூறும் பொருளு மவற்றுட் பிரயோசனபடுவனவும் பூர்வபக்கமாவனவும் ஆசிரியர் சிவஞானயோகிகள் சிவஞானமாபாடியத்து ளெடுத்து விளக்கினார்.

இனிப் பூர்வமீமாஞ்சைநூலார் சுருதி இலிங்கம் வாக்கியம் பிரகரணந் தானம் சமாக்கியை யென்னு மாறுமே வன்மை மென்மை பற்றிச் சொற்பொரு டுணிவிக்குங் கருவிகளென் றெடுத்தோதுவர்; உத்தரமீமாஞ்சை நூலார் அங்ஙனம் உபக்கிரமவுபசங்காரம் அப்பியாசம் அபூர்வதை பலம் அருத்தவாதம் உபபத்தி யெனனு மாறும் வன்மை மென்மை பற்றிச் சொற்பொரு டுணிவிக்குங் கருவியென் றெடுத்தோதுவர். அவையெல்லாந் தமிழ்வேத வேதாந்த சித்தாந்த நூல்களின் சொற்பொரு டுணிதற்கு மின்றியமையாத கருவிகளேயாம். அவற்றுள், சுருதியாவது: வேறொன்றனை யவாவாது தான் கருதிய பொருளைத் தானே தெரிவிப்பது. இலிங்கமாவது: ஆற்றலாற் பொருளை யுணர்த்துவது. வாக்கியமாவது: இங்ஙனஞ் சுருதியும் இலிங்கமு மன்றிச் சொற்றொடர் பற்றி யுணர வருவது. பிரகரணமாவது: "சோதிட்டோமம் வேட்க" என்றாற்போலும் விதிவாக்கியங்களாற் பொதுப்பட வுணர்ந்து சிறப்பா னறியப்படாத

ணார்ந்து கட்டறுத்து வீடு பெறும்" இவற்றானறிக. இவற்றுள் இயற்றமிழ் என்னும் இலக்கணந் தமிழ்ச் சுதந்திர நூலாம். அது முத்தமிழ் முதனூலான வகத்தியமாம். தொல்காப்பியம் பன்னிருபடலம் முதலியன அதன் வழிநூல்களாம். அவற்றின் வரலாறெல்லாம் இலக்கணமரபியலி லெடுத்தோதினும். மற்றுத் தருக்கம் வடநூலிற் கூறியவாறே தமிழின் மொழிபெயர்த்தியற்றப்பட்டு விளங்கும். அவை தருக்கசங்கிரகமும், அதனுரையான வன்னம்பட்டியமும், தருக்கபரிபாடையும், போல்வன. அவற்றுள், தருக்கசங்கிரகமும் அன்னம்பட்டியமுந் தமிழின் மொழிபெயர்த்தியற்றினார் ஆசிரியர் சிவஞானயோகிகள். தருக்கபரிபாடை தமிழின் மொழிபெயர்த் தியற்றினார் துறைமங்கலச் சிவப்பிரகாசமுனிவர். தருக்கபரிபாடை தருக்கசூடாமணியெனவும் வழங்கப்படும். இருவகைப்படுந் தருக்கத்துட் டருக்கசங்கிரகங் கணாதர் செய்த வைசேடிகநூலின் வழித்தாயது. தருக்கபரிபாடை கௌதமர் செய்த நியாயநூலின் வழித்தாயது. தருக்கசங்கிரகமு மன்னம்பட்டியமும் வடமொழியி லியற்றினார் அன்னம்பட்டர். தருக்கபரிபாடை வடமொழியி லியற்றினார் சிவாகேசவமிசிரர். தருக்கசங்கிரக மேழுபதார்த்தமுந் தருக்கபரிபாடை பதினாறு பதார்த்தமுங் கூறும். பதார்த்த மேழாவன: திரவியம், குணம், கருமம், சாமானியம், விசேடம், சமவாயம், அபாவமென்பன. பதார்த்தம் பதினாறுவன: பிரமாணம், பிரமேயம், சம்சயம், பிரயோசனம், திருட்டாந்தம், சித்தாந்தம், அவயவம், தருக்கம், நிர்ணயம், வாதம், சற்பம், விதண்டை, ஏத்துவாபாசம், சலம், சாதி, நிக்கிரகத்தான மென்பன.

## வேதாந்தசாத்திரம்.

தமிழ் வேதாந்தசாத்திரங்கண் வடமொழி உபநிடதங்களை மூலமாகக்கொண்டு தோன்றி நடப்பன. தமிழ் வேதாந்த சாத்திரங்கள்: கைவல்லியம், வேதாந்தசூடாமணி, வாசிட்டம், ஈசுரகீதை, பகவற்கீதை, பிரமகீதை, பிரபோதசந்திரோதய முதலியனவாம். வடமொழி யுபநிடதங்கட்குச் சுத்தாத்துவிதமாகவுஞ் சிவாத்துவிதமாகவுங் கேவலாத்துவிதமாகவும் விசிட்டாத்துவிதமாகவுந் துவைதமாகவு முரைகளுநூல்களுந் தத்தங் கொள்கைக்கேற்ப வடமொழி வல்ல வாசாரியர்கள் பல செய்திட்டார். அவருட் சுத்தாத்துவிதக் கொள்கைபற்றி வழிநூலுரை செய்தார் அரதத்தாசாரியர் முதலாயினோர். சிவாத்துவிதக் கொள்கைபற்றி நூலுரை செய்தார் நீலகண்டவாசிரியர் அப்பயதீக்கித யோகிகண் முதலாயினோர். கேவலாத்துவிதக் கொள்கைபற்றி வழிநூலுரை செய்தார் சங்கராசாரியர் வித்தியாரணிய முனிவர் முதலாயினோர். விசிட்டாத்துவிதக் கொள்கைபற்றி வழிநூலுரைசெய்தார் இராமானுசாசாரியர் வேதாந்த தேசிகர் தாதாசாரியர் முதலாயினோர். துவைதக்கொள்கைபற்றி வழிநூலுரை செய்தார் ஆனந்ததீர்த்தாசாரியர் முதலியோர்.

இவற்றுள், முற்கூறிய தமிழ் வேதாந்தநூல்கள் சங்கராசாரியரபிமதமான கேவலாத்துவித வேகான்மவாத நூலுவன. ஏகான்மவாதத் துட்பட்ட பிரம விவர்த்தன மாயாவாதமாவது-சச்சிதானந்தமாய் நித்தமாய் வியாபகமாய் நிற்பது பிரமம். பரமார்த்தத்தி லஃதொன்றே மெய்ப்பொருள். ஏனையவெல்லாம் பிரமத்தின் விவர்த்தனமா யிப்பியில் வெள்ளிபோல வவிச்சையினாற் காணப்படுவன வாகலிற் பொய். இங்ஙனந் தோன்று முலகத்திற்கு முதற்காரணமாகிய மாயை பிரமம்போலச் சத்துமன்றி முயற்கோடுபோல வசத்துமன்றி யனிருவசனமா யிருக்கும். அனிருவசனமென்பது - சொல்லொணாத தென்னும் பொருட்டு. இந்தமாயைக்கு வேறாகிய பிரமரூபமே .....

வேதாந்தஞானத்தா லறிவதே முத்தியென்பதாம். பாற்கரியமாவது - முற் கூறப்பட்ட பிரமமே சடமுஞ் சித்துமாகிய வுலகங்களாய்ப் பரிணமித்தது. அங்ஙனம் பரிணமித்து விகாரப்பட்டமையை யறியாமையாற் பந்தமாயிற்று. பரமார்த்தத்தி லொரு பொருளே. வேதாந்த ஞானத்தா லுடம்பிறந்து வேறாகிய வான்மரூபம் விளங்கும். அதுவே பரபிரமமென றறிந்து அதன்க ணிலையித்தலே முத்தியென்பதாம். சிரீ டாப்பிரமவாதமாவது - முற் கூறப்பட்ட பிரமமே நான். யானொருபடித்தன்றிப் பல வேறுவகைப்பட்ட விகாரப்பொருள்களோடு கூடிப் பலவாற்றால் விளையாடுகின்றேன். இவ்வாறறிவதே முத்தி யென்பதாம். சத்தப்பிரமமாவது - காரணமாகிய பிரம மிறு திக்காலத்திற் சத்தவடிவின்றா யிருக்கும். அஃதவிச்சையினாற் சடமுஞ் சித்துமாகிய வுலகங்களாய் விரியும். முடிவின்கட் சத்தமாத்திரையே யுள்ளதென் றிங்ஙன மறிவதே முத்தியென்பதாம். இங்ஙன நால்வேறு வகைப்பட்ட வேகான்மவாத நூல் செய்தார் வியாசமுனிவர்.

## கைவல்லியம்.

இது தாண்டவமூர்த்தியாராற் செய்யப்பட்டது. இது தத்துவவிளக்கப்படலம் சந்தேகந்தெளிதற்படலமென விரண்டு படலங்களுடைத்து.

## வேதாந்தசூடாமணி.

இது சங்கராசாரியர் வடமொழியிலியற்றிய விவேகசிந்தாமணியென்னு நூன் மொழிபெயர்ப்பு. இது மொழிபெயர்த்தார் துறைமங்கலச் சிவப்பிரகாசமுனிவர். இது சிறப்புப்பாயிரம் பொதுப்பாயிர முன்னர்த் தோற்றித் திருக்குவிவேகந் திருசியவிவேகமென்னு மிரண்டு விபாகங்களுடைத்தாய் நிலைபெறுவது. இதன்கட் டிருக்கென்பது அறிவுருவான பிரமம். திருசியமென்பது அப்பிரமவிவர்த்தன மாயாகாரியமா யறியப்படு மசேதனமா பிரவஞ்சம். இந்நூல் ஏகான்மவாத கேவலாத்துவித வேதாந்த பரிச்சேதப்பொருள் நன்குணர்த்துவது.

## வாசிட்டம்.

இது வைராக்கியப்பிரகரணம், முமுட்சுப்பிரகணம், உற்பத்திப்பிரகரணம், திருவாணப்பிரகரணமென் றிப்பிரகரணங்களாற் சீவகாருண்ணியம், பரவைராக்கியம், ஈசுரபத்தி, பிரமஞான மென்பவற்றிற் கிலக்கணங் கூறி யவ்வவற்றிற் கேற்றதுக்காட்டிலக்கியமாகக் கதைபல கூறி அவற்றினியல்பு விளக்குவது. இஃதியற்றினார் வீரை யாளவந்தார்.

## ஈசுரகீதை.

இது பரமேசுரன் சனற்குமாரன் முதலிய முனிவர்க்கணங்கட் கருளியது. இதன்கட் சாங்கியயோகம், பரபத்தி, விசுவரூபம், சிவசத்தி, தத்துவநிசம்விபூதி, பிரவஞ்சம், தத்துவதரிசனம், யோகம் என்பன வெடுத்தோதப்படும்.' இதனைத் தமிழின் மொழி பெயர்த்துப் பாடினார் தத்துவராய முனிவர்.

## பகவற்கீதை.

இது பகவானான கண்ணன் அருச்சுனற்குச் செவி யறிவுறுத்தியது. இது அருச்சுனன் சீவகாருண்ணிய நாடிப் போர் துறந்து சோகமுற்றது கண்டு கண்ணன் அவன் சோகநீங்கி யுய்வண்ண நாடிக் கருமயோக ஞானவரலாறும், பிரவஞ்ச குண விகார முதலியவற்றின் வரலாறு முரைத்ததைப் பொருளாகவுடையது. இதனைத் தமிழின் மொழிபெயர்த்துப் பாடினார் சேட்டர்.

சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ் சைவ
சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்க லுற்றும்."

ஈண்டுப் புறச்சமயத்தவரென்றது மூக்கூற்றுப் புறச்சமயத்தவரெனக் கொள்க. அவரெல்லாஞ் சித்தாந்தசைவத்தோ டொப்ப "ஏகனனேக னிருள்கரும மாயையிரண்" டென்னு மாறுபதார்த்தங்களுங் கொள்ளாமையின், அவ்வாறுவகைப் பதார்த்தங்களி னியல்பைக் கொளுத்தினுங் கொள்ளமாட்டா ரென்பார், "புறச்சமயத் தவர்க்கிருளா" யென்றூர். சங்கற்பநிராகரணத்திற் கூறப்படு மகச்சமயத்தவராகிய பாடாணவாத சைவர் முதலியோர் சித்தாந்தசைவத்தோடொப்ப ஏகன் முதலிய வாறு பதார்த்தங் கொண்டமையின், அவ்வாறு பதார்த்தங்கட்கும் பொதுவியல்பு சிறப்பியல்பு கூறு மாகமங்களின் ஞற்பரிய பிதுவேயென் றெடுத்துக்காட்டிச் சித்தாந்தசைவப் பொரு ளுண்மையைக் கொளுத்திற் கொள்ள வல்லுவரென்பார், "அகச்சமயத் தொளியா" யென்றூர். கொளுத்திற் கொள்ள வல்லுவரெனவே யகச்சமயத்தவருந் தாமே கொள்ளமாட்டாரென்பது கருத்தாகலிற "சிவாத்துவிதாந்தத்துக் - குலவினா ரளவளா வாக் கொள்கைய தாகி" யென்பதனோடு முரணுமை யறிக. சிவாத்துவிதமாவது - நிமித்தகாரண பரிணமவாதம். "சிவாத்துவி தாந்தத்துக - குலவின ரளவளாவாக் கொள்கைய தாகியென" விறுவா யெஞ்ஞு முறைறமைக்க ணின்ற சுத்தசைவரை யொழித் தொழிந்த சமயத்தாரை யெல்லாம் விலக்கவே, சுத்தசைவ ரிந்நூல் கேட்ட துணையானே தாறபரிய மினிதுணர்ந்து சித்தாந்தப்பொருள் கைக்கொள்வ ரென்பது பெறப்பட்டது. அத்துணை யணிமைய ராகலானன்றே சித்தாந்த சைவத்தைச் சார வைத்தா ரென்பது. இக்கருத் தறியாதார் "சிவாத் துவிதாந்தத்" தென்றமையிற் சிவாத்துவிதமாவது - இறுதிக்க ணெடுத் தோதப்படுஞ் சுத்த சைவம் போலு மென மயங்குப. நிமித்த காரணமாகிய முதல்வன் மாயையோடுங் கூடி முதற் காரண முமாய்ப் பரிணமிப்ப னென்பதே சிவாத்துவித சைவர் கொள்கை யென்க. இது சுத்த சைவர்க் கேலாமையுமறிக. இனித்தார்க்கிகர் முதலியோர் காட்சி முதலிய பிரமிதிக்குப் பொறி முதலியனவே பிரமாண மென்பர். பிரமாணம் பிரமேயப் பொருளாதல் செல்லாமையிற் பொறி முதலாயினவு மேனைய போலப் பிரமேயமா யளந் தறியப்படும் பொருளே யாகலின், அவற்றைப் பிரமாண மென்றல் பொருந் தாது; மற்றுச் சிவஞான முணர்த்த வுணர்வதாகிய வான்ம சிற்சத்தியே அவர் பிர மாண மெனப் புகலு மிந்திரிய முதலியவற்றையு மளந்தறியும் பிரமாணமாம். பொறி முதலியன வதற்கு வாயிலாதல் பற்றிப் பிரமாண மென்று பசரித்துக் கூறப்படுவ னவேயாமென்பது சைவ சித்தாந்த மென்பார், "புகலளவைக் களவாகி" யெ ன்றூர். சைவ சித்தாந்தத்தி னெய்துதற் கருமை கூறுவார் "பெருநூல் சொன்ன வறத்திறனல் விளைவதா" வென்றூர். எனவே, அஃதில்வழி விளையா தென்பதாம். "உடலுயிர் கண்ணருக்க னறி வொளிபோற் பிறிவரு மத்துவிதமா" மாறு மே லுரைத்தாம். அத்துவித மென்னுஞ் சொற்குப் பொருள் கூறுவார், "பிறிவருமத் துவித" மென் றுடம்பொடு புணர்த் தோதினர். இஃதேனையோர் கூறும் பொருள் போலன்றிச் சிறந்த தென்பார் "சிறப்பினதா" யென்றூர். வேதாந்தமுஞ் சித்தாந் தமும் வேறென்பாரை மறுத்துப் 'பலபொருள்படுஞ் சூத்திரத்தை யங்ஙனம் படாமைத் தெளித்துரைக்கும் பாடியம்போல வேதாந்தத்தைத் தெளித்துரைப்பதே சைவ சித்

தாந்த மென்பார், மகுடாகம முதலியவற்று ளோதியவாறே "வேதாந்தத் தெளிவாஞ் சைவ சித்தாந்தத்திற" னென்றார். ஈண்டு வேதாந்த மென்றது வேதத்தின் முடிபுகளாகிய வுபநிடதங்களை. வேதாந்த மெனப் பெயர் பெற்ற வேகான்மவாத நூலை யன்றெனவுணர்த்துதற்கு "வேதத் தலைதரு பொருளாய்" என விறுதியினுங் கூறினு ராகலின், அது கூறியது கூறலன்மை யுணர்க. திறம் - பொது வுண்மை யென்னும் வகை. இங்கு - இந்நூலின். முதனூல் வழிநூல்களிற் "பொதுவுண்மை" யென வகுத்துக் கொண் டோதினும் எடுத்தோதாமையால், அவ்வகை தெரி வரிதாகலான் அது தெரியுமாறு "பொது வுண்மை" யென் றெடுத்தோதி யந்நூல்களின் கருத்து ஈண்டுத் தெரியச் செய்து மென்பார், "சைவ சித்தாந்தத் திற னிங்குத் தெரிக்கலுற்றாம்" மென்றார். சைவ சித்தாந்த மென்றது - சுத்த சைவ முதலியவற்றிற் செல்லாமைப் பொருட்டு.

## சித்தாந்தசாத்திரநாற்பாதத்தெளிவு.

வேதத்திற் கூறுங் கருமகாண்டப் பொருட்கு இன்றியமையாது வேண்டப் பட் டெஞ்சி நின்றனவாய பொருள்களையும் வேதமுடிபாய வுபநிடதத்தின் சாரமாயுள்ள பொருள்களையும் வேறெடுத்துக்கொண்டு இனிது விளக்குதலின், சிவாகமஞ் சித்தாந்த சாத்திர மென்று வழங்கப்படும். இச்சித்தாந்த வாகமங்கள் சரியாபாதம், கிரியாபாதம், யோகபாதம், ஞானபாத மென, நான்கு பாதங்களுடையனவாம்.

இவற்றுள், சரியாபாதத்துட் பிராயச்சித்தவிதியும், பவித்திரவிதியும், சிவலிங்க விலக்கணமும், நந்தி முதலிய கணநாதரிலக்கணமும், செபமாலை யோகபட்டந் தண்டங் கமண்டல முதலியவற்றி னிலக்கணமும், அந்தியேட்டிவிதியும், சிரார்த்தவிதியும், கூறப்படும்.

கிரியாபாதத்துண் மந்திரங்களினது உத்தாரணஞ் சந்தியாவந்தனம் பூசை செபம் ஓமங்களும், சமயம் விசேட நிருவாணம் ஆசாரியாபிடேகங்களும், புத்தி முத்திகளுக் குபாயமான தீக்கையும், கூறப்படும்.

யோகபாதத்துண் முப்பத்தாறு தத்துவங்களும், தத்துவேசுரரும், ஆன்மாவும், பரமசிவனும், சத்தியும், சகத்திற்குக் காரணமான மாயை மாமாயைகளைக் காணும் வல்லமையும், அணிமாதி சித்திகளுண்டா முறைமையும், இயம நியமம் ஆசனம் பிராணாயாமம் பிரத்தியாகாரந் தாரணந் தியானஞ் சமாதிகளினுடைய முறைமையும், மூலதார முதலிய ஆதாரங்களின் முறையும், கூறப்படும்.

ஞானபாதத்துட் பரமசிவனுடைய சொரூபமும், விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என்னு மான்மாக்களின் சொரூபமும், ஆணவங் காமிய மாயேயம் வைந்தவந் திரோதானசத்தி என்னும் பாசங்களின் சொரூபமும், சத்தியின் சொரூபமும், சிவதத்துவமுதற் பிரகிருதி தத்துவம்வரை முப்பத்தாறு தத்துவங்களினது உற்பத்தியும், இவை யான்மாக்கள் போகம் புசிக்கைக்குக் கருவியாமுறையும், புவனங்கள் புவனேசுவரர் சொரூபங்களும், புவனங்களின் யோசனைப் பிரமாணங்களும், அதமப் பிரளய மத்திமப்பிரளயம் மகாப்பிரளயங்களின் சொரூபங்களும், அதமப் பிரளயங்களின் பின்னர்ச் சிருட்டியா முறைமையும், பாசுபதம் மாவிரதங் காபாலிக முத்[illegible]களின் சொரூபங்களும், கூறப்படும்.

இந்நாற்பாதப் பொருள்கள் சிவஞானமாபாடியத்துத் தெளித்தெடுத்துச் சுருக்கி யுரைக்கப்பட்டன. இனி வினை பசுநல்வினை சிவநல்வினையென விரண்டாம். பசு நல்வினை யுலகவினையும் வேதவினையுமென வேறிரண்டாம். சிவநல்வினை பொது வுஞ் சிறப்பு மென வேறிரண்டாம். உலகவினை தண்ணீர்ப்பந்தர் அன்னசாலை கூவல் குள முதலியன வமைத்தலாம். வேதவினை கட்புலனுன பசு பார்ப்பார் தாய் தந்தை முதலாயினுரை வழிபடுதலும், கட்புல னுகாத அரி யய னிந்திரன் முத லிய தேவர்களை வழிபடுதலுமாம். அற்றுயினும் வேள்வி முதலிய வைதிக வினைகள் தண்ணீர்ப்பந்தர் முதலிய உலகவினை போலன்றிச் சிவனை நோக்கி அவிப்பாகங் கொடுத்தலும் வழிபடுதலு முடைமையின், அவை சிவபுண்ணிய மாமென்றற் கிழுக் கென்னையெனின்,— ஆண்டுச் சிவபிரானுக்கு அவிப்பாகங் கொடுத்தலும் வழிபடுத லும் பசுக்களாகிய ஏனைக் கடவுளரோ டொப்ப வைத்துச் செய்தலே யன்றிப் பொது நீக்கிப் பசுபதி யென்னுங் கருத்தாற் செய்த லின்மையின், அவை யெல்லாஞ் செய்வோர் கருத்துவகையாற் பசுநல்வினையே யாம்; சிவநல்வினை யாகா வென்க. இனி வேள்வி முதலிய வைதிக வினைக்கண் சிவபுண்ணியமு மபுத்தி பூர்வமாய் நிகழ்தலின் அது புத்திபூர்வமாய் இனிச் செய்யக்கடவனவாகிய சிவபுண்ணியங்கட் கேதுவாதன் மாத்திரையிற் பயன் படுத லுடைத்தென்க. வேள்வி முதலியவுஞ் சிவ பிரானை நோக்கிப் பொது நீக்கிச் செய்யின், அஃது ஏனையபோலப் பசு புண்ணி ய மாதலின்றிப் பொதுச் சிவபுண்ணியமா மெனக் கொள்க. இஃ துலகவினைக் கண்ணு மொக்கும். இவ்வைதிக வினையான பொதுச் சிவபுண்ணியஞ் சிவாகம நல் வினையான பொதுச் சிவபுண்ணியம் போலச் சிறப்புச் சிவபுண்ணியத்திற் கங்கமாகிப் பயன் படுதலுடைத்தென்க.

பொதுச்சிவநல்வினையாவது சிவதீக்கை யென்னு மங்க மின்றி யவ்வாறு செய் வது. சிறப்புச் சிவநல்வினையாவது சிவதீக்கை யென்னு மங்க முடையரா யவ்வாறு செய்வது. இவ்விரண்டும் பத்திகாரணமாக வுண்மையாகச் செய்வதும் புகழ் முத லிய உலகப்பயனை நோக்கிச் செய்வதுமென வெவ்வே றிருவகைப்படும். இவற்றுள், சிறப்புச் சிவபுண்ணிய மிரண்டுஞ் சரியையுங் கிரியையும் யோகமும் அவற்று னிகழு ஞானமு மென ஒரோவொன்று நந்நான்காய் அந்நான்கினுள்ளுஞ் சரியையிற் சரியை கிரியை யோகம் ஞானம், கிரியையிற் சரியை கிரியை யோகம் ஞானம், யோகத்திற் சரியை கிரியை யோகம் ஞானம், ஞானத்திற் சரியை கிரியை யோகம் ஞானமென, ஒரோவொன்று நந்நான்காய் முப்பத்திரண்டு வகைப்பட்டு விரியால் இன்னும் பல திறப்படு மென்றுணர்க.

அவற்றுள், திருக்கோயி லலகிடன் மெழுகன் முதலியன சரியையிற் சரியை ஐயைந்து மூர்த்திகள் விநாயகக் கடவுண் முதலிய ஆவரண மூர்த்திகளில் ஒரு மூ த்தியைப் பூசித்தல் சரியையிற் கிரியை. நெஞ்சின்கண் உருத்திரக்கடவுளை த் தியானஞ் செய்தல் சரியையில் யோகம். அத்தியான பாவனையின் உறைப்பினால் ஒ னுபவ வுணர்வு நிகழ்தல் சரியையின் ஞானம். சிவ பூசைக்கு வேண்டப்படு மு கரணங்க ளெல்லாஞ் செய்து கோடல் கிரியையிற் சரியை. சிவாகமத்தில் விதித் வாறே யைவகைச் சுத்தி முன்னுகச் சிவலிங்க வடிவிற் செய்யும் பூசனை கிரியை யிற் கிரியை. அகத்தே பூசை ஓமம் தியான மூன்றற்கு மூவிடம் வகுத்துக்கொண்

செய்யப்படு மந்தரியாகங் கிரியையில் யோகம். அவ்வந்தரியாக வுறைப்பின்கணிகழு மோரநுபவ வுணர்வு கிரியையின் ஞானம். இயம நியம மாசனம் பிராணாயாம மென்னு நான்கும் யோகத்திற் சரியை. பிரத்தியாகாரமுந் தாரணையும் யோகத்திற் கிரியை. தியானம் யோகத்தில் யோகம். சமாதி யோகத்தின் ஞானம். இந்த யோகஞ் சகல நிட்களங்களைப்பற்றி நின்று செய்யுஞ் சாலம்ப யோகமு நிட்களத்தைப்பற்றி நின்று செய்யு நிராலம்ப யோகமு மென் றிருவகைப்படும். இனிக் கேட்டன் முதலிய நான்கனுள், கேட்டன் ஞானத்திற் சரியை. சிந்தித்தன் ஞானத்திற் கிரியை. தெளிதன் ஞானத்தில் யோகம். நிட்டைகூடுதன் ஞானத்தின் ஞானமென் றுணர்ந்து கொள்க.

இனிப் புகழ்முதலிய வுலகப்பயனை நோக்கிச் செய்யு முபாயச்சரியையிற் சரியைமுதல் உபாயஞானத்தின் ஞானமீறாகிய பதினாறுவகையினின்றும் பலவேறுவகைப்பட விரியுஞ் சிவபுண்ணியங்களுக்கெல்லாம் பயன்— அவ்வவற்றிற் கேற்பக் காலாக்கினியுருத்திரர் முதற் குணதத்துவ மத்தகத்திற் ஸ்ரீகண்டருத்திரர் புவனத்தின்கீழுள்ள வுருத்திரரீறான அவ்வப்புவனபதிக ளுலகத்திற் சாலோக முதலியவற்றைப் பெறுதலாம். பத்திகாரணமாகச் செய்யப்படுமுண்மைச் சரியையிற் சரியைமுத லுண்மையோகத்தின் ஞானமீறாகிய பன்னிருவகையினின்றும் பலவேறுவகைப்பட்டு விரியுஞ் சிவபுண்ணியங்களுக்கெல்லாம் பயன்—அவ்வவற்றிற் கேற்பச் ஸ்ரீகண்டபுவனமுதற் சுத்தவித்தைக்குக் கீழுள்ள அவ்வப்புவனபதிகளுடைய சிவலோகத்துச் சாலோகமுதலிய வபரமுத்திகளைப் பெறுதலாம். உண்மைஞானத்திற் சரியைமுதலிய மூவகையினின்றும் பலவேறுவகைப்படுஞ் சிவபுண்ணியங்களுக் கெல்லாம்பயன்—அவ்வவற்றிற் கேற்பச் சுத்தவித்தைமுதலிய அதிகாரதத்துவ போகதத்துவங்களில் வைகும் மந்திரர் மந்திரமகேசர் முதலியோர் புவனத்துச் சாலோகமுதலிய அபரமுத்தியைப் பெறுதலாம். இனிப் பலவேறுவகைப்பட விரியுஞானத்தின் ஞானங்களுண் முடிவாகிய ஞானத்திற்குப் பரமுத்தியே பயனென வுணர்ந்துகொள்க.

சரியை முதலியவற்றி னியல்பாவன யாவையெனின், கூறுவாம். அகண்டாகார நித்தவியாபக சச்சிதானந்தப் பிழம்பாகிய சிவபிரான் சிவசத்திநிபாதமுடைய உயிர்கள் சோபான முறையினால் உணர்ந்து உய்யும்பொருட்டுத் தூலமாகவுஞ் சூக்குமமாகவும் அதிசூக்குமமாகவும் வடிவங்கொண்டருளி, அவ்வடிவங்களில் வழிபடு முறைகளையும், வேதாகமங்களில் வகுத்தருளிச்செய்தான். இம்மூவகை வடிவங்களுள், சகளமாகிய தூலவடிவத்தைமாத்திரம் பொருளென்றுணர்ந்து காயத்தொழின் மாத்திரையால் ஆகமத்தின் விதிப்படி வழிபடுவது சரியை. அது அடிப்பட்டு வரவர நிகழும் பக்குவவிசேடத்தா னுண்ணுணர் வுடையராய்ச் சகள நிட்களமாகிய சூக்குமவடிவமே பொருள்; சகளவடிவம் அதனை வழிபடுதற் கிடமாகிய திருமேனியாமென் றிவ்வாறறிந்து புறத்தொழிலானு மகத்தொழிலானும் விதித்தவாறே வழிபடுவது கிரியை. அது அடிப்பட்டு வரவர நிகழும் பக்குவ விசேடத்தால் அந்நுட்ப வுணர் வுடையராய் நிட்களமாகிய அதிசூக்கும வடிவமே பொருள்; சகளமுஞ் சகளநிட்களமு மதனை வழிபடுதற்கிடமாகிய திருமேனி யென் றிவ்வா றறிந்து அகத்தொழின் மாத்திரையால் ஆண்டைக்கு விதித்தவாறே வழிபடுவது யோகம். சரியை கிரியை யோக மூன்றும் இவ்வாறு முறையே அடிப்பட்டு வரவர நிகழ்ந்து, பக்குவ முதிர்ச்சியினாலே உள்ளபடி யுணர்வு விளங்கி, அகண்டாகார நித்தவியாபக சச்சிதானந்தப் பிழம்பே

சொரூபம்; மற்றைச் சகளமுதலிய மூன்றுந் தூலாருந்ததி நியாயமாக அதனை யுணர் தற் பொருட்டும் வழிபடுதற் பொருட்டுங் கொண்ட திருமேனிகளா மென் றிவ்வா றறிந்து, காயத்தொழின் மனத்தொழி லிரண்டையுங் கைவிட்டுக், கேட்டல் சிந்தித்த றெளித னிட்டை யென்னு மறிவுத் தொழின் மாத்திரையால் வழிபடுவது ஞானம்.

ஞானிகண் ஞானமுதலிய நால்வகைத் தொழிலுஞ் செய்தற் குரியர். யோகி கள் யோகமுதலிய மூவகைத் தொழிலுஞ் செய்தற் குரியர். கிரியையாளர் கிரியை சரியை யென்னு மிருவகைத் தொழிலுஞ் செய்தற் குரியர். சரியையாளர் சரியைத் தொழி லொன்றுமே செய்தற் குரியர்.

ஏகதேசமாகக் குறித்தலின்றிச் சிவலிங்கமுதலிய தாவரத்திருமேனியில் அன் பினால் வழிபாடு செய்யு ஞானிகட்குப் பரமசிவன் கன்றை நினைந்த புனிற்றாவின் முலைப்பால் போலக் கருணை மிகுதியினால் அவ்வன்பே தானா யெப்போதும் ஆண்டு வெளிப்பட்டு நின் றருள்செய்வன். சிவலிங்க முதலிய திருமேனியிற் சாத்திய மந்தி ரங்களால் வழிபாடு செய்யும் யோகிகட்குப் பரமசிவன் கறந்தவழித் தோன்றும் பால் போல வம்மந்திரங்களா லவர் விரும்பிய வடிவா யத்திருமேனிகளி லப்பொழு தப் பொழுது தோன்றி நின் றருள்செய்வன். அருவப்பொருளாகிய பரமசிவன் ஈசானுதி மந்திரங்களாற் சிவலிங்க முதலிய திருவுருக் கோலினானெனக் கருதி மந்திரநியாசத்தா லாண்டு வழிபடுங் கிரியையாளர்க்குப் பரமசிவ னம்மந்திரங்களால் விரும்பியவடிவா யத் திருமேனிகளி லப்போதப்போது தோன்றிநின் றருள்செய்வன். பகுத்துணர்த லின் றிச் சிவலிங்கமுதலிய திருமேனியே சிவமெனக் கண்டு வழிபடுஞ் சரியையாளர்க்குப் பரமசிவ னாண்டு வெளிப்படாது நின் றருள்செய்வன்.

இனி யறிந் லொப்புமையாற் சரியை முதலிய நான்கு ஞானமேயாம். ஆயி னும், அரும்பு மலர் காய் கனியாதல்போலச் சோபான முறையாகிய தம்முள் வேறு பாட்டான் முறையே யொன்றுக் கொன்று அதிகமாய் நான்கா மெண்ணு முறைக்க ணின்ற ஞானமே முடிவாகிய ஞானமாம். ஆகவே யிந்நான்கினு மறிவு நுணுகி வர வர அறியாமையாகிய வாணவமலமு மம்முறையே தேய்ந்து தேய்ந்து வரும். இனிச் சரியைக்குப் பயன் சாலோகமாம். கிரியைக்குப் பயன் சாமீபமாம். யோகத்துக்குப் பயன் சாரூபமாம். இவை மூன்று மபரமுத்திகளாம். ஞானத்துக்குப் பயன் மலநீக்க முஞ் சிவசாயுச்சியமுமாம். இதுவே முடிவாகிய பரமுத்தியாம். இம்முத்திநிலையி லான்மாத் துவிதபாவனை நீங்கி யறிவுமாத்திரையாய்ச் சிவத்தோடு கூடிச் சிவமாய் அகம்புற மெங்கும் வியாபித்துத் தற்றருமதருமியாய் முழுதும் வியாபகமாய் நின் றறி வதாகிய முற்றுணர்வுடையனாய்ச் சுத்தாத்துவித கேவலமாய் நின்று முடிவுகாணில் லாப் பேரின்பத்தைப் பெறுவன். பரவீடெனப்படுஞ் சுத்தாத்துவித சாயுச்சிய வியல் பிதுவேயாம். இனி அபரமுத்திகளுண் முதலதான சாலோகமாவது அவ்வப் புவன பதி யுலகங்களி லெய்தி யொருவர் மனையிற் பணிசெய்யு மகத்தொண்டர்க்குளதாகிய வுரிமைபோல அவ்வவுலகத்துள் யாண்டுந் தடையின்றி யியங்கி யவ்வப்போகங்களை நுகர்ந்து வாழ்வது. சாமீபமாவது அவ்வளவினன்றி மைந்தர்க்குளதாகிய வுரிமை போல அவ்வப்புவனபதிகளுக் கணுக்கராய் வைகி யவ்வப்போக விசேடங்களை நுகர ந்து வாழ்வது. சாரூபமாவது அவ்வளவினன்றித் தோழர்க்குரிய வுரிமைபோல அவ் வப்புவனபதிகளோ டொத்த வடிவமு மொத்த வணிகலனு மொத்த போகநுகர்ச்சியுப்

பெற்று வாழ்வது. இனி யிம்மூன்று முறிமை விசேடம்பற்றி முறையே தொண்டர் மைந்தர் தோழரென்பார் சிடலப்பை யொத்தலால், இவற்றை யடைவிக்கு நெறியாகிய சரியை தாசமார்க்கமென்றும், கிரியை புத்திரமார்க்கமென்றும், யோகஞ் சகமார்க்க மென்றும், பெயர் பெற்றிடும்.

இனிச் சரியை கிரியா யோகமென்னு மூன்று பாதங்களை யுணர்த்துஞ் சைவ நூல்கள்: ஞானாமிர்தஞ் சிவதருமோத்தரஞ் சைவசமயநெறி நித்தியகருமநெறிகுறள் பரமதிமிரபானு தத்துவப்பிரகாச முதலாயின.

## ஞானாமிர்தம்.

இது நிறைந்தநாயனார் சந்தானத்துப் பரமானந்தமுனிவ ரருள்பெற்ற வாகீச ரருளிச்செய்தது. இது "வெண்டிரைக் கருங்கட லேழும விண்டொட" என்னுஞ் செய்யுண் முதலாக, "ஆருக்கூறிய வத்துவாமற" றென்பதீறாக எழுபதனைந்து அக வற்பாக்களுடையது. இந்நூல் பதிமுதலிய பதார்த்தங்களிலக்கணந் தருக்கமுறையிற் றடத்தமாக வெடுத் தினிது விளக்குவது. பாநெறியிற் சங்கச்செய்யுண் முறையா னடப்பது. இது பெரும்பான்மையுஞ் சோமசம்புசிவாசாரியர் ஞானசிவாசாரிய ரியற் றிய பத்ததிகளின் மொழிபெயர்ப்பாய நிலவினும், அப்பத்ததிகளுக்கு முதலான சைவா கமங்களின் கருத்துக்களையுந் தழுவிநடப்பது. ஆசிரியர் சிவஞானயோகிகள் சிவஞான போதப் பொதுவதிகாரத்திற் கியற்றிய சிவஞானமாபாடியவுரையி லிந்நூற் செயயுட் பகுதிகளை யாண்டாண்டு மேற்கோளாக வெடுத்துக் காட்டியருளினார்.

## சிவதருமோத்தரம்.

இஃதியற்றினார் மறைஞானசம்பந்தர். இவர் வடமொழிச் சிவதருமோத்தராக மத்தை அப்பெயரானே மொழிபெயர்த்துத் தென்மொழியா னியற்றியருளினார். சிவ தருமோத்தரம் அறுமுகக்கடவுள் அகத்தியமுனிவற் கருளிசெய்ததோ ருபாகமம. இது பரமதருமாதியியல், சிவஞானதானவியல், ஐஂவகையாகவியல், பலவிசிட்டகாரண வியல், சிவதருமவியல், பாவவியல், சுவர்க்கநரகவியல, சனனமரணவியல், சுவர்கக நரகசேடவியல், சிவஞானயோகவியல், பரிகாரவியல், கோபுரவியலெனப் பன்னிரண டியல்க ளுடைத்து.

## சைவசமயநெறி.

இஃதியற்றினார் மறைஞானசம்பந்தர். இது ஆசாரியரிலககண மாணக்கரிலக்க ணம் பொதுவிலக்கணமென மூன்று விபாகங்களுடைத்து. இம்மூன்றுஞ் சிவாகமச் சரியை கிரியா யோக பாதப்பொருள் தொகுததெடுத்து விளக்கு நூல்கள. இவை யிம் மூன்றுமே யன்றி ஞானபாதத் தடத்தப்பொருள் சிலவு மெடுததோதும்.

## சித்தாந்தசைவ ஞானசாத்திரம்.

இனிச் சைவாகமங்களிலுள்ள ஞானபாதப்பொரு ளுணர்த்துந் திராவிடசித்தா ந்த ஞானசாத்திரங்க டிருவுந்திமுதற் சங்கற்பநிராகரண மிறுதியாக வரும் பதினான்கு மாம். "உந்தி களிறு வுயர்போதஞ் சித்தியார் - பிந்திருபா வுண்மை பிரகாசம் - வந்த வருட் - பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு - வுண்மைநெறி சங்கற்ப முற்று" என்னும் வெண்பாவினால் அப்பதினான்கின் பெயரு முறையு மறிந்துகொள்க.

## திருவுந்தி.

இது திருவியலூர் உய்யவந்ததேவநாயனா ரருளிச்செய்தது. பதிமுதலிய முப்பொருள்களின் சொருபவியல்பு தொகுத்தெடுத்துணர்த்துவது,

## திருக்களிற்றுப்படி.

இஃதியற்றினார் திருக்கடவூ ருய்யவந்ததேவநாயனார். இவர் மேற்கூறிய உய்யவந்ததேவநாயனார் மாணாக்கர். இந்நூல், திருவுந்தியின் கருத்தினிது விளக்க வெழுந்து அதற்கு வழிநூலாய் நிலவுவது. இந்நூலாசிரியர், இந்நூலின் றெய்வத்தன்மை விளக்கவேண்டி, இந்நூலைத் திருவம்பலத்தின்கண்ணதான திருக்களிற்றுப்படியி னேற்றி யிறைஞ்ச, அத்திருக்களிற்றுக்கை நிமிர்ந் திதனைவாங்கி நடராசர் திருவடியிற் சேர்த்த லின், திருக்களிற்றுப்படியென் றிதற்குத் திருநாமஞ்செய்பினா ரென்க.

## சிவஞானபோதம்.

சைவாகமங்களினுளவாகிய நாற்பாதங்களுள் வைத்து ஞானபாதத்தோதிய பொருளினை யாராயு மாராய்ச்சி யிந்நூலின்க ணெடுத்துக்கொள்ளப்பட்டது. இவ்வாராய்ச்சிக்குப் பயன் யாதோவெனவும், இது கேட்டற்குரியா ரியாவரெனவும், இதனா னுதலப் படும்பொரு ளியாதெனவும், இதனைப் பயப்பிக்குங் கருவியா யிதற்குமுன் னொருதலையா னுணர்தற்பால தியாதெனவும், இதனை வழங்குதற்கிட்ட பெயரியாதெனவும், இஃதியாண்டு வழங்குவதெனவும், இதன் முதனூலியாதெனவும், இந்நூல் செய்தா ரியாவரெனவும், பலவாற்றா னாசங்கை நிகழுமன்றே; அவ்வாசங்கை நீங்கி மனவெழுச்சி சேறற்பொருட் டிந்நூன்முகத் துரைக்கப்படுவதாகிய

### சிறப்புப்பாயிரம்:

மலர்தலை யுலகின் மாயிரு டுமியப்
பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போ லீண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண் ணிருடீர்ந்
தருந்துயர்க் குரம்பையி னான்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
வுயர்சிவ ஞான போத முரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணைச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே" எனவரும்.

உயர் சிவஞானபோதமென்றது ஏனை மூன்று பாதத்தை யாராயு நூல்கட்கு மேற்பட்ட சிவஞானபோதமென்றவாறு. எனவே, அந்நூல்க ளுணர்ந்தபின்னர் இந்நூல் கேட்கற்பாற்றென்பது பெற்றாம். பெறவே, முன்னர்த் தீக்கையுற்றுச் சிவாகமங்களை யோதி யதன்பின் ஏனை மூன்றுபாதங்களை யாராயு நூன்முறையே கேட்டவ்வாறொழுகி மனந்தூயராய் நித்தியா நித்திய வுணர்வு தோன்றிப் பிறவிக்கஞ்சி வீடுபேற்றினவா மிக்குண்டாயவழி, அவர்க் கிந்நூ லுணர்த்துகவென்பது போந்ததெனக்கொள்க.

இப்பாயிரப்பொரு ளானிறுதியில் "எந்தை சனற்குமரன் " என்னும் வெண்பாவாற் பெறப்படுதலின், ஈண்டுங் கூறுதல் கூறியது கூறலாம் பிறவெனின்,—ஆகாது; "எந்தைசனற் குமரன்" என்பதனாற் பெறப்பட்டதனையே மாணாக்கர்க்கு நூன்முகத் துணர்த்துதற்பொருட்டு ஈண்டுத் தந்துரைத்ததாகலா னென்பது. மிருகேந்திரத்திறுதியிற் கூறும் வரலாற்றினை நாராயணகண்டவாசிரியர் நூன்முகத்துத் தந்துரைத்ததா மிக்கருத்தேபற்றி யென்க.

இந்நூ னந்திபெருமான் பெறுதற்கு வரலாறென்னையெனின்,— கூறுதும். 'மாச ங்கார முடிவின்கண் உலகங்களை மீளப் படைத்தற்பொருட்டுப் பரமான்மாவாகிய பரமசிவத்தினுடைய பராசத்தி குடிலையை நோக்கியவழி, வேதாகமங்கள் குடிலையினின்று நாதவடிவாயும், அதன்பின் விந்துவடிவாயும், அதன்பின் னக்கரவடிவாயு முறையே தோன்றின். பின் னவற்றைச் சொற்றொடர்ப்படுத்துச் செய்யுளாக்கிப் பிறர்க் கருளிச் செய்தற்பொருட்டுப், பரமசிவன் ஈசானமுதலிய பஞ்சப்பிரம மனுக்களாகிய சத்திகளே திருமுடிமுதலிய வவயவங்களாகச் சகளநிட்களத் திருமேனிகொண்டருளிச், சதாசிவ மூர்த்தியாய் நின்று, தற்புருட முதலிய நான்கு திருமுகங்களான் வேதங்களைத் தோற்றுவித்து, வேதங்களை யனந்ததேவர் வழியானே பிரமனுக்கருளிச்செய்து, சிவா கமங்களைப் பிரதிசங்கிதை முறையானே பிரணவர் முதலிய பதின்மரு மகாருத்திரர் முதலிய பதினெண்மருமாகிய விருபத்தெண் மருக்குஞ் சிவபேத முருத்திரபேத மெனப் பகுத் தொரோவொன் றொவ்வொருவருக் கருளிச்செய்து, பின்பு மகவுகமுறையானே அவ்விருபத்தெட்டினையும் வித்தியேச ரெண்மரின் முதல்வராகிய வனந்ததேவர்க் கருளிச்செய்தான். அவற்றை யனந்த தேவர் நூற்றுப்பதினெட் டுருத்திரரின் முதல்வராகிய சீகண்டருத்திரருக் கருளிச்செய்தார். அவற்றைச் சீகண்டருத்திரர் கணங்கட்குந் தேவர்க்கு முனிவர்க்கு மளித்தற் பொருட்டு முதற்க ணந்தி பெருமானுக் கருளிச்செய்தார். அங்ஙன மாகமங்களெல்லாங் கேட்டருளிய நந்திபெருமான் சீகண்ட முதல்வரை வணங்கி நின்று, சிவாகமந்தோறுஞ் சரியை முதலிய நாற்பாதங்களுஞ் சிறுபான்மை வேறு வேறாகக் கூறப்பட்டன. அவற்றுள் உண்மையாவ திது வென்றருளிச் செய்ய வேண்டு மென்றிரந்து விண்ணப்பஞ்செய்து வினாயவழிச், சீகண்டருத்திரமுதல்வர் கருணை கூர்ந்து "நன்றேவினாயினாய்; அனந்த தேவரெமக்கருளிச் செய்தவாறே கூறுகின்றோம்; கேட்பாயாக" என்றருளிக், கற்பந்தோறும் படைப்பு வேறுபாடுங் கேட்போர் கருத்து வேறுபாடும் பற்றி அவற்றிற் கியையச் சரியை முதலிய மூன்றுபாதங்களு மாகமங்களில் வெவ்வேறாகக் கூறப்பட்டன. ஆகலான், அவற்றுள் எவ்வாகமத்தின் வழி யார் தீக்கை பெற்றார், அவ்வாகமத்தின்வழி யவரொழுகற்பாலர். இனி ஞான பாதமாவது பொருட்டன்மை யுணர்த்துவதாகலின், அது பலதிறப்படுதல் பொருந்தாமையின், அவையெல்லாந் தூலாருந்ததி முறைபற்றிக் கூறப்பட்டன வன்றி மாறுகோ ளல்லவென்பது வகுத்துணர்த்துதற்பொருட்டு இரவுரவாகமத்துட் பன்னிரு சூத்திரத் தாற் கூறப்பட்டது சிவஞானபோத மென்ப தோர்படலம். அது கேட்டார்க் கெல்லா வாகமப்பொருள்களு மாறுகோளின்றி யினிது விளங்குமெனக் கூறி, அச்சிவஞான போதத்தை நந்திபெருமானுக் கருளிச்செய்தார். நந்திபெருமானும் அது கேட்டதனை யானே எல்லா வையமு நீங்கி மெய்ப்பொரு டெளிந்து பின்னர்த் தம் மாணாக்கர் பல் லோருள்ளுஞ் சிறந்த சனற்குமார முனிகட் கருளிச்செய்தார். அவர் தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த சத்தியஞானதரிசனிகளுக் கருளிச்செய்தார். அவர் தம்மாணா க்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த பரஞ்சோதிமாமுனிகட் கருளிச்செய்தார். அவர் தமிழ் நாடு செய்த தவத்தானே திருவெண்ணெய்நல்லூரி லவதரித்தருளி மெய்யுணர்வின் முற்றுப்பேறுடையரா யெழுந்தருளியிருந்த மெய்கண்டதேவர்பால் வந்து, சிவஞான போதத்தை நல்கி, "இதனை யீண்டுள்ளோ ருணர்ந்துய்தற்பொருட்டு மொழிபெயர்த் துச் செய்து பொழிப்புரைக்க" வென்றருளிப், பொழிப்புரைக்குமாறுஞ் சத்தியஞா னதரிசனிகள்பாற் றாங் கேட்டவாறே வகுத்தருளிச்செய்து நீங்க, அவரு மவ்வாறே மொழிபெயர்த்துப் பொழிப்புரையுஞ் செய்தருளித், தம்முடைய மாணாக்கர் பல்லோ

னுளொருது சுறாத வருணாதிருரவர்க் கவித்தருளினர். இந்நூல் வந்த வரலாறறிக கொள்க. பொழிப்புரையை வடநூலார் வார்த்திகமென்பர். பொழிப்பெனினும் கண்டிகையெனினு மொக்கும். பொழிப்புரை பிண்டப்பொழிப்பெனவுங் கண்ணழித் துரைக்கும் பொழிப்புரையெனவு மிருவகைப்படும். அவற்றுள் இது கண்ணழித்துக் கடாவிடைகளா லுரைக்கும் பொழிப்புரையென வுணர்ந்து கொள்க. இனி யாசிரியர் வார்த்திகப்பொழிப்பு உரைச்செய்யுளானும் பாச்செய்யுளானுஞ் செய்யப்படுமென்னும் வடமொழி மதம்பற்றி யீண்டுக் கருத்துரையு மேற்கோளு மேதுவு முரைச்செய்யுளா னுரைத்தார்; உதாரணம் பாச்செய்யுளா னுரைத்தார்.

"இச்சிவஞானபோதத்து முன்னூறு சூத்திரங்களானே பெத்தத்தி னின்ற நிலைபற்றி இலக்கணங் கூறுதலின், அவை பொதுவியல்பெனவும், பின்னூறு சூத்திரங்களானே முத்தியி னின்ற நிலைபற்றி யிலக்கணங் கூறுதலின், அவை சிறப்பியல் பெனவு மாம். இனிப் பொதுவியல் புணர்த்துநூல்கள் பொது வெனவுஞ் சிறப்பியல் புணர்த்துநூல்கள் சிறப்பெனவுங் கூறப்படும். சிறப்பியல்பு சகசமாயுள்ளதாகலின், உண்மையெனவும் படும். பொதுவியல்பு அளவை முகத்தானு மிலக்கணமுகத்தானுங் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்த லென்னு மிருதிறத்தா னுணரப்படும். சிறப்பியல்பு சாதகமுகத்தானும் பயன்முகத்தானுங் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்த றெளித னிட்டை யென்னு நான்கு திறத்தா னுணரப்படும். கேட்டல் சிந்தித்த றெளித னிட்டைகளை வடநூலார் முறையே சிரவண மனன நிதித்தியாசன நிட்டை யென்ப. "பல்பொருட்குப் பொதுவாகிய விலக்கணம் பொதுவியல்பு" என்றும் "ஒரு பொருட்கே யுரிய விலக்கணஞ் சிறப்பியல்பு" என்றும், அளவைநூலாற் கூறப்படும் பொதுவியல்பு சிறப்பியல்பு வேறு; "தடத்தலக்கணஞ் சொரூபலக்கண" மென்னும் வடசொற்குப் பரியாயப் பெயராய் ஈண்டுக் கூறப்படும் பொதுவியல்பு சிறப்பியல்பு வேறெனத் தெரிந்துணர்ந்துகொள்க. இவ்விரு வேறு வகைக்குஞ் சொல்லொருமை மாத்திரையே பற்றி மயங்கற்க.

சிவஞானபோதம் இங்ஙனம் பொதுவியல்புஞ் சிறப்பியல்பு மொருங் குணர்த்தலின், முழு முதனூலாம். இனிச் சிவஞானசித்தி சிவப்பிரகாச மென்பன முறையே யிவ்விலக்கணம் பெற்ற வழிநூலும் புடைநூலுமாம். மொழிபெயர்த்துக் கூறு நூல்களின் ஞானாமிர்த முதலிய பெரும்பாலும் பொதுவியல்பு மாத்திரையே கூறுதலிற் பொதுநூலாம். திருவுந்தி திருக்களிற்றுப்படி முதலியன சிறப்பியல்பு மாத்திரையே கூறுதலின் உண்மை நூலாமென்பது. வடமொழியினும் பவுட்கர மிருகேந்திர முதலிய சிவாகமங்கள் பெத்தத்தி னின்ற நிலைபற்றி யிலக்கணங் கூறுதலின் அவை பொது நூலாம். சருவஞானோத்தர முதலிய சிவாகமங்கண் முத்தியி னின்ற நிலைபற்றி யிலக்கணங் கூறுதலின், அவை யுண்மை நூலாம். உபநிடதங்களினுஞ் சாபால முதலிய வுபநிடத மூன்றாந் தோன்றி யொருங்கு முறைமையுந் தோற்றியொருக்குதற் றொரு கருத்தா வுண்டென்னு மாத்திரையும் போல்வன வுணர்த்துதலிற் பொதுவெனப்படும். சாந்தோக்கிய முதலிய வுபநிடதங்கள் இருமையுங் கூறுதலிற் பொதுவுஞ் சிறப்புமாம். அதர்வசிகை அதர்வசிரஞ் சுவேதாச்சுவதர முதலிய வுபநிடதங்கள் முத்திநிலையைபற்றிச் சாதகமும் பயனுங் கூறுதலின், உண்மையெனப்படும். அதர்வசிகை முதலிய வுபநிடதங்களிற் கூறும் பொருள்களுஞ் சிவாகம பொருளை நோக்கும்வழிச் சூத்திரமும் பாடியமும் போலத் தலாருந்தி முறைய

இக்கருத்துப் பற்றியே வேதம் பொது நூலென்றும் ஆகமஞ் சிறப்பு நூலென்றுந் திருமந்திர முதலியவற்றிற் கூறப்பட்டனவென் றுணர்க. "வேதாந்தத் தெளிவாஞ் சைவ சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்கலுற்றாம்" என்றதூஉம் இம்முறை தெரிந்து கோடற்கென்க. இவ்வுண்மை யுணர்ந்து பொருள் கோடலே யுரைகோண் முறையாம். இனி யிவ்வுண்மை யுணர்ந்து பொருள் கொள்ளமாட்டாதார் உபநிடதங்க ளொன்றோ டொன்று முரணு மெனவும், உபநிடதமுஞ் சிவாகமமுந் தம்முண் முரணுமெனவும், சிவாகமங்கடாமு மொன்றோடொன்று முரணு மெனவு மயங்கி, ஒன்றன் பொருளைப் பற்றி யேனையவற்றை யிகழ்வார். அற்றேல், அஃதங்ஙனமாக, வேதாந்த சித்தாந்த நூல்கள் அங்ஙன மிரு வேறுவகைப்படுத்துக் கூறவேண்டியதென்னை? சிறப்பியல் பொன்றே கூறவமையுமாலோவெனின்,— அமையாது, ஆன்மாக்கள் அறிவானந் தத்தமக் குரிய சோபான முறையி னறிந்து வருந் தன்மைக்கேற்பத் தூலாருந்ததி நியாயமாக வுணர்த்தவேண்டு மாகலி னென்க. "புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும் புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச் சிரம-வறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்க ளடித்துஞ் - சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேதச் சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றால் சைவத் - திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்" என்றதூஉ மிவ்வியல்பு நோக்கியே யென்க.

இங்ஙன மிவ்விருவகை யியல்பும் வேறுவேறு கூறு மாகமங்களின் பொருளொருமை யுணரமாட்டாது, ஒரோவொன்றே பற்றி யையமியவாது முரற்றல் திறத்தான் வேறுபட்டுத் தம்முண் மயங்குவார்க்கு அங்ஙன மயங்காது அவற்றின் பொருளொருமை யுணர்த்துதற் கெழுந்தது இச்சிவஞான போதமென்றறிக. இஃதறியாதார் எல்லா வாகமப்பொருளையும் பன்னிரு சூத்திரத்தாற் றொகுத்து விளக்குதற் கெழுந்தது இந்நூலென்றுரைப்ப. மிருகேந்திரத்தின் முதற்கண்ணதாகிய ஒரு சூத்திரத்தானே எல்லாவாகமப்பொருளுந் தொகுத்தெடுத்து விளக்கப்பட்டனவென்பது ஆண்டே யறியக் கிடத்தலானும், மற்று மங்ஙனந் தொகுத்துக் கூறு மாகமங்கள் பலவுள வாதலானும், அதுபற்றி யிதன்கட் போந்த விசேட மின்மையானும், "நாடிக கண்டி டயர் வற வளித்த சிவஞானபோத" மென்பதற்குத் தாற்பரிய மதுவாகாமையானும், அவ ருரைப்பன வெல்லாம் போலியென்றொழிக. "சிவஞானபோத" மென்பதூஉம் இக்காரணத்தாற் பெற்ற பெயர். அஃதெவ்வாறென்னில்,—"உயர்ஞான மிரண்டா மாறு மலமகல வகலாத மன்னுபோதத் திருவருளான் றெரன்றவினைத் தெளிய வோதுஞ் சிவாகம மென் றுலகறியச் செப்புநூலே" என்ப வாகலின், பரஞான மபரஞான மெனவிரண்டுஞ் சிவஞானமெனப்படும், அவற்றுட் பரஞானத்தைப் போதிப்ப தெல்லா வாகமக்கட்கும் பொதுவாகலின், ஈண்டுச் சிவஞான மென்றது— அவ்வபரஞானமாகிய சிவஞானமேயாம். போதித்தல்- அவற்றி னிச்சயப்பொருளி துவென வுணர்த்துதலாம். ஆகவே, சைவாகமங்களின் பொருணிச்சய முணர்த்துவது சிவஞானபோத மெனக் காரணக் குறிப்பாயிற்றென் றுணர்க. இப்பொருளை வடமொழிச் சிவஞானபோதத்துப் பன்னிரண்டாஞ் சூத்திரத்திற் பிறபாஷியத்திற் கூறியவாறுபற்றி யுரைக்கப்பட்டது. சிவஞானமெனப் பொதுப்படக் கூறினுந் தலைமைபற்றி ஞானபாதமே கொள்ளப்படும். ஞானபாதத்திற்குத் தலைமை "கிரியை யென மருவுமவை யாவு ஞானங் கிடைத்தற்கு நிமித்தம்" என்பதனாலறிக. அற்றேல், ஏனை மூன்று பாதப் பொருள்களை

யாராயு நூல்க ளியாவை யெனின்,— அவை சோமசம்புசிவாசாரியர் செய்த கிரியா காண்டக் கிரமாவலி முதலியனவாமென்க. அற்றேல், ஞானபாதப்பொரு ளாராய்ச்சி நூலும் பிற்காலத் தாசிரியன்மாரே கூற வமையும்; ஆகமத்துக் கூறவேண்டாம் பிறவெனின்,— ஆசிரியன்மார் அவை யனுட்டிக்கு முறை யாராயப் புகுந்தாரன்றி அவற்றிற்குப் பொருளொருமை கூறப் புகுந்தாரல்லர்; "அவை சிறுபான்மை தம்முள் வேறுபாடுடைய" என்றும், "யார்யார் எவ்வாகமத்தின் முறையே தீக்கை பெற்றார் அவரவர் அவ்வாகமத்தின் முறையே யனுட்டிக்க" என்றும், "எக்கோயில் எவ்வாகமத்தின் முறை பிரதிட்டை செய்யப்பட்டது அக்கோயிலுக் கவ்வாகமத்தின் முறையே பூசை விழா முதலிய நடாத்துக" என்றும், "மாறிச் செய்யிற் குற்றம்" என்றும், ஆகமங்களே கூறுதலின், அவற்றிற்குப் பொரு ளொருமை காட்ட லாகாமையின். சற்பயோகத்தானும், ஆன்மாக்கள் கருத்து வேறுபாட்டானும், அவ்வவ்வற்றிற் கேற்பச் சிறுபான்மை தமமுள் வேறுபடக் கூறுதல் பொருந்த முடைத் தென்பதுபற்றி யவற்றைக் கூறு மாகமங்கள் சிறுபான்மை யங்ஙனம் வேறுபட நிகழ்ந்தன. இனி ஞானபாதமாவது பொருட்டன்மை யுணர்த்துவதாகலின், ஆண்டு வேறுபடுதல் பொருந்தாதாயினும், ஆன்மாக்களின் மலபரிபாக தாரதம்மியத்திற் கேற்பத் தூலாருந்ததி முறைமைத்தாக வுணர்த்துதல் மரபென்பதுபற்றி, அங்ஙனங் கூறு மாகமங்களை நோக்குவோர், அவை யொன்றோடொன்று முரணுவனபோலக் கருதி மயங்குவர். அங்ஙன மயங்காமைப் பொருட்டு ஞானபாதப் பொருள்களை யெல்லாம் பொது வுண்மை யென விருவகைப்படுத்து ஆராய்ச்சி செய்வதொரு தலையா னுணர்த்த வேண்டுதலின், அஃதேதனையோரா லாகாமையின், வேண்டுமென்க. அங்ஙன முரணுவன போலத் தோன்றுவன யாவையெனின்,—சுவாயம்புவ முதலியவற்றிற் பகர்ந்த மேழெனறலும், பவுட்கர முதலியவற்றி லாறென்றலும், பராக்கியை முதலியவற்றி லைந்தெனறலும், சருவஞானோத்தர முதலியவற்றி னான்கென்றலும், இரவுரவ மிருகேந்திர முதலியவற்றின் மூன்றெனறலும், போல்வனவா மென்க. அவை யெல்லா மூன்றென்றதனு ளடங்குதலின, முப்பொரு ளென்பதே எல்லாவாகமங்கட்குந் துணிபெனச் சாட்டுதல் போல்வன பொரு ளொருமை கூறுதலா மெனபது."

## மங்கலவாழ்த்து.

"காமிகமுதலிய சைவாகமங்களுள் ஞானபாதப்பொருளி னிகலறுத் தவற்றின் பொருளுண்மை போதித்தற்கு இரவுரவாகமத்தி னெழுந்த சிவஞானபோத நூலினைத், தமிழுலக முய்தற்பொருட்டு மொழிபெயர்த்துச் செய்து பொழிப்புரைப்பா னெடுத்துக்கொண்ட வாசிரியர் சாக்கிரதத்தே யதீதத்தைப் புரியுந் தமக்கிடையூறு சிறிது மணுகாமை யறிந்தாராயினும் ஆன்றோ ராசாரம் பாதுகாத்தற்பொருட்டும், மாணாக்கர்க்கு வுறுதற்பொருட்டும், முடிக்க ணிடையூறு நீக்குதற்குரிய கட்வுளை வாழ்த்துவதாகி மங்கலவாழ்த்துக் கூறுகின்றார். வாழ்த்தும் வணக்கமும் பொருளியை புணர்த்த. மென மங்கலவாழ்த்து மூவகைப்படும். இது பொருளியல் புரைத்ததெனக் கொள்க.

> "கல்லா னிழன்மலை - வில்லா ரருளிய
> பொல்லா ரிணைமலர்-நல்லார் புனைவரே"

நந்திபெருமானுக்கு இந்நூ லறிவுறுத்தருளிய முதலாசிரியரென்ப துணர்த்துதற் கல்லா னிழலென விடங் கூறினார். ஆண்டெழுந்தருளியிருந்து சிவாகமப்பொரு

னொன்றோடொன்று முரணுவனவாக மலைந்து விரவிய நந்திபெருமானுக் கிரங்கலான் மலைவு தீர்த்தருளினாரென்பார் மலைவில்லாரென்றார். இல்லார் இல்லாதச் செய்தாரெ னப் பண்படியிற் பிறந்த வினைப்பெயர். இனி மலைவில்லாரெனபது மேருவை வில் லாக வுடையாரெனக் கொண்டு, கல்லாலின் நிழலி னெழுந்தருளி யிருந்த வீடுபேறும மலையை வில்லாக வளைத்துப் பகைவரை வென்று போகமு மளித்தருளினாரெனினு மமையும். எனவே யைந்தொழிற்கும் வினைமுதலெனறவாறாயிற்று. அருளியவென் பது செய்யியவென்னுமுவாய்பாட்டு வினையெச்சம்; "உண்ணிய புக்கு" னென்றாற்போல. அது புனைவரென்னும் பிறவினைமுதல்வினைகொண்டு முடிந்தது. அருளுதல் புனைந் தமைபற்றிக் கல்லாலின்நிழலில் வீற்றிருந்து மலைவு தீர்த்தருளிய ஆசிரியர் கருணை மீக்கூர் தல். அருளிய பொலலாரெனப் பெயரெச்ச முடிபாக வைத்துரைத்தலு மொன்று. பொல்லார் பொல்லாரென பரிஇயிற்று; சுயம்புமூர்த்தி யென்றவாறாம. இணைமலா பண்புத்தொகை நிலைக்களத்துப்பிறந்த வன்மொழித்தொகையாய்த் திருவடியை யுண ர்த்திற்று. இணையென்பதனைத் திருவடிக்கடையாக்கி யிருபெயரொட்டாகுபெயரென் றலு மொன்று. இவற்றியல்பெல்லாஞ் சூத்திரவிருத்தியி னுரைத்தாம்; ஆண்டுக் காண்க. புனைவரென்பதற்கேற்பத் திருவடியை மலராக வுருவகஞ்செய்தாரென்றலு மொன்று. நல்லார் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து முதிர்ந்தோர். புனைதல் தாடலை போலடங்கி நிற்றல். ஏகார மீற்றசை. தேற்றமெனினு மமையும். இப்பாட்டு வஞ்சித் துறை. இது கல்லென்பது முதலேயென்ப திறுவாய்ப் பன்னிருசொற்களாற் கூறவே, இந்நூல் பன்னிருசூத்திரத்தாற் செய்யப்பட்டதெனவும், அவற்றுள் மும்மூன்று சொற்க ளொவ்வோரடியாக வைத்து நான்கடியாகக் கூறவே, இந்நூலும் அவற்றுள் மும்மூன்று சூத்திர மொவ்வோரியலாக வைத்து நான்கியலாற் செய்யப்பட்டதென வும், அவற்றுள் முன்னீரடியு மொரு வினைமுடிபும் பின்னீரடியும் பிறிதோர் வினை முடிபுமாக விருவகைப்படுத்துச் செய்யவே, முன்னாறு சூத்திர மோரதிகாரமும் பின் னாறு சூத்திரம் வேறோ ரதிகாரமுமாக விருது லிரண்டதிகாரத்தாற் செய்யப்பட்ட தெனவும், குறிப்பா னுணர்த்தியவாறு காண்க. இரண்டாமோத்தின் முதற்சூத்திரம "இதவுமது" வென முதலோத்தி னிறுதிச் சூத்திரத்தோடு மாட்டெறியப்படுவ தெனப துணர்த்துதற்கு மலையென்பதனை யீரடியினுஞ் சாரவைத்தார். கல்லாலின்நிழலென முத லடியினிடங் கூறவே முதலோத்துப் பிரமாணங் கூறுவதெனபதூஉம், இரண்டாமடி யில் மலைவில்லா ரருளியவெனச் செயலைக் கூறவே இரண்டாமோத்திலக்கணங் கூறு வதெனபதூஉம், மூன்றாமடியிற் பொல்லா ரிணைமலரெனத் திருவடி கூறவே மூன்றா மோத்துச் சாதகங் கூறுவதென்பதூஉம், நாலாமடியி னல்லார் புனைவரே யெனப் பேறு கூறவே நாலாமோத்துப் பயன்கூறுவதென்பதூஉம், குறிப்பாற் பெறப்படும். பிறவு மிவ்வாறோர்ந்துணர்க. இங்ஙன நூனுதல் பொருளெல்லாங் குறிப்பா னனைத்த தட க்கிநிற்றன் மங்கலவாழ்த்திலக்கணமென வுணர்க. இவ்வாறு நால்வகைப்படுத்தோதிய நூ நூலென்பது "ஈண்டுளவும் பொருளியல்பும் வேண்டுஞ் செய்தி முறைமைகளும் பெத்த மொடு முத்தியெல்லாம்" என வழிநூலாசிரியர் வகுத்தோதியவாற்றானுங்கண்டுகொள்க.

## அவையடக்கம்.

தமமை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வா
ரெம்மை புடைமை யெமையிகழார் — தம்மை
யுணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

'இவ்வளவையடக்கத்தானே அவ்விறைவனு லிபம்பப்படி நூலுணர்ந்தாராதுயர்வும்
வேனைச் சமயநூலுணர்ந்தா ரிழிவும் உணர்த்தப்பட்டன. எனைத்துணைமை யுணர்ந்த
தலைமையுடைய தன்னுணர்வார் என்றது, அத்துவித சித்தாந்த சைவரை. தம்மை
யுணரா ரென்றது அகம், அகப்புறம், புறம், புறப்புறமென்னு நால்வேறு வகைப பரசம
யத்தாரை. அவருட் சிலர் தம்மிற் புணராமையாவது:—பிறவிக் குருடர் பலர்
குழீஇக் கொண்டு வேழங் காண்டல் விருப்பான் அது நின்றுழிச் சென்று, கையினு
லொவ்வோ ருறுப்பினைத் தைவந்து வேழமாவது முறம்போல்வ தென்றும், உரல்
போல்வ தென்றும், உலக்கைபோல்வ தென்றும், மலைபோல்வ தென்றும், தம்முண்
மாறுகொண் டொருவரை யொருவர் மறுத்துக் கலாம் விளைத்தல்போலச, சித்தாந்த
சைவநெறி நின்று ஆசான் திருவருள் பெறாதார் தத்த முணர்விற் கேற்பச் சமய
நூல்களி னுவ்வொன்றினை யாராய்ந்தவற்றிற் கூறு மேகதேசப பொருள்களைப்பற்றி
யொருவரை யொருவர் மறுத்துத் தம்முண் மாறுகொண்டு கலாம் விளைத்தல். அங்ஙனங்
கலாயுகக்னைமுழிக் கண்ணுடையா னொருவன் றோன்றி, இவர் செவிமுதலிய வொவ்
வோ ருறுப்புக்களைப்பற்றிக் கூறிக் கலாம் விளைக்கின்றா ரெனவும் வேழந் தனியல்பு
வேறெனவுந் தெரிந்துணர்ந்து, அவர்களை யுணர்ந்த வழியே, கொடிறும் பேதையும்
போலத் தாம் கொண்டதே பற்றி யவ்வியூர சமழு மொருவனுக்கு வைத திழித்துக்
கூறி மாறு கொண்டிடலே யன்றிப் பொருளெனக் கொள்ளமாட்டார். அதுபற்றி
யவன் வெகுளாது இவ ரியல்பிது வென நகைப்பாடி யொழிந்துவிடும். அதுபோல
வொவ்வொரு சமயநூல்பற்றி யங்ஙனம் பிணங்குவாரை யவையெல்லா மொவ்வோ
ரேகதேச வியைபுபற்றிக் கூறினவாதலான் அவைபற்றிப் பிணக்குறத வெனவும் பொரு
ட்டன்மை வேறெனவும் யாம் இந்நூலா னுணர்த்தப் புகின, அவ ரதனைக சொன்ன
மாட்டாது பயிற்சி வயத்தாற் றாங்கொண்டதேபற்றி யெம்மையுந் தம்முளொருவ
ராக வைத்திகழ்ந் துரைப்பாராகலின, அவ்வழி யவர் வெள்ளறி வது வென றொழி
வதே யன்றி யதனைச் சொல்லா மென்பார் கேளாம்புறனென்றார். கேட்டல பொரு
ளாக் கோடல. "அது வூறுகேளாது" என்பதனானும் "கேளாரும் வேட்ப மொழிதல்"
எனபதனானு மறிக. புறன் புறச்சமயம்பற்றி யிகழ்ந் துரைக்கு மொழியும் புறங்
கூறு மொழியு மென்ப திரட்டுற மொழிதலாற் கொள்க. புறங்கூறு மொழியா
வது புறசசமயிக ளல்லாத பாடாணவாதசைவர் முதலியோர் முன்னன்றிப் புறத்தே
யிகழ்ந்து கூறுமொழி."

மலராதலையுலகிற் புறவிருளினீக்கிப பொருள்களைக் கண்ணுக்குக் காட்டுதற்குப்
பன்னிருவகைத்தாய ஞாயிறுபோல அகவி மூலமல விருளினீக்கிச் சிவபரம்பொ
ருளை யான்மாவிற்குக் காட்டி யனுபூதியி னிலைபெறுவித்தற்குப பன்னிருசூத்திர
ஞானஞாயிறு யெழுந்த திம்முதனூலெனக. முழுமுதறபொருளாயப் பரமுதற்றலை
பரமசிவன திருவாய்மொழியாய ஆரிய வேதோபநிடத சாரமனைத்து மொருங்கு திர
ண்டநூலும், காமிகமுதலிய சைவாகம ஞானபாத சாரமனைத்து மொருங்கு திரண்ட
நூலும், தமிழ்வேத சாரமனைத்து மொருங்கு திரண்டநூலுமாகி, இறை யுயிர் மல
மென்னு முப்பொருளின தடத்த சொரூப வியல்பெல்லாம் ஐய விபரீதமகற்றி யங்கை
நெல்லிக்கனிபோல விளக்குதலிற் றனை தனக்கு ஒப்பாய் நிற்பது இச்சிவஞானபோ
தமுதனூல். அது "வேதம்பசு வதன்பால் மெய்யாகம நால்வ - ரோதுந் தமிழ்வே
முன்றுபொய் - போதமிகு - நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்

## சிவஞானசித்தி.

இந்தச் சிவஞானபோத முதனூற்பொருள் பிற்காலத்தார்க்கு இனிது விளங்குமாறு விரித்தல் யாப்பாற் சகலாகமபண்டிதரென்னுங் காரணப்பெயருடைய அருணந்திசிவாசாரியர் இயற்றிய வழிநூல். இவ்வருணந்தி சிவாசாரியர் மெய்கண்ட சிவாசாரியர் முதன் மாணாக்கர்; இது மேலுமுரைத்தாம்.

சிவஞானசித்தி சிவாகமார்த்தங்களுக்கெல்லா முரையாணியாய் நிலைபெறுவது. "சிவத்துக்கு மேற் றெய்வமில்லை; அதுபோலச் சிவஞானசித்திக்குமேற் சாத்திர மில்லை" எனவும், "பாரவிரித்த நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே - யோர் விருத்தப் பாதி போதும்" எனவும், ஆன்றோரெடுத்துப் போற்றுவராயின், இதன்பெருமை முடிய வெடுத்துரைத்தல் யார்க்கு மரிதென்க. இது பரபக்கஞ் சுபக்கமென விருவகைப்படும். அவற்றுள், பரபக்கத்தில் உலகாயதன், சௌத்திராந்திகன், யோகாசாரன், மாத்தியமிகன், வைபாடிகன், நிகண்டவாதி, ஆசீவகன், பட்டாசாரியன், பிரபாகரன், சத்தப்பிரமவாதி, மாயாவாதி, பாற்கரியன், நிரீச்சுரசாங்கியன், பாஞ்சராத்திரி யென்னும் பரசமயத்தோர் மதங்களும், அவற்றின் மறுப்புக்களும், கூறப்படும். இவருள் உலகாயதன் சார்வாகன். சௌத்திராந்திகன், யோகாசாரன், மாத்தியமிகன், வைபாடிக னென்னு நால்வரும், புத்தநூலோர். நிகண்டவாதி ஆசீவகனென்னு மிருவரும் அருகநூலோர்; இவரெல்லாம வேதபாகியமான புறப்புறச்சமயத்தோர். பட்டாசாரியன் பிரபாகரனென்னு மிருவரு மீமாஞ்சைநூலோர். சத்தப்பிரமவாதி மாயாவாதி பாற்கரியனென்னு மூவரும் ஏகான்மவாதம் போதிக்கும் வியாசநூலோர். நிரீச்சுர சாங்கியன் கபிலநூலோன். பாஞ்சராத்திரி வாசுதேவநூலோன். இவரெல்லாம் வைதிகத்துட்பட்ட சமயத்தோர்.

இனி இதன் சுபக்கத்துக் குரைகண்டார் மறைஞானசம்பந்ததேசிகர், சிவாக்கிரயோகிகள், ஞானப்பிரகாசமுனிவர், ஆசிரியர் சிவஞானயோகிகள், நிரம்பவழகிய தேசிகர், சுப்பிரமணியதேசிகர் முதலியோர். ஸ்வபக்கம் - சுபக்கமென்றாயிற்று.

மறைஞானதேசிகருரைமுதற் சுப்பிரமணியதேசிகருரை யீறாயுள்ளனவெல்லா மூலத்திற்கேற்பச் சித்தாந்தசைவப்பொருள் போதிப்பன வாம். ஞானப்பிரகாசமுனிவருரை மூலத்தோடு மாறுபடப் பொருள்கொண்டு சிவசமவாதம் போதிப்பதாம். ஞானப்பிரகாசமுனிவருரை யிங்ஙன மூலத்திற் கேலாதவாறு சிவசமவாதம் போதித்தல்கண்ட ஆசிரியர் சிவஞானயோகிகள் சிவசமவாதவுரைமறுப்பென வதற்கோர் நியாயகண்டன மியற்றியிட்டார். அக்கண்டன வரலாறு சிவசமவாதவுரை மறுப்பின் வரலாற்றின் விளக்கியிட்டாம்; கடைப்பிடிக்க. ஆசிரியர் சிவஞானயோகிகளியற்றிய சிவஞான சித்திப்பொழிப்புரை முதனூற்சூத்திர வதிகரணக்கூறுபாடு முறையாகத் தெரித்து மூலத்தின் மெய்ப்பொருள் விளக்கி, ஏனையுரைகளை யளக்கும் அளவையாய் நிற்பது சிவஞானசித்தியுரைகளு ளிஃதொன்றே மிக வரிது ணர்தற்பாலது. சுப்பிரமணிய தேசிகர் மெய்கண்டசந்ததிக்கோர் பீடமான திருவாவடுதுறை நமச்சிவாயதேசிகர் பின்வந்த ஞானாசாரியர். இக்குரவர் தம்மிற்சிறிய ஞானயோகியாய் விளங்கிய சிவஞானயோகிகள் பொழிப்புரையின் கருத்து இனிது புலப்படுமாறு அவ்வுரைத் [illegible]ங்களைத் தழுவிச் சிவஞானசித்திக்குப் பதவுரை யியற்றினார்.

## இருபாவிருபது.

இந்நூல் அருணந்திசிவாசாரியார் தமக்குச் சிவஞானபோத வுபதேசஞ் செய்தருளி மலமகற்றி யிட்டை மேவுவித்தருளிய மெய்கண்டதேவர் திருவருள்வன்மையால் ஐயங் கேட்டுய்ய வருளிச்செய்தது. இஃது வெண்பா அகவல் என இருதிறத்தால் பப்பத்தாய மெய்ப்பொருள் விரித்தலின், "இருபாவிருபது" எனத் திருநாமம் பெற்றது.

## உண்மைவிளக்கம்.

இந்நூல் மெய்கண்டசிவாசாரியார் மாணாக்கருளொருவரான திருவதிகை மனவாசகங்கடந்தார் திருவாய்மலர்ந்தருளியது. இது ஆசிரியரை முன்னிலைப்படுத்திச் சித்தாந்தநூல் கூறுந் தத்துவரூபாதிகளின் திறஞ் செப்புவது.

## சிவப்பிரகாசம்.

இது மெய்கண்டசிவாசாரியார் முதன்மாணாக்கரான வாசிரியர் சகலாகமபண்டிதர்பாற் சிவஞானபோதஞ் சிவஞானசித்தி தேர்ந்து சிவானுபவ நிட்டையுற்ற மறைஞானசம்பந்தசிவாசாரியருபதேசத்தாற் சிவஞானபோதஞ் சிவஞானசித்தி கைவரப்பெற்ற கொற்றவன்குடி உமாபதிசிவாசாரியார், முதனூலான சிவஞானபோதம் வழிநூலான சிவஞானசித்தியென்னு நூல்களிரண்டின்பொருளினிது விளங்குமாறு அவ்விரண்டிற்கும் புடையாக வெடுத் தருளிச்செய்தலின், அவற்றின் புடைநூலாய்த், தன்னையோதியுணர்ந்த பக்குவரறிவிற் சிவம் பிரகாசிக்கச்செய்தலிற் சிவப்பிரகாசமெனும் பெயரத்தாய், நிலவுஞ் சித்தாந்த ஞானநூல். உமாபதிசிவாசாரியார் தில்லைவாழந்தணர். "அடியார்க்கெளியன் சிற்றம்பலவன் கொற்றங் - குடியார்க் கெழுதியகைச் சீட்டுப் - படியின்மிசைப் பெற்றான் சாம்பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து - முத்தி கொடுக்க முறை" யெனவம்பலத்தெம்பெருமான் விடுத்த திருமுகங்கொண்டு, திருவருளை வியந்து தொழுது, பெற்றான்சாம்பானுக்கு முத்திகொடுத்தருளிய வித்தக ஞானாசாரியார். வடமொழியிற் பௌட்கராகமவிருத்தி சதரத்நாவலி முதலியவும், தென்மொழியிற் றிருவருட்பயன் முதலிய சித்தாந்தசாத்திரங்களும், திருவாய்மலர்ந்தருளிய திருவருட்செல்வர். இன்னுமிவர் ஞானானுபூதி யற்புத வரலாறுகள் பலவுள.

## திருவருட்பயன்.

இது கருவிருட்புந்தம் நீங்குதலாகிய திருவருட்பயனை மேவ வுமாபதிசிவாசாரியார் கடைப்பிடித்தியற்றிய சித்தாந்த ஞானநூல். இது பதிமுதுநிலை, உயிரவைநிலை, இருண்மலநிலை, அருளதுநிலை, அருளுருநிலை, அறியுநெறி, உயிர்விளக்கம், இன்புறுநிலை, ஐந்தெழுத்தருணிலை, அணைந்தோர்தன்மை யென அதிகாரங்கள் பத்துடைத்தாய, [illegible];

## வினாவெண்பா.

இது உமாபதிசிவாசாரியார் தம் ஞானாசாரியரான மறைஞானசம்பந்தசிவாசாரியரை முன்னிறீஇ வினாவுரையாற் [illegible] திருவருணேசங் [illegible] செய்தருளியதோர் சித்தாந்த ஞானநூல்.

## போற்றிப்பஃறொடை.

முத்தன்றுணையால் உயிர்க்கு நிகழு முறைமையினைப் - பழுதின்றித் [illegible] தெளிந்துய்ய உமாபதிசிவாசாரியார் போற்றிப்பஃறொடையிற் [illegible] யருளியதோர் சித்தாந்த ஞானநூல்.

## கொடிக்கவி.

இது மாயாமல விருளி ரேயாது குளிக்கு மன்னுயிரருள்கண்டு முன்னவன் சொரூபந் தன்னியொன்றாகிச் சொல்லொணவின்ப வருள்வாருதி திளைக்குமாட்சி அஞ்செழுத்தினோர்பெற வெடுத்து நின்மல வென்றிக்கொடியாய் விளங்கக் கொற்ற வன்குடி உமாபதிசிவாசாரியர் நாட்டியருளிய சித்தாந்த ஞானநூல்.

## நெஞ்சுவிடுதூது.

இது மருட்பந்த மூறுத்து மாயோபாதியும், மாண்பின் முப்புறச்சமய வுபாதியும் போகச், செப்புதற்கரிய திருவருளாளனை திருக்கடந்தை மறைஞானசம்பந்த தேசிகன் வெம்பந்தம் போக்கும் விரைமலரடிநீழற் றிருவோலக்கங் கூடி, எந்தாய்! தையல் வருந்தத் தீராய்; செங்கமலப் பூந்திருத்தா டாராயெனப் பலகாற் றாழ்ந்திறைஞ்சி, அவன் பூங்கொன்றை வாங்குதியென்று, நெஞ்சைத் தூதுவிடுத்தலைப் பொருளாகக் கொண்டு, உமாபதிசிவாசாரியர் செய்தருளிய சித்தாந்த ஞானநூல்.

## உண்மைநெறிவிளக்கம்.

இது சத்திநிபாதத்துத்தமர் தத்துவரூபந் தத்துவதரிசனந் தத்துவசுத்தி, ஆன்மரூப மான்மதரிசன மான்மசுத்தி, சிவரூபஞ் சிவதரிசனஞ் சிவயோகஞ் சிவபோக மென்னுந் தசகாரியமு நாடிக் கண்டு மயர்வற்றுச் சிவானுபூதி கூடுமாறு, உமாபதி சிவாசாரிய ரருளிச்செய்த சித்தாந்த ஞானநூல்.

## சங்கற்பநிராகரணம்.

இந்நூல் செய்த காலங் களன் காரணமுதலியன: "பெருங்கட லுதவுங் கருங்கடு வாங்கிக் - கந்தரத் தமைத்த வந்தமில் கடவுள் - பாலரை யுணர்த்து மேலவர் போலக் - கேட்போ ரளவைக் கோட்படு பொருளா - லருளிய கலைக ளலகில வாலவை - பலபல சமயப் பான்மைத் தன்றே - யஃதா லர்நூற் றன்மை யுன்னிய - மாந்த ரிதுவே பொருளென் றதனிலை - யறைதலின் வேற்றோர் பனுவ லேற்றோர்க்- கிசையா மாறுபாடு கூறுவ ரதனாற் - புறச்சம யங்கள் சிறப்பில வாகி - யருளின் மாந்தரை வெருளுற மயக்கி - யலகைத் தேரி னிலையிற் றீரு - மீங்கிவை நிற்க நீங்காச் சமய - மூவிரு தகுதி மேவி யதாமு - மொன்றோ டொன்று சென்றுறு நிலையி - லாறு மாறு வீறுடைத் திவற்று - ளெவ்வ மில்லாச் சைவநற் சமயத் - தலகி லாகம நிலவுத லுளவவை - கனக மிரணியங் காஞ்சன மீழந்-தனநிதி யாடகந் தமனிய மென்றிப் - பலபெயர் பயப்பதோர் பொருளே போலப் - பதிபசு பாச விதிமுறை கிளக்கும் - வாய்ந்த நூல்க ளாய்ந்தன ராகி - யாசாருசி வீசிய சமத்துட - னேழஞ் சிருநூ றெடுத்த வாயிரம் - வாழுநற் சகன மருவா நிற்பப் - பொற்பொது மலிந்த வற்புத ஞனி - யாரும் விழவீற் பொற்றே ராலயத் - தேரு வெண்மர் நிரையி லிருப்ப - மயங்கு வாத மாயா வாதி - முயங்கிட வொருதலை முதவெதிர் மணிசேர் - பெண்ணை சூழ்ந்த வெண்ணையம் பதிதிகழ்-மெய்கண் டவனருள் கைகண்டவர்களி - லொருவ ரொருதலை மருவி யிருப்ப - வஞ்சப் பிறவிக் கஞ்சிவந் தொருவ-னே திறை யருளென வீதெனு மாயா - வாதியை யயலினர் மறுதலைத் தருட்ர - மற்றவ ரயலின ரவருரை மறுத்துச் - சொற்றர வயலின ரவருந் தொலைவுற் - றின்னே யெவரு முன்னே கழியுழி - யாங்கய லிருந்த வருளின ரழுங்கு - நீங்கள் சங்கற்ப நிராகரித் தமைமயென - மற்றவ ருரைத்த சொற்றரு பொருள்கொடு - வாத செற்ப விதண்டையு மேதவு- மோது நால்வகை யுவமையுந் திகழ்தர - வருள்சேர் மாந்தர் வெருள்சே ராமற் - றாக்கமும் விடையமுங் கற்க - நற்கவி மாந்தர் நகாவிற் றுவனே" என்று நூன்முகத்தா னறிக.

இது இயற்றியருளினார் உமாபதிசிவாசாரியார். இது மாயாவாதி, ஐக்கியவாதி, பாடாணவாதி, பேதவாதி, சிவசமவாதி, சங்கிராந்தவாதி, ஈசுரவவிகாரவாதி, நிமித்தகாரணபரிணாமவாதி, சைவவாதி யென்பார் சங்கற்பங் கூறி அளவை மூன்றானும் பொருந்தாமாற்றானு நிராகரித்து சித்தாந்த மேன்மை தெருட்டுஞ் சித்தாந்த ஞான நூல். இவ்வாதிகளுண் மாயாவாதி வைதிக சாத்திரத்துட்பட்டோன். ஐக்கியவாதி யகப்புறச்சமயத்தோன். ஏனை யெழுவரும் அகச்சமயத்தோர். இறுதிக்கண் ணோதிய சைவவாதி சுத்தசைவன். சுத்தசைவன் சொரூபவிலக்கணஞ் சித்தாந்தசைவத்திற் சிறிது வேறுபடக் கூறுதலின் வேறு வைக்கப்பட்டான. ஆகலின், சுத்தசைவத்தைச் சித்தாந்தத்து ளடக்கிப் பாடாணவாதி முத னிமித்தகாரணவாதி யீறாக வெண்ணி யகச்சைவசமயம் ஆறெனல் கண்டுகொள்க. நிமித்தகாரண பரிணாமவாதி யெனினுஞ், சிவாத்துவிதவாதி யெனினு மொக்கும்.

சாத்திரமரபியல் முற்றிற்று.

---

## ஒழிபியல்.

மேற்கூறிய நான்கியல்களி னொழிபாக வெடுத்துத், தமிழிலக்கண விலக்கிய சாத்திரப் புலமைகளை நிரப்புமாறும், அப்புலமைகளானே இகபர வீடுபேறுகளைச் சாதித் தெய்துமாறும், ஈண்டுக் கூறலுறாம்.

### கல்விச்சிறப்பு.

இவ்வுலகத்துக் காணப்படு முயிர்வருக்கங்களுள், ஐம்புலவுணர்வோடு நல்லது நலனுந் தீயதன் றீதும் பகுத்துணரவல்ல மனவுணர்ச்சியு முடையராய் மேம்படுமக்கள், கர்த்திருத்துவ போதகருத்துவ ஞானகுறுதற்கு வேண்டுஞ் சவிகற்பஞானம் பயக்கும் வியஞ்சக ஞான காரணமாய் விளங்குவது, வித்தையாம். வித்தையென்னுங் கல்வி யெனினும் பொருந்தும். மக்கள் இயல்பாக மனவுணர்வுடையராயினும், சுத்தமாயா காரியமாய சத்தப்பிரமரூபமாகும் வித்தையி னுபகாரமின்றிச் சவிகற்பஞான வியாபார மெய்த மாட்டார். மக்கள் இயற்கையான மனக்கருவியி னிருவிகற்ப ஞானச் செய்தியுஞ் செயற்கையான கல்வியறிவினாற் சவிகற்பஞானச் செய்தியு மெய்துகின்றார். நிருவிகற்பககாட்சியாவது - பெயர் சாதி குணங் கன்மம் பொருளென விவற்றாற் பகுத்தறிதலின்றி இஃதொன்று தோன்றாநின்றதெனப் பொருளுண்மை மாத்திரையே யறியு ஞானசத்தி. சவிகற்பககாட்சியாவது - பெயர் சாதி முதலிவற்றாற் பொருளை யுள்ளவா றுணரு ஞான சத்தி. அவையாமாறு காட்டுதும். மாவென்பது ஒன்றன் பெயர். அதற்கு மாத்தன்மை சாதி. வண்ணம் வடிவு முதலியன அதன் குணம். நிறத்த றளிர்த்தல் பூத்தன் முதலியன அதன் கன்மம். மரமென நிலைபெறுதல் பொருளாகை. ஒருசாத்தன் றன் கண்ணுக்குப் புலப்படாநிற்கு மொன்றைக் கண்ணொடு கூடிய வியல்பான மனக்கரணத்தால் இஃதொன்று தோன்றாநின்றதெனப் பெயர் சாதி முதலியவற்றாற் பகுத்தறித லின்றிப் பொருளுண்மை மாத்திரையின் முன்னறியா நிற்கும். அங்ஙன மறிவுறாநின்ற வவன அப்பொருளை இஃதியாதோவென வையுறுதலும் அதனை வேறொன்றாக மயங்கி நிச்சயித்தலுஞ் செய்து; பின்னர் அப்பொருட்கண் மிக்குத் தோன்று மாவென்னும் பெயர் முதலியவற்றைக் கொண்டு எழுத்தானியன்ற சொல்லால் விகற்பித்து

அதனைப் புலப்பட வறியும். இங்ஙனமாகலின், மக்கட்குச் சவிகற்பஞானங் கலாரூபமான சொல்லா னிகழ்தல் அனுபவசித்தமாம். சாத்தன் பிறர் செவிக்குப் புலனாக வுச்சரிக்குஞ் சொல்லின்றியு மிவ்வைந்தானும் பொருளைத் தன்னுள் விகற்பித்தறியுமா லெனின்,— அறியாது கூறினாய்; சொற்க ளுந்தியிற் சூக்குமையாயு நெஞ்சின்கட் பைசந்தியாயுங் கண்டத்தின்கண் மத்திமையாயும் விளங்கித், தன்செவிக்குப் புலப்படுஞ் சூக்குமவைகரியாய், இறுதியிற் பிறர்செவிக்குப் புலப்படுந் தூலவைகரியாய் வெளிப்படும். ஆகலின், சாத்தன் பிறர்செவிக்குப் புலனாகாமல் உள்ளே செய்யுஞ் சவிகற்ப வியாபாரமுஞ் சொல்லா னிகழு ஞானச் செய்தியே யென்க.

கல்விமாட்சி-"இம்மை பயக்குமா லீயக் குறைவின்றாற்-றம்மை விளக்குமாற் றாமுளராக் கேடின்றா-லெம்மை யுலகத்தும் யாங்காணேங் கல்விபோன்-மம்ம ரறுக்கு மருந்து" "அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்-புறங்கடை நல்லிசையு நாட்டு-முறுங்கவ லொன்-றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியினூங் கில்லைச்-சிற்றுயிர்க் குற்ற துணை" "தொடங்குங்காற் றுன்பமா யின்பம் பயக்கு-மடங்கொன் றறிவகற்றுங் கல்வி" "𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌨𑌾𑌮 𑌨𑌰𑌸𑍍𑌯 𑌰𑍂𑌪𑌮𑌧𑌿𑌕𑌂 𑌪𑍍𑌰𑌚𑍍𑌛𑌨𑍍𑌨𑌗𑍁𑌪𑍍𑌤𑌂 𑌧𑌨𑌂 । 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌭𑍋𑌗𑌕𑌰𑍀 𑌯𑌶𑌃𑌸𑍁𑌖𑌕𑌰𑍀 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌗𑍁𑌰𑍂𑌣𑌾𑌂 𑌗𑍁𑌰𑍁𑌃 । 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌬𑌨𑍍𑌧𑍁𑌜𑌨𑍋 𑌵𑌿𑌦𑍇𑌶𑌗𑌮𑌨𑍇 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌪𑌰𑌾 𑌦𑍇𑌵𑌤𑌾 । 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌰𑌾𑌜𑌸𑍁 𑌪𑍂𑌜𑍍𑌯𑌤𑍇 𑌨 𑌹𑌿 𑌧𑌨𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌵𑌿𑌹𑍀𑌨𑌃 𑌪𑌶𑍁𑌃" என்பனவற்றா னறிக.

இன்னும், சாதி யுடலோடொழியும். கல்வி யுயிரோடு செல்லும். ஆகலால், சாதி யுயர்ச்சியினுங் கல்வி யுயர்ச்சி மிக மேம்பட்டது. அது "மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்-கற்றா ரனைத்திலர் பாடு" "வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளுங்-கீழ்ப்பா லொருவன் கற்பின்-மேற்பா லொருவனு மவன்கட் படுமே" "கடைநிலத்தோ ராயினுங் கற்றுணர்ந்தோர் தம்மைத்-தலைநிலத்து வைக்கப் படும்" என்பனவற்றா னுணர்க. கற்றோர்க்கு எந்நாடு மெவ்வூருந் தமபோலுற்றுப் பொருட்கொடையும் பூசையும் உவந்து செய்தற் கேதுவாம். ஆகலின், கல்விபோலச் சிறந்த நற்பொருள் பிறிதில்லை. அது "யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்-சாந்துணையுங் கல்லாத வாறு" என்பதனானறிக. அரசனுக்குத் தன்றேயத்திற்றானே சிறப்புண்டு. கற்றவனுக்கு, அவன் சென்றவிடமெல்லாஞ் சிறப்புண்டு. ஆதலால், மன்னனினுங் கற்றோனே சிறப்பு மிகவுடையன். அது "மன்னனு மாசறக் கற்றோனுஞ் சீர்தூக்கின்-மன்னனிற் கற்றோன் சிறப்புடையன்-மன்னற்குத்-தன்றேய மல்லாற் சிறப்பில்லை கற்றோற்குச்-சென்றவிட மெல்லாஞ் சிறப்பு" என்பதனானறிக. ஒருவயிற் றுதித்தோருள்ளும் ஒருகுடிப் பிறந்தோருள்ளுங் கற்றோனே சிறப்புடையன். அரசனுங் கற்றோன் காட்டிய வழியே செல்லுநீரன். அது "பிறப்போ ரன்ன வுடன்வயிற் றுள்ளுஞ்-சிறப்பின் பாலாற் றாயுமனந் திரியு-மொருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளு-மூத்தோன் வருக வென்னா தவரு-ளறிவுடை யோனா றரசுஞ் செல்லும்" என்பதனா னுணர்க. கல்விப்பொருள் இம்மிக்காரோடு தலைப்பெய்து அறியாதனவெல்லா மறிந்தோமென்றும், யாண்டு பலவாக நரையில மாயினமென்றும், உவத்தற் கேதுவாம். அது "யாண்டு பலவாக நரையில வாகுதல்-யாங்கா கியரென வினவுதி ராயின்-மாண்டவென் மனைவியொடு மக்களு நிரம்பினர்-யான்கண் டனையரென் னிளையரும் வேந்தனு-மல்லவை செய்யான் காக்கு மதனலை-யான்றவிந் தடங்கிய கொள்கைச்-சான்றோர் பலர்யான் வாழு மூரே" என்பதனு

னுணர்க. செல்வப்பொருள் ஒருவனுக்கு ஈட்டு மப்பிறப்பிற்றானே யுதவுத லுடைத்து. கல்விப்பொருள் எழுமையினுஞ் சென்றுதவுத லுடைத்து. அது "ஒருமைக்கட் டான் கற்ற கல்வி யொருவற் - கெழுமையு மேமாப் புடைத்து" என்பதனு னறிக. இத்தனை மாட்சிமையெல்லா முடைய கல்வியினை நல்லாசிரியரை யடுத்து அவற் குற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்துங் கற்றல்வேண்டும். இங்ஙனங் கற்றோர் தலையாயர். அங்ஙனங்கு நாணிக் கல்லாதார் என்றுங் கடையாயர். அது "உற்றுழி யுதவியு முறுபொருள் கொடுத்தும் - பிற்றைநிலை முனியாது கற்றனன்றே" "உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார் - கடையரே கல்லா தவர்" என்பனவற்று னறிக.

இனி யறியவேண்டுவன வறிதற்குரிய நன்மகனைப் பெற்ற தந்தை அவனைக் கற்றோரவையின்கண் அவரினு மிக்கிருக்குமாறு கல்வியறிவுடைய னாக்குதல் வேண்டும். அதுவே நன்மகனுக்குத் தந்தை செயற்பாலதா முபகாரம். அது "தந்தை மகற்காற்று நன்றி யவையத்து - முந்தி யிருப்பச் செயல்" "ஈன்று புறந்தருத லென்றலைக் கடனே - சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே - நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே - யொளிறுவா ளருஞ்சம முருக்கிக் - களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே" "எச்சமென வொருவன் மக்கட்குச் செய்வன - விச்சைமற் றில்லை பிற" வென்பனவற்று னறிக. தம்மக்க ளறிவுடைமை தம்மினு மாநிலத்து மன்னுயிர்க்கெல்லா மிக வினிதாம். அது "தம்மிற் றம்மக்க ளறிவுடைமை மாநிலத்து - மன்னுயிர்க் கெல்லா மினிது" என்பதனு லறிக.

விலங்குகளுக்கு இங்ஙனஞ் சொல்லான் விசற்பித்தறியுங் கரண மின்மையால், அவை யெதிர்நின்ற விடயங்களை நிருவிகற்பமாகவே யறியு நீர்மை யுடையனவாம். இனி விலங்குகளைக் காட்டினு மக்க ளெத்துணை வேறுபாடுடையரோ அத்துணை வேறுபாடு கல்லாதமக்களைக் காட்டினுங் கற்றறிந்தமக்க ளுடையரென்பது, "விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல் - கற்றாரோ டேனை யவர்" என்னுந் திருக்குறளு மிதனை நிலை யிடுதல் காண்க. கல்லாத மக்களு மொட்பமுடையராய் நிலவக் காண்டுமாலெனின்,— கல்லாத மக்கண்மாட் டுளதா மொட்ப நீர்மே லெழுத்தப்போல்வதோர் விழுக்காடாய் விரையக் கெட்டுப் பயப்பாடின்றி யொழிதலின், அது ஒருசார் விலங்கி னொட்பம் போலக் கொள்ளப்படுத லல்லது நுண்மா ணுழைபுலமாகக் கொள்ளப்படாதா மென்க. "கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங் - கொள்ளா ரறிவுடை யார்" என்னுந் திருக்குறளு மிது தேற்றுமாறு காண்க. கல்வியறிவில்லாதார் மெய்ப்பொருள் காணமாட் டாரென்பதும், அஃதுடையாரே மெய்ப்பொருள் காண வல்லுநரென்பதும், "கல்லா நெஞ்சி-னில்லா னீசன்" "கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியைக் கரையிலாக் கருணைமா கடலை - மற்றவ ரறியா மாணிக்க மலையை" என்றற்றொடக்கத்துத் திருவாக்குக்களா னறிக. "நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்த - னுண்மை யறிவே மிகும்" என்றரு ளிச்செய்தது, தீவினைப் பாலர்பா லுளதாங் கல்வி நல்வினைப் பாலர்பா லுளதாங் கல்வி போல நன்கு செய்தற் குபகார மாகமாட்டாது; தீவினைப்பயன் விளைவிற் பின்னிருந் திரங்குதற் குபகாரமாமென்ற குறிப்பாகலின், அது கல்வி மெய்யுணர்விற்குச் சாதக மாகு மென்பதனோடு முரணாதென்க. "காதன் மிகுகுழிக் கற்றவுங் கைகொடா" வென் னுஞ் சிந்தாமணியு மப்பொருட்டு.

கல்வியுடைமை பொருளுடைமையென் றிரண்டுஞ் செல்வமாயினும், கல்வி இம்மை மறுமை வீடுபேறுகண் மூன்றற்குஞ் சாதகமாகலின், "நற்பொருள் செய்வா

ர்க் கிடம் பொருள் செய்வார்க்கு மஃதிடம்" என்றார் சிந்தாமணிநூலார். ஆண்டு நற்பொருளென்றது கல்விப்பொருளை. கல்விப்பொருளி னுயர்ச்சி, "கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு - மாடல்ல மற்றை யவை." யென்பதனானு மறிக. விலங்கொடு மக்களென்னும் பொதுச்சொல்லாற் பெண்பாலாருங் கற்றற்குரிய ரென்பது கொள்க. "குஞ்சி யழகுங் கொடுந்தானைக் கோட்டழகு - மஞ்ச ளழகு மழகல்ல - நெஞ்சத்து, நல்லம்யா மென்னு நடுவு நிலைமையாற் - கல்வி யழகே யழகு" என விசந்தெடுத்தோதுதலானும், கல்வி ஆண்பாலார் பெண்பாலா ரிருவருக்கும் பொதுவாத றெளிக. மற்று "நுண்ணறி வோடு நூல்பல பழகினும் - பெண்ணறி வென்பது பெரும்பே தமைத்தே" என்ற தென்னைகொலெனின்,— பெண்பாலா ரியல்பின் மனத்திடம் பெரிதில ராதலின், அவர்கட்படுங் கல்வி ஆண்பாலார் கட்படுங் கல்விபோலப் பெரிது நன்மைக் கேதுவாகா தென்ற கருத்தா லங்ஙனங் கூறினு ராதலின், அதுகொண்டே அவர் கற்பிக்கற்பாலரல்ல ரென்பது முடியாதென்க. இத்துணையும், சவிகற்ப ஞானங் கல்வியா னெய்தற்பால தென்பதும், அதன் சிறப்பும், அது ஆண்மக்கள் பெண்மக்களென்னு மிருபாலார்க்கும் பொதுப்பொருளென்பதும், தந்தை மக்கட்குச் செய்யு முக்கிய வுதவி அவரைக் கல்வி யறிவுடைய ராக்குத லென்பதும், சொல்லப்பட்டன.

"கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக."

கல்வி, கற்பிக்க வல்ல நல்லாசிரியரும், கற்றற்குரிய நன்மாணுக்கரும், எய்தினல்லது, பயன் படாமையின், கற்பிக்க வல்ல நல்லாசிரிய ரிலக்கணமும், கற்கு நன்மாணுக்க ரிலக்கணமும், முன்ன ரெடுத்தோதிக், கற்குமாறும், கற்கப்படு நூன்முறையும், பின்ன ரெடுத்தோதுதும்.

## கற்பிக்கு நல்லாசிரிய ரியல்பு.

உயர்குடிப்பிறப்பும், மனத்தூய்மையும், நல்லொழுக்கமும், பலகலைப்பயிற்சியும், வாய்மையும், மாணுக்கர்மாட் டன்புடைமையும், பொருளவாவின்மையும், நடுவு நிலைமையு மென்னு மெண்வகை யிலக்கணங்க ளுடையராய்க், கொடையும், ஊக்கமும், உலகியலறிவும், நிலைபெற்ற தோற்றமும், பொறையும், நிறையும், மறப்பின்மையும், அறிவும், உருநலனும், ஆற்றலும், புகழும், சொல்வன்மையும், மாணுக்கரால் விரும்பப்படு நீர்மையும், தொன்னெறியாற் பொருந்தினோர் கற்பிக்கு நல்லாசிரிய ராதற்கு உரியரென்றறிக. அது "வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும் - வானியா றன்ன தூய்மையும் வானியாறு - நிலம்படர்ந் தன்ன நலம்பட லொழுக்கமுந் - திங்க ளன்ன கல்வியுந் திங்களொளி - ஞாயி றன்ன வாய்மையும் யாவது - மஃகா வன்பும், வெஃகா வுள்ளமுந் - துலைநா வன்ன சமனிலை யுளப்பட - வெண்வகை யுறுப்பின ராகித் திண்ணிதின் - வேளாண் வாழ்க்கையுந் தாளாண்மையு - முலகிய லறிதலு நிலையிய தோற்றமும் - பொறையு நிறையும் பொச்சாப் பின்மையு - மறிவு முருவு மாற்றலும் புகழுஞ் - சொற்பொரு ளுணர்த்துஞ் சொல் வன்மையுங் - கற்போர் நெஞ்சங் காமுறப் படுதலு - மின்னோ ரன்ன தொன்னெறி மரபினர் - பன்னருஞ் சிறப்பி னல்லாசிரியர்" என்பதனா னறிக. குலம்புரி பிறப்பு - உயர்குலத்தோர் விரும்பும் பிறப்பு. திங்கள் உவாமதி. திங்களு ஞாயிறும் பொங்கிரு ளகற்றிப் பொருள்களைப் புலப்படக் காட்டும் பொற்பினவாதல் போல வாய்மையுடையார் பொருள்களை ஐய விபரீத மகற்றி மெய் யுணர்த்து நீ

மையுடைய ரென்பார், திங்களொடு ஞாயி றன்ன வாய்மையு மென்றார். - இது தொழி லுவமம். நிலையிய தோற்றமாவது—எஞ்ஞான்றுஞ் சலியா வேற்ற நீர்மை. ஆற்றல், அறிவுத்திட்பம் காயத்திட்ப மென்றிவை; அது அறிவு முருவு மாற்றலு மென வவ்விரண்டனையுஞ் சாரவைத் தோதியதனு னறியப்படும். காயத்திட்ப மனவலி, வாக்குவலி, உடல்வலி, யென மூன்றும். அறிவுத்திட்பம் இயற்கை யறிவுவலி செய ற்கை யறிவுவலி யென விரண்டாம். புகழ்—தங் கல்வி நிறைவு மதிநுட்ப நல்லொ ழுக்க மென்றிவை காரணமாகத் தாமுளராய ஞான்றும் பிறரை ஞான்று முயர்ந் தோர் வாய்ப்பட்டு நிகழ்ந்து எங்கும் பரந்து நிலவு நன்கு மதிப்புச் சொல் விளக்கம். சொற்பொரு ளுணர்த்துஞ் சொல்வன்மை - வாக்கபடுத்துவம்; குலனரு டெய்வங் கொள்கை மேன்மை, கலைபயி றெளிவு கட்டுரை வன்மை என்புழிக் கட்டுரை வன் மையு மது. கட்டுரைவன்மை - கேட்பார்ப் பிணிக்குஞ் சொல்வன்மை. கட்டுதல் - பிணி த்தல். அது "கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் - வேட்ப மொழிவதாஞ் சொல்" என்பதனானு மறிக. கட்டுரை வினைத்தொகை. இதற்குப் பிறரெல்லாந் தொடு த்துச் சொல்லு முறைவலி யென நோக்கின்றி யுரைத்தார். இனிக் கட்டென்பது காலங்கரந்த பெயரெஞ்சுகிளவி முதனிலையாதலின், அதனைக் கட்டியென வினையெ ஞ்சு கிளவி யாக்குத லிடர்ப்பாடுமாம். ஆசிரியர் இவ்வியல் புடையரா யிருந்து நூல் கற்பிப்பின் மாணாக்கர் உறுதிப் பொருள் கசடறக் கற்றுக் கைக்கொண்டு நல்லொ ழுக்க மெய்தி மெய்யுணர்ந்து இக பர வீடு பேற்றுறுதிப் பயன்களைத் தப்பாது தலைக் கூடுப. இவ்வியல் பில்லா ராசிரியராய்க் கற்பிக்கப்புகின் மாணாக்கர் நூற்பொருள் களை ஐயமு மருட்கையு முறுதரக் கொண்டு துணிவிலராய்ப் போலியொழுக்க மேவிப் பஃறலைப்பட்ட விவேக சத்தியுடையராய் இகபர வீடுபேற் றுறுதிப்பயன்களை நன்குற மாட்டார்.

### கற்கு நன்மாணாக்க ரியல்பு.

ஆசிரியன் கற்பிக்கு நூற்பொருளைக் கற்பித்தவா றுணர்தலும், கற்பித்த பொ ருள் பற்றுக்கோடாகக் கொண்டு சூழ்ந்து வேறு நற்பொரு ளுணர்தலும், தம்போலக் கற்ப வர்க் குபகாரிக ளாதலும், தந்தை தாய் ஆசிரியர் முதலியோர் செய்ந்நன்றி யறி தலும், தீய சிற்றினச் சார்பின்மையும், சோம்பு தடுமாற்ற மான மறவி கடுநோய் வெகுளி களவு காமம் என்றிவை யிலராதலும், ஆசிரியனை யடைந்து வழிபடுதலும், தருமநெறி தவறாமையும், ஆசிரியன் குறிப்பறிந்து நடத்தலும், கேட்ட நூற்பொ ருளைச் சிந்தித்தலும், பாடத்தை மறவாமற் காத்தலும், மீட்டு மாசிரியனை யடைந்து கேட்ட நூற்பொருளை ஐய விபரீத நீங்க வினவுதலும், நூற்பயிற்சியுடையார் பிறர் அறி ந்து வைத்தாதல் அறியாது வைத்தாதல் கையுற்றுதல் வினவும் சொற்பொருள் வினாக் களுக்கு அவர் கொள்ளு முறையான் விடை கூறுதலும், நூற்பொருளைக் கற்றோ ரவையி லவ ரனுமதி கொண்டெடுத்துப் பிரசங்கித்தலு முடையராகி, "உலகநடை யறிந் தொழு குவோர் நூல் கற்றற்குரிய நன்மாணாக்க ரென்" றுணர்க. அது "சொல்லிய பொரு ண்மை சொல்லியாங் குணர்தலுஞ் - சொல்லிய பொருளொடு சூழ்ந்தநன் குண ர்தலுந் - தன்னோ ரன்னோர்க்குத் தான்பயப் படுதலுஞ் - செய்ந்நன்றி யறிதலுந் தீச் சார் பின்மையு - மடிதடு மாற்ற மானம்பொச் சாப்புக் - கடுநோய் சீற்றங் களவே காம - மென்றிவை யின்மையுஞ் சென்று வழிபடுதலு - மறத்துறை வழாமையுங் குறிப் பறிந் தொழுகலுங் - கேட்டவை நினைத்தலும் பாடம் போற்றலு - மீட்டவை வினவ

றும் விடுத்தலு முறைத்தலு - முடையராகி நடையறிந் தியலுநர் - நன்மாணாக்கர்" என் பதனு லறிக. இவ்வியல்புடைய மாணாக்கரே நூல் கசடற நன்கு கற்று நற்புலமை யெய்துவ. இவ்வியல் பில்லோர் நூல் கற்கப் புகினும், தெளிவும் புலமை நிறைவும் கிட்டாமை யொருமை மேலு கல்லுறுதியுந் தலைக்கூடமாட்டார்.

## கற்குமுறை.

நூல் கற்றற்குரியராய நன்மாணாக்கர் தாங் கற்கு நூலின்கட் சில பொருள் கருகிற்றாயி னப்பொழு தவற்றின்கண் ணழுந்தற்க. முன் கற்ற நூற்களுதல், பின்பு கற்கு நூற்களுதல் இவை வெளிறிக் கிடக்கும்; அதுகண்டு தெளிதுமென்று கொண்டு மனவூக்கங் குன்றாது நூலுரை கற்க. விதி விலக்குகள் நூலுரைகளுட் சில சொற் பொருட்கு எடுத் தோத்தா லெய்துத லுற்றுஞ் சில சொற் பொருட்கு அங்ஙன மெடுத் தோத்தா லெய்துத லுறுதம் வரக் காணப்படின், அவற்றிற்கு விதிவிலக்கு ஆசிரியரோதாமைக்குக் காரணம் யாதென்று மனங்கலங்கற்க; ஆசிரியர் தாமெய்து வித்தன வெய்தாதனவற்றிற்கு மெய்து மாறு உபலக்கணம் பற்றி நூலுரை செய்யு நீராகலின். உபலக்கணக் கூற்றுக்கள், "காணுங்கண்ணுக்குக் காட்டுமுளம்போல்" "கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான் - றாளை வணங்காத் தலை" யென் பன போல்வன. முன் னறிந்தத்ற்குப் பின் னறிவது மாறாயின், அவ்வளவில் முன் னதே விதி பின்னது வழுவென்றானும், பின்னதே விதி முன்னது வழுவென்றானுங் கதுமெனக்கொண்டு நூலுரைப்பொருள் சிதைவுசெய்யாது, இஃதென்னூல்விதியோ மற் றெவ்வுரை விதியோ வென றெண்ணி நூலுரை கற்க. நூலுரைகளைச் சிலநாட் கற்ற மாத்திரையாற் புலமை யெய்திற்றிலமென் றூக்கங் குன்றற்க. நூலுரைகளைப் பல நாட் கற்று அவற்றின்கட் பயிறலுஞ் செய்யின, புலமை தப்பாது பலிக்கும். நூலு ரைகளை விரைவா னோக்கற்க. அங்ஙன நோக்கின், யாதுந் தெரியாது. விரையாது நூலுரைகளை யுற்று நோக்கின், தெரியாத பொருளில்லை. கற்கு நூலுரைகளிற் கருத்தினை மட்டுப்படுத்திக் கற்ற நூலுரைகளிற் கருத்தினைச் சிந்தாம லிறக்குக. நூலு ரைப்பொருள்களை வரம்புசெய்யாது இருகான் முக்காற் கேட்டலிற் பயனின்று. ஆக லின், நூலுரைப்பொருள்களை வரம்பு படுத்துக் கற்க. அங்ஙனங் கற்றபின், ஒருகா லிற்றானே யந்நூலுரைப் புலமை யுளதாம். ஆசிரியனுக்குப் பொருள் கொடுத்தலு மின்சொற் சொல்லுதலும் பணிதலு முற்றுழி யுதவுதலுஞ் செய்து கற்க. இடம் பொரு ளேவல்க ளுடையராய்ச் சிறப்புச்செய்யினும், கல்வி விருப்பில்லாத மூர்த்த மாந்தர் களோடு கூட்டுறவு செய்யற்க. நன்மாணாக்கரை புலமுடையார்ப் பெறின், சிலநாட்கொடுத்து மவரோடு பழகுக. மன மிடர் நோய் முதலிய வேதுக்களாற் கலங்குஞ் செவ் வியி னூலுரை யாய்தலை யொருஞான்றுஞ் செய்யற்க. புலமைப் பேற்றிற்குச் சிறந்த கருவி யாசிரியன்பான் மெய்யன்பு மெய்வழிபாடு முடையராதலாம்.

மக்களறிவு தாங் கற்கு நூலளவாக விரியுமாகலின், நல்ல நூல்களை முழுதுமுறையாற் கற்க. ஒருதுறைநூ லொருவகை யறிவினையே யுதவுமாகலின், பலவகை யறிவுவேண்டிப் பலவகை யறிவுநூல்களைப் பலவாறு நாடிக் கற்க. "தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக் - கற்றனைத் தூறு மறிவு" "அறிதோ றறியாமை கண்டற்றால்" "நீரளவே யாகுமா நீராம்ப லூன்கற்ற - நூலளவே யாகுமா நுண்ணறிவு" "நூல்பல கல்" என்னு முதுமொழிகளாலு மிவை துணிக. கண்ணொளி விளக்கமெ னக் காண்டல் வியாபார - நிகழ்த்துதற்கு ஞாயிற்றினொளி முதலியன வின்றியமையா

வுபகார கரணமாதல்போல மக்க ளான்மஞானம் விளங்கிச் செய்தொழில் வன்மை யுறுதற்கு, அங்கிங்கெனாதபடி யெங்கு நிறைந்து நிற்குங் கடவு ளருட்சத்தி இன்றி யமையாத வுபகார கரணமாம். ஆகலின், அறிவு விளக்கம் வேண்டி நூலாயு நன் மாணக்க ராசிரியவழிபாட்டினோடு ஈசுரவுபாசனையுங் கடைப்பிடித்துச் செய்தவருக. "அருளினு லாகமத்தை யறியலா மளவினாலாந் தெருளலாம்" என்பவாகலின், கற்கு நூலுரைச் சொற்பொருள்களை என்றுந் திருவருளி னுடிச சோதித்துக் கற்க.

## கற்கு நூன்முறை.

விதிப்படி வித்தியாரம்பஞ் செய்து நல்லாசிரியரை யடைந்து நற்றமிழ் நூல் கற்கப்புகு நன்மாணக்கர் முன்னாத் தமிழ் நெடுங்கணக் காய்ந்துகொண்டு ஆத்திசூடி கொன்றைவேந்தன், வாக்குண்டாம், நல்வழி, நன்னெறி முதலிய வுலக நீதிநூல்களைக் கற்றுப் பின்ன ரவைகளின் பொருள்களை நன்று தெரிந்துகொள்க. அதற்குப் பின் நிகண்டு கற்று அது கூறுஞ் சொற்பொரு ளுணர்ந்து முதுமொழிவெண்பா, நீதிநெறி விளக்கம், நாலடி, ஆசாரக்கோவை முதலிய நீதிநூல்களைக் கற்று அவற்றின் பொரு ளையு மவற்றின்கண் வரு நிகண்டுச்சொற்களையு நன்குண ரறிந்துகொள்க. அதற்குப் பின் சைவநன்மாணக்கர் சைவாசாரியர்பால் வைதிகசைவசாத்திர மோதுதற்கு வேண் டுஞ் சைவ சம்ஸ்காரமும் வைணவ நன்மாணக்கர் வைண வாசாரியர்பால் வைணவநூ லோதுதற்கு வேண்டும் வைணவ சம்ஸ்காரமும் விதிப்படி பெற்று, முறையே பஞ் சாக்கர வட்டாக்கர மந்திர தந்திர செப வனுட்டான முடையராய்த், தேவாரந் திரு வாசக நாலாயிரப்பிரபந்த மெனனுந் தமிழ்வேதங்களைப் பண்முறையாகவுஞ் சுத்தா ங்கமாகவு மோதப் பழகிக்கொள்க.

அதன்மேல், நல்லியற்புலவ ரியற்றிய தமிழிலக்கணச்சுருக்கங் கற்றுக்கொண்டு, திருவிசைப்பா, திருமந்திரம், திருப்பல்லாண்டு, பதினொராந்திருமுறைப்பிரபந்தங்கள், குமரகுருபரமுனிவர் பிரபந்தங்கள், சிவப்பிரகாசமுனிவர் பிரபந்தங்கள், சிவஞான யோகிகள் பிரபந்தங்கள், அவர் மாணக்கர் பிரபந்தங்கள் முதலியவைகளையும், பெரிய புராணம், கோயிற்புராணம், காஞ்சிப்புராணம், தணிகைப்புராணம், திருவிளையாடற்புரா ணம், பிரமோத்தரகாண்டம், காசிகண்டம், பிரபுலிங்கலீலை, பாகவத முதலிய தமிழ்ப் புராணங்களையும், இராமாயணம், பாரதமெனனுந் தமிழிதிகாசங்களையு முறையாற்கேட்டு, இலக்கியவறி வீட்டிக்கொள்க. அதன்மேல், நன்னூல், இலக்கணவிளக்கம், யாப்பருங் கலம், காரிகை, அகப்பொருள்விளக்கம், புறப்பொருள் வெண்பாமாலை, வெண்பாப்பா ட்டியல், தண்டியலங்காரம், வீரசோழியம், நேமிநாதமென்னு மிலக்கண நூல்களை யவற்றின் காண்டிகை விருத்தியுரைகளோ டுளங்கொளக் கற்றுக், கற்றவிலக்கியங்களில் இப்பஞ்சலக்கண நூல்விதிக ளமைவரு நன்று பயில்க. இதுகாறுங் கூறிய விவ்விலக் கிய விலக்கண நூலுரைகள் முறையா னுளங்கொளக் கற்றுத் தமிழ்ப்புலமை யெய் திய நன்மாணக்கர் இளந்தமிழ்ப்புலவர் (F. A.) என்னுங் கல்விப் பட்டாபிதானத் துக் குரியரென றுணர்க.

அதன்மேல், தொல்காப்பிய வெழுத்ததிகாரஞ் சொல்லதிகாரம் பொருளதிகா ரங்களை யிளம்பூரணஞ் சேனாவரைய நச்சினார்க்கினிய மென்னு முரைகளோடு நன்று கற்றுச், சிந்தாமணி, சிலப்பதிகார மணிமேகலை, சூளாமணி, நைடத மிரகுவம்ச மென னுந் தமிழ்க்காவியங்களை, உரைகளோடு நன்று ஆராய்ந்துகொள்க.

அற்றே லக்ஷணமாக; "சேக்கிழார் சிந்தா மணிப்பயிற்சி தீதெனவே - தூக்கியுப தேசித்தார் சோமேசா-நோக்கிற்-பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல் - மக்கட் பதடி யெனல்" என்றாசிரியர் சிவஞானயோகிக ளருளிச்செய்தலின், சிந்தாமணிப் பயிற்சியுஞ் சிந்தாமணி யென்ற துபலக்கணமாகலின், அது போலுஞ் சிலப்பதிகார மணிமேகலை சூளாமணிப் பயிற்சியுஞ் சைவ வைணவ நன்மாணுக்கர்களுக்கு ஆகாவெ னின்,—அஃதொக்குமன்றாயினும், சிந்தாமணிமுதலிய காவியங்களிற் பொதுவான வுலகி யன் நீதி வைராக்கியங் கூறப்படுதலானும், தொல்காப்பிய வியற்றமிழ்ப் பிரயோக மிக வருதலானும், அப்பய னோக்கிச் சைவ வைணவ நன்மாணுக்க ரவையுங் கற்சற்பால ரென் றெடுத்தோதினும். இனிச் சைவ வைணவ நன்மாணுக்க ரக்காவியங்களைக்கற்க வேண்டின், தத்தஞ் சமய சித்தாந்தப் பார்வையாற் கற்க. ஆத்தனூல்களிற்போல வவ ற்றின்கணழுந்தற்க வென்பார், "சிந்தாமணிப் பயிற்சி தீது" என்றார். பயிறல் பலகா லுளங்கொள வழுந்தி யாராய்தல். மன மொன்றிலழுந்தின் அதன் வண்ணமாய் மாறு மென்ப தனுபவ மாகலின், வேதப்புறமாய வவ்வாருகத பௌத்த காவியங்களிற் பலகா லழுந்திப் பயில்வோர் தம் வைதிக நெறி கைவிட் டவை கூறுங் கொள்கை வசத்தரா யவைதிகராவ ரென்பது பெரியோர் கருத்தென்க. வைதிக காவியங்களி னியல்பும், அவைதிக காவியங்களி னியல்பும், வைதிககாவியநூட்ணமறுப்பில் விரித்தோதினும்.

அதன்பின், தருக்கசங்கிரகதீபிகை தருக்கபரிபாடை கற்றுத் தருக்க வறிவுடைய ராகுக. அதன்மேல், இறையனாரகப்பொருளுரை, பிரயோகவிவேகவுரை, இலக்கணக் கொத்துரை, தொல்காப்பியச்சூத்திரவிருத்தி, இலக்கணவிளக்கச்சூறாவளி யென்பவ ற்றை மதியமையக் கற்று இலக்கணவறிவு விரியச் செய்துகொண்டு, பத்துப்பாட்டு எட்டுத்தொகை, கல்லாடம், பெருந்தேவனார்பாரத மென்னுஞ் சங்க விலக்கியங்களை யவற்றுரைகளோ டாராய்ந்து, பின்னர்த் திருக்குற டிருக்கோவை யென்னுந் தெய்வ விலக்கியங்களைப் பரிமேலழகியாருரை பேராசிரியருரைகளோ டறிவமையப் பல முறை நன்றாராய்ந்து தமிழ்ப்புலமை நிரப்பிக்கொள்க.

இன்னும், தமிழ்ப் பெரும்புலமைக் கின்றியமையாத வடமொழி யிலக்கிய விலக் கண வாராய்ச்சியும், பூகோள ககோள கணிதநூலாராய்ச்சியும், தருக்கநூலாராய்ச்சியும், ஈட்டிக்கொள்க. இதுகாறுங் கூறிய நூலுரைகளை இவ்வாறு கசடறக் கற்று முதிர் ந்த நன்மாணுக்கர் **முதுதமிழ்ப்புலவர்** (B. A.) என்னும் பட்டாபிதானத்துக்குரிய ரென றுணர்க.

இங்ஙனந் தமிழிலக்கண விலக்கிய முதலிய வித்தைகள் கற்று முதிர்ந்தோருட் சைவ நன்மாணுக்கர், சைவாசாரியரை யடைந்து வழிபட்டு மந்திராதிகார மார்ச்சனு திகாரம் யோகாதிகாரங்களை நன்று பயக்குஞ் சைவசமய விசேட தீக்கையுற்று, சைவசமயநெறி, சிவதருமோத்தரம், பரமததிமிரபானு, ஞானாமிர்தம், தத்துவப்பிர காசம், சோமசம்புசிவாசாரியர் கிரியாகாண்டக்கிரமாவலி, சித்தாந்தசாராவலி யென் பனவற்றையும், சதுர்வேததாற்பரியசங்கிரகம், சிவதத்துவவிவேகம், சிவகர்ணாமிர்தம் பாரததாற்பரியசங்கிரகம், இராமாயணதாற்பரியசங்கிரகம், பிரமதருக்கத்தவமென் பனவற்றையுங் கற்று, வைதிக சைவவறிவுடையராய், வைதிக சைவானுட்டானங் கைவரப் பயின்றுகொள்க. சுத்தாத்துவிதஞானான சித்தாந்த சைவ நன்மாணுக்க கைவல்லியம் வேதாந்தசூடாமணி முதலிய கேவலாத்துவித வேதாந்த சாத்திர

களைக் கற்கவேண்டின், தஞ் சித்தாந்தப் பார்வையாற் கற்க. இது விசிட்டாத்துவித வைணவ நன்மாணுக்கர்களுக்கு மொக்கும்.

சைவ நன்மாணுக்கருட் சித்தசுத்தி மிகவுடையராய் நித்தியா நித்திய விவேக வுணர்வு தோன்றிப் பிறவிக் கஞ்சி வீடுபேற்றி னவாமிக்குடைய பரிபாகிகளான நல்லோர், சித்தாந்த சைவ ஞானசாரியரை யடைந்து வழிபாடாற்றி அகங்கார மமகாரத் தியாச்சியஞ் செய்து, நிருவாண விஞ்ஞான தீக்ஷையுற்று, சிவஞான போதம், சிவஞானசித்தி, சிவப்பிரகாசம், திருவருட்பயன் முதலிய வத்துவித சைவ சித்தாந்த நூல்கள் பதினான்கையு மவற்றி னுரைகளோடும், வேதாந்த சித்தாந்த சாத்திரப்பொரு ளனைத்தையு மைய விபரீதமற வடக்கி விளங்கும் சகலாகலா ரூபமான சிவ ஞானமாபாடியத்திறோடும், ஞானசாரியரை வழிபட்டு, முறையாற் கேட்டல் சிந்தித்த றெளிதல் செய்து, சிவானுபவங் கைவருமாறு சிவோக மென்னு மத்துவித நிட்டை பேணுக. இங்ஙன ஞானாதிகாரிகளான நல்லோர் ஈசாவாசியம், கேனம், பிரச்சினம், மூண்டகம், மாண்டூக்கியம், தைத்திரியம், ஐதரேயம், சாந்தோக்கியம், பிருகதாரணிய கம், சுவேதாச்சுவதரம், கைவல்லியம், அதர்வசிரசு, அதர்வசிகை யென்னுஞ் சைவோப நிடதங்களையும், பவுட்கரம், மிருகேந்திரம், தேவிகாலோத்தரம், சருவஞானோத்தர முதலிய சைவாகமங்களையும், தாங்கற்றுணர்ந்த வேதாந்தத் தெளிவான திராவிட சைவ சித்தாந்தப் புலமைக் கரணுக வாய்ந்தணர்ந்து கொள்க. ஈண்டுச் சொல்லிய வுபநிடதங்களின் மெய்ப்பொருள்க ளாண்டாங்கு த்துவித விசிட்டாத்துவித கேவ லாத்துவித பாடிய வுரைகளாற் பேதிக்கப்பட்டிருத்தலின், சைவ சித்தாந்த ஞான குருவரு ளுபதேச மாந்திரப் பார்வையா லவற்றின் மெய்யுணர்ந்து சுத்தாத்துவித நிலைக் கடைப்பிடி யுறுதியுறுக.

அதன்மேல், இங்ஙனங் கூறிய வேதாந்தத் தெளிவான சைவசித்தாந்த ஞானநூ லவ தெய்வத்திருவரு ளிலக்கியமான தேவாரந் திருவாசகந் திருக்கோவை யுத்தரவேத முதலிய திருமுறைகளைத் திருவருட்கண்ணா லென்று மாராய்ந்து, ஓதிப், பரமசிவன் றிருவடிக் கீழ்ப்பிரிவறப் பொருந்துஞ் சீவன்முத்தி யுண்மைநிலை தலைக்கூடி வாழ்க.

வைணவநல்லோர், தத்துவசேகரம், தத்துவத்திரயம், சீவசனபூஷண முதலிய தஞ்சமய சாத்திர முறையாற் கேட்டுச் சிந்தித்து விசிட்டாத்துவித சித்தாந்தந் தேறி, நாலாயிரப்பிரபந்தங்களைத் திருவருட் பார்வையா னென்று மாராய்ந்து, நாராயண மூர்த்தி திருவடிக்கீ ழிருக்குஞ் சரணாகதிநிலை தலைக்கூடி வாழ்க.

மேற்கூறிய முதுதமிழ்ப்புலமையோ டிங்ஙனங் கூறிய வேதாந்த சித்தாந்த சாத்திரப்புலமையு நன்கு கைவரப்பெற்றார் முதுதமிழ்ப்பேரும்புலவர் (M. A.) என்னும் பட்டாபிதானத்துக் குரியரென் றுணர்க.

## கல்வியறிவின்பயன்.

இனித் தமிழ்ப்புலமையா லிகபர வீடுபேறு சாதித்தடையுமாறு கூறுதும்.

இன்னிலைபரான தமிழ்ப்புலவ ரறத்தாற்றாற் பொருளீட்டி யின்னிலைக்கு விதித்த சருமம் வழாது செய்து போகந் துய்த்தறந் தருமமுந் தக்கார்க்குச் செய்க. பொரு ளீட்டுங்கா லருளொடு மன்பொடும் பொருந்தி யீட்டுக. என்னை? அருளொடு மன் பொடும் பொருந்தி வாராத பொருள் பசுமட்கலத்து ணீர்போலச் செய்தானையுங் கொண்டிறத்தலின். இல்லறநெறி நிற்பார், வறியார்க்கு வேண்டுவன வுதவ லவர்

வறுமை களைய வல்லராதலும், தாமெடுத்துக்கொண்ட நல்வினையை முடிக்கவல்லராத லும், தம் பகைவர் தருக்கறுக்க வல்லராதலும், வேண்டியின்ப நுகர வல்லராதலும், பொருளுடையாராய வழியே யாகலின், அப்பெற்றித்தாய பொருளை நெறியா னிரம்ப வீட்டுக. பொருளீட்டுங்காற் றம்புலமை யதற்குத் துணைக்காரணமாமென்று கொண் டொட்டா றக்கதன்று. என்னை? அறிவுடையார் வறியராகவு மேழையார் செல்வராகவுங் காண்டலின். ஆகவே, அறிவுடையராதற்காகச் சூழ் செல்வமுடையராதற் காகாது; செல்வமுடையராதற்காகச் சூழ் அறிவுடையராதற் காகாது. நாயனாரும் "இருவே றுலகத் தியற்கை திருவேறு - தெள்ளிய ராதலும் வேறு" என்றெடுத் தருளிச்செய் தார். இனியும், யார்க்கும் பொருளுண்மையு மது காரணமாக வெய்து மின் பமு முன்வினையா னமைந்து கிடந்தன; பொருளின்மையு மதுகாரணமாக வெய்துந் துன்பமு மங்ஙனமே முன்வினையா லமைந்து கிடந்தன. அவை இம்மையறிவு முய ற்சியாலு மஃதின்மையாலு முளவாவன வென்று கொண்டு மகிழ்தலுங் கவறலு மறி வின்மையாம். இங்ஙனமாதலின், கல்வியறிவு டையராய் நன்று நன்றுசெய் திக த்தினிற்புகழும் பரத்திற் றுறக்கம் வீடுபேறுகளு மெய்துதற்கே சாதனமாவதாமென்க. இனிப் பொருள் பழவினையான வருவதென்று கொண்டு அதனை யீட்டு முயற்சியின்றி மடிபுக்கிருக்கலாகா, அதனை யூக்கமுடையராகி யீட்டுக; "முயற்சி திருவினையாக் கும்" "மடியிலான் றாளுளா டாமரையி னாள்". "ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா - வூக்க முடையா னுழை" என்பவாகலின். இனிக் கல்வியறிவுடையார், பொருளைக் கல்வியினாலும் உழவினாலும் ஈட்டுதல் சிறப்பாம். வாணிகத்தினாலும் சேவகத்தினாலும் பொருளீட்டுத லத்துணைச் சிறப்பின்றாம். யாதனாலெனின்,— கல்வி யுழவுதொழிலாற் பொருளீட்டும் புலவர் சுவதந்திரராயிருந்து இகபரசாதனங் கவலை புகுதாமற் செய்தற்கு வல்லுநராவர்; மற்றிருவகையா னீட்டும் புலவர் கவலையும் பாரதந்திரமு முடையரா யிகபர சாதன முட்டற்றிருந்து செய்யுநரல்லராவர்; அதனா லென்க.

இங்ஙனம் பொருளீட்டிக் கல்வியினால் இகபர சாதனம் பேணிவாழு நற்புல வர், தந்து சொற் செயல்களாற் யார்க்கு முபகாரிகளாய் வாழ்க. அங்ஙன முபகாரி களாதலைப் பயன் நோக்கிச் செய்யற்க; கடனாக்கொண்டு செய்க. இனிச் செய்யுந் தொழிலெல்லாம் பரமேசுரார்ப்பணமாகச் செய்க. தொழில்களைத் தமக்கென்று கொ ண்டு செய்வோ ரவற்றாற் றடக்குறுவர்; பரமேசுரார்ப்பணமாகச் செய்வோ ரவற் றாற் றடக்குறார். அவரவற்றாற் றடக்குறாமையே யன்றோ, பரமேசுர னருண்ஞா னமு மெய்திப் பிறப்பிறப்பில் பெருவாழ்வு மெய்துப.

"கிரியையென மருவுமவையாவு ஞானங்கிடைத்தற்கு நிமித்த"மாதலின், கருமங் களைப் பயன் கருதாது பரமேசுரார்ப்பணமாகச் செய்வோர் பிரம ஞானமெய்தி வீடு பேறு கூடுவரென்பது வேதாகமத் துணிபாம். "அன்பு மருளு மறிவுக் கடையாளம்" என்பவாகலின், கல்வியறிவுடையா ரவ்விரண்டனையுந் தமக்கணியாகக் கொண்டு போற் றல்வேண்டும். அன்பு தொடர்புடைய வுயிர்கண் மாட்டும் அருளவ்வாறன்றி யெல்லா வுயிர்களிடத்துஞ் செல்லு மறிவு வியாபாரமாதலின், அன்பினு மருள் சிறந்த ஞானசாத னமாம். அன்பு இல்லறத்தா ரறிவு வியாபாரமும் அருள் துறவறத்தா ரறிவு வியாபா ரமுமாம். இல்லறத்திற் றொடர்பு பற்றி யெழுமன்பே துறவறத்திற் றொடர்பு பா ராத அருளாய் முதிரும். நாயனாரும் "அருளென்னு மன்பீன் குழவி" யென் றரு

களைக் கற்கவேண்டின், தஞ் சித்தாந்தப் பார்வையாற் கற்க. இது விசிட்டாத்துவித வைணவ நன்மாணுக்கர்களுக்கு மொக்கும்.

சைவ நன்மாணுக்கருட் சித்தசுத்தி மிகவுடையராய் நித்தியா நித்திய விவேக வுணர்வு தோன்றிப் பிறவிக் கஞ்சி வீடுபேற்றி னவாமிக்குடைய பரிபாகிகளான நல்லோர், சித்தாந்த சைவ ஞானாசாரியரை யடைந்து வழிபாடாற்றி அகங்கார மமகாரத் தியாகச்சியஞ் செய்து, நிருவாண விஞ்ஞான தீக்கையுற்று, சிவஞான போதம், சிவஞானசித்தி, சிவப்பிரகாசம், திருவருட்பயன் முதலிய வத்துவித சைவ சித்தாந்த நூல்கள் பதினான்கையு மவற்றி னுரைகளோடும், வேதாந்த சித்தாந்த சாத்திரப்பொரு ளனைத்தையு மைய விபரீதமற வடக்கி விளக்கும் சகலாகலா ரூபமான சிவ ஞானமாபாடியத்தினோடும், ஞானாசாரியரை வழிபட்டு, முறையாற் கேட்டல் சிந்தித்த றெளிதல் செய்து, சிவானுபவங் கைவருமாறு சிவோக மென்னு மத்துவித நிட்டை பேறுக. இங்ஙன ஞானாதிகாரிகளான நல்லோர் ஈசாவாசியம், கேனம், பிரச்சினம், முண்டகம், மாண்டூக்கியம், தைத்திரீயம், ஐதரேயம், சாந்தோக்கியம், பிருகதாரணியகம், சுவேதாச்சுவதரம், கைவல்லியம், அதர்வசிரசு, அதர்வசிகை யென்னுஞ் சைவோபநிடதங்களையும், பவுட்கரம், மிருகேந்திரம், தேவிகாலோத்தரம், சருவஞானோத்தர முதலிய சைவாகமங்களையும், தாங்கற்றுணர்ந்த வேதாந்தத் தெளிவான திராவிட சைவ சித்தாந்தப் புலமைக ளுணர வாய்ந்துணர்ந்து கொள்க. ஈண்டுச் சொல்லிய வுபநிடதங்களின் மெய்ப்பொருள்க ளாண்டாண்டுத் துவித விசிட்டாத்துவித கேவலாத்துவித பாடிய வுரைகளாற் பேதிக்கப்பட்டிருத்தலின், சைவ சித்தாந்த ஞான குருவரு ளுபதேச மாந்திரப் பார்வையா லவற்றின் மெய்யுணர்ந்து சுத்தாத்துவித நிலைக் கடைப்பிடி புறுதியுறுக.

அதன்மேல், இங்ஙனங் கூறிய வேதாந்தத் தெளிவான சைவசித்தாந்த ஞானானு பவ தெய்வத்திருவுரு விலக்கியமான தேவாரந் திருவாசகந் திருக்கோவை யுத்தரவேத முதலிய திருமுறைகளைத் திருவருட்கண்ணா லென்று மாராய்ந்து, ஓதிப், பரமசிவன் திருவடிக் கீழ்ப்பிரிவறப் பொருந்துஞ் சீவன்முத்தி யுண்மைநிலை தலைக்கூடி வாழ்க.

வைணவநல்லோர், தத்துவசேகரம், தத்துவத்திரயம், சீவசனபூஷண முதலிய தஞ்சமய சாத்திர முறையாற் கேட்டுச் சிந்தித்து விசிட்டாத்துவித சித்தாந்தந் தேறி, நாலாயிரப்பிரபந்தங்களைத் திருவருட் பார்வையா னென்று மாராய்ந்து, நாராயண மூர்த்தி திருவடிக்கீ ழிருக்குஞ் சரணாகதிநிலை தலைக்கூடி வாழ்க.

மேற்கூறிய முதுதமிழ்ப்புலமையோ டிங்ஙனங் கூறிய வேதாந்த சித்தாந்த சாத்திரப்புலமையு நன்கு கைவரப்பெற்றார் முதுதமிழ்ப்பெரும்புலவர் (M. A.) என்னும் பட்டாபிதானத்துக் குரியரென் றுணர்க.

## கல்வியறிவின்பயன்.

இனித் தமிழ்ப்புலமையா லிகபர வீடுபேறு சாதித்தடையுமாறு கூறுதும்.

இன்னிலைபரான தமிழ்ப்புலவ ரறத்தாற்றுற் பொருளீட்டி யின்னிலைக்கு விதித்த சருமம் வழாது செய்து போகந் துய்த்தறத் தருமமுந் தக்கார்க்குச் செய்க. பொருளீட்டுங்கா லருளொடு மன்பொடும் பொருந்தி யீட்டுக. என்னை? அருளொடு மன்பொடும் பொருந்தி வாராத பொருள் பசுமட்கலத்து ணீர்போலச் செய்தானையுங் கொண்டிறத்தலின். இல்லறநெறி நிற்பார், வறியார்க்கு வேண்டுவன வுதவி யவர்

வறுமை களைய வல்லராதலும், தாமெடுத்துக்கொண்ட நல்வினையை முடிக்கவல்லராத
லும், தம் பகைவர் தருக்கறுக்க வல்லராதலும், வேண்டியின்ப நுகர வல்லராதலும்,
பொருளுடையாராய வழியே யாகலின், அப்பெற்றித்தாய பொருளை நெறியா னிரம்ப
வீட்டுக. பொருளீட்டுங்காற் றம்புலமை யதற்குத் துணைக்காரணமாமென்று கொண்
டீட்டற்கதன்று. என்னை? அறிவுடையார் வறியராகவு மேனையார் செல்வராகவுங்
காண்டலின். ஆகவே, அறிவுடையராதற்காகு மூழ் செல்வமுடையராதற் காகாது;
செல்வமுடையராதற்காகு மூழ் அறிவுடையராதற் காகாது. நாயனாரும் "இருவே
றுலகத் தியற்கை திருவேறு - தெள்ளிய ராதலும் வேறு" என்றெடுத் தருளிச்செய்
தார். இன்னும், யார்க்கும் பொருளுண்டாதற்கு ஏது காரணமாக வெய்து மின்
பமு முன்வினையா னமைந்து கிடந்தன; பொருளின்மைக்கு ஏதுகாரணமாக வெய்துந்
துன்பமு மங்ஙனமே முன்வினையா லமைந்து கிடந்தன. அவை இம்மையறிவு முய
ற்சியாலு மஃதின்மையாலு முளவாவன வென்று கொண்டு மகிழ்தலுங் கவறலு மறி
வின்மையாம். இங்ஙனமாதலின், கல்வியறிவு டெள்ளியராய் நின்று நன்றுசெய் திக
த்தினற்புகழும் பரத்திற் றுறக்கம் வீடுபேறுகளு மெய்துதற்கே சாதனமாவதாமெனக.
இனிப் பொருள் பழவினையான் வருமென்று கொண்டு அதனை யீட்டு முயற்சியின்றி
மடிபுக்கிருக்காது, அதனை யூக்க முடையராகி யீட்டுக; "முயற்சி திருவினையாக்
கும்" "மடியிலான் றாளுளா டாமரையி னாள்". "ஆக்க மதர்வினாய்ச் செல்லு
மசைவிலா - வூக்க முடையா னுழை" என்பவாகலின். இனிக் கல்வியறிவுடையார்,
பொருளைக் கல்வியினாலும் உழவினாலும் ஈட்டுதல் சிறப்பாம். வாணிகத்தினானும்
சேவகத்தினாலும் பொருளீட்டுதலத்துணைச் சிறப்பின்றாம். யாதினாலெனின், — கல்வி
யுழவுதொழிலாற் பொருளீட்டும் புலவர் சுவதந்திரராயிருந்து இகபரசாதனங் கவலை
புகுதாமற் செய்தற்கு வல்லுநராவர்; மற்றிருவகையா னீட்டும் புலவர் கவலையும்
பாரதந்திரமு முடையரா யிகபர சாதன முட்டுற்றிருந்து செய்யுநீரராவர்; அதனா
லெனக.

இங்ஙனம் பொருளீட்டிக் கல்வியினால் இகபர சாதனம் பேணுவாழ் நற்புல
வர், தஞ் சொற் செயல்களாற் யார்க்கு முபகாரிகளாய் வாழ்க. அங்ஙன முபகாரி
களாதலைப் பயன் நோக்கிச் செய்யற்க; கடனாக்கொண்டு செய்க. இனிச் செய்யுந்
தொழிலெல்லாம் பரமேசுரார்ப்பணமாகச் செய்க. செய்தொழிலைத் தமக்கென்று கொ
ண்டு செய்வோ ரவற்றாற் றடக்குறுவர்; பரமேசுரார்ப்பணமாகச் செய்வோ ரவற்
றாற் றடக்குறார். அவரவற்றாற் றடக்குறாமையே யன்றே, பரமேசுர னருண்ஞா
னமு மெய்திப் பிறப்பிறப்பில் பெருவாழ்வு மெய்துப.

"கிரியையென மருவுமவையாவு ஞானங்கிடைத்தற்கு நிமித்த"மாதலின், கருமா
வினைப் பயனோக்காது பரமேசுரார்ப்பணமாகச் செய்வோர் பிரம ஞானமெய்தி வீ
பேறு கூடுவரென்பது வேதாகமத் துணிபாம். "அன்பு மருளு மறிவுக் கடையாளமா
என்பவாகலின், கல்வியறிவுடையா ரவ்விரண்டனையுந் தமக்கணியாகக் கொண்டு போற்
றல்வேண்டும். அன்பு தொடர்புடைய வுயிர்களமாட்டும் அருளவ்வாறன்றி யெல்லா
வுயிர்களிடத்து நிகழு மறிவு வியாபாரமாதலின், அன்பினு மருள் சிறந்த ஞானசாத
னமாம். அன்பு இல்லறத்தா ரறிவு வியாபாரமும் அருளிற வறத்தா ரறிவு வியாப
ரமுமாம். இல்லறத்திற் றொடர்பு பற்றி யெழுமன்பே துறவறத்திற் றொடர்பு ப
றாத அருளாய் முதிரும். நாயனாரும் "அருளென்னு மன்பீன் குழவி" யென் று

ளிச்செய்தார். பொருட் செல்வ நல்லோர்பா லன்றிப் பூரியர்பாலு முளதாவதாம். அருட் செல்வமோ நல்லோர்பாற் றனே யுளதாவதாம். ஆதலின், அருட்செல்வமே செல்வங்களுள் வைத்துச் சிறந்த நற்செல்வமாம். நாயனாரும் "அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம் - பூரியார் கண்ணு முள" என் றெடுத்தருளிச்செய்தார். இன்னும், பொருளுடையா ரிவ்வுலக நுகர்ச்சியே யெய்துப. அருளுடையார் இவ்வுல நுகர்ச்சியு மவ்வுலக நுகர்ச்சியுந் தப்பா தெய்துப. இன்னும், அருட்செல்வமுடையா ரிம்மையிற்றனே தெய்வத்தன்மை யுற்று எல்லா வுயிர்களாலுந் தொழப்படு சீர்மையுடையரு மாவர். இங்ஙனமாதலின், கல்வியறி வுடைய நமக்க ளெப்பொழுது மப்பெற்றித்தாய வருட்பெருஞ் செல்வத்தைக் குறிக்கொண்டு கடைப்பிடித் திட்டனன்றும். இவ்வருளற மிங்ஙனஞ்சிறந்து நேராக ஞானசாதனமாதலினன்றே, "அஹிம்ஸாபரமோதர்மஃ" எனறும், "நல்லா றெனப் படுவ தியாதெனின் யாதொன்றுங் - கொல்லாமை சூழு நெறி" "ஒன்றாக நல் லது கொல்லாமை" "அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்ற - னுயிர்செகுத் துண் ணாமை நன்று" என்றும், "கொல்லா விரதங் குவலயமெல் லாமோங்க - வெல் லார்க்குஞ் சொல்லுவதெ னிச்சை பராபரமே" "கொல்லாமற் கொன்றதைத் தின்னாமற் குத்தாங் கோள்களவு - கல்லாமற் கைதவ ரோடிணங் காமற் கனவிலும் பொய் - சொல்லாமற் சொல்லினுஞ் சேராமற் றெரிவையர் மாயையிலே - செல்லாமற் செல்வந் தருவாய் சிதம்பர தேசிகனே" என்றும், உண்மைநூல்கள் அங்ஙன முறை யிட்டனவெனக. இனிச் சீவகாருண்ணியம் பேணாது. கொலை யூனுண்போர் சிலர், புலவொன்றுங் குரவொன்றும் பிரமஞான போதகாசிரிய ரென்று முலகத்தி னிலவுகின் றார். "உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண - வண்ணாத்தல் செய்யா தளறு" "கங்கையிற் படிந்திட் டாலுங் கடவுளைப் பூசித் தாலு - மங்குலுட் டாற் கோடி தானம் வள் ளலாய் வழங்கி னாலுஞ் - சங்கையில் லாத ஞான தத்துவ புணர்ந்திட் டாலும் - பொங்கிய புலால் புசிப்போன் போய்நர கடைவ னன்றே" என் றுண்மைநூல்கண் முறையிடுதலை யவ ரறியார் போலும்!

யாவர்க்சாயினுந் தாமனுட்டிக்காத வுறுதியினைப் பிற ரனுட்டிக்கப் போதித்தல் பெரும் பேதைமையாம். நாயனாரும் "ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப் - பேதையிற் பேதையா ரில்" என் றவ்வா றெடுத்தருளிச் செய்தாரென்பது. குண குற் றங்கள் பழவினை காரணமாக விம்மையின் மக்கண்மாட்டு நிகழுதலின், குற்றச்செய லுடையராய வொருவ ரக்குற்றச்செய்திகளின் கேடுணர்ந்து, அவை தவிர்ந்து நற்குண நற்செய்கையுடையராய்த், தாமுன்செய்த குற்றந்தீராதலைப் பிறர்க் கெடுத்துச்சொல்லிக் குணப்பிரசங்கஞ் செய்த றக்கதேயாம். அவர் அவ்வாறு நன்று நாடிச் செய்யுங் குணப் பிரசங்கத்தினை முன்னைக் குற்றச் செய்தி காரணமாக வவமதித்த றக்கதன்றாம்.

இனித் தமிழ்ப்புலமையுடையார் கடைப்பிடித்துச் செயற்பாலன: தங்குலநலம் பேணல், தந் தேசநன்மைபேணல், தஞ் சமயநன்மைபேணல், நன்மாணாக்கர்க்குக் கல்வி கற்பித்தல், நல்ல நூலுரைகளை யியற்றுதலென் றிவை முதலாயின. முற்காலத்துத் தமிழ்ப்புலவ ரிப்பொதுநன்மைகளைக் கடைப்பிடித்துச் செய்து புகழுடம்பு நிறுவிப் பரவாழ்வு பெறறார். இக்காலத்துத் தமிழ்ப்புலவருட் பெரும்பாலா ரிவை செய்யாது, தங் குடும்ப மோம்புத லொன்றுமே செய்து, கல்வியறிவுப் பெரும்பயன் கொள்ளாது, கொன்னே காலங்கழித்திடுவர்!

இனிக் "கல்வியென்னு நற்பொருட் புலமையாளர் இறைமுதற் கடவு டிருவரு ளுடி யவனையு மவனருள் பெற்ற பெரியாரையும் பாடி உய்த்தேடுதலன்றிப் பொய் மையாளரான வுலக மாந்தரைப் பொருட்பேறு கருதிப் பாடுதல் பெருங் குற்றமாம். "பொய்மை யாளரைப் பாடாதே யெந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள்" என்று சமயாசாரியரும், "ஒழிவொன் றில்லாதபல் லூழிதோ றூழி நிலாவப்போம் - வழி யைத் தருநங்கள் வானவ ரீசனை நிற்கப்போய்க் - கழியமிகு நல்ல வான்கவி கொண்டு புலவீர்கா - ளிழியக் கருதியோர் மானிடம் பாடலென் னாவதே" என்று ஆழ்வாரும், பணித்தருளினர்.

இனித் தஞ்சமய நன்மை நாடும் புலவர் நியாயநெறியானே யதனைப் பரிபால னஞ் செய்க. சமயாபிமானங்கொண்டு குதர்க்க சமயவாத மொரு ஞான்றுஞ் செய் யற்க. சமயங்களெல்லா மொரு முதற்கடவு ளாணையின் ஒவ்வோர் வகுப்பினரா கிய வதிகாரிகள் பொருட்டுத் தோற்றுவிக்கப்பட்டு நிலைபெறுவனவாதலின், குதர்க்கத் தாற் றஞ்சமய நாட்டிப் பரசமய நிந்தித்தல் குற்றமாம். சமயங்கள் ஒரு முதல்வ னாணையிற்றோன்றிச் சோபானமாய்த் தாரதம்மிய முற்று நிலைபெறுமாறு ஞானாமிர்த மென்னுங் கிரந்தத்தில் விரித்துக் கூறினும்.

இன்னும், இக்காலத் தமிழ்ப்புலவர் சற்புத்திரர்ப் பெற்று, அவரைக் கல்வியறிவு டையராக்கிக், குடும்பபார மவர்மே லிறக்கி விட்டுப், பிரவஞ்ச வைராக்கியமுற்றுத் துறந்து மெய்யுணர்ந்து அவாவறுத்துப் பர வீடு பேறு கூடு மெண்ணஞ் சிறிது மில ராய்ச், "சொற்றளர்ந்து கோலூன்றிச் சோர்ந்த நடையினராய்ப் பற்சுழன்று பண்டை பழிகாறு மிற்செறிந்து" மக்கண் மனைவி யொக்கற் பற்று முறுகி, அவாநெறிப்பட னிரராவர். "அடல்வேண்டு மைந்தன் புலத்தை விடல்வேண்டும் - வேண்டிய வெல்ல மொருங்கு" "தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி - வலைப்பட்டார் மற்றை யவர் என்று நாயனா ரருளிச்செய்தலின், விடாது வந்த விருவகைப்பற்றும் விடற்குத், து வரத் துறந்து பற்றற்றான் பற்றினைப் "பற்றுத லொருதலையாற் செயற்பால தென் நன்மனச் சனகனுதியரு மந்திரி முதலியோர் மீது பூபாரம் வைத்து ஏகாந்தமருவிடே நிட்டை கூடிப் பற்றறுத்துச் சிவன் முத்தராயினரெனின், பரவீடுபேறு மனை வாழ்க்கை துறந்து விரதம் பேணி ஏகாந்த மருவி மெய்யுணர்ந்து அவாவறுத்தார்க் யுளதாவதென்பது துணிபாம். இங்ஙனமாகலின், நிலையாமை நாடி நெஞ்சிற் து ந்து மெய்யுணர்ந்து அவாவறுத்துச் செம்பொருண் ஞானச்செல்வராய் வாழ்தலே நன்மகனுக்குக் கல்வியறிவின் முக்கியப் பயனெனபது கிடைப்பிடியாயிற்று. "நெஞ் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து - வாழ்வாரின் வன்கணா ரில்" என்றெடுத்தருள செய்தலின், நெஞ்சிற் றுறந்தென்றும். "கற்றதனா லாய பயனென்கொல் வாலறி வன்றா டொழாஅ ரெனின்;" "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுப - ம ண்டு வாரா நெறி."

ஒழிபியன் முற்றிற்று.

---

**திருவாவடுதுறை மாதவச் சிவஞானயோகி சுப்பிரமணியதேசிகன் அரு தேசம் பெற்ற சபாபதிநாவலரியற்றிய திராவிடப்பிரகாசிகை முற்றிற்று.**

# இந்நூலாசிரியரியற்றிய நூல்கள்.



(க) சிதம்பரசபாநாதபுராணம் :— இஃது சிதம்பரமான்மிய மைந்தனு ளொன்றான ஏமசபாநாத மான்மிய மொழிபெயர்ப்பாயுள்ளது; தொல்லாசிரியர் செய்யு ணடைத்தாய் நடராசமூர்த்தி தலந் தீர்த்த வரலாறு உணர்த்துவது.

(உ) சிவகர்ணாமிர்தம் :— இது அப்பயதீக்ஷிதயோகிகள் வடமொழியிலியற்றிய சிவ கர்ணாமிர்த மொழிபெயர்ப்பாயுள்ள வசனகிரந்தம்; பூர்வபக்கஞ் சித்தாந்த மென விருபகுதித்தாய்ச் சிவபரத்துவ முதலுவது.

(ங) சதுர்வேததாற்பரியசங்கிரகம் :—இது வடமொழியில் அரதத்தாசாரியரியற்றிய சதுர்வேததாற்பரியசங்கிரக மொழிபெயர்ப்பாயுள்ள வசனகிரந்தம்; பரம சிவனே நான்கு வேதங்களானு மெடுத்தோதப்படும் பரம்பொருளென்று சாதிப்பது.

(ச) பாரததாற்பரியசங்கிரகம் (ரு) இராமாயணதாற்பரியசங்கிரகம்:— இவ்விர ண்டும் வடமொழியில் அப்பயதீக்ஷிதயோகிகளியற்றிய பாரததாற்பரியசங் கிரகம் இராமாயணதாற்பரியசங்கிரக மொழிபெயர்ப்பாயுள்ளன ; பாரத த்தானும் இராமாயணத்தானு முதலப்படும் பரம்பொருள் பரமசிவனென்ப தறிவுறுத்துவன .

(சா) யேசுமதசங்கற்பநிராகரணம்:— இது யேசுமதத்தர் கொள்கை பூர்வபக்கமா, கலைத் தருக்கத்தினூற் றெரிப்பது.

(எ) இலக்கணவிளக்கப்பதிப்புரைமறுப்பு :— இஃது இலக்கணவிளக்கச் சூறாவ யின்மே னிகழ்த்திய குதர்க்கமறுத்தது அதன் நியாயபலம் விளக்கும் வச கிரந்தம்.

(அ) வைதிககாவிய தூஷணமறுப்பு—இது பெரியபுராணம், இராமாயணம், தல கைப்புராணமென்னும் வைதிககாவியங்களை, அநியாயமாகத் தூஷித்த சிந்தாமணியென்னும் அவைதிககாவியம் பாராட்டினுரை நியாயத்தினுன் ம த்து வைதிககாவியமாட்சி நிலையிட்ட வசனகிரநதம்.

(கூ) ஞானசூடாமணி:—இது சிரவணமாதி நான்கும் பாரபரஞானமா யடங்குமா நிரூபிப்பது.

(கம) ஞானமிர்தம்:—இது சமயங்களெல்லாம், முழுமுதற்கடவு ளொருவ ரேயை ம்மூன்றி அதிகாரிபேதம்பற்றித் தாரதம்மிய முற்று நிற்கு முறைமை யுண தும் வசனகிரந்தம்.

(கக) திருச்சிற்றம்பலவந்தாதி.

(கஉ) திருவிடைமருதூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி.

(கங) மாவையந்தாதி.

(கச) சிதம்பர பாண்டியநாயக மும்மணிக்கோவை.

(கரு) வடகோவைச் செல்வவிநாயகரிரட்டைமணிமாலை.

(கசா) நல்லைச் சுப்பிரமணியக்கடவுள் பதிகம்.

(கஎ) வதரிநகர்த் தண்டபாணிக்கடவுள் பதிகம்,

(கஅ) புறவார் பனங்காட்டூர்ப் புறவம்மை பதிகம்.

# பரிசோதனபத்திரம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| க | கக | புயக்கல் | புய்க்கல் |
| ௩ | க | கோன்ருடையலென | கோனென |
| ,, | ௩ | இசையையென்றது | இசையென்றது |
| க௦ | ௫ | அவ்வழகு | அவ்வழக்கு |
| ,, | கஉ | இப்புடவிற் | இப்புடவியிற் |
| ௪௬ | க௪ | முடிவதூஉம | முடிவ"தூஉம் |
| உ௭ | க | அகத்தினூர் | அகத்தியனூர் |
| ௩௦ | ௩௩ | இறற்றமிழாராய்ச்சி | இயற்றமிழாராய்ச்சி |
| ௪௪ | ௩௩ | மறுநீர்ச்சுணையும் | மறுநீர்ச்சுணையும் |
| ௪௯ | உஉ | அவிருபாற்கும் | அவ்விருபாற்கும் |
| ௫௦ | உ௭ | வில்லறவின்ப | இல்லறவின்ப |
| ௬க | உ௩ | அரசனீதிநீதிநூணிந்தை | அரசனீதிநூணிந்தை |
| ௬௪ | உ௮ | மலைவுடைத்தாம். | மலைவுடையவாம். |
| ,, | ௩௮ | ஓதப்படு லானும். | ஓதப்படும். |
| ௬௫ | உ௫ | பிறந்தும் | பிறழ்ந்தும் |
| ௬௯ | ௩௩ | வமைதது | வமைந்தது |
| ௭௩ | க௮ | [illegible]ணிஷ- | [illegible]ணிஷ- |
| ௭[illegible] | ௫ | ஒ[illegible]தாகாது" | ஒத்தாகா" |
| [illegible]௭ | க௮ | வீ ரொற்ருகும் | வீரொற்ருகும் |
| ,, | கக | பீரொற்ருயு | பீரொற்ருயு |
| ௭௮ | கஉ | முனைத்தும் | முணர்த்தும் |
| ,, | உ௬ | செசப்பட்டது | செய்யப்பட்டது |
| ௭௯ | க௩ | தன்டியலங்காரம் | தண்டியலங்காரம் |
| ௮க | க௫ | யாபபுள் | யாப்புள் |
| ௮௫ | கக | ளுவிடந் | ளுலிடந் |
| ௮௭ | ௭ | யனை | யனைத் |
| ௮௮ | க௭ | யிள்ளையார் | பிள்ளையார் |
| ௯௦ | உ௮ | ஓதியதூஉம். | ஓதியதூஉம், |
| க௦௦ | உ௪ | யுபதேச | வுபதேச |
| ,, | ௩௩ | நம்பாண்டர் | நம்பாண்டார் |
| க௦௩ | உ௬ | கிருவாசக | திருவாசக |
| [illegible] | ௪ | அரசர்க்கு | அரசற்கு |
| [illegible] | [illegible] | திருப்பாட்டிகளானும் | திருப்பாட்டுக்களானும் |
| [illegible] | [illegible] | வாசியர் | வாசிரியர் |
| [illegible]௫ | உ[illegible] | முப்பாதிருக்குறளென் | முப்பாதிருக்குறளென |
| கஉ௮ | உக | காண்டாகிய | காண்டலாகிய |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௯௨ | ௧௭ | ஏகார | எகார |
| ௧௯௩ | ௧௧ | முலிய | முதலிய |
| ௧௯௫ | ௧௧ | பாம | பிரம |
| ௧௪௩ | ௯௩ | யதளை | யதனை |
| ௧௯௪ | ௯௫ | பொருலல்ல | பொருளல்ல |
| ௧௪௫ | ௧௮ | தன்பால | தன்பால் |
| ௧௫௩ | ௯௦ | முறணுற்று | முரணுற்று |
| ௧௫௪ | ௯௪ | பற்றி | பற்றிப் |
| ௧௮௩ | ௮ | கிளக்குகிளக்கு | கிளக்கு |
| ௨௦௨ | ௩ | நிராகரித்து | நிராகரித்துச் |
| ௨௦௯ | ௧௩ | விஞ் | விஞ்ஞா |
| ,, | ௧௫ | விஞ் | விஞ்ஞா |
| ௨௦௭ | ௨௫ | சற்றபின் | மற்பின் |
| ௨௦௮ | ௫ | ஆகமத்தை | ஆகமந்தே |
| ௨௧௦ | ௫ | தியாச்சியஞ்செய்து | தியாசஞ்செய்து |
| ௨௧௧ | ௧௯ | கல்லியறிவு | கல்வியறிவு |
| ௨௧௯ | ௨௯ | துவவர | துவர |
|  | ௨௫ | பாரபர் | பராபர |

* இந்நூல் கைக்கொண்டு படிப்பவர், அச்சுப்பதிப்பில் நேர்ந்த பிழைகளை, திருத்தத்தின்படி முன்னர்த் திருத்திக்கொண்டு படிக்கக்கடவர்.